


# 1

"We are creating a new Society. Not a changed Society- Not an extended, larger than life version of our present Society . . but a new Society." — *Future Shock*.

காரிலிருந்து இறங்கி, மெத் தென்ற விரிப்பில் பூட்ஸ் அழுந்த, 'ஒபிராய் ஓட்ட'லின் முன் ஹாலில் நுழைந்தான் ராஜேஷ். பெரிய டர்பன் அணிந்த சேவகன், தலையைப் பணிவாக அசைத்துக் கண்ணுடிக் கதவைத் திறந்து விட்டான்.

குளிர் சாதனத்தின் 'ஜில்'லென்ற சூழ்நிலை இதமாக இருந்தது. ரிஸப்ஷனில் இருந்த பெண்ணின் அரும்பும் புன்னகை, வரவேற்றது. எதிரே வந்த ரேஸ் கிளப் மானேஜர், ''ஹலோ ராஜேஷ்'' என்று கையை ஆட்டினுர். அவ்வளவையும் தாண்டி 'லிஃப்'டின் முன் நின்றுன். பொத்தானை அழுத்தியதும் தலைக்கு மேலே கண்ணுடிக் கட்டத்தில் சிவப்பு எண்கள் 'பளிச் பளிச்'சென்று இறங்கின.

...6 ...5... 4... 3 ...2 ...1.

இருபுறமும் விலகிய கதவின் உள்ளே நுழைந்து 'பட்டனை' அழுத்திக் கதவைச் சாத்திக் கொண்டான். ஆள்காட்டி விரல் ஐந்து என்ற எண்ணின் பொத் தானை அழுத்தியதும், லிஃப்ட் மேலே எழுந்தது. 'ஜிவ்'வென்ற உணர்ச்சி காதை அடைத்தது. கண்களை மூடிக் கொண்டான். லிஃப்ட் நின்ற பிறகு தான் மூடிய கண்களைத் திறந்தான். அந்த உணர்ச்சி அவனுக்கு ஓர் அலர்ஜி. அவனுக்குச் சிரமமான காரியங்கள் கூட லேசாகத் தோன்றும். ஆனல் சிறு விஷயங்களில் சில சமயம் இப்படித்தான் ஒரு நெகிழ்ச்சி மனத்தில் ஊசலாடும்.

வெல்வெட் போன்ற சிவப்பு விரிப்பில் நடந்து, 'மொகல் ரூமை' அடைந்தான். அங்கே வரவேற்புப் பெண் அவனைக் கண்டதும் கையை நீட்டி வரவேற்றுள்.

லாகவமாக அவள் கையை முழங்கை வளைவில் கோத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். மனத்தில் ஒரு குதூகல உணர்வு.

அவன் அந்த 'பார்ட்டி'க்கு சற்று லேட்! மணிக்கட்டில் கடிகார முள் அதை மின்னிக் காட்டிற்று. ஒரு சிகரெட்டை எடுத்து இதழ்களில் கடித்துக் கொண்டான். அந்த வரவேற்புப் பெண், லைட்டரை வாங்கி, பற்ற வைத்தாள். தணல் நுனியில் அந்த வழு வழுப்பான பிங்கான் கன்னங்களில், புன்னகையின் மெருகு ஒளியேற்றியது.

''தாங்க்யூ!''

அவள் கன்னத்தில் செல்லமாகத் தட்டிவிட்டு நிமிர்ந்தான். உயர்ந்து சென்ற புகை வளையங்களைப் போல, மனமும் லேசாகி மிதந்தது.

''ஏன் இவ்வளவு லேட்?''—எதிரே வரவேற்கும் குரல் கேட்டது.

''குட் ஈவினிங் மிஸ்டர் அட்கின்ஸன். மன்னித்துக் கொள்ளுங்கள். வழியில் ஒரு போக்குவரத்து நெரிசலில் மாட்டிக் கொண்டேன். தவிர—''

''தவிர?''

''கொஞ்சம் தாமதமாக வந்தால் தானே இந்தக் கூட்டத்தில் தனியாகத் தெரியும்?''

'ஹோ ஹோ'வென்று வாய்விட்டுச் சிரித்தபடி அவன் கையைப் பிடித்துக் குலுக்கினார் அட்கின்ஸன். அந்தக் கையை விடாமல், அவனை அப்படியே மூலையில் கண்ணாடி ஜன்னல் ஓரமாக இருந்த மேஜைக்கு அழைத்துக் கொண்டு போனார்.

அங்கே, மிஸஸ் அட்கின்ஸன் எழுந்து, அவன் கையைப் பிடித்துக் குலுக்கினாள். பஞ்சு போன்ற மிருதுவான கைகள், அதற்குச் சமமாக அவள் முகத்திலும் ஒரு மென்மை.

கண்ணாடி வழியே வெளிக்காட்சி தெரிந்தது. நீல வானில் ஒளி விடும் வைர நகையாய், விளக்குகள் வரிசையாக ஜ்வலித்தன. வைரங்களின் கோவை, மிஸஸ் அட்கின்ஸன் கழுத்திலும் மின்னிற்று.

அவள், அவன் பார்வையைப் புரிந்து கொண்டது போலச் சிரித்தாள்: ''எஸ். இந்த வைர விழாவுக்கு என் கணவரின் அன்பளிப்பு இந்த வைர நெக்லஸ்.''

''கன்கிராஜுலேஷன்ஸ்.''

'ப்ரீமியர் ஸிடி பாங்க்' என்ற அந்த அமெரிக்க பாங்கிற்கு வைர விழா.



அதையொட்டி ஜெனரல் மானேஜர் அட்கின்ஸன் அந்த வரவேற்பு விருந்தை ஏற்பாடு செய்திருந்தார். பாங்கில் பொருளாதார நிபுணராக வேலை செய்து வந்த ராஜேஷ், அவருக்கு அந்தரங்கமான உதவியாளர். அலுவலக விஷயங்கள் மட்டும் அல்லாமல், குடும்ப

விஷயங்களையும் கூட அவனிடம் மனம் திறந்து பேசுவார்.

ராஜேஷ், கண்ணாடி வழியே கீழே பார்த்தான். ஒளி வெள்ளத்தில் நீலக் கட்டமாக 'ஸ்விம்மிங் பூல்' மினுக்கிற்று. நீரில் மிதக்கும் நாலைந்து பெண்களைப் பார்த்த போது, அவனுக்கும் அங்கே இறங்கிப் போய்க் குளிக்க ஓர் ஆசை. தினமும் ஷவரில் குளித்து அலுத்துப் போன உடம்புக்கு, அந்தச் சுதந்திரமான நீச்சல் ஒரு மாறுதலாக இருக்கும் போலத் தோன்றியது.

ஸர்வர், தட்டில் இரண்டு கோப்பைகளைக் கொண்டு வந்து வைத்தான்.



பக்கத்தில் சோடாவும் கிண்ணம் நிறைய ஐஸ் கட்டிகளும் வைத்தான். புதிதாகத் திறந்து வைத்த பாட்டிலிலிருந்து, சோடா, ஐஸ் எந்தக் கலப்பும் இல்லாமல் கோப்பையில் 'விஸ்கி'யை ஊற்றினன். 'நீட்'டாக அப்படியே சாப்பிடுவதுதான் அவனுக்குப் பிடிக்கும்.

கோப்பையை எடுத்துச் சற்றுப் பருகினன். மிஸஸ் அட்கின்ஸனின் குழந்தைச் சிரிப்புக் கேட்டது:

''டிரைவரை அழைத்து வந்திருக் கிறீர்களா, ராஜேஷ்?''

''அழைத்து வந்திருக்கிறேன். இல்லே யென்றாலும் நான் அளவுக்கு மேலே போக மாட்டேன். என்னுடைய நிதானம் கலேயாது.''

''ஏர் ஹோஸ்டஸாக இருக்கும் போது, நான் பிரயாணிகளுக்கு மது வழங்குவதுண்டு. அதில் அளவுக் கட்டுப் பாடு உண்டு. மேலே கேட்டால், எவ்வ ளவு பணிவாக மறுக்க முடியுமோ, அவ்வ ளவு பணிவாக 'இல்லே' என்று சொல்லி விடுவேன்.''

''இங்கேயும் நான் உங்கள் பொறுப் பில்தான் இருக்கிறேன். நீங்கள் போதும் என்றால், மேலே ஒரு துளிக்கூட வேண்டாம்.''

''இங்கே நான் ஏர் ஹோஸ்டஸ் இல்லே, வெறும் ஹோஸ்டஸ்...''

அவள் 'கல கல'வென்று சிரித்தாள். அட்கின்ஸனே மணந்து கொள்வதற்கு முன், மார்த்தா—விமானப் பணிப் பெண்ணுக வேலே செய்தவள். அழகான தோற்றமும், நயமான பேச்சும், மென்மை கலந்த பணிவும் அந்த வேலேக்கு உரிய பண்புகள். இந்த இனிய வாழ்க்கைக்கு அவளே அவைதான் அழைத்து வந்தன.

அவள், தனது 'எங்கேஜ்மெண்ட் ரிங்' மாற்றிக் கொண்டது விமானத்தில்தான். அவளுடைய முதல் கணவன் எட்வர்ட், ஒரு பைலட். ஓர் ஆண்டுக்குத்தான் அந்தத் திருமணமும், குதூகல வாழ்வும் நிலேத்தன. விமான விபத்தில் அவன் உடலே அடையாளம் கண்டுபிடிக்கக்கூட முடியவில்லே. அவனுடைய அன்பையும் பாசத்தையும் காட்டும் நினேவாக இருந்த நான்கு மாதக் கரு, அந்த அதிர்ச்சியில் அழிந்து போய்விட்டது.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான் அட்கின்ஸனே மார்த்தா சந்தித்தாள். இந்தியாவுக்கு வந்த பின்னர், அவளு டைய வாழ்க்கைப் புத்தகத்தில் புது அத்தியாயம் தொடங்கி



மலரால் முகத்தை மூடிக் கொண்டிருக்கும் இந்த நடிகையையும்,கைக்குட்டை யால் முகத்தை மறைத்துக்

விட்டது. இந்த மண்ணிலும் அவள் பிறந்து வளர்ந்த மண்ணே நினேக்காமல் இருக்க மாட்டாள். இந்த வாழ்க்கை யிலும் கடந்து போன வாழ்வின் ஞாபகம் வராமல் இருக்க முடியாது.

ஆனாலும், அது வெளியே தெரிந்த தில்லே. அவள் கணவனிடம் பழகும் விதத்தில், சுருதி பேதமே ஏற்பட்ட தில்லே. ஒருவரையொருவர் எவ்வளவு நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்? தனக்கு முன்னே அந்த அழகிய பெண் ணின் வாழ்க்கையில் இன்னொரு வாலிபன் இருந்திருக்கிறன் என்பதைத் தெரிந்து கொண்ட பிறகும், மார்த்தாவை ஒரு விரல் தீண்டாத மலராகத்தான் கருதினர் அட்கின்ஸன். அப்படியே[illegible]ன் பழகினர்.

''மிஸ்டர் அட்கின்ஸன், உங்களுடைய ஷிரிவான மனம் எனக்கு ரொம்பப் பிடித் திருக்கிறது. ஆனல் ஒன்று: மார்த்தாவின் குழந்தை உயிரோடு இருந்திருந்தால்? அதை உங்களிடமே வைத்துக் கொண் டிருப்பீர்களா?வாழ்க்கையில் இன்பமான முதற் பகுதியை மார்த்தா உங்களிடம் பகிர்ந்து கொள்ளவில்லே என்பதை, அந்தக் குழந்தை ஒவ்வொரு நாளும் ஞாபகப்படுத்திக் கொண்டிருக்குமே!... அப்போது என்ன செய்திருப்பீர்கள்?''



கொண்டிருக்கும் இந்த நடிகரையும் கண்டுபிடிக்க முடிகிறதா என்று பாருங்கள். இருவருக்கும் ஒரு தொடர்பு உண்டு. இவர்கள் இருவரும் இணைந்து ஒரு படத்தில் நடிப்பதாக இருந்தது.

**விடை அடுத்த பக்கம்...**

என்று ராஜேஷ் குரல் குமுறக் கேட்ப துண்டு.

அட்கின்ஸன் சிரித்துக் கொண்டே பதில் சொல்வார்: ''வெல். வாழ்க்கையில் சில விஷயங்களுக்கு ஒரு அலவன்ஸ் கொடுக்கத்தான் வேண்டும். கலக்கம் இல்லாமல்ஏற்கப் பழகிக்கொள்ளத்தான் வேண்டும். அப்போதுதான் வாழ்க்கை, தெளிந்த நீரோடையாக இருக்கும். இல்லையென்றால் கலங்கிக் குழம்பித்தான் போகும். சரி, உங்கள் கேள்விக்கு என் பதில்: நிச்சயமாக எட்வர்டின் குழந்தையை என் மகனை- முதல் மகனை ஏற்று வளர்த்திருப்பேன்.''

உறுதியான அந்தக் குரலில் உண்மை தொனிக்கும். அவருடைய பேச்சில் அப்படித்தான் தெளிவு இருக்கும். அதுதான் அவருடைய தொழில் வெற்றியின் முதலாவது இரகசியம்.

அட்கின்ஸன் ஓர் அழகிய பார்ஸிப் பெண்ணுடன் நடனமாடிக் கொண்டிருந்தார். அதைப் பார்த்தபோது, மர்த்தாவின் இளநகையில் விஷமம் தெறித்தது. ராஜேஷைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினாள்: 'நாம் இருவரும் ஆடலாமா?' என்று கேட்பதைப் போல, அவனைப் பார்த்தாள்.

ஒரு 'பெக்' முடிந்து விட்டது. அந்த லேசான மனத்துக்கு அந்த லயமான நடனம், இனிமையான ஜோடியாகத் தான் இருந்திருக்கும். கை கோத்து ஆடும்போது மர்த்தாவின் அடிகள் துளிக்கூட அளவு பிசகாது. அவனால் தான் சமாளிக்க முடியாது.

ஒரு தீர்மானமாக எழுந்திருந்தான். அவள் புறமாக மர்த்தா கையை நீட்டி அழைக்கும் வேளையில்—

''ஹலோ மிஸ்டர் ராஜேஷ்'' என்ற அந்தக் குரல் கேட்டது. அவனை அப்படி அழைத்தவர், தலைமை காஷியர் சாரதி.

அவருடன் இருந்த அந்த அழகிய பெண்? ராஜேஷ் அவளை உன்னிப்பாகப் பார்த்தான்.

வெண்மையான தந்த நிறத்துக்கு சிலை போன்ற உடலமைப்பு இன்னும் அழகு கொடுத்தது. அந்த இளமையில் இழுத்துக் கட்டினாற்போல ஒரு வனப்பு தெரிந்தது. எத்தனையோ கவர்ச்சியைக் கொட்டும் அந்த அழகிலும், சொல்ல முடியாத ஒருகுழந்தைத்தனம் இருந்தது. அவளைப் பார்த்ததும்—அந்தக் கண்கள் சுடர் விட்டதும், கன்னங்களில் குழி விழப் புன்னகை உதிர்ந்ததும், அந்தக் கள்ளமில்லாத சுபாவத்தைக் காட்டுவதைப் போலத் தோன்றின.

''என் பெண் சாந்தி. பெங்களூரில் இருக்கிறாள். ஹாலிடேயில் பம்பாய் வந்திருக்கிறாள்... இவர்தான் மிஸ்டர் ராஜேஷ்.''—சாரதி அறிமுகப்படுத்தி வைத்தார்.

ஆவலோடு ராஜேஷ் கையை நீட்டினான். அவள், கை குலுக்கவில்லை. புன்னகையுடன் கரம் குவித்துக் கொண்டாள். அவனுக்கு அது ஒரு கணம் ஏமாற்றமாக இருந்தது.

''வோண்ட்யூ?'' என்று கண்ணைச் சிமிட்டிக் கேட்டாள் மர்த்தா. அவள் பதில் சொல்லவில்லை. சாரதியும் அவள் புறம் திரும்பினார். அவருடைய பார்வை, 'ஏன் சாந்தி, கையைக் கொடேன்!' என்று சொல்வது போல இருந்தது. ராஜேஷ் குறுக்கிட்டான்:

''வேண்டாம். அவருக்கு அந்த வழக்கம் என்றால் அப்படியே இருக்கட்டும். இயற்கையான சுபாவத்திலேயே உங்கள் பெண்ணைப் புரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்று கூறி, சிரித்துக் கொண்டான். அதுவரை அவன் எந்தப் பெண்ணிடமும் பார்த்திராத ஒரு புதுமை அவளிடம் தெரிவது போலத் தோன்றியது.





முன் பக்கத்தின்

விடை:

நால்வரும் அமர்ந்தனர். மறுபடியும் தட்டும் கோப்பைகளும் வந்தன. ராஜேஷ் சுவாரசியத்தோடு இரண்டாவது 'பெக்'கை ஊற்றிக் கொண்டான். சாரதியும் சிறிது எடுத்துக் கொண்டார். சாந்தி அவற்றைத் தொடவில்லை. அருகில் வந்த ஸர்வரிடம் ''ஸாஃப்ட் டிரிங்க்ஸ்—ஃப்ரெஷ் லைம் இருந்தால் கொண்டுவா, போதும்!'' என்றாள்.

அது ராஜேஷ் எதிர்பார்த்ததுதான். இந்தத் தோற்றம், பணிவு ததும்பிய அழகு, நிதானம்—இவற்றுடன் மது அருந்தும் வழக்கம் ஒன்றிச் சேர முடியாது. ஆனாலும் அவனுக்கு அந்தக் கண்களில் மது அருந்திய மருட்சியைப் பார்க்க வேண்டும் போல ஓர் ஆசையும் கூடவே எழுந்தது. மதுவின் பின் தெரியும் திறந்த மனத்தின் அழகே தனிதான்.

''கொஞ்சம் முயன்று பாருங்களேன்'' என்று அவளிடம் நீட்டினான்.

''தாங்க் யூ! வேண்டாம்.''

அவள் மறுப்பு பிடிவாதமாக இல்லாமல், கெஞ்சுவது போலத்தான் இருந்தது. அப்படி மறுமுறை 'வேண்டாம்' என்று சொல்வதற்கு மன்னிப்புக் கேட்பது போலவும் இருந்தது. அவன் மேலே வற்புறுத்தவில்லை.

மனத்தை மயக்கும் இசை, மென்மையாக ஒலித்துக் கொண்டிருந்தது. மங்கிய பொன் நிற ஒளியில் அந்த ஹால் முழுவதும் கனவுலகமாகக் காட்சி அளித்தது. இரகசியமான குரலில் 'மைக்'கின் முன் நின்று பாடிய பெண், அவர்களுடைய உணர்ச்சிகளில் ஒரு துடிப்பைத் தட்டி எழுப்பினாள். ஜோடி ஜோடியாக நடனம் ஆடிக் கொண்டிருந்தார்கள்.

அவனுக்கும் அப்படி ஆட வேண்டும் என்ற ஆவல் தோன்றியது. சற்று முன் மார்த்தா அவனுக்குக் கை கொடுத்திருப்பாள். இப்போது? அவன் சாந்தியை விழுங்கி விடுவது போலப் பார்த்தான். அவளுடன் கை கோத்து, தோளின் பின் கை கொடுத்து, கண் பார்வையால் அணைத்தபடி ஆடுவதைப் போல ஒரு கற்பனை செய்து பார்த்தான். ஆனால் அவள் எங்கே இசையப் போகிறாள்?

''வில் யூ டான்ஸ்?''

எவ்வளவோ அடக்கி வைத்தும் அவனால் அந்தக் கேள்வியைக் கேட்காமல் இருக்க முடியவில்லை.

''எஸ். நான் நடனம் ஆடுவதுண்டு. இங்கே இல்லை, இப்படி இல்லை; தனியாக மேடையில்.''

அவன் முகம் சட்டென்று விழுந்தது. அந்தப் பதிலைக் கேட்டதும் மார்த்தா ஆவலோடு சாந்தியைக் கேட்கத் தொடங்கினாள்:

ராஜேஷ்கன்னா.

லட்சுமி.

இவர்கள் இருவரும் இணைந்து 'பகீசா' படத்தைத் தயாரித்த கமால் அம்ரோஹி யின் படத்தில் நடிப்பதாக இருந்தனர். லட்சுமியின் கால்ஷீட் ஒத்து வராததால் அவர் இப்படத்தில் நடிக்கவில்லை.

—ஏ. எஸ்.

''பரத நாட்டியம் தெரியுமா சாந்தி உனக்கு? ஹௌ லவ்லி? நான் கட்டாயம் பார்க்க வேண்டும். உனக்குச் சொல்லித் தந்த டீச்சர் யார்?''

''பந்தணைநல்லூர் ஆசிரியர்'' என்று சாந்தி அடக்கத்துடன் தனது நடனப் பயிற்சி பற்றிய விவரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தாள். அவனுக்கு அந்தப் பேச்சு காதில் விழவில்லை. சாந்தியின் கண்களின் அசைவையும், கன்னக் கதுப்பையும், அலட்சியமாக இளமையை ஏற்றுக் கொண்டிருந்த உடலின் கட்டழகையும் மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தான். சாந்தி பேசி முடித்த பிறகும், அந்தக் குரலின் இனிமை அவன் மனத்தில் அலை எழுப்பிக் கொண்டிருந்தது.

சாந்தி தான் பல ஆண்டுகளுக்கு முன்பே நடன அரங்கேற்றம் செய்து விட்டதையும், பல மேடைகளில் ஆடிப் பரிசு பெற்றதையும், பத்திரிகைகள் தன் நடனத்தைப் புகழ்ந்துள்ளதையும் விவரித்துக் கொண்டிருந்தாள். எல்லாவற்றையும் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த ராஜேஷ், குறுக்கிட்டான்:

''மிஸ் சாந்தி, நான் உங்கள் ரஸனைகளையெல்லாம் பாராட்டுகிறேன். ஆனால் வாழ்க்கையில், அதுவும் இளமைப் பருவத்தில் அனுபவிக்க வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. அவற்றை நீங்கள் நழுவ விட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். இளமை என்பது வாழ்க்கையில் ஒரு தடவை தான். அப்புறம் ஏங்கினாலும் கிடைக்காது'' என்றான்.

சாந்தியின் முகம் சட்டென்று சுருங்கிற்று. மறுகணம் சமாளித்துக் கொண்டாள். அவன் கொஞ்சம் அதிகமாகவே பேசிவிட்டானோ என்னவோ? அதற்கு மதுவின் போதை காரணமாக இருக்கலாம். ஆனால் அவனுக்கு அவளிடம் அப்படிப் பேசுவதுதான் பொருத்தமாகத் தோன்றியது. நெஞ்சைத் திறந்து கொட்ட வேண்டும் போல ஓர் ஆசை அவனைத் தவிக்க வைத்தது.

மர்த்தா 'கலகல'வென்று சிரித்தாள்.

''என்ன இப்படிப் பேசுகிறாரே என்று பார்க்கிறாயா சாந்தி? அது ராஜேஷின் சுபாவம். எதிலும் வெளிப்படை. ஒளிவு மறைவு இல்லாதவர். ஆனால் பிடிவாதக்காரர். பாரேன், முப்பத்தோரு வயது ஆகிறது. இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குகிறார். ஆனால், இன்னும் 'எலிஜிபிள் பாச்சுலர்'தான். எந்தப் பொண்ணுக்கு அதிருஷ்டமோ?''

''ஒரு திருத்தம்... நான் பாச்சுலர் இல்லை. அன்மாரீட் மேன். இரண்டிற்கும் வித்தியாசம் இருக்கிறது...'' என்றான் ராஜேஷ்.

சாந்தி ஒரு நிமிஷம் ராஜேஷை நிமிர்ந்து பார்த்தாள். அவள் பார்வை அவன் கண்களில் தெரிந்த ஏக்கத்திற்கு அர்த்தம் காண முயலுவதைப் போல இருந்தது. கூடவே அவளுடைய நெஞ்சில் ஒரு சிறு திகில் அலை புரண்டது. பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

ஏதாவது பேச வேண்டும் என்று நினைப்பதைப் போல் சாரதி, ''சாந்திக்கு, நுட்பமான கலைகளில் ரொம்ப ஆசை. கல்லூரியில் நிறையப் பரிசு வாங்கியிருக்கிறாள். பேச்சுப் போட்டியில் கூடப் பின்தங்கவில்லை'' என்று தொடர்ந்தார்.

''இங்கே அதிகம் பேசவே காணோமே?'' என்று ராஜேஷ் கிண்டலாகக் கேட்டான்.

''எனக்குப் பழக்கமான சப்ஜெக்ட் எதையுமே இதுவரை நீங்கள் யாருமே எடுத்துக் கொள்ளவில்லையே?'' என்றாள் சாந்தி, கொஞ்சம் கூட விட்டுக் கொடுக்காமல்.

''சரி, உன்னுடைய சப்ஜெக்ட் என்ன? சங்கீதம், சினிமா, அரசியல், உடை அலங்காரம்?'' என்று மர்த்தா அடுக்கினுள்.

''எல்லாமேதான்! ஆமாம், எத்தனை ஆண்டுகளாக, இந்தியாவில் இருக்கிறீர்கள் நீங்கள்?''

''ரொம்ப நாட்களாக இருக்கிறேன். பெங்களூருக்கும் கூட வந்திருக்கிறேன்.''

''பெங்களூருக்கா?''

''எஸ். உன் முகம்கூட எனக்குப் பழக்கமாக இருக்கிறது. வந்ததிலிருந்து யோசிக்கிறேன். எனக்கு நினைவில் அந்தத் தொடர்புதான் கிடைக்கவில்லை.''

சாந்தியின் முகம் சட்டென்று வெளுத்தது. அதை மற்றவர்கள் கவனிக்கும் முன் மறைத்துக் கொண்டாள். தன்னை மற்றவர் கவனிப்பதிலிருந்து திருப்புவதைப் போல, அவளே பேச ஆரம்பித்தாள். மர்த்தாவும் கலந்து கொண்டாள். இருவரும் பரிமாறிக் கொண்ட விஷயங்கள், ராஜேஷுக்கு வேடிக்கையாக இருந்தன. அவர்களுடைய பேச்சு திரும்பத் திரும்ப உடையைப் பற்றி, நாகரிகத்தைப் பற்றி, நகையைப் பற்றித்தான்—பெண்கள் ஒரே மாதிரிதான், எந்த நாட்டைச் சேர்ந்தவர்களானுல்தான் என்ன?

மணி பன்னிரண்டை நெருங்கிற்று. சாரதியும் சாந்தியும் விடை பெற்றுக் கொண்டு எழுந்தார்கள். அவர்களை அந்த ஹாலின் வாசல்வரை போய் வழியனுப்பி விட்டு வந்தான் ராஜேஷ்.

அவன் வந்ததும் மர்த்தா சொன்னுள்:




''ஒவ்வொரு பலூனுக ஊதி ஊதி உடையுங்க.. பட்டாசு விலை அநியாயமாய்ச் சொல்ருன்!''

''எ நைஸ் சார்மிங் கேர்ல்.''

''ஒப்புக் கொள்கிறேன். சாரதி தன் பெண்ணைப் பற்றி முன்பே சொல்லி இருக்கிருர். ஆனுல் அவள் இவ்வளவு 'க்ரேஸ்ஃபுல்'லாக இருப்பாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை'' என்றுன் ராஜேஷ்.

''உங்களுக்குப் பிடித்திருக்கிறதா அவளை?''

'ஆமாம்' என்பது போல் ராஜேஷ் தலையை அசைத்தான். ஆனுல் சாந்தி அவனைப் பற்றி என்ன நினைத்தாளோ?

''நான் சொல்லட்டுமா? நீங்கள் இருவரும் ஓர் அருமையான ஜோடியாக இருப்பீர்கள்!''

அவன் கண்கள் தணலாக மின்னின. அதுவரை அடக்கி வைத்த ஆவல் அவ்வளவும் அவன் பார்வையில் மூண்டு எழுந்தது. அந்த முகமும், பார்வையும், அழகும், கவர்ச்சியும், நினைவில் அலை புரண்டன.

''ஜோடி என்ருல் இரண்டு அர்த்தம். யார் அந்த இரண்டாவது பேர்?'' என்று கேட்ட வண்ணம் அட்கின்ஸன் அங்கே வந்தார். ராஜேஷ் சற்று அதிர்ந்து போய்த் திரும்பிப் பார்த்தான்:

''ஓ, அதுவா?'' என்று மர்த்தாவைத் திரும்பிப் பார்த்துவிட்டு, அவர் தோள் மீது கையை வைத்தான்: ''மிஸ்டர் அட்கின்ஸன், எவ்வளவோ தடவை நீங்கள் என்னிடம் யோசனை கேட்டிருக்கிறீர்கள். இப்போது உங்களிடம் நான் யோசனை கேட்க இது ஒரு சந்தர்ப்பம். அப்புறம் பேசுவோம்.''

''காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று சிரித்தார் அட்கின்ஸன்.

காரில் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த சாரதியின் மனத்திலும் அதே போல சிறு கலக்கம். ராஜேஷைத் தன் மகள் சந்திக்க வேண்டும் என்பதற்காகவே, அந்த பார்ட்டிக்கு அவனை அழைத்து வந்திருந்தார். சந்திப்பு நிகழ்ந்து விட்டது. அடுத்தது...? மகளைப் பார்த்து அந்தக் கேள்வியை எப்படிக் கேட்பது என்று தவித்துக் கொண்டிருந்தார். கடைசியில் அவர் துணிந்து அவளிடம் கேட்க வாயெடுத்த போது—

சாந்தியின் கேள்வி அவரைத் திகைக்க வைத்தது.

(தொடரும்)




சினிமா விமரிசனம்

டீன்ஏஜ் காதல் எப்படி யிருக்கும்? பள்ளிக்கூடத்திலிருந்து வெளிவந்ததுமே இளைஞன் ராஜா காதலிக்க ஆரம்பிக்கிறான். பணக்கார இளைஞனை [illegible], பணக்காரப் பெண்ணைக் காத[illegible] கதை இல்லை. அவன் விரும்பும் பா[illegible] ஒரு மீனவரின் மகள். கிறிஸ்துவப் பெண். பணக்கார அப்பா காதலுக்குத் தடை போடுகிறார். வேறொரு பெண்ணை நிச்சயிக்க ஏற்பாடாகிறது. இளங்காதலர்கள் தப்பி விடுகிறார்கள். அப்புறம் என்ன?

கதை என்னவோ சாதாரணமானாலும் கொத்துக்கொத்தான [illegible] மலர்களைப் போல ரசிப்பதற்கு பாபியில் எத்தனையோ இருக்கின்றன. இந்த டீன்ஏஜ் காதலர்கள் மற்ற காதலர்களை விட மாறுபட்டவர்கள். 'சின்னஞ்சிறுசு'களின் உள்ளத்தில் காதல் எப்படி அரும்பி, எப்படி நெருக்கமடைகிறது என்பதை நுட்பமாக ரசனையோடு உருவாக்கிக் காட்டியிருக்கிறார்கள். அசை போட்டு அனுபவிக்கலாம்.

புதுமுகம் என்று நம்ப முடியாத அளவுக்கு டிம்பிள் கபாடியா, பாபியாகத் தோன்றி, கொஞ்சிச் சிரிக்கிறார். உணர்ச்சிகளை நளினமாகக் கொட்டுகிறார். இயற்கையான நடிப்பு. ரிஷி கபூரும் அலட்டிக் கொள்ளாமல் நடித்திருக்கிறார். காஷ்மீர் காதல் ஆட்டபாட்டங்கள் நெஞ்சைக் கவர்கின்றன.

பாதிவரை இளமைக் குளுகுளுப்பு. கிளுகிளுப்பு. மறு பாதியில் வரும் சண்டைக் காட்சிகள் 'ஏனோதானோ' தான். பணக்கார அப்பாவின் (பிரான்) மனம் மாறுவதற்கு இது ஒன்றுதானா வழி? பாபியின் தந்தை பிரேம்நாத் ஒரு நல்ல பாத்திரத்தை அருமையாகச் செய்திருக்கிறார்.

பங்களா, பார்ட்டி, பணக்காரச் சூழ்நிலை என்ற பிரமிப்பை யெல்லாம் மிஞ்சி விடுகிறது, இளம் உள்ளங்களின் ஆழமான காதல். இந்தக் கோணத்தில் ராஜ்கபூர் வெற்றி பெற்று விடுகிறார். இனிமையான பொழுதுபோக்கு.


NEW!
SUPER
Surf
ஒரே ஒரு சலவையில்
ஸூப்பர் ஸர்ஃப்
வேறெந்த சலவைப்
பவுடரையும் விட
அதிக வெண்மை தருகிறது!
ஒப்பற்ற வெள்ளைவெளேர் -
சலவைக்கே ஸூப்பர் ஸர்ஃப்,
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு




# 2

"I learned that you cannot live without regard for Society and the common man. For to live so, is to live without regard for yourself." — Harold Robbins.
(NEVER LOVE A STRANGER.)

'சில்'லென்ற காற்று அவர்களுடைய முகத்தில் மோதிற்று. சாந்தியின் கேள்வி அதை விடக் குளிர்ச்சியாக இருந்தது. அவளுடைய வேதனைக் குரல் ஊசியாகக் குத்திற்று.

"நீங்கள் ஏன் அவரிடம் என் வேலையைப் பற்றிக் குறிப்பிடவில்லை, அப்பா?"

சாரதி அவளை நிமிர்ந்து பார்த்தார், புருவங்கள் கருங்கி நெரிந்தன.

'எதற்காகக் குறிப்பிட வேண்டும்? எப்படிச் சொல்வது அதை? கேட்பவர்கள் சரியாகப் புரிந்து கொள்வார்கள் என்பது என்ன நிச்சயம்?'

"ஏன் பதில் சொல்லவில்லை அப்பா? பெங்களூரில் நான் இருந்ததைச் சொன்னீர்களே? மர்த்தா கூட என்னை எங்கேயோ பார்த்த ஞாபகம் என்று சொன்னாள்.—"

கார், சாலைகளின் சந்திப்பில் நின்றது. குறுக்கும் நெடுக்குமாக ஓடிய கார்களின் விளக்கு வெளிச்சத்தைப் போல, அவர் மனத்திலும் பழைய நினைவுகளின் ஒளிக் கோலம் ஓடிற்று. நினைத்ததையெல்லாம் அப்படியே சொல்ல முடியுமா?- அதுவும் வயது வந்த பெண்ணிடம்?

"அதற்கு ஒரு சந்தர்ப்பம் வரவில்லை சாந்தி. அதுவும் புதிதாக அறிமுகமான ஒருவரிடம் இதைக் குறிப்பிடுவானேன்? சிலரிடம் சில விஷயங்களைத்தான் சொல்லலாம்."

"ஏன் அப்பா? அவர் மாதம் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் என்று சொன்ன போது, நானும் உங்களுக்கு மாதம் ஐந்நூறு ரூபாய் அனுப்பிக் கொண்டிருந்தேன் என்று ஏன் சொல்ல முடியவில்லை? சொல்லட்டுமா? அந்தக்

கூடுதலான வருமானம் உங்களுக்குப் பிடித்திருந்தது. ஆனால்—''

சாந்தியின் குரல் தடுக்கிறாற்போல நின்றது. மகளின் தோள் மீது கையை வைத்து அமைதிப் படுத்தினார். சற்றுக் கலங்கிய மனத்துடன் தந்தையின் தோள்மேல் சாய்ந்து கொண்டாள் சாந்தி.

கார் மேலே ஓடிற்று.

தான் கேட்க நினைத்ததை சாரதி கேட்கவில்லை. 'ராஜேஷைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?' என்றுதான் அவர் கேட்க விரும்பினார். ஓர் உள்நோக்குடன்தான் அவர் அந்தச் சந்திப்பையே ஏற்பாடு செய்திருந்தார். எனவே, மகள் மனத்தைப் புரிந்து கொள்ளும் துடிப்பு அவரிடம் இருந்தது. ஆனால் சந்தர்ப்பம் சரியாக இல்லை. அவர்கள் இருவரும் மீண்டும் சந்திக்க வாய்ப்பு நேராமல் போகாது. அப்போது அதைப் பற்றி மேலும் பேசிக் கொள்வார்கள்; ஒருவரையொருவர் புரிந்து கொள்வார்கள். அப்போது இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டிய அவசியமே நேராமல் போய்விடக்கூடும்.




வீட்டு வாசலில் கார் நின்றது.

கதவைச் சாத்தி விட்டு சாந்தி தனது உடைகளை மாற்றிக் கொண்டு படுக்கையில் சாய்ந்தாள். இரவு விளக்கின் நீலம் கண்ணுக்கு இதமாக இருந்தது. அவளுடைய மனம்தான் ஒரு நிலையில் இல்லை.

கண்ணாடி ஜன்னல் வழியாக வெளியே தெரிந்த நகரத்தின் காட்சியைப் பார்த்தாள். விளக்குப் புள்ளிகள் வழி காட்டுவது போலத் தோன்றின. தான் வந்த வழியில் பத்து ஆண்டுகள் திரும்பிப் போனால்? கடிகார முள்ளைத் திருப்புவதைப் போலக் காலத்தைப் பத்து ஆண்டுகள் திருப்பி வைக்க முடியுமானால்? அவளுடைய கண்களை மூடிக் கொண்டாள்:

'கடவுளே, எனக்கு அந்த நாட்களைத் திருப்பிக் கொடு. அந்த அறியாப் பருவத்தை மீண்டும் கொடு.'

படுக்கையில் புரண்டாள். மென்மையான ரப்பர் தலையணையில் மார்பு அழுந்தப் படுத்துக் கொண்டாள். கைகளில் தேங்கிய முகத்தின் எதிரே, கண்ணாடியில் அவள் முகம் நிழல் வடிவமாகத் தெரிந்தது.

ராஜேஷ்......அவன் முகத்திற்குப் பின்னால் இன்னொன்று...... வேறொன்று ......இன்னொன்று...... மூடிய கண்களில் சட்டென்று அந்தக் காட்சி மாறி மாறி மறைந்தது. ஆனாலும் மனத்திற்கு அமைதி கிடைக்கவில்லை.

'வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டிய இன்பமான பகுதிகள் பலவற்றை நீங்கள் நழுவ விட்டுக் கொண்டிருக்கிறீர்கள். மறுபடி ஏங்கினால் அவை கிடைக்காது. இளமைப் பருவம் வாழ்வில் ஒரு முறைதான் வரும்.'

தூரத்தில் கேட்கும் இசையைப் போல ராஜேஷின் குரல் மீண்டும் கேட்டது. ஒரு கணம் அது அவளுக்கு அனுதாபக் குரலாகத் தோன்றியது. மறு கணம் அவளுடைய மனத்தில் அதன் எதிரொலி கேலி செய்வது போலவும் ஒலித்தது. அவளுடைய அந்தரங்கம் அதற்கு என்ன பதில் சொல்லிற்று?

ராஜேஷ் முப்பத்தோரு வயது நிறைந்த வாலிபன். அவன் இளமைப் பருவத்தின் உன்னதமான பொழுதுகளில் பத்து ஆண்டுகளைக் கடந்து வந்தாயிற்று. வாழ்க்கையில் இன்பமான பகுதிகளை அவன் எவ்வளவு தூரம்அனுபவித்திருந்தான்? மணமாகாத இளைஞனாக, நல்ல வருவாயுடன், அந்த அழகிய கம்பீரமான தோற்றத்துடன் அவன் இனிமையாகக் கழித்திருக்கக் கூடிய பத்து



ஆண்டுகள்? அவள் ஆழ்ந்து சிந்திக்கத் தேவை இல்லை.

ஆனாலும் தூங்க முயன்று மூடிய கண்களில் ராஜேஷின் முகம்தான் தெரிந்தது. காதில் அவனுடைய வெளிப்படையான பேச்சுத்தான் இன்னும் ஒலித்தது. அந்த நினைவும் நிகழ்ச்சிகளும் தூக்கத்தில் அமுந்திப் போகும் வரையில் அவளைத் தாலாட்டிக் கொண்டே இருந்தன.

மூன்று நாட்கள் ஆகிவிட்டன. அவளுக்கு வேறு எத்தனையோ வேலைகளும், பொழுது போக்குகளும் காத்துக் கொண்டிருந்தன. வெகு நாட்களாகச் சந்தித்திராத பழைய தோழிகள் இரண்டு பேர், ஞாயிற்றுக் கிழமை அவளை வரும்படி அழைத்திருந் தார்கள்.

போன் மணி ஒலித்தது. ஆபீசிலிருந்து அப்பாதான் பேசினார். வழக்கமாக மாலையில் எங்கே போகலாம் என்று அவர் கேட்பார். ஆனால் அன்று அவர் சொன்ன விஷயம் வேறு:

''நாளைக்கு— ஞாயிற்றுக்கிழமை— ராஜேஷ் நம்மை அவர் வீட்டிற்குச் சாப்பிடக் கூப்பிடுகிறார். நான் உன்னைக் கேட்டுச் சொல்வதாகப் பதில் கூறி இருக்கிறேன்.''

''என்னையுமா அப்பா?''

''என்னை மட்டும் கூப்பிட்டிருந்தால் உனக்கு போன் செய்திருக்க மாட்டேன்.




பேப்பர்காரர்: உங்க கதையிலே நல்ல 'வெயிட்' இருக்கு சார்!

அவருடன் வந்து கொஞ்ச நேரம் இருந்து பேசி, சாப்பிட்டு விட்டுப் போக வேண்டும் என்கிறார். உனக்கு வேறே ஏதாவது என்கேஜ்மெண்ட்?''

''எதற்காகவாம் அப்பா? எனக்கு அப்படி முக்கியமான நிகழ்ச்சி எதுவும் இல்லைதான். ஆனாலும்......''

''நீயே அவருடன் பேசுகிறாயா சாந்தி? பக்கத்தில்தான் இருக்கிறார் ராஜேஷ்.''

அவள் அதை எதிர்பார்க்கவில்லை. அவள் சிந்திக்க அவகாசம் தேடுவதற்கு முன், போனில் ராஜேஷின் குரல் ஒலித்தது. 'ஜிவ்'வென்று ஒரு மகிழ்ச்சி, அவள் மனத்தில் ததும்பிற்று.

கனிந்த குரலில் அவனிடம் பேசினாள்:

''நானும் வரவேண்டுமா?''

''உங்கள் அப்பாவை எனக்கு நான்கு ஆண்டுகளாகத் தெரியும். இப்போ என் அழைப்பு உங்களுக்குத்தான். அவ உங்களுக்குத் துணையாக வரட்டும்.''

''அப்பா ஒப்புக் கொண்டால், எனக்கு ஆட்சேபணை இல்லை.''

''ஐ விஷ்— உங்களுக்கென்று தனியாக ஒரு சுதந்திரமான அபிப்பிராயம் இருந்து, நீங்கள் வற்புறுத்துவதுதான் சரி— இருந்தாலும், நீங்கள் விரும்புகிறபடி அவரைக் கேட்டுக் கொள்கிறேன். நாளைக்குப் பார்க்கலாம். பை...பை.''

போனை வைக்கும் சப்தம் கேட்டது. இன்னும் கொஞ்சம் பேசி இருக்கலாம் போலத் தோன்றியது. நாளைக்குச் சந்திக்கும்போது மேலே பேசலாம். இன்னும் மீண்டும் அப்படி எத்தனை சந்திப்புக்களோ?

கடலை நோக்கி மேடான இடத்தில் அந்த பங்களா அமைந்திருந்தது. அங்கிருந்து பார்த்த பொழுது கடற்கரைச்சாலை அழகான வளைவாகத் தெரிந்தது. காரிலிருந்து இறங்கியதும் சாந்தி ஆவலோடு இருபுறமும் பூத்துக் குலுங்கிய செடிகளையும், படிப்படியாக இறங்கிய மேட்டில் வளைந்து நின்ற தென்னை மரங்களையும் பார்த்தபடி நின்றாள். அவளுக்கு அந்தச் சூழ்நிலை மிகவும் பிடித்திருந்தது.

''ஹலோ, ஹாப்பி மார்னிங்.''

திடீரென்று குரல் கொடுத்த விதத்தில் அசந்து போய்த் திரும்பினாள். தோட்டத்தில் இதமான நிழலில் போட்டிருந்த கூடை நாற்காலி ஒன்றிலிருந்து ராஜேஷ் கையை அசைத்தான்.

அவனுடைய உடற்கட்டை எடுத்துக் காட்டும் டென்னிஸ் பனியனும், அதற்குப் பொருத்தமான வெண்ணிற அரை நிஜாரும் அழகாக இருந்தன. கண் பார்வையின் ஆழத்தைப் புரிந்து கொள்ள முடியாத கூலிங் கிளாஸ் அணிந்திருந்ததும் நன்றாகத்தான் இருந்தது. அவன் காலடியில் படுத்திருந்த நாய்க்குட்டி, அவன் எழுந்து வந்ததும் கூடவே ஓடி வந்தது.

சாரதியுடன் கை குலுக்கினான். அவளுக்கு, முன்பு செய்ததைப் போல கை கூப்பிய வணக்கம்தான். அது அன்று அவளிடம் பழகியதில் தெரிந்து கொண்டது. அந்த நிகழ்ச்சியும் இப்போது நினைவிற்கு வந்தது. அவளை அறியாமல் இதழ்களில் ஒரு புன்னகை இழையோடிற்று.

''உள்ளே போகலாமா?''

சாரதி புன்சிரிப்புடன் அவனைத் தொடர்ந்தார். அவள் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே நுழைந்தாள். ஹால் மட்டும் சுத்தமாக இருந்தது. சோபாவில் திண்டுகளை அடுக்கி, பூக் கலசத்தில் கொத்துக்களை அடுக்கி, படங்களைச் சுத்தமாகத் துடைத்து, கீழே தரை விரிப்பைத் தூசில்லாமல் வைத்து.. அவனுடைய ஆள் ஒரு நல்ல வேலைக்காரன்தான்.

ஆனால் அவனுடைய அறை தாறுமாறாக இருந்தது. அலமாரியில் கலைந்து கிடந்த புத்தகங்களும், நாற்காலியின் முதுகில் கிடந்த உடைகளும், டீப்பாயில் வைத்த பீங்கானில் பாதி எரிந்து அணைந்த சிகரெட் துண்டுகளும் அவன் வாழ்க்கையை லேசாக எடுத்துக் கொண்டதைக் காட்டுவது போலத் தோன்றின.

''இது ஒரு டிப்பிக்கல் பாச்சுலர்ஸ் டென்— இல்லையா?'' என்று கூறிச் சிரித்தான் ராஜேஷ்.

''எஸ். பாச்சுலராக இருக்கும் வரையில்தான் இப்படி ஒரு சுதந்திரம். அப்புறம் ஆசைப்பட்டால் கூட இருக்க முடியாது'' என்று கூடவே சிரித்தார் சாரதி. சாந்தி, நாணம் ததும்பத் தலையைக் குனிந்து கொண்டாள்.

''உட்காருங்கள்...... உங்களுக்கு எப்படி சௌகரியமோ அப்படி... இதோ காபி கொண்டு வருகிறேன்.''

பையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். அங்குமிங்கும் நடந்தான். கைகள் எதையோ தேடின.



''கல்யாணமான பிறகு எனக்கு கை நிறைய கிடைக்கிறது...''

''என்னது? சம்பளமா?''

''இல்லே... என் மனைவி ஷாப்பிங் போறபோது கை நிறைய சாமான்கள் கொடுக்கறான்னு சொல்ல வந்தேன்!''

---

கால் கீழே கிடந்த பொருட்களில் இடறின. சொல்ல முடியாமல் ஒரு பரபரப்பு அவன் செய்கைகளில் தெரிந்தது. அவள் 'களுக்'கென்று சிரித்தாள்.

''நீங்கள் உட்காருங்கள். நான் கொண்டு வருகிறேன். உங்களைப் பார்த்தால் பாவமாக இருக்கிறது.''

கோப்பையில் ஆவி பறக்க காபியை அவளே கொண்டு வந்தாள் உள்ளிருந்து. அவனிடம் குனிந்து நீட்டும்போது, மிக அருகில் நெருங்கிய முகங்களில் அவன் பார்வை அவள் விழிகளைத் தேடின. பார்வை மாறாமல் கோப்பையை எடுத்ததில், அவன் விரல்கள் நடுங்கின. பீங்கான் 'கிணு கிணு'வென்று சிரித்தது.

''வில் யூ ஹெல்ப் மீ?''-அவன் கேள்வி தாழ்ந்து இரகசியக் குரலாகக் கேட்டது.

''என்ன ஹெல்ப்? உங்களுக்குப் பதிலாக நான் சாப்பிட வேண்டுமா?''

''அவ்வளவேதான். எனக்கு இப்போது தேவை, ஒரு கோப்பை பீர்— காபி அல்ல. இதோ வந்து விடுகிறேன். என்னுடைய விநோதமான சுபாவத்தைக் கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள்.''

ஐந்து நிமிடங்களில் திரும்பி வந்தான் ராஜேஷ். அவள் மட்டும்தான் அவனுக்காகக் காத்துக் கொண்டு இருந்தாள். படங்களைப் பார்க்கும் பாவனையில்

ஒதுங்கி, ஹாலுக்குப் போய் விட்டார் சாரதி.

''எடுத்த எடுப்பிலேயே, என் பலவீனங்களை மறைக்காமல் வெளிப் படையாகக் காட்டுகிறேனு சாந்தி? உங்களுக்கு சங்கடமாக இருக்கிறதா?''

''நீங்கள் என்னை 'உங்கள்' என்று சொல்வது ஒன்றுதான் சங்கடமாக இருக்கிறது. வேறே எதுவும் இல்லை.''

''நைஸ். நீயும் ஃப்ரீயாகப் பேசலாம். எனக்கு வெளிப்படையாகப் பேசுவது, பழகுவது — இவைதான் பிடிக்கும். கொஞ்சம் பொறுத்து சாப்பிடலாம் இல்லையா? வெளியே தோட்டத்தில் உட்கார்ந்து பேசுவோமே?''

அவன் ஒரு சிகரெட்டை எடுத்து இதழ்களில் வைத்துக் கொண்டான். டீப்பாயின் மீது இருந்த லைட்டரை எடுத்து, அவள், அவன் முகத்தருகே குனிந்து ஏற்றினுள். பற்ற வைத்துக் கொண்டதும் ஏதோ ஞாபகமாக, ராஜேஷ் அவள் கன்னத்தில் செல்ல மாகத் தட்டினுன். நாணத்தில் அவள் உடம்பு சிலிர்த்தது.

''ஐ ஆம் ஸாரி. என்னை மன்னித்து விடு.''

''மன்னிக்க ஒன்றும் இல்லையே இதில்? ஏன் அலட்டிக் கொள்கிறீர்கள்?''

புகை வளையங்களுக்கு நடுவில் அவள் முகம் ஒளி விட்டது. அந்த முகத் தில் தெரிந்த மந்தகாசம் அவன் உடலிலும் ஒரு துடிப்பாகப் பரவிற்று. அந்தத் தணிவான குரலில் அவள், அவன் மனத்துக்கு மிகவும் நெருங்கி வந்து விட்டது போலத் தோன்றினுள்.

வெளியே மர நிழலில் இருவருமாக உட்கார்ந்தார்கள். ராஜேஷ் தன்னைப் பற்றி நிறையச் சொல்லிக் கொண்டே போனுன். அவனுடைய படிப்பு, உத்தி யோகம், ஆசைகள் எல்லாவற்றையும் பற்றி, எந்த ஒளிவு மறைவும் இல்லாமல் பேசினுன். சாந்திக்கு அது வியப்பாக இருந்தது.

'எனக்கும் இவருக்கும் என்ன பழக்கம்? இப்படி எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளாமல் அள்ளிக் கொட்டுகிறுரே? இது என்ன சுபாவம்? எனக்கு இவை எல்லாம் தெரிய வேண்டும் என்று நினைக்கிருரா? ஏன்?' என்று அவள் மனம் மீண்டும் மீண்டும் எண்ணிற்று.

''உன்னைப் பற்றி ஒன்றுமே சொல்ல வில்லையே சாந்தி?''

ராஜேஷ் கேட்டுவிட்ட பிறகு அவளும் தன் படிப்பைப் பற்றியும் பழக்க வழக்கங்களைப் பற்றியும் சொன்னுள். ஆனுல் அவனைப் போல — அவளால் மனத்தைத் திறந்து கொட்ட முடிய வில்லை.

''பெங்களூரில் என்ன வேலை செய்கிருய்?''

சட்டென்று அவள் கண்கள் மருண் டன. முகத்தில் நொடிப் பொழுது ஒரு கலக்கம் தலைகாட்டிவிட்டு மறைந்தது.

''அது ஒரு பிஸினஸ்—''

''என்ன பிஸினஸ்?''

''என்னேடு நிறையப் பெண்கள் வேலை செய்கிருர்கள். சிரமம் அதிகமில்லை. நல்ல சம்பளம்.''

''வேண்டாம் என்ருல் விட்டு விடலாம் இல்லையா?''

''ஏன்? எதற்காக?''

''சும்மா கேட்டேன். அவ்வளவுதான். உன்னை ஒன்று கேட்பேன். நீ 'மாட்டேன்' என்று சொல்லக் கூடாது. நாளை மறுநாள் மாலையில் உன்னை நான் சந்திக்க முடியுமா? ஜுஹூ கடற்கரை யில்? இதைப் பற்றி நாளைக்கு உனக்கு மறுபடி நான் போன் செய்து நிச்சயம் செய்து கொள்கிறேன்.''

சாந்தியின் மனத்தில் ஒரு தடுமாற்றம் அலை ஓடிற்று. பதில் ஏதும் சொல்லாமல் இருந்தாள்.

''எனக்கு என்ன பதில் சாந்தி?''

''நாளைக்கு பேரனில் சொல்கிறேன்.''

சாப்பாடு முடிந்து அவர்கள் கிளம் பிப் போய் விட்டார்கள். வழக்கமாக விடுமுறை நாட்களில் ராஜேஷ் இரண்டு மணி நேரம் பிற்பகலில் தூக்கம் போடு வான். அன்று அதற்குக் கூட இடம் கொடுக்காமல், அட்கின்ஸனுக்கு போன் செய்து விட்டு, அவரைப் பார்க்கப் புறப்பட்டுப் போனுன்.

அட்கின்ஸன் வர்சலிலேயே அவனைச் சந்தித்து நிறுத்தினுர்: ''வா, அப்படியே வெளியே போவோம். தனியாக உட்கார்ந்து பேசினுல் உனக்கும் சொல் வதற்குச் சௌகரியமாக இருக்கும்'' என்று காரில் ஏறிக் கொண்டார்.

''என்னுடைய வாழ்க்கையில் நான் ஒரு முக்கியமான முடிவிற்கு வந்திருக் கிறேன். உங்களிடம் யோசனை கேட்கப் போகிறேன்'' என்று ராஜேஷ் தொடங்கினுன்.



# வெற்றி தலைக்கேறி விட்டதா என்ன அவருக்கு?

ஃபரூக் எஞ்சினியர் புன்னகை புரிகிறார்

"நான் எதையும் தலைக்கேற விடுவதில்லை. ஆம். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமைத் தவிர வேறு எதையும் நான் தலைக்கேற விடுவதில்லை. ப்ரில்க்ரீம் என்னுடைய தலைமுடியை ஆரோக்கியமாக, நன்கு படிந்த நிலையில் வைத்திருக்கிறது. எப்படியிருக்க நான் விரும்புகிறேனோ அதுபோலவேதான்."

ப்ரில்க்ரீமில் இருக்கும் புரதம் மயிர்க்கால்களுக்கு வலுவூட்டி தலைமுடிக்கு நல்ல ஊட்டம் அளிக்கிறது. ப்ரில்க்ரீமினால் கலையாத முடியுடன் மிடுக்காக நீங்கள் நாள் முழுவதும் விளங்கலாம். தவிர பிசுக்குத்தன்மையோ, ஒட்டிக்கொள்ளும் தன்மையோ அதற்குக் கிடையாது. அது முடி அலங்காரத்திற்கோர் நவீன வழி.

ஃபரூக் மாதிரியே நீங்களும் புத்திசாலித்தனமானதைச் செய்யுங்கள். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமை உபயோகியுங்கள்.




புரதம் நிறைந்த

## ப்ரில்க்ரீம்

அழகான முடிக்கு ஆரோக்கியமான வழி.

BrF-3191-TAM-3

''முடிவிற்கு வந்தாயிற்று என்றால், அப்புறம் என்ன யோசனை?''

''முடிவு நல்லதுதானா என்று சரி பார்த்துக் கொள்ளலாம் இல்லையா? நான் சீக்கிரமே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்.''

''ஒரு அழகான, புத்திசாலியான பெண்ணைச் சந்திக்கும் வரையில்தான் ஒரு மனிதனின் வாழ்க்கையில் பிடிவாதம், வைராக்கியம் எல்லாம். யு ஆர் ரைட்!''

''அப்படி உடனே சொல்லி விட்டீர்களே? எங்கள் நாட்டில் கல்யாணம் என்பது அத்தனை எளிது இல்லை. குலம், கோத்திரம், ஜாதகம் என்று எத்தனையோ பார்ப்பார்கள். பின்னணியைப் பற்றி, குடும்பத்தைப் பற்றிப் பலரிடம் விசாரிப்பார்கள். அப்புறம் மணமகன், பெண்ணைப் பார்த்து — சிரிக்காதீர்கள் — பெரியவர்களும் அதற்கு ஒப்புக்கொண்டு ஆசிகள் கூறி, அப்புறம்தான் கல்யாணம் நிச்சயமாகும். இது எங்களுடைய சம்பிரதாய முறை.''

''எங்கள் பழக்கத்தைச் சொல்லட்டுமா? கல்லூரியில் படிக்கும் நாட்களிலே பாய் ஃபிரெண்ட், கேர்ல் ஃபிரண்ட் என்று ஏற்படுவார்கள். இருவரும் ஒன்றாகப் பழகுவார்கள். ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு—மனம் ஒத்துப் போனால் மோதிரம் மாற்றிக் கொள்வார்கள். பிறகு பெரியவர்கள் முன்னிலையில் திருமணம்.''

''இரண்டும் இல்லாத ஒரு வழியில் இப்போது நான் வந்து சேர்ந்திருக்கிறேன். அதனால்தான் உங்களிடம் யோசனை கேட்கிறேன். அதுவும் மிகவும் பரந்த மனப்பான்மையுடன் நீங்கள் ஒரு திருமணம் செய்து கொண்டிருக்கிறீர்கள். அதனால்தான் கேட்கிறேன்.''

''என்னுடையதை வைத்துப் பொதுவாக நீ ஒரு மதிப்புப் போட்டுக் கொள்வது சரியில்லை என்றே நினைக்கிறேன் ராஜேஷ்! நான், மர்த்தா— இருவருமே இதில் எவ்வளவோ அனுசரித்துப் போயிருக்கிறோம். மன உணர்ச்சிகளைப் பொறுத்த மட்டில் விட்டுக் கொடுத்திருக்கிறோம். அதில் சிறிது பிசகி இருந்தாலும் எங்கள் வாழ்க்கை நிலைகுலைந்து போயிருக்கக்கூடும். அடி மறந்தால் ஆழம்—''

''நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

''எதற்கும் நன்றாக விசாரித்து, ஆலோசித்து முடிவு செய்து கொள். திருமணம் ஆன பிறகு எதையும் விசாரிக்காதே. எந்த ஆலோசனையும் வைத்துக் கொள்ளாதே. பின்னால் அதனால் ஒரு நன்மையும் இல்லை.''

''அது சாத்தியமில்லை அட்கின்ஸன். எங்கள் நாட்டில் மணம் செய்துகொள்வதற்கு முன் நீங்கள் சொல்வது போல அவ்வளவு தூரம் பழகிப் புரிந்து கொள்ள வாய்ப்பு இல்லை. முன்னைப் போலப் பெரியவர்கள் தலையிடுவதும் இல்லை, இப்போதெல்லாம்.''

''இதுதான் என் புத்திமதி. கல்யாண விஷயம் மட்டும் அல்ல; வாழ்க்கையிலேயே ஒன்று, உங்கள் சம்பிரதாயங்களை அனுசரித்துப் போக வேண்டும். இல்லை, எங்கள் வழிக்கு முற்றிலும் மாறிவிட



''என்னது? உங்க மனைவி காரமாக இருக்கிறாளா? ஏன்?''

''பக்கத்து வீட்டு கமலா மிளகாய்ப்பழ கலரில் புடவை வாங்கி விட்டாளாம்!''

வேண்டும். நடுவில் நின்று கொண்டிருந்தால் குழப்பம்தான் மிச்சமாகும்.''

''வெல். அவளை நான் நாளை மறுநாள் சந்திக்கப் போகிறேன். அப்போது அவளிடம் மனம் நெருங்கிப் பேச முயலுகிறேன். அப்புறம் பார்க்கலாம்.''

''கோ அஹெட்'' என்றார் அட்கின்ஸன்.

மறுநாள் மாலை. போனை எடுத்தான் ராஜேஷ். அவளுடைய கனிவான குரல் காதில் விழுந்தது. கற்பனையில் அவள் முகம் தெரிந்தது. அவன் பேச வேண்டும் என்று திட்டம் போட்டதெல்லாம் அந்த நேரத்தில் சட்டென்று மறந்து விட்டது. ஓர் ஆவலுடன் அவளிடம் விசாரித்தான்.

—அவள் சொன்னது?

(தொடரும்)


நவ யுக
மிர்ராபோ
ராணி
நீங்களும் மிர்ராபோ ராணியாகத்
திகழ வேண்டுமா? உங்களுக்காகவே
மிர்ராபோ ∴புல் வாயில் புடவைகள்.
2/120 x 2/120. வாஷ் அன் வேர்.
இதர தயாரிப்புகள்:
ஸ்டேலாங்கர்.
ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்குகள்.
எலகன்ஸா சூட்டிங், லவ்லின் ஷர்ட்டிங்
சில்வர்லைன், சில்வர்கிங் வேஷ்டிகள்,
மல், காடா.
தி கோயம்புத்தூர்
காட்டன் மில்ஸ் லிமிடெட்
மார்க்கெட் செய்பவர்கள்
வெங்கடேஷ் வஸ்திராலயா
மிர்ராபோ
∴புல் வாயில் புடவைகள்
இள நங்கைப் பருவம்,
முழுமை உருவம்
...பெற்றுத் திகழ மிர்ராபோ
ADWAVE-CCM-123 A




# 3

The ability to have our own way, and at the same time please the other, is rare among men. Among women it is as common as Eye Brows.

—THOMAS BALEY ALDRICH

"நான் வருகிறேன். ஆனல் எட்டு மணிக்கு முன் நான் திரும்பிவிட வேண்டும். அப்பா அப்படித்தான் சொல்லி இருக்கிறர், சரிதானே?'' என்றுள் சாந்தி.

ராஜேஷ் திகைத்துப் போனன்: ''அப்பாவா? அவரிடம் சொன்னயா சாந்தி?''

''நான் எதையும் அவரிடம் மறைப்பதில்லை. இதற்கும் பர்மிஷன் கேட்டேன்.''

''ஐ...ஸீ. நேரே வீட்டுக்கு வந்து விடுகிருயா? அங்கிருந்து போகலாம்.''

''நேரே ஜுஹுவிற்கே வந்து விடுகிறேனே? அங்கேதானே சந்திக்கிறேம்?''

''ஏன்? இது உன்னுடைய வீடும்தான் சாந்தி. இங்கே வரக் கூடாதா?''

—சொன்ன பிறகுதான் அவனுக்குத் தான் கூறியதன் முழு அர்த்தம் புரிந்தது. சாந்தியின் நாணம் கலந்த புன்னகையை மனத்தில் கற்பனை செய்து கொண்டான். நேரே முகம் தெரியும்படி ஒரு போன் வைக்கக் கூடாதோ?

''ஆகட்டும், பார்க்கலாம்.''

சாந்தி போனை வைத்துவிட்டாள். அவன் செவிகளில் அவள் குரல் ஒலித்துக் கொண்டே இருந்தது. அவள் குரல் கேட்டாலே, அவன் மனம் நிம்மதி அடைகிறது. அந்த அழகிய உருவத்தை நினைத்தாலே மனம் குளிர்கிறது. வாழ்க்கையில் எதையோ தேடி, எப்படி எல்லாமோ அலைந்து அமைதி இன்றிக் களைத்தாயிற்று. இப்போது ஓர் உறுதியான துணை கிடைத்திருக்கிறது.

சாந்தியின் கைகளின் அரவணைப்பில்தான் அவன் மனத்தில் நிம்மதி பிறக்கும்.

'சாந்தி! எவ்வளவு பொருத்தமான பெயர்! உன் பார்வையில் அமைதி தவழ்கிறது. நடையில் நிதானம் அழகு காட்டுகிறது. பேச்சின் அபூர்வ நயத்தில் என் மனம் நிம்மதி அடைகிறது. இன்று உன்னை நான் கேட்கப் போகிறேன். நீ என்னை ஏற்றுக் கொள்வாயா சாந்தி? என்றும் எனக்கே என்று கிடைப்பாயா?'

அவனைக் காக்க வைக்கவில்லை சாந்தி. அவனை ஏமாற்றவும் இல்லை. நேரே அவன் வீட்டுக்கே வந்து விட்டாள். காரில் அமர்ந்தபடியே கேட்டாள்:

''குட் ஈவினிங், கிளம்பலாமா?''

''உன்னுடைய காரிலேயேவா? ஏன்? என் கார் இருக்கிறதே?''

தெரிந்தது. கார் வளைந்து மெதுவாக இறங்கும்போது அந்தக் கண்ணுக்கினிய காட்சியும் இறங்கிற்று. அவள் முகத்தையும், ஸ்டியரிங்கை வளைக்கும் லாகவத்தையுமே ராஜேஷ் பார்த்துக் கொண்டிருந்தான். [illegible]தான் அணிந்திருந்த கறுப்புக் கண்ணாடியை அவன் இன்னும் கழற்றவில்லை. சாந்தி ஸ்டியரிங்கை ஒரு கையில் பிடித்துக் கொண்டு மறு கையை நீட்டி ''அதைக் கொடுங்கள் இப்படி'' என்றாள்.

ராஜேஷின் மனத்தில் அந்தக் குறும்பு தோன்றிற்று. கண்ணாடியைக் கழற்றி அதை அவள் கண்களில் அணிவித்தான். பட்டுக் கன்னங்களில் அவன் விரல்கள் பட்டபோது, ராஜேஷின் இதயம் நெகிழ்ந்து போயிற்று. அவள் [illegible]வலித்துக் கொண்டாள்.

[illegible]... வேண்டாம். [illegible]து பெண்கள் அணிகிற கண்ணாடி இல்லை.''




'''நீங்கள்' 'நான்' என்று பிரிக்க வேண்டாம்' என்று இப்போதுதானே போனில் சொன்னீர்கள்! இப்போது இது என் கார் என்று மட்டும் சொல்லலாமாக்கும்?''

அவன் சிரித்து விட்டான். அவள், அவனைப் பேச்சில் மடக்கி விட்டாள்.

மலபார் ஹில்லிலிருந்து கடற்கரைச் சாலை, அழகான நெக்லெஸ் போலத்

''பரவாயில்லே. உனக்கு நன்ருகத் தான் இருக்கிறது சாந்தி.''

''இருக்கலாம். ஆனல் சில காரியங்கள் ஆண்களுக்குத்தான் பொருந்தும். அதைப் பெண்கள் செய்ய முடியாது, செய்யும்படி வற்புறுத்தவும் கூடாது.''

''இருக்கட்டுமே சாந்தி! எனக்குப் பிடித்திருக்கிறது. அதற்காக ஒப்புக் கொள்ளேன்.''

''உங்களுக்குப் பிடித்தது என்பதற் காக...எதுவாஞலும்....''



''நீ செய்யத் தயங்கமாட்டாய் என்று நான் நிச்சயமாக எதிர்பார்க்கிறேன் சாந்தி.''

சாந்தி கண்ணாடியைக் கழற்றவில்லை. அது அப்படியே இருந்ததும் நல்லதாயிற்று. அவளுடைய உணர்ச்சிகளை மறைத்துக் கொள்ள, அது ஒரு மூடி போல் இருந்தது.

கடற்கரை ஓரமாக காரை நிறுத்தி விட்டு இறங்கினார்கள். தென்னை மரங்களின் நடுவே செல்லும் ஒற்றையடிப் பாதையில் இருவருமாக நடக்க ஆரம்பித்தார்கள். 'கலகல'வென்று பேசிக் கொட்டி விடும் அவனுக்கு, அப்போது எதுவும் பேசத் தோன்றவில்லையே? என்னென்னவோ சொல்ல வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டு வந்திருந்தவன், அவளைக் கண்ட மனலயிப்பில் பேச முடியாமல் திண்டாடிப் போனான்.

கடற்கரையை ஒட்டிய சிறு கால்வாயில் மதகுப் பால வளைவில் ஏறினார்கள். தன்னை அழைக்கக் கை நீட்டிய அவனை நிமிர்ந்து பார்த்தபடி சாந்தி வைத்த காலடி கொஞ்சம் நழுவிற்று. சட்டென்று அவளைக் கீழே விழாமல் ராஜேஷ் தாங்கிப் பிடித்துக் கொண்டான். அவன் மேல் அழுந்திய அந்த உடலின் மென்மையில், அவன் உடல் முழுவதும் ஒரு மகிழ்ச்சி வெறி ஓடிற்று. அந்தச் சூழ்நிலையை மறந்து, அவளை அப்படியே வாரி எடுத்து அணைக்கத் தோன்றியது. எப்படியோ சமாளித்துத் தன்னை அடக்கிக் கொண்டான். அந்த அழகு ஒருநாள் அவனுக்குச் சொந்தமாகப் போவதுதானே?

இருவரும் கடலை நோக்கி நடந்தார்கள். கணுக்காலை நீர் முத்தமிட்டது.

''மாலை வேளையில் நான் ஒரு மணி நேரம் ஆற அமர நீந்திக் குளிப்பதுண்டு. ரொம்ப ஜோராக இருக்கும்; இரவு நல்ல தூக்கம் வரும்.''

''இன்றைக்கு?''

''இன்றைக்கும் எனக்கு ரொம்ப ஆசைதான். நீயும் வாயேன். நீச்சல் குளத்துக்குப் போகலாம். ஐ வில் கெட் யூ எ ஸ்விம் ஸூட்.''

சாந்தியின் முகம் 'குப்'பென்று சிவந்தது: ''நான் மாட்டேன். எனக்குப் பயமாக இருக்கிறது.''

''என்ன பயம், நான் துணையாக இருக்கும்போது?''

''என்றைக்குமா? எப்போதுமா ராஜேஷ்?''

சாந்தியின் கண்கள் அவன் பார்வையுடன் ஒன்றிக் கலந்தன. அந்த நேரத்தில் அவர்களுடைய உணர்ச்சிகள் அத்தனையும் சங்கமம் ஆயிற்று. அவள் கைகள் இரண்டையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டான். இழுத்து மார்போடு அணைத்துக் கொண்டான்.

''ஆமாம். என்றைக்குமேதான் சாந்தி. எப்போதுமேதான்.''

அவள் சிரிப்பு பனித்துளிகள் சிதறுவது போல் உதிர்ந்தது. அவளை அப்படியே தூக்கிக் கொண்டு, நீரில் இறங்கினான் ராஜேஷ்.

கணுக்கால்... மேலே... மேலே... முழங்கால்....

''போதும், போதும்''— அவன் கைகளில் அவள் குழந்தையைப் போல துள்ளினாள். ஆனால் சிரிப்பு அடங்கவில்லை. அவனும் நிறுத்தவில்லை. அவள் மார்பு அவன் மார்பில் அழுந்திற்று. 'படபட'வென்று சிலிர்த்த இதயத் துடிப்பை, அவனால் அளக்க முடியும் போலத் தோன்றிற்று. முகத்தோடு முகம் பதிந்தது. அப்பப்பா! எவ்வளவு மகிழ்ச்சி!

அப்போது அவள் கைவிரலின் மோதிரம் அவன் கண்ணில் பட்டது. சாந்தி அதைக் கவனித்துவிட்டு, விரலிலிருந்து கழற்றி அவன் கையில் கொடுத்தாள். அவன் கண்களில் மகிழ்ச்சிவெறி துள்ளியது. அவள் இடையைச் சேர்த்து அணைத்துக் கொண்டான்:

''சாந்தி! இது, நீ இதுவரையில் போட்டுக் கொண்டிருந்த மோதிரம். இத்தனை நாளும் கடந்த காலத்து ஞாபகமாக இருந்த ஒரு பொருள். இது இனிமேல் வேண்டாம் உனக்கு. நான் தரும் மோதிரம்தான் என் சாந்தியின் விரலில் இனிமேல் இருக்கும்...''

அவன் என்ன செய்யப் போகிறானோ என்று ஆவலும் வியப்புமாகச் சாந்தி கவனித்துக் கொண்டிருந்தபோது, கையை உயர்த்தி மோதிரத்தைக் கடலில் வீசி எறிந்து விட்டான். அவள் ஒரு நிமிடம் திகைத்துப் போனாள். ஆனால் அவன் அவளிடம் வைத்திருந்த அன்பை அப்படிக் காட்டியபோது, அவளுக்குத் தடுக்கவும் விருப்பமில்லை. அவள் விரல்களை எடுத்து இதழ்களில் பதிய வைத்துக் கொண்டான் ராஜேஷ். அவன் முகத்தைத் தன் மீது இழுத்து சாந்தி அணைத்துக் கொண்டாள்.

''சாந்தி, என் சாந்தி.''

கடற்கரையில் ராஜேஷ் அவள் மடி மீது குழந்தையாகக் கிடந்தான்.

சுற்றிலும் எங்கும் இருள் சூழ்ந்து விட்டது. ''நேரமாகி விட்டது ராஜேஷ். அப்பா கவலைப்படுவார். வாருங்கள், கிளம்பலாம்'' என்று அவன் காதருகே குனிந்து செல்லமாக முணுமுணுத்தாள். ஒரு கனவுலகின் பிரமையிலிருந்து விடுபட்டவனாய் ராஜேஷ் அவள் கழுத்தைக் கட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான்.

''சாந்தி, உன் அப்பாவிடம் கேட்கட்டுமா?''

''உங்களுக்கு நான் கற்றுத் தர வேண்டுமா? பார்த்துக் கொண்டே இருக்கிறேனே உங்கள் போக்கிரித்தனம் அவ்வளவையும்!''

''இன்றைக்கே வருகிறேன் சாந்தி. இல்லாவிட்டால் என்னால் தூங்க முடியாது போல இருக்கிறது.''

''உங்கள் தூக்க மருந்து வேறே ஆயிற்றே?'' என்று மதுக் கிண்ணத்தைப் போல விரல்களை வைத்து அவள் ஜாடை காட்டினாள். ராஜேஷ் செல்லமாக அவள் கன்னத்தில் கிள்ளிவிட்டு, ''இனிமேல் எனக்கு நீதான் தூக்க மருந்து'' என்று அவளைத் தூக்கி நிறுத்தினான்.

வீட்டுக்கு வந்து சாந்தி ஈர உடைகளைக் களைந்து விட்டு மாற்றுடை அணிந்து கொண்டாள். அந்த ரோஜா நிறச் சேலையைத் தொடும்போதெல்லாம் ராஜேஷ் அவளைத் தொட்ட நினைவு வந்தது. அவனுடைய அளவு கடந்த ஆசையை எண்ணி மனம் அலைபாய்ந்தது. கூடவே அவளுக்கு ஒரு பயமும் தொடர்ந்து வந்தது.

'இத்தனை அவசரப்படுகிறாரே இந்த ராஜேஷ்? இப்படி ஒரு குழந்தையைப் போல என்னை அடையத் துடிக்கிறாரே? அப்பாவைப் பார்த்துப் பேச இன்று இரவே ஓடிவந்து விடுவேன் என்று சொல்கிறாரே? வாழ்க்கையில் எல்லா விஷயங்களிலும் அப்படித்தான் இருப்பாரோ? அந்த ஆர்வத்தின் வேகத்தை என்னால் சமாளிக்க முடியுமா? என்னால் அதை ஈடு கொடுத்து ஏற்க முடியுமா?'

அவளுக்குச் சாப்பிடத் தோன்றவில்லை. அவள் மன நிலையைப் புரிந்து கொண்டவரைப் போல, சாரதியும் அவளை வற்புறுத்தவில்லை. படுக்கை அறை விளக்கை அணைத்துவிட்டுப் படுத்துக் கொண்டாள்.




✱ குழந்தைகள் நிறைய விஷயங்களை மறந்து விடலாம். ஆனால் தாயின் சிரிப்பை மறக்க முடியாது. இறைவனின் சிரிப்பு இப்படித்தான் இருக்க வேண்டும்.

✱ இறைவனின் மிக அழகிய கை வேலைப்பாடுள்ள பொருள், தாயின் இதயம் தான்.

✱ கடைசி உணவின் ஒரு பகுதி தாய்க்கு. எப்பொழுதும் முதலில் விடும் கண்ணீரும் தாயினுடையதாகத்தான் இருக்கும்.

✱ கிராமத்தின் நடுவில் இரவு பகலாக எல்லோருக்கும் நீர் வழங்கும் ஊருணி போன்றவள் தாய்.

ஆதாரம்:

'The mother'– By Rev. Erminio Crippa.

---

ராஜேஷின் குரல் கீழே ஹாலில் எப்போது கேட்கும்? அந்த நேரத்தை எதிர் பார்த்து நெஞ்சம் ஒவ்வொரு கணமும் கண் விழித்துக் காத்துக்கொண்டிருந்தது. மாலையில் நடந்தவற்றை மீண்டும் நினைத்து அனுபவித்தபடி படுத்திருந்தாள்.

பத்து மணி அடித்தது. 'இன்னும் சிறிது நேரத்தில் அப்பா விளக்கை அணைத்துக் கொண்டு மாடிக்கு வந்து விடுவார். அதற்குள் ராஜேஷ் வந்து சேர வேண்டுமே?' —அவள் அதைப் பற்றித் தந்தையிடம் மறைமுகமாகச் சொல்லி இருக்கலாமோ! ஏதோ ஒரு நாணம் குறுக்கிட்டு அவளைத் தடுத்துவிட்டதே.

கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. கட்டிலிலிருந்து அப்படியே குழந்தையைப் போலத் துள்ளி எழுந்து ஜன்னல் வழியாகப் பார்த்தாள். ராஜேஷ் இறங்கி வருவது தெரிந்தது. வலக் கையால் நெற்றியில் விழுந்த முடியை ஒதுக்கித் தள்ளியபடி, மெதுவாக, சீட்டி அடித்துக் கொண்டே ராஜேஷ், படிகளில் துள்ளி ஏறி வந்தான்.

அதைக் கண்டதும் அவள் மனம் தவித்தது. ஒவ்வொரு நிமிடமும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றியது. சொல்ல முடியாத பரபரப்புடன் கதவருகே வந்து நின்று, கீழே அவர்கள் பேசுவதை ஒட்டுக் கேட்டாள்.

''என்ன ராஜேஷ்? இரவு இத்தனை நேரத்திற்கு வந்து சொல்லும்படி ஏதாவது அவசரமான செய்தியா?''—அப்பா விஷயத்தைப் புரிந்து கொண்டு விட்டார் என்பதை அவருடைய குரல் காட்டிக் கொடுத்தது. சாந்திக்கு அப்பாவின் அந்தக் குறும்புக் குரல் வெகு நாளையப் பழக்கம்.



உலகத்திலேயே அதிக மழை பெய்யும் இடம் இந்தியாவிலேதான் அஸ்ஸாமில் இருக்கிறது. சிரபுஞ்சி என்ற அந்த ஊரில் வெயிற் காலத்தில் மழை போடுபோடென்று போடுகிறது ஒரு நாளைக்கு இருபது அங்குலம் மழை. மலை உச்சியில் இருப்பதால் கொஞ்சம் தண்ணீர் கூட நிற்பதில்லை. அதன் விளைவு? குளிர் காலத்தில் தண்ணீர்ப் பஞ்சம்!... குடிக்கத் தண்ணீர் இல்லை!

''ம்...ஹ்...ம்...'' என்று ராஜேஷ் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். பிறகு தயங்கிய குரலில் - ''பெங்களூரிலிருந்து உங்கள் பெண்ணை இங்கேயே வரவழைத்துக் கொள்ள ஒரு திட்டம் சார்'' என்றான்.

''என்ன திட்டம்? இங்கேயே ஏதாவது வேலை வாங்கிக் கொடுக்கப் போகிறீர்களா?'' என்று அப்பா அவனை மடக்கிய விதத்தில் சாந்திக்குச் சிரிப்பு வந்தது.

''இல்லை சார். இந்த வேலை போதும். இந்த வீட்டில் இருந்ததும் போதும்.''

''ஏது, ஏது? அடுத்தது நானும் வேண்டாம் என்று சொல்லி விடுவீர்கள் போல இருக்கிறதே!''

''எஸ். நீங்கள் வேண்டாம் என்று சொல்லிவிட்டாள் சாந்தி. அவளுக்கு நான்தான் வேண்டுமாம். எனக்குப் புரியவில்லை. நீங்கள் 'ஹெல்ப்' செய்ய முடியுமா சார்?''—அடேயப்பா! இத்தனை குறும்பாகப் பேசத் தெரியுமா உங்களுக்கு?

''என்னைத்தான் வேண்டாம் என்கிறீர்களே ராஜேஷ்?'' - அப்பாவும் விடவில்லையே?

''நோ... நோ... நான் அப்படிச் சொல்லமாட்டேன். சாந்தி என்னோடு வந்து விட்டாலும், நீங்களும் என்னோடு இருக்கலாம்''—தேவலையே! எவ்வளவு தாராள சுபாவம்?

''நான் உங்களுக்குத் தொந்தரவாக நடுவில் இருப்பேனா என்ன? நீங்கள் சாந்திக்கு, சாந்தி உங்களுக்கு. நான் நாசூக்காக நகர்ந்து போய் விடுவேன். அதுதானே நீங்கள் இப்போது கேட்கிற 'ஹெல்ப்'?''

சாந்தி கண்களைப் பொத்திக் கொண்டாள்.

''சார் சார், அப்படி இல்லை சார்'' என்று அவன் சிரித்துக் கொண்டே சொல்லச் சொல்ல, ''சாந்தி, சாந்தி'' என்று கூப்பிட்டுக் கொண்டே மாடிப்படி ஏறி சாரதி வரவும், அவள் ஓடிப் போய்ப் படுக்கையில் படுத்துக் கொண்டு தூங்குவது போல் பாசாங்கு செய்யத் தொடங்கினாள்.

அறை விளக்கு எரிந்ததும் சாந்தி கண்ணை விழித்துப் பார்த்துவிட்டுத் திரும்பிப் படுத்துக் கொண்டாள். சாரதி அவள் அருகே உட்கார்ந்து முதுகில் தட்டிக் கொடுத்தார். தந்தையின் பரிவு அவர் குரலில் தொனித்தது:

''ராஜேஷ் வந்திருக்கிறார் அம்மா.''

''எதற்கு? என்ன வேணுமாம்?'' என்று எழுந்து உட்கார்ந்து ஆச்சரியத்தோடு கேட்டாள்.

''உனக்குத் தெரியாதா? உன்னிடம் சொல்லவில்லையா? சரி, நீயே வந்து கேள்'' என்று அவள் கையைப் பற்றிச் செல்லமாக அழைத்தார்.

கீழே இறங்கிவந்த சாந்தி, ராஜேஷைப் பார்த்ததும் வெட்கத்தோடு முதுகுப் பக்கமாகத் திரும்பி நின்று கொண்டாள். அவள் வந்ததே தெரியாதவனைப் போல வாசற்புறம் திரும்பிக் கொண்டு ராஜேஷ் முகவாயைத் தடவிக் கொண்டான். நடுவில் நின்ற சாரதி, ''எங்கே, எங்கே, கையைக் கொடுங்கள் இப்படி. 'ஹெல்ப்' பண்ண நான் வந்திருக்கிறேன்'' என்று கையை இருபுறமும் நீட்டினார்.

'பக்'கென்று சிரித்தவண்ணம் இருவரும் திரும்பி நின்றார்கள். அவர்கள் கைகளை ஒன்றாகச் சேர்த்து இணைத்து வைத்த சாரதியின் கண்களில், சட்டென்று நீர்த் திரை படர்ந்தது. அந்த நேரத்தில் அவருக்கு மறைந்து போன தமது மனைவியின் ஞாபகம் வந்தது.

நள்ளிரவுக்கு மேல் ராஜேஷ் தன் வீட்டுக்குக் காரில் திரும்பி வந்து கொண்டிருந்தான். அவன் மனம் மகிழ்ச்சியால் விம்மிப் பூரித்திருந்தது. இரவையும் பகலாக்கும் கடைத் தெருவின் நியான் விளக்குத் தோரணங்கள் அவனைப் பார்த்துக் கண் சிமிட்டின. அந்த வேளையிலும் நடைபாதையில் ஒருவரையொருவர் அணைத்தபடி போய்க் கொண்டிருந்த ஜோடிகள் அவன் பார்வையில் விழுந்த போது, மனத்தில் பொறாமை ததும்பிற்று. சாந்தி அந்த நேரம் அவனுடன் இருந்திருந்தால்? எவ்வளவு குதூகலமாகக் கொஞ்சிப் பேசிப் பரிமாறிக் கொண்டிருக்கலாம்?

சீட்டி அடித்தபடி 'போர்ட்டிகோ'வில் காரைக் கொண்டு வந்து நிறுத்தினான். பள்ளிக்கூடச் சிறுவனைப் போலப் படிகளை நாலெட்டாய்த் தாண்டிக் கொண்டு, தன் அறைக்கு வந்து சேர்ந்தான். மதுக் கிண்ணத்தையும், அவனுக்குப் பிரியமான மது வகைகளையும் எடுத்து வைத்துக் கொண்டான். ஆசை தீர அருந்தினான். அவன் உடல் முழுவதும் ஏறி நின்ற துடிப்பும், இன்ப வெறியும் மெல்ல மெல்ல அடங்கி அமிழ்ந்தது. அப்படியே தூக்கத்தில் அமிழ்ந்திப் போனான்.

காலையில் எழுந்திருக்கும்போது நேரமாகி விட்டது. அவசரமாக 'ஷேவ்' செய்து கொண்டு, குளித்து முடித்துக் காலைச் சிற்றுண்டிக்காக மேஜை முன் வந்து உட்கார்ந்தான். டெலிபோன் மணி அடித்தது. 'யாராக இருக்கும்? சாந்தியாக இருந்தால்? அப்படி இருக்கக் கூடாதா?' —ஆசையுடன் எழுந்தான்.

''ராஜேஷ் இருக்கிறாரா?''—சாந்தியின் குரல்தான் கிளுகிளுத்தது. அவன் மனத்தில் மகிழ்ச்சி அலை அலையாக எழுந்தது.

''எஸ்... ஸ்பீக்கிங் மேடம்.''

''ராஜேஷ்... என் ராஜேஷ்...''

அதற்குப் பதில் சொல்வது போல டெலிபோனில் அவன் இதழ்கள் பதிந்தன. மறு முனையில் அதன் சப்தம் கேட்டு சாந்தி வெட்கத்துடன் சிரித்துக் கொண்டாள்.

''நாளை மறுநாள் நான் பெங்களூருக்குப் போகிறேன். வேலையை ராஜினாமா செய்துவிட்டு, என் அறையைக் காலி செய்துவிட்டு வர வேண்டும். ஒரு வாரம் ஆகும். உங்களிடம் அதைச் சொல்லத் தான் கூப்பிட்டேன் ராஜேஷ். உங்கள் சாந்திக்கு பர்மிஷன் தேவை.''

''ஒரு வாரமா? முடியாது. அப்படிப் போக வேண்டுமென்றால், நானும் கூட வருகிறேன் சாந்தி. இட் வில் பி நைஸ். ஐ லைக் பெங்களூர்.''

''நீங்களும் வருவதா? அது எப்படி முடியும் கண்ணா. நமக்கு மணமாகும் வரை அப்படியெல்லாம் போகக்கூடாது. அது சரி இல்லை. அப்பா ஒப்புக் கொள்ள மாட்டார்.''

''எனக்கு இந்தக் கட்டுப்பாடெல்லாம் பிடிப்பதில்லை சாந்தி. இப்போது என்ன? நாம் மனம் ஒத்து, மணம் செய்து கொள்ள நிச்சயம் செய்து கொண்டாயிற்று. சேர்ந்து போனால் என்ன? ஜாலியாகப் பொழுது போகும். உனக்கு நான் உதவியாகவும் இருப்பேன். ஒரு வாரம் பெங்களூரில் உன்னோடு— ஓ, என்னைத் தடுக்காதே, டியர்...''

''நோ... நோ..., வேண்டாம். தயவு செய்து இதில் பிடிவாதம் பிடிக்காதீர்கள்...''

''பிடிவாதம் பிடிப்பதுதான் எனக்கு சுபாவம். அதை நீ புரிந்து கொள்ள வேண்டும், டார்லிங்.''

''இருக்கலாம். இப்போது வேண்டாம். இதில் வேண்டாம்...''

''சரி, கல்யாணம் ஆன பிறகு பிடிவாதம் பிடிப்பேன். என் இஷ்டப்படி தான் நீ எல்லாம் செய்ய வேண்டும். எனக்கே சொந்தமானவள் என் சாந்தி. நான் எது கேட்டாலும் மறுக்காதே சாந்தி.''

''ஆகட்டும்... பை...பை...''

சாந்தி போனை வைத்துவிட்டுப் பெருமூச்சு விட்டாள். அவள் மனத்தில் இனம் புரியாத ஒரு வேதனை உண்டாயிற்று. ராஜேஷ் பிடிவாதமாக அவளுடன் கிளம்பி வந்துவிட்டால்...

நினைத்ததுமே அவள் உடல் ஒருமுறை நடுங்கியது.

(தொடரும்)

# ரேகாவும் ஒரு....

மலர் மன்னன்

தன்னந்தனியாய் இருக்கிறவர்களின் மனசை அலைக்கழித்துச் சங்கடப்படுத்து கிற மாதிரி கதையமைப்பும் காட்சிகளும் கொண்ட ஆங்கிலத் திரைப்படம் ஒன்றைப் பார்த்து விட்டு வெளியே வந்த சூட்டோடு சூடாக அவர்கள் இருவரும் தற்செயலாய்ச் சந்தித்துக் கொண்டார்கள்.

''எ ப்ளசண்ட் சர்ப்ரைஸ்'' என்று புருவங்களை உயர்த்தி முகம் மலரச் சிரித்தவாறு அருகில் நெருங்கி வந்தாள் ரேகா.

''ப்ளசண்ட் சர்ப்ரைஸ்'' என்று திருப்பிச் சொன்னான் கோபி, வியப்பு அடங்காமல்.

இத்தனை நாட்களுக்குப் பிறகு இப்படி யொரு திடீர் சந்திப்பா?

''ரொம்ப மாறிப் போயிருக்கிறாய் கோபி. சட்டென்று எனக்குப் புரிய வில்லை. லேசாகத் தொந்தி போட்டிருக் கிறாய். முன்னந் தலையில் முடி ஏகமாய் உதிர்ந்து போய்விட்டது போலிருக் கிறதே! துரு துருவென்கிற கண்களையும் கத்தி மூக்கையும் வைத்துத்தான் கண்டு கொள்ள முடிகிறது. ரொம்பப் பெரிய மனுஷத்தனம் வந்து விட்டது உனக்கு, கோபி!'' — ரேகா விகல்பமின்றி சுவாதீனமாக அவனைப் பரிகசித்தாள்.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு, அது வும் மனஸ்தாபத்துடன் பிரிந்தானபின் முதல் தடவையாக நிகழும் அந்தச் சந்திப்பிலும் அவள் கொஞ்சங்கூடத் தயக்கமின்றித் தன்னிடம் விளையாட்டா கப் பேசுவது கோபிக்கு வியப்பாக இல்லை. அவனுக்குத் தெரிந்தவரை ரேகா எப்போதுமே இப்படித்தான். அவள் மாறவில்லை. அவளால் மாறவும் முடியாது...

கிலுகிலுப்பை போல் எப்போதும் கலகலப்பான பேச்சு. மனம்விட்டு, வாய் விட்டுச் சிரிக்கிற சிரிப்பு. சம்பிரதாயம், சட்டதிட்டம் எதற்கும் கட்டுப்பட மறுக்கிற சர்வ சுதந்திரமான போக்கு.

ரேகா ஒதுங்கி யிருக்கத் தெரியா தவள். அறிமுகத் திற்காகக் காத் திராமல் வலியச் சென்று பேசித் தோழமை கொள் ளும் சுபாவம். யாரிடமும் எதைப் பற்றியும் சகஜ மாகப் பேசுவாள். யார், எங்கே கூப்பிட்டாலும் தலையை ஆட்டிக் கொண்டு கிளம்பி விடுவாள். அவளுக்குப் பிடித்திருக்க வேண்டும்; அதுதான் முக்கியம். ஆனால் இப்படிப் பழகுகிறாளே என்று யாரும் அவளைத் தப்புக் கணக்குப் போட்டு விட முடியாது.

எங்கு அழைத்தாலும் வருகிறாள். எதைப் பற்றியும் - ஆண்களோடு பேச முடியாத 'ஏ' முத்திரை விவகாரங்களைக் கூட சர்வ சாதாரணமாகப் பேசுகிறாளே என்கிற தைரியத்தில் எவனாவது சிறிது அதிகப்பிரசங்கித்தனமாக நடந்து கொண்டாலும் வந்தது வினை! உண்டு— இல்லை என்று ஆக்கி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பாள்.

கல்லூரியில் மாணவர்கள் அவளுக்கு வைத்த பெயரே 'சோல்ஜர்' ரேகாதான். நடை, விறைப்பு, தைரியம், அரட்டை எதிலும் ஒரு பட்டாளத்துக்காரன் மாதிரிதான் நடந்து கொள்வாள்.

கல்லூரியின் வெளி வாயிலை மாண வர்கள் வேண்டுமென்றே அடைத்துக் கொண்டு நின்றவாறு வம்பு பேசுகையில் மற்ற பெண்கள் 'திருதிரு'வென்று விழித்தபடி ஒதுங்கி நிற்பார்கள். ஆனால் சோல்ஜர் ரேகா 'டக் டக்' என்று நேராக விரைந்து இரண்டு மாணவர் களுக்கு நடுவில் புகுந்து அம்புபோல் வழியைப் பிளந்து கொண்டு வாயிலைக் கடப்பாள். 'விண் விண்' [illegible]று



தெறிக்கிற மாதிரி நடந்து செல்கிற அவளைப் பார்த்து மாணவர்கள் பிரமித்து நிற்க வேண்டியதுதான்.

ஒரு தடவை கல்லூரி விட்ட பிறகு மாணவர்கள் கும்பலாக நின்றிருந்த நடைபாதை ஓரமாக ரேகா தலைநிமிர்ந்து நடந்து வந்தபோது நிகழ்ந்த வேடிக்கை கோபிக்கு சட்டென நினைவுக்கு வந்தது.

ரேகா பந்தயக் குதிரை மாதிரி அப்படி வந்தபோது ஒரு குறும்புக்காரன் ''ஹாய், ரேகா! காபி சாப்பிடலாம் வர்றியா? இதோ காசு இருக்கு'' என்றபடி ஐம்பது காசு நாணய மொன்றை மேல் நோக்கிச் சுண்டி எறிந்தான்.

திமிராக நடந்து வரும் ரேகா வேட்டைக்குத் தப்பும் முயல் மாதிரி தலை குனிந்து விரைந்து செல்வாள் என்று அவன் நினைத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவளைச்சீண்டிவிட்டுவேடிக்கை பார்க்க ஆசைப்பட்டிருப்பான்.

ஆனால் ரேகா சட்டென்று நின்றாள். நின்றவாக்கிலேயே ஒரு கையை அலட்சியமாக வீசி அந்தக் காசை லாகவமாக 'காட்ச்' பிடித்தாள்.

''தாங்க்யூ மை பாய். இப்ப வேண்டாம். நானே அப்புறமா தனியாப் போய் சாப்பிட்டுக்கறேன்'' என்றவாறு அந்தக் காசைத் தன் கைப்பையில் போட்டுக் கொண்டு புறப்பட்டாள்.

அதற்கப்புறம் அந்தப் பையன், ''அடேய், பஸ் சார்ஜுக்குக் கூட காசு இல்லேடா. பதினைந்து பைசா இருந்தா குடுங்கடா'' என்று மற்றவர்களை நச்சரிக்க வேண்டியதாயிற்று!

ரேகா எப்போதுமே அப்படித்தான். கௌரவமாக அவளை நடத்த வேண்டும். சிறிதளவு அவமரியாதையையும் அவளால் தாங்கிக் கொள்ள முடியாது. 'முணுக்'கென்றால் மூக்கு சிவந்து விடும்.





## பேராசிரியர்கள் ரெஸ்டாரெண்ட்!

**கோ**ழிக்கோடு மேயர் பரதன் அண்மையில், நகரில் ஒரு ரெஸ்டார ரெண்டைத் திறந்து வைத்தார்.

சர்ப்பம் படமெடுத்துப் பாய்ந்துகொத்த வருவதுபோல் தோற்றமே மாறிப்போய் விடும்.

அந்த ரேகாதான் இப்போது சிறிதள வும் மாற்றமில்லாமல் அதே ரேகாவாக எதிரே வந்து நிற்கிறுள். முன்பைவிடச் சிறிது சதைப் பிடிப்பாக - இன்னும் எடுப்பாக ஆகியிருந்தாள். கொஞ்சம் வெளிறிப் போயிருந்தாள். மற்றபடி எந்தவிதமான மாறுதலும் இல்லை.

''என்ன, பேசாமல் பார்த்துக் கொண்டே இருக்கிறுய்? ஒருவேளை என்னை அடையாளம் தெரியவில்லையா? யாராயிருக்கும் என்று மனசுக்குள் யோசித்துக் கொண்டிருக்கிறுயா?''— ரேகா சிரித்தாள்.

''இல்லை ரேகா, பார்த்தவுடனேயே நீதான் என்று தெரிந்து விட்டது. உனக் காவது என்னைக் கண்டு கொள்ள சிரமம் ஏற்பட்டிருக்கும். எனக்கு அப்படியில்லை. அன்றைக்குப் பார்த்தது போலவே தானே இருக்கிறுய்?'' என்றுன் கோபி.

பழக்க தோஷத்தால் இருவரும் ஆங் கிலத்திலேயே பேசிக் கொண்டார்கள்.

''கல்கத்தாவிலேதான் இருக்கிறுயா கோபி? ஒரு தடவை கூட நாம் சந்தித் துக் கொள்ளவில்லையே!''

''இல்லை ரேகா. இங்கே ஒரு கான்ஃப ரன்சுக்காக வந்தேன். நாளை மறுநாள் மதுராசுக்குப் பிரயாணம். நீ இங்கேயா இருக்கிறுய்? ஸ்டேட்சில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறேன்.''

''இந்தியாவுக்குத் திரும்பி மூன்று வருஷங்களாகி விட்டன கோபி. இந்த மூன்று வருஷங்களாய் கல்கத்தாவில் தான்.''

''ஜாகை எங்கே?''

''ஜாதவ்பூர். நீ எங்கே இறங்கியிருக் கிறுய்?''

''பக்கத்தில்தான். ஒரு ஓட்டலில் அறை எடுத்துக் கொடுத்திருக்கிறுர்கள். காலையிலிருந்து மாலை நான்கு மணிவரை விவாதம் விவாதம் என்று உயிரை எடுத்து விட்டார்கள். கொஞ்சம் மாறுதலாக இருக்கட்டுமே என்று படம் பார்க்க வந்தேன். வந்த இடத்தில் இப்படியொரு திடீர் சந்திப்பு!''

''மணி ஒன்பதுகூட ஆகவில்லை. உனக்கு வேறு வேலை ஒன்றுமில்லையே! என் அறைக்கு வந்து விட்டுப் போயேன்'' என்றுள் ரேகா.

''அறைக்கா?''

''ஆமாம், அறைதான். எனக்கு அது போதாதா? பெங்காலி புரொபசர் ஒருவர் தன் வீட்டு மாடியில் எனக்கு ஓர் அறையை வாடகைக்கு விட்டிருக்கிறுர். நான் இன்னும் ஸிங்கிள்தான் கோபி'' என்று சிரித்தாள் ரேகா.

இந்த ஆறு வருட காலத்தில் அவன் ஒரு கணவனுய், மூன்று குழந்தைகளின் தகப்பனுய், ஓர் அதிகாரியாய் எப்படி யெல்லாமோ பரிணமமடைந்தாகி விட் டது. ஆனுல் ரேகா மட்டும் இன்னும் 'ஸிங்கிள்தான்' என்கிறுள்.

அளவு கடந்த சுயமரியாதையும், சுதந்திர உணர்வும்தான் இவளை இன்னும் தனி ஆளாய் நிறுத்தி வைத்திருக்கின்ற னவா?— கோபி அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தான்.

''பொய் சொல்கிறேன் என்று நினைக் கிறுயா? நிஜமாகவே நான் இன்னும் ஸிங்கிள்தான்.''

''நான் அப்படியில்லை'' என்றுன் சட்டென்று.

''அதுதான் உன் முகத்திலேயே எழு ஒட்டியிருக்கிறதே! அடக்க ஒடுக்கமான குடும்பஸ்தன். குறைந்த பட்சம் ஐந்து குழந்தைகளுக்காவது தகப்பனு கி யிருப்பாய் போலிருக்கிறது!'' — ரேகா 'கலகல'வென நகைத்தாள்.

''மூன்றுதான்.''

''போதுமே! ஓர் ஆண் அடங்கி ஒடுங்கு வதற்கு ஒரேயொரு குழந்தைக்குத் தகப்ப னுகி விட்டாலே போதாதா? அது கிடக் கிறது. இங்கேயே நின்று கொண்டு பேசு வானேன்? பெங்காலி புரொபசர் ரொம்ப நல்ல மாதிரி. ராத்திரி வேளையில் ஒரு சிநேகிதனுேடு அறைக்குத் திரும்பு வதைப் பற்றித் தானுகவே எதையும்

இந்த ரெஸ்டாரெண்டை நடத்துவது யார் தெரியுமா? நாலைந்து பேராசிரியர்கள். அதாவது எம். ஏ., எம். எஸ்ஸி., எம். காம்., போன்ற பட்டம் பெற்ற பட்டதாரிகள். படித்தும் வேலை இல்லாமல் இருந்தார்கள். வேலை கிடைப்பதும் குதிரைக் கொம்பாக இருக்கவே, கூட்டுறவு முறையில் ஒரு ஓட்டல் நடத்தினால் என்ன என்று சிந்தித்தார்கள். பணமும் முதலீடு செய்தார்கள். ஓட்டலை ஆரம்பித்தும் விட்டார்கள். இந்த ஓட்டல் வெற்றிகரமாக நடைபெற்றால் இம்மாதிரி ஓட்டல்களைப் பல இடங்களில் பட்டதாரிகள் திறக்கவும் திட்டமிட்டுள்ளார்கள்.

—எஸ். எஸ். மணி.

கற்பனை செய்து கொண்டு அவஸ்தைப் படக்கூடியவர் அல்ல. புறப்படு, போகலாம்!''

அவள் வார்த்தையைத் தட்டமாட்டாமல் கோபி அவளோடு சேர்ந்து நடந்தான்.

**மா**டியில் நல்ல காற்றோட்டமுள்ள விசாலமான அறை. அதைக் கலையுணர்வுடன் அழகாக அலங்கரித்து வைத்திருந்தாள் ரேகா.

''என்ன சாப்பிடுகிறாய் கோபி?'' என்று கேட்டவாறு ரேகா ஃபிரிஜைத் திறந்தாள்.

பீர், விஸ்கி, ரம், ஜின்......

''நான் ஜின் மட்டும்தான் சாப்பிடுவேன். அதுதான் பிடிக்கும். மற்றதெல்லாம் இங்கே வந்து போகிற சிநேகிதர்களுக்கு.''

''எனக்கு பீர் போதும்'' என்றான் கோபி.

''பரவாயில்லையே! சரியான கட்டுப்பெட்டி குடும்பஸ்தன்தான் நீ!''

''இப்போது எனக்கு அதுவே போதும் என்கிறேன்'' என்றான் கோபி, சிறிது சூடாக.

''கோபித்துக் கொள்ளாதே கோபி. கான்ஃபரன்சுக்கு வந்திருக்கிறேன் என்றாய். காக்டெயில் என்றெல்லாம் பழக்கமாகியிருக்குமே என்றுதான் சொன்னேன். என்ன கான்ஃபரன்சுக்காக வந்திருக்கிறாய் கோபி? வெஜிடேரியன் காங்கிரஸ் மாதிரி ஏதாவது ஒன்றா?'' என்று குறும்பாகக் கேட்டாள் ரேகா.

''எங்கள் கம்பெனியின் வருடாந்தர மாநாடு. வருடத்துக்கொரு முறை நாடு முழுவதும் உள்ள கிளைகளிலிருந்து பிரதிநிதிகள் ஒன்று கூடிப் பிரச்னைகளை விவாதிப்பார்கள். இந்தத் தடவை கல்கத்தாவில் நடக்கிறது. சென்னைக் கிளையின் பிரதிநிதியாக நான் வந்திருக்கிறேன்.''

''நல்ல வேளை! இல்லாவிட்டால் நாம் மறுபடியும் சந்தித்துக் கொள்ள சந்தர்ப்பம் வந்திருக்குமா என்பது சந்தேகந்தான்'' என்றாள் ரேகா. அவன் வேலை பார்க்கிற நிறுவனத்தின் பெயரையும் அவன் அதில் வகித்துவரும் பதவியையும் பற்றி விசாரித்தாள். கோபி பதிலிறுத்தான். ''நீயும் உத்தியோகம் பார்க்கிறாய் என்று நினைக்கிறேன். என்னவாக இருக்கிறாய்?'' என்று தானும் விசாரித்தான்.

''இல்லாவிட்டால் வேளாவேளைக்குச் சாப்பிடுவது எப்படி? நானும் உத்தியோகம் பார்க்கிறவள்தான். ஏதோ ஒன்று என்று வைத்துக் கொள்ளேன்''- ரேகா அலட்சியமாகச் சிரித்தபடி ஒரு பீர் புட்டியைத் திறந்து நுரை பொங்கப் பொங்க அதை ஒரு நீண்ட குவளையில் ஊற்றி அவனிடம் நீட்டினாள். தனக்கு ஒரு தம்ளரில் ஜின்னை நிரப்பிக் கொண்டாள்.

நாசூக்காக ஒரு வாய் ஜின்னைப் பருகியவாறு''இப்போதும் உனக்கு அந்த ஹாபி இருக்கிறதா கோபி?'' என்று திடீரெனக் கேட்டாள் ரேகா. உடனே அவளாகவே ''அதற்கெல்லாம் உனக்கு இப்போது எங்கே நேரமிருக்கப் போகிறது? பாவம், சம்சாரி. பெரிய ஆபீசர் வேறே!'' என்று சமாதானம் சொல்வது போல் கூறிக் கொண்டாள்.

கோபிக்கு விளங்கவில்லை. அவளைப் பார்த்து விழித்தான்.

''என்ன, அதுகூட மறந்து போய் விட்டதா?'' என்று சிரித்தவாறு இரு கரங்களையும் குவித்து ஒரு கண்ணருகே கொண்டு போய் ஜாடை காட்டினாள் ரேகா.

கோபியின் முகத்தில் சட்டென ஒரு மாற்றம். உடனே பதில் கூற மாட்டாமல் மௌனம் சாதித்தான். பிறகு, ''அதெல்லாம் எப்போதோ போய் விட்டது'' என்றான் தாழ்ந்த குரலில்.

''எப்போதோ என்றால்?''

''அன்றைக்கே!''

''அன்றைக்கேயா?'' என்றவள் சிறிது நேர அமைதிக்குப் பிறகு வருத்தம்

தோய்ந்த குரலில் ''என்னை மன்னித்து விடு கோபி'' என்றாள்.

கோபி பதில் கூறாமல் லேசாகப் புன்னகை புரிந்தான். எவ்வளவு காலதாமதமான கோரிக்கை!

கல்லூரி நாட்களில் ரேகாவிடம் மற்றவர்களைவிட கோபிதான் நெருக்கமாகப் பழகினான். அதில் அவனுக்குத் தாங்க முடியாத பெருமை!

கடைசி வருடப் படிப்பின்போது அவனுடைய சிங்கப்பூர் மாமா ஒரு விலையுயர்ந்த காமிராவை அவனுக்குப் பரிசளித்துவிட்டுப் போனார். காமிரா கைக்கு வந்த நாளிலிருந்து புகைப்படம் எடுப்பது அவனது பொழுதுபோக்காகி விட்டது.

சகஜமாகப் பழகிய ரேகாவையும் அவன் இரண்டொரு முறை படமெடுத்தான். அந்த உரிமையில் இன்னொரு சந்தர்ப்பத்தில் அவளைப் படமெடுக்க அவன் முனைந்தபோதுதான் நிலைமை விபரீதமாகி விட்டது.

அது ஓர் அழகான காலை நேரம். எதிர்பாராதவிதமாய் பலத்த மழை பெய்யத் தொடங்கி கிளர்ச்சியூட்டிய சுகமான காலை நேரம்.

ரேகா அன்று கல்லூரிக்குத் தாமதமாக வந்தாள். மழையில் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டு ஓட்டமும் நடையுமாகக் கல்லூரிக்கு வந்து சேர்ந்தாள்.

காமிராவை மாலையாகக் கழுத்தில் தொங்க விட்டுக் கொண்டு கல்லூரி வராந்தாவில் நின்றவாறு மழையில் நனைகிற வெளிப்புறத்தை ரசித்துக் கொண்டிருந்த கோபி, அவள் வருகிற கோலங்கண்டு மெய் சிலிர்த்தான்.

''ரேகா! அப்படியே கொஞ்சம் நில்லேன், ஒரே நிமிஷம்.''— அவளைப் படமெடுத்து அந்தப் பிரமிப்பூட்டுகிற வனப்பை நிரந்தரமாக்கிவிடக் கோபி தன்னை மறந்த ஒரு வேகத்தில் ஆயத்தமானதைக் கண்டு ''இடியட்! ஸ்டாப் இட்!'' என்று சீறினாள், ரேகா.

கோபி திடுக்கிட்டான். அவன் கரங்[illegible] தொய்ந்து தொங்கின. ரேகா அவ[illegible] எரித்து விடுவது போல் ஒரு பார்வை[illegible] பார்த்துவிட்டு 'விடு விடு'வெனப் படியேறி உள்ளே விரைந்தாள்.

அதன் பிறகு ரேகா அவனிடம் முகங் கொடுத்துக்கூடப் பேசவில்லை. பலமுறை கோபி நயமாக அவளை அணுகிப் பார்த்தான்.

''உள்ளுக்குள் நீ எவ்வளவு விகாரமாய் இருக்கிறாய் என்பதைப் புரிந்து கொண்டு விட்டேன் கோபி. கொஞ்சங் கூட இங்கிதம் இல்லாமல், மரியாதை தெரியாமல் எதிராளியின் மனம் எப்போது, எப்படி நடந்து கொண்டால் புண்படும் என்றுகூடப் புரியாமல் -புரிந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் நடந்து கொள்கிறவன் நீ என்பது தெரிந்து விட்ட பிறகு முன்போல உன்னிடம் பழக எனக்குப் பிடிக்கவில்லை'' என்று முகத்தில் அறைவது போல் பதில் சொல்லி அவனை அண்ட வொட்டாமல் விரட்டியடித்து விட்[illegible]ள் ரேகா. கடைசிவரை அவள் [illegible]ம் மாறவே இல்லை.

படிப்பு முடிந்த பிறகு கோபி உத்தியோக வேட்டையில் இறங்கினான். ரேகா ஸ்காலர்ஷிப் பெற்று மேற்படிப்புக்கு அமெரிக்கா போனதாக இடையில் கேள்விப்பட்டான்.

சிறிது காலம் கோபி அவள் நினைவாக உள்ளுக்குள்ளேயே வெந்து கொண்டிருந்தான். காலப் போக்கில் அந்த தகிப்பு தணியத் தொடங்கியது.

''என்ன கோபி, பழையதை யெல்லாம் சட்டென்று ஞாபகப்படுத்தி விட்டேனா?''

கோபி மெல்லச் சிரித்து தன் உணர்வுகளை மறைத்துக் கொண்டான்.

''வாழ்க்கை நம்மிடம் எவ்வளவு குரூரமாக விளையாடுகிறது என்பதை அடிக்கடி நினைத்துப் பார்த்துக் கொள்வேன் கோபி.. அமெரிக்காவில் ஆர்தர் என்[illegible] வாலிபன் அறிமுகமானான். உன்[illegible]டம் பழகியதைவிட இன்னும் அதிகமாகவே அவனிடம் நெரு[illegible]கிப் பழகினேன், கோபி. எங்கள் [illegible]பா ஷையில் திருமணப் பேச்சு அடிபடுகிற



அளவுக்கு நெருக்கம்! நாட்கள் வெகு உல்லாசமாகக் கழிந்து கொண்டிருந்த நேரத்தில் ஆர்தர் திடீரென்று செத்துப் போனான். அது என் கண் முன்னாலேயே நிகழ்ந்த கண்ணாருவியான சாவு. பலகை இற்றுப்போன நீச்சல் குளத்தில் குதித்து, குதித்த வேகத்தில் அந்தப் பலகையையும் தன்னைப் பின் தொடரச் செய்து, விசையுடன் விழுந்த பலகையைத் தன் மண்டையிலும் முதுகிலும் தாங்கிக் கொண்டு அந்த நீச்சல் குளத்தையே ரத்தக் குட்டையாக்கி விட்டு அவன் செத்துப் போனான். அந்த அதிர்ச்சியிலிருந்து என்னால் மீளவே முடியவில்லை. சிவப்பு நீரில் கைகளையும் கால்களையும் பரப்பிக் கொண்டு செத்துப் போன மீன் போல் ஆர்தர் கண்ணெதிரே மிதந்து கொண்டிருக்கிற மாதிரி எந்நேரமும் ஒரு பிரமை. அந்த ஈவிரக்கமற்ற சித்திர வதையை மறக்க போதையேற்றிக் கொள்ள ஆரம்பித்தேன். படிப்பு பாதியில் நின்றது. சென்னையிலிருக்கிற பெற்றோரின் தொடர்பு அறுந்தது. அன்றாடச் செலவுகளுக்கும், முக்கியமாக என்னை மறக்கடித்துக் கொள்ள நான் தேர்ந்தெடுத்த வழியைத் தினசரி பின்பற்றவும் நிறையப் பணம் சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சம்பாதிக்கத் தொடங்கினேன். நாளாக ஆக போதையில் மிதப்பதும் ஓர் அவஸ்தையாகி விட்டது. போதை ஏற்றிக் கொள்ளாமல் இருக்கவும் முடியவில்லை. அந்த விஷச் சூழலைவிட்டு வெளியேறினால்தான் கொஞ்சமாவது நிம்மதி கிடைக்கும் என்று திடீரென ஒரு நாள் தோன்றிவிட்டது. உடனே இந்தியாவுக்குக் கிளம்பி விட்டேன். சென்னைக்கு வரப் பிடிக்கவில்லை. அமெரிக்காவில் ஒரு வங்காளி பரிச்சயமாகியிருந்தான். அவன் பெற்றோரின் விலாசத்தை வாங்கிக் கொண்டு நேராக கல்கத்தாவுக்கு வந்து விட்டேன். சில நாட்கள் அந்த வங்காளி குடும்பத்துடன் தங்கியிருந்து விட்டு இங்கும் பிழைப்புக்கு ஓர் ஏற்பாடானதும் தனியாக இடம் பார்த்துக் கொண்டேன். இங்கே வந்த பிறகு நடந்து போனதையெல்லாம் அதைத்தொடர்ந்து தொற்றிக் கொண்ட பழக்கங்களையும் சேர்த்து சிறுகச் சிறுக மறக்க ஆரம்பித்தேன். சுவாரஸ்யமாகவோ முறைப்படியோ இல்லாவிட்டாலும் எப்படியோ நாட்கள் கழிந்து கொண்டுதானிருக்கின்றன...''

ரேகா இப்படி வெறிச்சிட்டுப் போவாள் என்று கோபி எதிர்பார்க்கவே இல்லை. துக்கம் அனுஷ்டிப்பது போல் மௌனமாக அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''லேசில் கைவிட முடியாத பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொண்டு வெகு தொலைவிலிருக்கிற ஓர் அந்நிய மண்ணில் நாட்களைக் கடத்திக் கொண்டிருந்த எனக்கு அன்றாடச் செலவுகளுக்காக எவ்வளவு பணம் தேவைப்பட்டிருக்கும் என்பதை நினைத்துப்பார் கோபி. அதை எப்படிச் சமாளித்தேன் தெரியுமா?

''மஞ்சளாகவும் மாநிறமாகவும் இருக்கிற கிழக்கத்திய பெண் உடம்புகளுக்கு அங்கெல்லாம் நல்ல கிராக்கி இருக்கிறது கோபி...என்னுடைய பண நெருக்கடிக்கு அதுதான் கைகொடுத்து உதவியது! அரையிருளிலும் முழு வெளிச்சத்திலும் போட்டோகிராபர்களுக்கு 'போஸ்' கொடுத்தேன். பல பேர் பலவிதமாக என்னை நிறுத்தி வைத்தும் குனிய வைத்தும் உட்கார்த்தியும் அவரவர் மனம் போனபடியெல்லாம் படம்எடுத்துக்கொள்ள அனுமதித்தேன். இப்போது இங்கேயும் ஒரு மாடலாகத் தான் இருந்து கொண்டிருக்கிறேன். நினைத்துப் பார்த்தால் எனக்கென்னவோ சிரிக்கத்தான் தோன்றுகிறது. வாழ்க்கையே ஒரு குரூரமான தமாஷ்தான், இல்லையா கோபி?''— ரேகா விரக்தியாகச் சிரித்தாள்.

அவளுக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியாமல் கோபி மலைத்துப் போய் உட்கார்ந்திருந்தான்.

இறுகிப்போன சூழ்நிலையின் கனத்தைக் குறைத்து சுமுகமான உணர்வைத் தோற்றுவிக்க விரும்பியவள் போல் ரேகா உரக்கச் சிரித்துக் கொண்டே சொன்னாள்:

''உங்கள் கம்பெனி விளம்பரம் எதற்காவது ஒரு மாடல் தேவைப்பட்டால் சொல்லு, கோபி, நான் தயார்!''

கோபி சிரிக்க முயன்றான்.

---

சிங்கப்பூர் நண்பர் ஒருவருக்குச் சமீபத்தில் என் இல்லத்தில் ஒரு விருந்து கொடுத்தேன். அச்சமயத்தில் அவர், பால் சாதத்தில் ஒரு சிட்டிகை அளவு பொடிஉப்புக் கலந்து சாப்பிட்டார். என்னையும் அவர் உப்பு கலந்து சாப்பிடச் சொன்னார். நானும் உப்பு கலந்து பால் சாதத்தை உண்டேன். என்ன ஆச்சரியம்! பால் சாதம் மிக மிக நன்றாக இருந்தது.

மதுரை-1. **எஸ். ஏ. பி. வரதன்.**



"பழைமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்..."

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய்நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

## நவீன பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக** இருக்கும்போது பழைமையான பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!




...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.



TP. G. 19 TM




# 4

A second marriage is not based on complete frankness; it is based on sensible reticence — Morris Ernest in Harper's magazine.

'ஜனவரி மாதம் இருபதாம் தேதி எனக்கும், மிஸ் சாந்திக்கும் நடைபெறப் போகும் திருமணத்தில் கலந்து கொண்டு...'

ராஜேஷ் அந்தத் திருமண அழைப்பிதழை மறுபடியும் படித்துப் பார்த்தான். மற்றவர்கள் செய்யாத மாதிரி புதுவிதமாக அதைத் தயாரிக்க வேண்டுமென்று அவனுக்கு ஓர் ஆசை. அழைப்பிதழில் அவனுடைய பெற்ருேர், அவனுடைய உத்தியோகம் எதைப் பற்றியும் ஒரு குறிப்பும் இல்லை. சாந்தியைப் பற்றியும் எந்த விவரமும் இல்லை.

''ஏன் இப்படி? உங்கள் இருவருக்குமே இதுவரை நடந்ததைப் பற்றி நினைக்கவே வேண்டாம் என்ற உத்தேசமா?'' என்று கேட்டார் அட்கின்ஸ்ன்.

''அப்படி இல்லை. நாங்கள் புதிய வாழ்க்கையைத் தொடங்குகிருேம். இதில் 'அவளுக்கு நான், அவள் என்னுடையவள்' என்ற அறிமுகம் மட்டும்தான் தேவை. எங்கள் இருவருக்குமே இதுவரையில் ஒரு வாழ்க்கை இருந்திருக்கலாம். அது கடந்த காலம். நாங்கள் இருவர் மட்டுமே அதைப் பற்றி எங்களுக்குள்ளே பகிர்ந்து கொள்வோம்.''

''ஓ.... அதற்குள் நீ ரொம்ப 'பொஸெஸ்ஸிவ்' ஆகிவிட்டாய். மிஸஸ் ராஜேஷைப் பிறர் நிமிர்ந்து பார்த்தால்கூடப் பொறுக்கமாட்டாய் போலிருக்கிறது'' என்று அட்கின்ஸன் அவனுடைய முதுகில் தட்டினுர்.

மார்த்தாவுக்கு அவர்கள் இந்து சம்பிரதாயப்படி திருமணம் செய்து கொள்வதைப் பார்க்க ஓர் ஆசை. சிறு 'சாப்பெல்' ஒன்றில் முக்கியமான மனிதர்களுடன், மிக எளிய முறையில் அட்கின்ஸனை அவள் மணந்து கொண்டாள். அதுவே அவளுக்கு ஒரு குறை. ஆடம்பரம் இல்லாவிட்டாலும், கல்யாணம் என்பது நிறைய மனிதர்கள் கலந்து கொண்டு வாழ்த்தி, கோலாகலமாக நடக்க வேண்டும் என்பது அவள் விருப்பம்.

''உங்களுடைய 'ரிலிஜியஸ்' செய்கை ஒவ்வொன்றையும் நான் இருந்து கவனிக்கப் போகிறேன். அப்புறம் அதற்கு நீங்கள் அர்த்தம் சொல்ல வேண்டும் எனக்கு'' என்று

ராஜேஷிடம் ஓர் ஆர்வத்தோடு கேட்டுக் கொண்டாள்.

''ஓ! ஆல் மீனிங்லெஸ்—எனக்கு அவற்றில் நம்பிக்கை இல்லை. என்னுடைய வழிக்கு சாரதியையும் ஒப்புக்கொள்ள வைத்து விட்டேன்'' என்று அவள் ஆசையை அலட்சியப் படுத்தி விட்டான் ராஜேஷ்.

''உங்களுக்குப் புரியவில்லை என்பதால் அர்த்தம் இல்லாதது என்று சொல்கிறீர்களா ராஜேஷ்? இவற்றை அமைத்துக் கொடுத்தவர்கள் நம்மை விடப் புத்தி சாலிகள். எவ்வளவோ முன்யோசனையுடன் வாழ்க்கை முறையை அமைத்தவர்கள். இது உங்கள் நாட்டில் மட்டும் ஏற்பட்டது இல்லை. இங்கேயும் கல்யாணத்தின்போது தலையில் 'ரைஸ்' தெளிக்கிறார்கள். ஐரோப்பிய நாடுகளிலும், அதே போலத் தானியத்தைத் தெளிக்கிறார்கள். இந்த சிறு சம்பிரதாயத்துக்கும் ஓர் அர்த்தம் உண்டு. கன்னி மண்ணில் தானியம் விழுந்து முளைத்துச் செழுமை தருவதைப் போல, தம்பதியரின் வாழ்க்கையிலும் சந்ததி பெருக வேண்டும் என்பதுதான் அதன் விளக்கம்'' என்றாள் மார்த்தா.

''தாங்க்யூ. இவையெல்லாம் அவரவர் திருப்திக்காகத்தான். சாதாரண ரெஜிஸ்டிரேஷன் திருமணம் எங்களுக்குப் போதும். எனக்குத் தேவை எதுவோ, அதுதான் சாந்திக்கும். என் விருப்பம் தான் அவளுடையதும்.''

''இதை நீங்களே அவளுக்காகவும் தீர்மானம் செய்துவிட்டீர்களா? நீங்கள் விரும்பும்படிதான் அவள் ஒவ்வொன்றையும் செய்ய வேண்டுமா என்ன? உங்கள் மனைவியான பிறகும் அப்படித்தான் இருக்க வேண்டுமா?''

''ஓ, பார்க்கலாம். என் விருப்பத்துக்கு மாறாக அவள் ஆசைகள் எதுவும் இருக்காதென்றே நினைக்கிறேன். லெட் அஸ் ட்ரை.''

''பெஸ்ட் ஆஃப் லக்'' என்றார்கள் அட்கின்ஸன், மார்த்தா இருவரும்.

ராஜேஷ் ஏற்பாடுகள் ஒவ்வொன்றையும்செய்வதில் சுறுசுறுப்பாக இருந்தான். ஆனாலும் சாந்தி அவனோடு இல்லாதது அவனுக்குக் குறையாகவே இருந்தது. அவளுடைய பெங்களூர் டெலிபோன் நம்பர் என்னவென்று கேட்டுக் கொள்ள மறந்து விட்டான். தெரிந்து கொண்டிருந்தால் அவன் நிச்சயம் தினம் இரண்டு தடவை யாவது பேசி இருப்பான். அவளுடைய கொஞ்சும் குரலில் மனம் லயித்துப் போயிருப்பான்.

சாந்தி திரும்பி வந்த அன்று, அவன் லீவு போட்டுவிட்டு வீட்டிலேயே இருந்து விட்டான். இருவருமாகச் சேர்ந்து, 'ஷாப்பிங்' செய்யப் போனார்கள். அவனுடைய 'ஸூட்' துணியை அவளையே தேர்ந்தெடுக்கச் செய்தான். அவளுடைய புடவைகளையும் அவன்தான் தேர்ந்தெடுத்தான். அத்துடன் நிற்கவில்லை.

''உன்னுடைய அழகுப் பொருள்கள் என்னென்ன? அதிலும் ஒரு ஸெட்'' என்று அவளைக் கேட்டான்.



''அதை நானே வாங்கிக் கொள்கிறேன். இது ஒரு பெண்ணின் அந்தரங்க விஷயம். அதைக் கணவனிடம் சொல்வதற்குக் கூட அவள் விரும்ப மாட்டாள்.''

''ஓ, நோ. மணமான பிறகு நாம், ஒருவரிடமிருந்து மற்றவர் எதை மறைக்கப் போகிறோம்? இதில் அப்படி என்ன இரகசியம்?''

''வெல். உங்கள் இஷ்டம். நான் இதில் தடுத்து அணை போட விரும்பவில்லை'' என்று அவனைத் தன் 'ட்ரெஸ்ஸிங்' அறைக்குள் அழைத்துக் கொண்டு போனாள். ராஜேஷ் ஒவ்வொன்றையும் ஆர்வத்தோடு பார்த்தான். அவன் ரசித்துக் கண்ணைச் சிமிட்டியபோது, அவள் முகம் சிவந்தது. கடைசியில் அவளை ஆசையோடு இழுத்து மார்பில்



முகம் பதித்து முத்தமிட்டான். சாந்தி அவன் முகத்தைக் கைகளில் எடுத்துப் பார்த்து விட்டு, மெதுவாக விலக்கினாள்.

''இப்போது இவ்வளவுதான். அப் புறம் ஹனிமூனில்...''

''என்னை 'டீஸ்' பண்ணாதே சாந்தி.''

அவளைப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு நாளும் அவனுக்கு வேதனையாகத்தான் இருந்தது. ஒவ்வொரு சிறு சந்தேகத்துக் கும் அவளை 'போனில்' கூப்பிட்டுப் பேசு வான். அவள் செய்யும் ஒவ்வோர் ஏற்பாட்டைப் பற்றியும் தன்னைக் கலந்து கொள்ள வேண்டும் என்று விரும்புவான்; வற்புறுத்தியும் கேட்பான்.

சாந்திக்கு இது வேடிக்கையாக இருந் தது. சில சமயம் வேதனையாகவும் தோன்றியது. 'இப்படி எதையுமே இரகசியம் என்றோ, அந்தரங்கமானது என்றோ ஒதுக்கி வைக்காமல் ஒவ்வொன் றையும் பங்கு போட்டுக் கொள்ளவிரும்பு கிறாரே?' என்று நினைத்தபோது, அவள் மனத்தில் ஒரு பயமும் எழுந்து, அவளை அலைக் கழித்தது.

எளிய முறையில் கல்யாணம் நடந்த போதிலும், வரவேற்பு சற்றுப் பெரிதாகவே இருக்க வேண்டும் என்றே ராஜேஷ் ஆசைப்பட்டான். அவனுடைய 'வில்லா', வர்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு இரவில் பூத்த நந்தவனத்தைப் போல விளங்கிற்று. மர்த்தாவே முன்னின்று, விருந்துப சாரம் செய்தாள். ராஜேஷ் - சாந்தி இருவரையும் சுற்றிச் சுற்றி வந்து நண்பர்கள் 'பளிச் பளிச்'சென்று வெளிச்சம் போட்டுப் புகைப்படம் எடுத் தார்கள். அதைப் போலப் 'பளிச் பளிச்'சென்று குறும்பாகப் பேசி, அவர்களை முகம் சிவக்கவும் வைத் தார்கள்.

''கொஞ்ச நேரம் அவுங்களைத் தனியா சும்மா இருக்க விடுப்பா.''

''தனியா இருந்தா சும்மா இருப்பாங்களா என்ன?''

''சரி, சாப்பிடற போதுகூட நாம் எல்லாம் இருந்து கொட்டம் அடிக்க வேணுமா?''

''விடு, இன்றைக்கு மட்டும்தானே? நாளையிலேருந்து யாரைக் கூப்பிடப் போறுங்க? ஒரே தட்டில்கூட இரண்டு பேருமாச் சாப்பிடணும்னு ஆசைப் படுவாங்க.''

''பாதாம்கிர் ஏ-ஒன். கிரீம் கேக் அதற்குப் பொருத்தமான ஜோடி.''

''அவுங்களைப் போலத்தானே?''

மாறி மாறிச் சிரிப்பும் கொம்மாளமுமாக அவர்களே பங்கிட்டுக் கொண்டார்கள். நண்பர்கள் அவனுக்கு அளித்த பரிசுகள் மேஜைமேல் குவிந்து கிடந்தன. சிலவற்றில் குறும்பு தெரிந்தது.

குழந்தைக்குப் பால் கொடுக்கும் வெள்ளி 'பீடிங்' புட்டி. தந்தத்தில் வழுவழுப்பான ஜோடி உருவங்கள், ஒன்றையொன்று அணைத்தபடி நிற்கின்றன. 'காஜுரஹோ'போஸ்அது.அடியில் பாதம் வைத்த வெள்ளிக்கிண்ணம் ஒன்றும் இருந்தது. எதிருக்கெதிராக அதற்கு இரண்டு வாய்கள். அதைப் பார்த்து,

''நன்றாக இல்லை சாந்தி?'' என்று கேட்டான் ராஜேஷ்.

''அழகு ஒரு பங்கு, கற்பனை இரண்டு பங்கு'' என்றாள் அவள்.

''எதிரும் புதிருமாக இரண்டு மூக்குகள். ஒரே சமயத்தில் எனக்கு ஒன்று; உனக்கும் ஒன்று—''

அவள் முகம் சிவந்தது: ''போதுமே'' என்று சிணுங்கினாள்.

சுற்றிலும் நண்பர்கள் கை தட்டினார்கள். மூன்று முறை 'சியர்ஸ்' சொன்னார்கள். விருந்து முடிந்து ஒவ்வொருவராக விடைபெற்றுக் கொண்டு போனதும், மழை பெய்து ஓய்ந்தது போல இருந்தது. கடைசியாக அட்கின்ஸன் தம்பதியர் வந்து கை குலுக்கினார்கள். அட்கின்ஸன் அவனிடம் ஒரு 'கவரை' நீட்டினார்.

''என்ன இது மிஸ்டர் அட்கின்ஸன்?''

''உங்கள் இருவருக்கும் காஷ்மீருக்குப் போய்வர விமான டிக்கெட்டுகள். அங்கே தங்க ஓட்டல் 'ரிஸர்வேஷன்'கள். இரண்டு வாரங்கள் ஆபீசை மறந்து, நீ இருப்பதற்கு லீவு சாங்ஷன் கடிதம். விஷ் யூ எ நைஸ் ஹனிமூன்.''

அவருடைய அன்பை உணர்ந்தபோது, அவன் கண்களை நீர்த்திரை மறைத்தது: ''உங்களுக்கு நான் எப்படி நன்றி சொல்வது என்றே தெரியவில்லை. முதலிலிருந்து எங்கள் மகிழ்ச்சி எல்லாவற்றுக்கும் நீங்கள் இருவரும்தான் காரணம்'' என்று தழுதழுத்த குரலில் சொன்னான்.

''எனக்கு நன்றி எதற்கு ராஜேஷ்? இன்று போல என்றைக்கும் நீயும் சாந்தியும் மகிழ்ச்சியோடு இருக்க வேண்டும். அதற்கு என்றும் நாங்கள் இருவரும் துணையாக இருக்க வேண்டும். அதுதான் எங்கள் ஆசை. குட் லக் டு யூ போத்.''

மர்த்தா, ஹாலில் இருந்த ஸ்டீரியோ கருவியைத் திருப்பினாள்:

We have only just begun

ரே கானிஃபின் எல்.பி. ரிகார்டு இனிக்கத் தொடங்கியது. ராஜேஷும் சாந்தியும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். அவர்கள் பார்வை ஆயிரம் பேசியது.

*

**கா**ஷ்மீர்.

நாகின் ஏரியில், படகு வீட்டில் சாந்தி உல்லாசமாகப் படுத்துக் கொண்டிருந்தாள். டிரான்ஸிஸ்டரில் லதாமங்கேஷ்கரின் இனிமையான குரலில், காதல் பாட்டு கேட்டுக் கொண்டிருந்தது. மடி மீது அவள் தலையை எடுத்து வைத்துக் கொண்டு ராஜேஷ் அவள் முகத்தின் மேல் குனிந்தான்.

''என்ன பார்க்கிறீர்கள் ராஜேஷ்?''

''உன் கண்களில் என் பிம்பத்தைப் பார்க்கிறேன். நீ?''

''உங்கள் மனத்தில் என் உருவத்தைப் பார்க்கிறேன்.''

''உன்னைப் பேச்சில் என்னால் ஜெயிக்க முடியாது டார்லிங்.''

''வேண்டாம். நீங்களே வாழ்க்கை ஜெயித்துக் கொண்டிருங்கள். நான் உங்களிடம் தோற்றுக் கொண்டே இருக்கிறேன். அந்தத் தோல்வியில் தான் எனக்குத் திருப்தி.''

ராஜேஷ், சாந்தியின் கன்னங்களைச் செல்லமாக நிமிண்டினான். அவளைத் தாங்கி அணைத்தவாறு வெளியே வந்தான்.

''பார்க்கும் இடங்கள்தாம் அழகு என்பது இல்லை, சாந்தி.இங்கே பெயர்கள் கூட எவ்வளவு அழகாக இருக்கின்றன! இன்பத்துக்கே ஒரு நந்தவனம்—நிஷாத் பாக். தென்றலுக்கே ஒரு பூங்கா—நஸீம் பாக்...''

''காதலுக்கே ஒரு ராஜா-ராஜேஷ்.''

'களுக்'கென்று சிரித்து விட்டு, உள்ளே ஓடிப் போய் மெத்தையில் விழுந்தாள் சாந்தி.

இதமான வெயிலில், குல்மார்க் புல்வெளியில் இருவரும் கைகோத்து நடந்தார்கள். 'கோல்ப்' விளையாடும் அமெரிக்கர் ஒருவர் அவர்களைப் பார்த்து விட்டு அர்த்தம் புரிந்து கொண்டவரைப் போல கையைத் தூக்கி ''நைஸ்-டைம்'' என்றார். அழகான காஷ்மீர் பெண்ணொருத்தி ஓடி வந்து கைநிறையக் காட்டுப் பூக்களின் கொத்தைக் கொடுத்து விட்டு நின்றாள். ஐந்து ரூபாயைத் தூக்கிக் கொடுத்தான் ராஜேஷ்.

''என்ன இது! ஒரு ரூபாய் கொடுத்தாலே அதிகம்'' என்று சாந்தி கண்டிப் போடு சொன்னாள்.

''ஓ.எஸ். எவ்வளவு குஷி!''

''சரி, வா. உனக்கு ஏற்ற நீச்சல் உடையை வாங்கிக் கொண்டு வருவோம்.''

அப்போதுதான் சாந்திக்கு நிலை புரிந்தது. அவ்வளவு பேருக்கு எதிரில் உடல் அழகு அவ்வளவையும் காட்டிக்கொண்டு தண்ணீரில் சறுக்குவதா? விளையாட்டு மோகம் பட்டென்று மறைந்து விட்டது:

''வேண்டாம், வேண்டாம்.''

''ஏன் சாந்தி?''

''என்னால் நீச்சல் உடை அணிந்து, அப்படிப் பகிரங்கமாக வரமுடியாது.''

''ஸில்லி. புடவையைக் கட்டிக் கொண்டு அப்படி விளையாட முடியுமா?''



''இது மாதுங்கா இல்லை டார்லிங்! அங்கேதான் பேரம் பேசி வாங்கலாம். நீ என்னை ராஜா என்று சொன்னதைப் போல, அந்தப் பெண் உன்னை ராணி என்று நினைத்துக் கொண்டிருக்கிறாள். அப்படியே அதற்கேற்றாற் போல நடந்து கொள்வோமே!''

''அவளுக்கு நான் ஒன்றும் ராணியாக இருக்க வேண்டாம்.''

''எனக்கு ராணியாக இரு. அது போதும்'' என்று ராஜேஷ் அவள் இடையில் கிள்ளினான்.

மோட்டார் படகில் கம்பியை இணைத்துப் பின்னால் தண்ணீரில் சறுக்கும் 'ஸெர்ப்' விளையாட்டைப் பார்த்த போது, சாந்திக்கு அதில் கலந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை வந்தது.

''ஒப்புக்கொள்கிறேன். நீ அதைப் போலச் சறுக்கிக் கொண்டு வருகிறாயா?''

''ராஜேஷ்'' என்று சாந்தி அவனை மெல்ல அணைத்துக் கொண்டாள்: ''என்னுடைய அழகு நீங்கள் மட்டும் பார்த்து ரகசியமாக அனுபவிக்கும் பொருளாகவே இருக்கட்டும். அது உங்களுக்கு மட்டும் தான் சொந்தம். அதற்குப் பொருந்தாத எந்த விளையாட்டுமே எனக்கு வேண்டாம்.''

''உன் இஷ்டம்'', என்று ஏரிக்கரை ஓரமாக நடக்கத் தொடங்கினார்கள். 'பைனகுலர்' ஒன்றை எடுத்துக் கழுத்தில் மாலையாக மாட்டிக் கொண்டு, உல்லாசமாக நடந்துவந்த சாந்தி, அதன் வழியே ஏரியின் பின்னணியாக நின்ற மலையின் அழகை ரசித்துக் கொண்டே அங்கங்கே நின்றாள்.

அப்படி ஓரிடத்தில் நின்ற போது...

நின்ற இடத்திலிருந்து மீண்டும் ஒரு முறை பார்த்தாள்.

அப்போது அவள் பார்வை ஸ்தம்பித்து நின்றது.

அங்கே, சினிமா ஷூட்டிங் ஒன்று நடந்து கொண்டிருந்தது. டைரக்டர், காமிராமென் இவர்களுக்கு நடுவே படத்தின் உல்லாச ஜோடிகள் நின்று கொண்டிருந்தார்கள். சற்று தள்ளிப் பின்னல், சிகரெட்டின் புகையை அனுபவித்த வண்ணம் நின்ற ஒருவர் அந்த ஹீரோயினேயே கண் கொட்டாமல் விழுங்குவது போலப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்த முகம்—

சாந்தி, பைனகுலரைச் சட்டென்று இறக்கினாள். அவளால் மேலும் பார்க்க முடியவில்லை. அந்தக் குளிரிலும் உடல் குப்பென்று வியர்த்தது. நெஞ்சு 'படபட'வென்று அடித்துக் கொண்டது. அவள் மாறுதலை ராஜேஷ் கவனித்தான்.

''என்ன சாந்தி, என்ன ஆயிற்று?''

''ஒன்றுமில்லை. ஓட்டலுக்குத் திரும்பிப் போகலாம். எனக்கு என்னவோ போல் இருக்கிறது. கொஞ்சம் ஓய்வு தேவை. சேர்ந்தாற் போல் இந்த அலைச்சல் ஒத்துக் கொள்ளவில்லை என்று நினைக்கிறேன்.''

அவனுக்குக் கவலை உண்டாயிற்று. அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

''நாம் இரண்டு நாட்களுக்கு ஓட்டல் அறையிலேயே இருக்கலாம் சாந்தி.''

''பாவம். உங்களுக்கு அலுப்புத் தட்டிப் போகாதா?''

''நீ என்னுடன் இருக்கும்போதா?'' என்று ராஜேஷ் அவளை அணைத்துக் கொண்டான். சாந்தியின் மனக் கலக்கம் அவ்வளவும் அந்த நேரத்தில் அடங்கியது போல் இருந்தது.

*

**ப**ம்பாய்க்குத் திரும்பிவிட்டார்கள்.

சாந்தியும் ராஜேஷும் திரும்பி வருவதற்குத் தயாராக சாரதி, வீட்டை எல்லாவித செளகரியங்களுடன் தயார் செய்து வைத்திருந்தார். தன் மகளின் குதூகலமான வாழ்வை, அந்த வீட்டில் தொடங்கி வைக்கும் ஆசையில் எவ்வளவோ பாடுபட்டுச் சின்னஞ்சிறு விஷயங்களையும் கவனமாக அமைத்திருந்தார்.

''காஷ்மீர் எப்படி இருந்ததுஅம்மா?'' என்று ஆவலோடு மகளைக் கேட்டார்.

''எங்கே பார்த்தேன்?''

''என்னம்மா இது?''

''உங்கள் மாப்பிள்ளை என்னை எங்கே பார்ப்பதற்கு விட்டார்? ஒரு நிமிஷமாவது என்னைத் தனியாக விட்டால் தானே?'' என்று சாந்தி குறும்பு தவழச் சிரித்தாள்.

சாரதி, ''யூ ஆர் எ நாட்டி கேர்ல்'' என்று தட்டிக் கொடுத்தார்.

அன்று இரவை அவள் இதயம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. அது அவர்கள் முதல் தடவையாக, தம்பதியாக அந்த வீட்டில் நுழைந்து அவர்களுக்குள்ளே ஆசையாகப் பகிர்ந்து கொள்ளும் முதல் இரவு. ராஜேஷின் இளமைத் துடிப்பையும், ஆசையின் வேகத்தையும் காஷ்மீரில் பல[illegible]களிலும் அவள் அனுபவித்திருக்கிறாள். ஆனாலும் அவர்கள் வீட்டில், அந்தரங்கமான அவர்களுடைய அறையில், அதைச் சுவைப்பது போல ஆகுமா?

இரவு மணி ஒன்பது.

சாந்தி, மஞ்சத்தில் வந்து அமர்ந்தாள். ராஜேஷின் காலடிச் சத்தத்தை எதிர்பார்த்து ஒவ்வொரு நிமிடமும் ஆவல் பொங்கக் காத்துக் கொண்டிருந்தாள்.

ராஜேஷ் உள்ளே வந்தான். அவன் கையில் ஒரு தோல்பெட்டி இருந்தது. அதை மஞ்சத்தின் மீது வைத்துவிட்டுத் தன் கைகளை அவள் தோள் மேல் போட்டுக் கொண்டான்:

''இதில் என்ன இருக்கிறது என்று உனக்குத் தெரியுமா சாந்தி?''

''தெரியாது.''

''எஸ். இனிமேல் என்னைப் பற்றித் தெரியாதது ஒன்றுமே உனக்கு இருக்க முடியாது. இதில் என்னுடைய டயரி இருக்கிறது. என் வாழ்க்கையில் நடந்த அனைத்தையும் அதில் எழுதி வைத்திருக்கிறேன். எனக்கு வந்த முக்கிய[illegible] 'பர்ஸனல்' கடிதங்கள் இதில் இருக்கின்றன. இதுவரை என் வாழ்க்கையில் நடந்த எல்லா நிகழ்ச்சிகளைப் பற்றிய குறிப்புகளும் இதில் இருக்கின்றன. இதையெல்லாம் உனக்குக் காட்டப் போகிறேன். இனி இவை எனக்கு மட்டும் சொந்தம் அல்ல, இவை நமக்குச் சொந்தம். என் ரகசியங்களை நீ கண்டிப் பாகத் தெரிந்து கொள்ள வேண்டும் [illegible]......'' என்று கூறியபடி ராஜேஷ் பெட்டியைத் திறக்கத் தொடங்கினான். சாந்தி பாய்ந்து ''அவசரப்படாதீர்கள் ராஜேஷ்'' என்று கூறி அவன் கையைப் பிடித்துக் கொண்டாள்.

**(தொடரும்)**




# 5

Opportunity knocks only once.
But temptation leans on the door bell.

—JOHNSON.

ஈ. பெட்டியை மடியின் மேல் வைத்துக் கொண்டு ராஜேஷ் ஒரு குழந்தையைப் போல அதை செல்லமாகத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தான். சாந்தியின் கண்கள் கலங்கியிருந்தன. சொல்ல முடியாத ஒரு பயம் அவளை உள்ளூற வாட்டிக் கொண்டிருந்தது.

அவளைத் தன் பக்கமாக இழுத்துக் கொண்டு ராஜேஷ், முதுகில் தட்டிக் கொடுத்தான்:

''சாந்தி டார்லிங், உனக்கு என்ன கலக்கம்? நான் மறுபடியும் சொல்கிறேன். இனிமேல் நமக்குள்ளே ஒளிவு மறைவு எதுவும் கிடையாது. அன்றைக்கு ஜுஹூ கடற்கரையில் நான் உன்னைக் குளிப்பதற்கு அழைத்தபோது உனக்கு என்னவோ தயக்கமாக இருந்தது. ஆனால் இப்போது அந்தரங்கமாக எவ்வளவோ ஆசைகளை நம் விருப்பப்படியெல்லாம் பங்கிட்டு அனுபவித்துக் கொள்கிறோம். சொல்லப் போனால் உன் அழகில் எனக்குத் தெரியாத ரகசியம் எதுவுமே கிடையாது'' என்றான்.

''உண்மைதான். அதற்காக இங்கே நாம் அந்தரங்கமாக இருப்பதைப் போல வெளியே இருந்து பழக முடியுமா? இங்கே நாம் பேசிக் கொள்வதையெல்லாம் வெளிப்படையாக மற்றவர்கள் முன் பேசுவோமா? மனம் அன்பின் பிணைப்பில் இருக்கும்போது என்னை எப்படியெல்லாமோ வருணிக்கிறீர்கள். சில சமயம் காலையில் எழுந்த பிறகு நீங்கள் சொன்னவற்றை நினைத்தால், எனக்கே வெட்கமாக இருக்கிறது. நான் அவற்றை வெளியே சொல்ல முடியுமா?'' என்று பதிலுக்குக் கேட்டாள் சாந்தி.

''ஐ அக்ரீ வித் யூ! இது நாம் பிறருக்குச் சொல்வதில்லை சாந்தி; நமக்குள்ளேயே பகிர்ந்து கொள்ளும் ரகசியம். உன்னுடைய வெளித் தோற்றத்தில் எதையுமே நான் அறியாதது என்பதில்லை. அதைப் போல உன்னுடைய மனத்தில் இருப்பவற்றையும் நான் ஒளிவு மறைவு இல்லாமல் தெரிந்து கொள்ள வேண்டும். அதுதான் என் ஆசை. நமக்கு இடையே தெரியாதது என்று எந்த ரகசியமுமே இருக்க வேண்டாம். புரிகிறதா?'' என்றான்.

''வேண்டாம். இது சரி இல்லை. இதனால் நன்மையும் இல்லை. சில

வெளிப்படையாக இருப்பதுதான் பொருத்தம்; வேறு சில மறைவாக, அடக்கமாக இருந்தால்தான் அழகு. எல்லாம் பகிரங்கமாக ஆக முடியாது. அதனால் அமைதியும் சுகமும் கிடைக்காது. பயங்கரமான விளைவுகள் தாம் ஏற்படும்'' என்று கூறி, அவன் முகத்தையே பார்த்தாள் சாந்தி.

ராஜேஷ் தலையை அசைத்தான். பிறகு, ''நோ, நோ. நான் உன் கணவன். என் மனைவியாக இடம் பெறுவதற்குமுன் என் சாந்தி எப்படி இருந்தாள் என்று நான் தெரிந்து கொள்ள வேண்டாமா என்ன? ப்ளீஸ் ஸே...'' என்றான்.

''சொல்கிறேன். இந்த சாந்தி படித்து உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தாள். அறிவும் அழகும் உள்ள ஒரு வாலிபனை மணந்து கொள்ள வேண்டும் என்று காத்துக் கொண்டிருந்தாள். நாகரிகமான பழக்கங்களும், நயமான பண்புகளும் கொண்ட ஒரு பெண்ணாக இருந்தாள். போதுமா?''

''போதாது. அவளுடைய அந்தரங்க வாழ்க்கை எப்படி இருந்தது? வேறு வாலிபன் யாரேனும் அவளுடன் பழகினானா? அவர்களுடைய உறவு எப்படி இருந்தது? அவர்களில் யாரை யாவது அவள் விரும்பிக் காதலித்ததுண்டா? அப்போது அவள் மனநிலை என்ன? ராஜேஷ் என்ற வாலிபனை மணந்துகொண்ட பிறகு, அது எப்படி மாறி இருக்கிறது? அவனிடம் அவன் மனைவியாக அவள்—''

சாந்தி சட்டென்று பாய்ந்து அவன் வாயை இறுக மூடினாள். அவள் கைவிரல்கள் நடுங்கின. சரிந்து விழுந்த மேலாடையைப் போல, அவள் மன நிலைகுலைந்து நழுவிற்று.



''போதும், போதும். நிறுத்துங்கள். இதற்கு மேல் ஒரு அடி கூட நாம் போகக் கூடாது. அதனால் நமக்கு நல்லது எதுவும் கிடைக்காது. கலக்கமும் ஏமாற்றமும்தான் மிஞ்சும்.''

''ஓ டார்லிங், எவ்வளவு பயப்படுகிறாய்?'' என்று அவள் முகத்தருகே குனிந்து ராஜேஷ் இதழ்களைப் பதித்துக் கொண்டான். ஆறுதலாகக் கூந்தலை நீவிக் கொடுத்தான. இழுத்து இறுக அணைத்துக் கொண்டான்:

''சரி, நீ முதலில் சொல்ல வேண்டாம்! நானே சொல்கிறேன். என்னைப் பற்றிச் சொல்லுகிறேன். இதோ, இந்தப் பெட்டியில் நான் பத்து வருஷங்களாக எழுதிய டயரிகள் அவ்வளவும் இருக்கின்றன. என்னுடைய வாலிபப் பருவத்து அனுபவங்கள், இளம் உள்ளத்து ஆசைகள், நான் நினைத்தவை, செய்ய எண்ணியவை, செய்தவை அவ்வளவையும் இந்த டயரிகளில் கொட்டி இருக்கிறேன். நீ படித்துப் பார். என்னைப் புரிந்து கொள். நான் யார், எப்படிப் பட்டவன் என்பதை உணர்ந்து கொண்டு, அப்புறம் என்னை முழுமையாக நேசித்துப் பழகு...'' என்றான்.



''இருக்கட்டும். இப்போது இவை வேண்டாம். கொஞ்சம் நெருங்கிப் பழகுவோம். ஒருவருடைய உணர்ச்சிகளை மற்றவர்கள் சரியாகப் புரிந்து கொள்வோம். ஏன்? நம்மிடையே நம்முடைய உணர்ச்சிகளை இணைப்பது போல, ஒரு குழந்தையும் பிறக்கட்டும். அப்புறம், இவற்றைப் பற்றிப் பேசலாம், தெரிந்து கொள்ளலாம். அப்படிப் பழகிவிட்ட பிறகு, நம்முடைய வாழ்க்கையை உறுதியாக ஓர் அடிப்படையில் அமைத்துக்கொண்டு விட்ட பிறகு, இந்த உண்மைகள் நம்மை அசைக்க முடியாது; நம்மை ஆட்டி வைக்க முடியாது. அப்படிச் செய்தாலும் நம்மால் ஊன்றி நிற்க முடியும். நான் சொல்வதைக் கேளுங்கள்'' என்றாள், கொஞ்சும் குரலில் சாந்தி.

''சாந்தி, என்றைக்கு நான் உன்னை மணந்து கொண்டேனோ, அன்று முதல் நீ என் மனைவி; நான் உன் கணவன். நாட்கள் ஆக ஆக, இந்த உறவுக்கு வயது கூடலாம். ஆனால் இந்த உறவின் அடிப்படையில் மாறுதல் எதுவுமே வர முடியாது. நம்முடைய வாழ்க்கையை ஆரம்பிப்பதற்கு முன்னால் ஒருவரை ஒருவர் நன்றாகத் தெரிந்து கொண்டு தொடங்கினால், நீ சொல்வதைப் போல ஒருவரை மற்றொருவர் புரிந்து கொள்ள எவ்வளவு சௌகரியமாக இருக்கும்?''

''இருக்காது. இது கைக்குள் ரகசியமாக அடக்கிக் காப்பாற்ற வேண்டிய சுடர். இதை வெளியாக்கினால், ஊதிப் பார்க்க முயன்றால் அணைந்து போகும். இருட்டுத்தான் மிஞ்சும்.''

''டோண்ட் பி சைல்டிஷ் சாந்தி. நீ வயது வந்த பெண். இருபத்தைந்து வயது வரை, உன்னைப் போல அழகும் இளமையும் ததும்பும் பெண் ஒரு குடத்து விளக்காக இன்றையச் சமூகத்தில் இருந்திருக்க முடியுமா என்ன? 'இம்பாஸிபிள்.' அதனால் என்ன? அந்த உண்மையை நான் புரிந்து கொண்டுதான் இருக்கிறேன். என்னைப் போன்ற ஒரு வாலிபன், ஏழெட்டு வருஷங்களாகக் கல்யாணம் செய்து கொள்ளத் தயாராகிக் கொண்டிருந்தவன் — என்னுடைய வாழ்க்கையும் ஒரு 'க்ளீன் ஸ்லேட்'டாக இருக்க முடியுமா என்ன? நான் சொல்லாவிட்டாலும் இதை நீ உணர்ந்து கொண்டுதான் இருப்பாய். இதை இப்படியே ஓர் உருவமில்லாத நிழலாக வைத்துக் கொண்டிருப்பானேன்? வெளிச்சத்துக்குக் கொண்டு வருவோம். நாம் இருவரும்

வெளிப்படையாகப் பேசுவோம்; பழகுவோம்.'' — உணர்ச்சியுடன் பேசினுன் ராஜேஷ்.

சாந்தி எழுந்து ஜன்னலருகே நின்று கொண்டாள். அவள் முதுகுப்புறமே ராஜேஷுக்குத் தெரிந்தது. அதில் ஒரு சிலிர்ப்பு ஓடிற்று.

'இவளுக்கு ஏன் இத்தனை பயம்? ஏன் இவ்வளவு கலக்கம்? நான் எவ்வளவு தைரியமாக என் டயரிகள் அவ்வளவையும் இவள் முன்வைத்து விட்டேன்! நம்முடைய வாழ்க்கை ஒரு திறந்த புத்தகமாக இருக்கட்டும் என்று சொல்லுகிறேன். இவள் ஏன் அதை ஏற்க மறுக்கிருள்? ஏன் இப்படிக் கூசி ஒதுங்குகிருள்?' என்று நினைத்தான்.

வெளியே தெரிந்த இருட்டில் தூங்கிக் கொண்டிருந்த நகரத்தைப் பார்த்தபடி நின்றவள் மனத்திலும் ஓர் இருள் மூண்டு கொண்டிருந்தது: 'இந்த இருளில், இரவின் போர்வையில், இந்த நகரில் என்னவெல்லாம் நடந்து கொண்டிருக்கின்றன? பார்க்கவும், சொல்லவும், நினைக்கவுமே கூசும் விஷயங்கள் எத்தனை ரகசியமாக இடம் பெற்றுக் கொண்டிருக்கின்றன? இவை பகலில் நடக்க முடியுமா? பகிரங்கமாக வெளிவர முடியுமா? வாழ்க்கையில் சில பகுதிகள்தாம் பகலாக இருக்க முடியும்; சில பகுதிகள் இரவாகத்தான் இருக்க வேண்டும். இதை இவர் ஏன் தெரிந்து கொள்ளவில்லை?' என்று எண்ணினுள். எதையோ சொல்ல நினைத்து அவன்புறம் திரும்பினுள். அதற்குள் ராஜேஷ் பேச ஆரம்பித்து விட்டான்.

அவன் அருகில் இருந்த பெட்டி திறந்து கிடந்தது. இரண்டு மூன்று டயரிகள் பிரிந்து கிடந்தன. அழகான பெண் ஒருத்தியின் புகைப்படங்கள் நாலைந்து, அவள் பார்வைக்காக வைக்கப்பட்டது போல மஞ்சத்தின் மீது இருந்தன. அதைப் பார்க்கவே அவள் கண்கள் கூசின. உள்ளூற உணர்ச்சி பொங்கி வந்தது.

''கமான் சாந்தி டார்லிங். என் மடி மீது வந்து உட்கார்ந்து கொள். முதலில் உனக்கு நான் ஆஷாவைப் பற்றிச் சொல்லப் போகிறேன். கல்லூரியில் நான் 'எகனமிக்ஸ்' படிப்பு படித்துக் கொண்டிருந்த போது, அவள் என்னேடு படித்துக் கொண்டிருந்தாள். வசதியான ஒரு குடும்பத்திலிருந்து வந்த பெண் அவள். ஓரளவு உன்னைப் போல, அழகும் கம்பீரமான தோற்றமும் கொண்டவள். ஆனல் உன்னைவிடத் தைரியமும் துணிச்சலும் உள்ள பெண்.''

ராஜேஷ் நிறுத்தினுன். சாந்தி அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவளால் அவனை இனி நிறுத்த முடியும் என்று தோன்றவில்லை. அவன் பேச ஆரம்பித்துவிட்ட பிறகு, அவளுடைய கட்டுப்பாடு குலையத் தொடங்கிவிட்டது. மேலும் அவன் சொல்லித் தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஓர் ஆவல், அவளையும் மீறி, அடக்க முடியாத தாகம் போல எழுந்தது.

''எஸ். அவள் ஒரு 'போல்ட் கேர்ல்.' அந்த அழகுக்கும் கவர்ச்சிக்கும், அந்தத் துணிச்சலும், தெறித்தாற் போலப் பழகும் விதமும், இன்னும் மெருகு கொடுத்துக் காட்டின. ஒரு நல்ல டான்ஸர். அழகான குரல் உண்டு. பாடினுல் குரலாலேயே நம்மைக் கவர்ந்து இழுத்து விடுவாள். உண்மையைச் சொல்கிறேன், அவளிடம் எனக்கு ஒரு தீவிரமான ஆசை இருந்தது. அந்த வயதில் அந்த ஆசைக்கு அவ்வளவு பக்குவம் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனுலும் அது ஓர் அடக்க முடியாத ஆசை. உடைத்துச்



''சார், என் நாய் ரொம்ப ஜோரா பரத நாட்டியம் ஆடும்...உங்க படத்திலே அதுக்கு ஒரு சான்ஸ் கொடுத்துத்தான் பாருங்களேன்!''

'இப்போ பரத நாட்டியம் யாருக்கு சார் பிடிக்குது?... ட்விஸ்ட் ஆடத் தெரிந்த நாய் இருந்தால் கூட்டி வாங்க!''

சொல்கிறேன். என் கைகளில் துள்ளத் துள்ள,அவளை அள்ளி எடுத்துக்கொண்டு அனுபவிக்க வேண்டும் என்று நான் விரும்பியது உண்டு. கனவுகளில், இரவு வேளைகளில், கற்பனைகளில் அவளைத் தழுவி அவள் அழகை அணு அணுவாக ரசித்ததும் உண்டு.''

ராஜேஷ் பெருமூச்சு விட்டான். உள்ளே எழுந்து போனான். திரும்பி வந்த போது அவன் கையில் தம்ளரில் விஸ்கி இருந்தது. சாந்தி அவன் கையைப் பிடித்துக் கொண்டாள்:

''வேண்டாம். கொஞ்ச நாட்களாக, நாம் சேர்ந்திருக்கும் இரவுகளில் இதை நிறுத்தி யிருந்தீர்களே?'' என்று கெஞ்சினாள்.

''இன்று வித்தியாசமான இரவு சாந்தி. ஒன்றாக இருந்தாலும், இன்று நாம் ...மா பேசிக் கொண்டிருக்கிறோம். அவ்வளவுதானே? என்னுடைய இப்போதைய 'மூட்' என்னை இதை அருந்தத் தூண்டுகிறது. என்னைத் தடுக்காதே! டோன்ட் ஸ்டாப் மி...... ப்ளீஸ்...'' என்றான்.

அவன் இதழ்கள் தம்ளரில் முத்தம் இடுவதுபோல அளவாகப் பதிந்தன. கண்கள் அதன் விளைவாகப் 'பளபள'வென்று மின்னின. துடிப்புடன் மேலே பேசினான்:

''நானும் ஆஷாவும் தனியாக வெளியே போவதுண்டு. மற்றவர்களுடைய தொந்தரவு இல்லாமல் எங்களுக்குள்ளே பொழுது போக்குவோம். டிரான்ஸிஸ்டரைப் பாட வைத்துவிட்டு, அவள் மடிமேல் தலையை வைத்துப் படுத்தபடி நான் எத்தனையோ இன்பக் கதைகள் பேசி இருக்கிறேன். என்னை அப்படிப் பார்க்காதே சாந்தி! அந்த அளவுதான். அதற்கு மேல் இல்லை.

''அவள் நன்றாக நீந்தி விளையாடுவாள். ஸ்விம்மிங் பூலில் இருவருமாக இறங்கி, பொழுது போவதே தெரியாமல் மீன் குட்டிகளாக அலைந்து கொண்டிருப்போம். அந்த வேளைகளில் என் பிடியில் அவள் இருக்கும் சமயத்தில்கூட நான் 'லிபர்ட்டி' ஏதும் எடுத்துக் கொண்டதில்லை. ஏன்? ஒருமுறை 'கிஸ்' பண்ணினதுகூட இல்லை. அது ஒரு நெருக்கமான 'ப்ரண்ட்ஷிப்' அவ்வளவுதான்.''

சாந்தி கவிழ்ந்து படுத்துக் கொண்டாள். தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். வேதனையில் அவள் மனம் நொந்தது. மூடிய கண்களில் அந்த நிகழ்ச்சி தெரிந்தது. அவள் கணவனுடைய பிடியில், நீச்சல் உடையில் அந்தப் பெண் ஆஷா. அவள் அங்கமெல்லாம் அந்த நினைவு நெருப்பாகச் சுட்டது. ராஜேஷிடம் இன்னொரு பெண் அப்படி நெருங்கிப் பழகியதை, அவனே அப்படிச் சொல்வதை அவளால் தாங்கவே முடியவில்லை. இப்படி ஒரு ரகசியத்தைத் தன் கணவனிடமிருந்தே தெரிந்து கொள்ள வேண்டுமென்று எந்தப் பெண்தான் விரும்புவாள்?

ராஜேஷ் தன்னை மறந்து பேசிக் கொண்டிருந்தான். அவன் பார்வை அவள் மீது இல்லை. விரல்கள் மட்டும் அவள் உடம்பின் அங்க நெளிவுகளில் செல்லமாகத் தாளமிட்டன:



''குழந்தைக்கு நாலு வயசு இருக்கும் போலிருக்கிறதே! டிக்கெட் வாங்கியிருக்கிறீர்களா?''

''நானே டிக்கெட் வாங்கவில்லையே! குழந்தைக்கு எதற்காக வாங்க வேண்டும்?''

'''எ நைஸ் கெர்ல்!' என்னுடைய பலவீனங்கள், ஆசைகள் எல்லாம் அவளுக்குத் தெரியும். என்னைச் சீண்டி விளையாடுவாள். அவளிடம் நான் தோற்றுப் போனால், என் சிகரெட் பெட்டியை எடுத்து மறைத்துக் கொண்டு என்னைக் கெஞ்ச வைத்து வேடிக்கை பார்ப்பாள். ஒரு முறை அப்படி அவள் என்னை 'டீஸ்' பண்ணின போது நான் அவளிடம் கேட்டுவிட்டேன், 'என்றைக்குமே இதைப் போல நாம் இருக்க முடியுமா ஆஷா?' என்று.

'''ஒய் நாட்? நாம் பிரண்ட்ஸாக இருக்கலாம், என்றைக்குமே!'

'''அவ்வளவு மட்டும்தானா ஆஷா?'

'''அது போதும் ராஜேஷ்.'

''நான் பிரமித்துப் போய் நின்றேன். அவள் செல்லமாக என் கன்னத்தில் கிள்ளிவிட்டுப் போய்விட்டாள். இரண்டு நாட்களுக்கு எனக்கு உலகமே இருண்டு போவது போல இருந்தது. எதுவுமே பிடிக்கவில்லை. அவளோடு நான் பேசக் கூட இல்லை. அப்புறம் அவளே என்னைத் தேடிக் கொண்டு வந்தாள்.

'''அருமையான மாலைப் பொழுதில், தனியாக உட்கார்ந்து கொண்டு என்ன செய்கிறாய் ராஜேஷ்? வா. வெளியே போகலாம்' என்றாள். எனக்கு ஏமாற்றம் வெடித்துக் கொண்டு வந்தது. பொட்டென்று உடைந்து அழுது விடுவேன் போல இருந்தது. அவள் என் அருகில் வந்து, முகத்துடன் முகம் வைத்துக் கொண்டாள். ஆனால், அந்த இதமான உணர்ச்சியில் ஒரு நண்பனின் ஆதரவைத்தான் நான் காண முடிந்தது.

'''என் மேல் கோபம் உனக்கு. அப்படித்தானே?'

'''இல்லை.'

'''அப்படியானால் ஏமாற்றம். நாம் இருவரும் இப்படியே நண்பர்களாக இருப்போம் ராஜேஷ். அதில் தவறு ஒன்றும் இல்லை. நம்முடைய வாலிப உணர்ச்சிகள் கல்யாணத்தில்தான் முடிய வேண்டும் என்கிற அவசியம் இல்லை. நெருங்கிப் பழகுகிற இரண்டு பேருடைய உறவு, கட்டிலில்தான் முடிய வேண்டும் என்பதும் இல்லை. புரிகிறதா?'

''பளிச்சென்ற அவள் வார்த்தை தணல் மாதிரி உதிர்ந்தது. அவளும் தொட முடியாத நெருப்பைப் போலத் தான் தோன்றினாள். அந்த தைரியமான வார்த்தைகள் களங்கமில்லாத மனத்திலிருந்து வந்தவை. அதனால்தான் அதில் துளிக் கூட கலக்கம் இல்லை.

''அவள் கையை நீட்டினாள். நான் அதைப் பிடித்துக் கொண்டு எழுந்திருந்தேன். விழுந்து போயிருந்த என் மனத்தையே அவள் கை கொடுத்துத் தூக்கி விடுவது போல இருந்தது அந்த ஒரு நிகழ்ச்சி.''

சாந்தியின் கண்கள் உலர்ந்து விட்டன. தூக்கி விடுவாரின்றி அவள் நெஞ்சு எழுந்து, விழுந்து தவித்துக் கொண்டிருந்தது. ஆஷாவை அடைய ஆசைப்பட்ட ராஜேஷ், அவளையே மணந்து கொண்டிருக்கலாம். இந்த வேதனைக்கெல்லாம் இடமில்லாமல் போயிருக்கும். இப்படி அந்தரங்கமான ஒரு பேச்சு அவளை வருத்த வேண்டிய அவசியமில்லாமல்

---

# செல்வி சுஜாதா



**ப**ன்னிரண்டு வயதே நிரம்பிய செல்வி சுஜாதாவின் நாட்டிய நிகழ்ச்சிகள் அண்மையில் மேட்டூரிலும், மதுரை பாத்திமா கல்லூரியிலும், திருச்சி சீதாலட்சுமி ராமஸ்வாமி கல்லூரியிலும் மிகவும் வெற்றிகரமாக நடைபெற்றன. மிகச் சிறிய வயதில் தன் அற்புதமான முக பாவத்தால் ரசிகர்களை மெய்ம் மறக்கச் செய்தாள் செல்வி சுஜாதா. அலாரிப்பு, ஜதீஸ்வரம், வர்ணம் முதலியவை அவளுடைய தாளத்தோடு எடுத்துக் கூறின. பரதம் மட்டுமே யன்றி, மோகினி ஆட்டம், மயில் நடனம், வட நாட்டு கதக் நடனம், குறத்தி நடனம் முதலியவற்றையும் வெகு அழகாக ஆடி சபையோரின் கரகோஷத்தைப் பெற்றாள். இளம் பிராயம் முதற்கொண்டே ஆடற் கலையை அளவிலா ஆர்வத்துடன் பயின்று கொண்டு, சென்னை குட்ஷெப்பர்ட் கான்வென்டில் 9-வது வகுப்பில் படிக்கிறாள். சேலம் திரு. கே. ஆர். பொன்னுசுவாமியின் சிஷ்யையான சுஜாதா, சென்னை வருமான வரி உதவிக் கமிஷனர் திரு. ராஜனின் புதல்வி.



# மலர் காட்சிக்குப்பின் மணமாகும்..!

● இந்த ஆண்டு மணம் செய்து கொள்ளும் நடிகைகளின் வரிசையில் புதிதாகச் சேர்ந்திருக்கிறார் வ ஹீ தா ரஹ்மான்.

● தமிழ் நாட்டு முஸ்லீம் பெண்ணை வஹீதாவின் கணவர் உத்தரப் பிரதேசத்துக்காரர். டில்லியில் ஒரு முக்கியமான வியாபார 'புள்ளி'.

● தேக்கு மரம் வியாபாரம் செய்யும் கணவர் ஸித்திக், வேட்டை ஆடுவதில் கெட்டிக்காரர். 37 புலிகளைச் சுட்டு வீழ்த்தி இருக்கிறாராம்!

● இதற்கு முன் அவர் வஹீதாவைச் சந்தித்ததில்லை. ஆனால் அவர் வஹீதாவின் விசிறி. அவருடைய படங்கள் எல்லாவற்றையும் பார்த்திருக்கிறார் ஸித்திக்.

● வஹீதா அவரிடம் ''சரி'' என்று சொன்னது எங்கே? புனாவில் நடந்த ஒரு மலர்க் கண்காட்சியில் சந்தித்து ஒன்றாக இருந்த போது.

● வஹீதாவுக்குத் திருமணத்திற்காக அவர் ஒரு 25 காரட் வைர மோதிரத்தை அளித்திருக்கிறாராம்.

● தேனிலவுக்கு இருவரும் குளிர் நிறைந்த ஐரோப்பிய நாடுகளுக்குப் போவதாக இல்லையாம். நேபாளம் அல்லது பெய்ரூட்டுக்குப் போவதாகத் திட்டம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

---

போயிருக்கும். சாந்தி என்ற இன்னொரு பெண் அவனுடைய வாழ்க்கையில் இடம் பெறாமலே போயிருக்கலாம்...

''அவளுடைய உணர்ச்சிகளுக்கு நான் மதிப்புக் கொடுத்தேன் சாந்தி. இது ஒரு 'ஹிப்பொக்ரெட்'டுகளின் உலகம். உள்ளே வைத்துக் கொண்டிருப்பது ஒன்று, வெளியே பேசுவது இன்னொன்று. பழகும் போது பார்த்தால் ரொம்ப கண்ணியமாக இருக்கும். தனியாக விடப்பட்டிருக்கும்போது அவர்கள் நடந்து கொள்வதே வேறு விதமாக இருக்கும். அந்த மாதிரி நடந்து கொண்டதே இல்லை ஆஷா. அப்படி ஒரு சந்தர்ப்பத்தில் நான் மாட்டிக் கொள்ளவும் இடம் கொடுக்கவில்லை.

''எங்கள் படிப்பு முடிந்தது. மேலே படிக்க நான் அமெரிக்காவுக்குப் போனேன். அவள் என்னை ஏர்போர்ட்டுக்கு வந்து வழி அனுப்பினாள். அப்போது அவளுடைய புகைப்படம் ஒன்று கேட்டேன். அவள் கொடுக்கவில்லை. 'இந்தச் சம்பிரதாயம் எல்லாம் நமக்கு வேண்டாம் ராஜேஷ்' என்று சொல்லி விட்டாள்.

''வெளிநாட்டுக்குப்போன பிறகுதான் என்னால் அவள் என்னிடம் பழகிய விதத்தை உண்மையாகப் புரிந்து கொள்ள முடிந்தது. ஆண்களும் பெண்களும் அங்கே எவ்வளவோ நெருங்கிப் பழகுகிறார்கள். கூச்சமில்லாமல் மனம் விட்டுப் பேசுகிறார்கள். ரொம்ப வெளிப்படையாக இருக்கிறார்கள். அதனால், அந்தப் பழக்கத்தில் கள்ளம் இருப்பதில்லை.

''அங்கே நான் சந்தித்த, பழகிய ஒவ்வொரு பெண்ணின் முகத்திலும், நான் ஆஷாவைப் பார்த்தேன். கலகலவென்று சிரிக்கும்போது, ஆஷாவின்கபடமில்லாத சிரிப்பொலிதான் எனக்குக் கேட்டது. தைரியமாக அவர்கள் கை நீட்டிக் குலுக்கும்போது, 'பாலே' நடனத்தில் சுவாதீனமாக நெருங்கும்போது, ஆஷாவே என்னருகில் இருப்பதைப் போலத் தோன்றியது.

''அவளுக்கு நான் கடிதங்கள் எழுதினேன். அவளும் எனக்குப் பதில் எழுதினாள். மனதைவிட்டு நான் அவளுக்கு விதம் விதமாக எழுதின கடிதங்களுக்கெல்லாம் கருவாக அமைந்த உணர்ச்சிகளை இந்த டயரியில் கொட்டி இருக்கிறேன். படித்துப் பார் சாந்தி.''

அவன் விரல்கள் அந்தக் குவியலில் ஒரு பழைய டயரியைத் துழாவி எடுத்தன. துக்கத்திலும், போதையின் லேசான மருட்சியிலும் அவன் கண்கள் சோர்ந்து மூடின:

''படித்துப் பார் சாந்தி டியர். நமக்குள்ளே எதுவும் ரகசியம் இல்லை.''

அவன் பேச்சுக் குழறியது. அப்படியே அவள் மீது சாய்ந்து கொண்டு தூங்க ஆரம்பித்தான். அவளால் அந்தப் பேச்சு, செய்கை எதையுமே தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவனை அணைத்தபடி குழந்தையைப் போல விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள்.

(தொடரும்)

காலேஜிலிருந்து வந்ததும் வராததுமாக அப்பா என்னிடம் ரொம்பவும் கோபித்துக் கொண்டார். எதிர் வீட்டுப் பெண் மங்களத்துக்கு இருக்கும் அடக்கம் என்னிடம் இல்லையாம்.



இது அப்பா அடிக்கடி பாடும் பாட்டு. ஆனால் இன்றைக்குக் கொஞ்சம் 'ஓவ'ராக இருந்தது. சமையலறையில் காரியமாக இருந்த அம்மாவுக்குக் கூட என்னவோ மாதிரியாகவே இருந்திருக்கும்.

காரணம், அம்மாவைப் பற்றியும் அப்பா இரண்டு வார்த்தைகள் சொன்னதுதான்:

''கல்யாணமான புதிசிலே உங்க அம்மா கூட இந்த மாதிரிக் கொஞ்சம் அடக்கம் இல்லாமலிருந்தாள். புடவை முந்தானை மேலே நிற்கவே நிற்காது. நூறு முறை எடுத்துச் சொன்ன பிறகுதான் அது அவளுக்குத் திருந்தியது.... நீ என்னன்னா இடுப்பு, வயிறு எல்லாமே.....''

எனக்கோ நல்ல பசி. ஒரு வார்த்தையும் பேசாமல் நேரே சமையலறைக்குப் போய் விட்டேன்.

அம்மா டிபன் எடுத்து வைத்துக் கொண்[டே], ''சரோஜா, நீயும் ஏதாவது பேசி, வீடு ரக[ளை]ப் பட்டு விடுமோ என்று பயந்து விட்டேன்'' என்றாள்.

நான் சாப்பிட்டுக் கொண்டே, ''என்ன இருந்தாலும் எதிர் வீட்டு மங்களத்தின் அடக்கம் எனக்கு வருமா அம்மா? ஆனா, ஒரு விஷயத்தை அப்பா அடியோடே மறந்துடறாளே. மங்களம் ஒன்பதாங் கிளாசோடேயே படிப்பை நிறுத்திக் கொண்டு விட்டாள். நானோ அவளோடு படித்தவள் தொடர்ந்து படித்து, இப்போ பி.ஏ. ஃபைனல் இயர் படிக்கிறேனே! அவள் வீட்டுக்குள்ளேயே இருக்கிறாள்; நானோ வெளியில் இரண்டு பஸ் ஏறிப் போய் வர வேண்டியவள் ஆயிற்றே?''

''வருத்தப்படாதே, சரோஜா. அப்பா குணம் உனக்குத் தெரியாதா? என்னைக் கூடத்தான் சொன்னார். விட்டு விடு'' என்றாள் அம்மா.

# அடக்கம்



நாலே அறைகள் உள்ள வீடு. தெருவைப் பார்த்த அறைதான் நான் படிக்கும் அறை. ஜன்னல் அருகில் நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன், கையில் புத்தகத்துடன்.

மறுநாள் மன்த்லி டெஸ்ட் இருந்தது. எதிர் வீட்டுக்குள் —

மங்களம் விளக்கேற்றிக் கொண்டிருப்பது நன்றாகத் தெரிகிறது. புடவையை நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டு விளக்கேற்றுகிறாள்.

கடந்த ஐந்து ஆண்டுகளாகப் படிப்பை நிறுத்திக் கொண்டு விட்டாள். படிப்பு வரவில்லை என்பதை அவளோ, அவளது குடும்பத்தாரோ ஒப்புக் கொள்ள மாட்டார்கள். '[illegible]ம், சொத்து இருக்கிறது, படித்து வேலைக்கா போக வேண்டும்? நல்ல இடமாக வந்தால், கல்யாணம் செய்து கொடுத்து விட வேண்டியது தான்' என்பது மங்களத்தைப் பெற்றவர்களுடைய எண்ணம்.

எனக்கு உடல் செழுமை அவ்வளவாகப் போதாது. ஆனால் மங்களத்துக்கு நல்ல உடற்கட்டு. மூளைக்கு அவ்வளவாக வேலை கிடையாததால் அவள் அப்படி இருக்கலாம்.

எனக்குத்தான் வீக்லி, மன்த்லி, செலக்ஷன், யூனிவர்சிடி என்று இப்படிப் பரீட்சைகள் இருந்து கொண்டே இருக்கின்றனவே!

# கூ. பஞ்சாபகேசன்

மங்களத்தின் தலையில் அவள் அம்மா நிறைய மல்லிகைப் பூ சூட்டி விடுவது இங்கிருந்தே தெரிகிறது. அப்பா கூறியது உண்மைதானே?

அவளுக்கு இருக்கும் அடக்கம் எனக்கு இல்லையோ? நல்ல உடற்கட்டைப் புடவையால் அழுந்தப் போர்த்திக் கொள்ளும்போது அதற்கும் ஒரு தனி அழகு ஏற்படத்தானே செய்கிறது?

அன்று இரவு பதினோரு மணிக்கு மேல் நான் கொஞ்ச நேரம் கண் அயர்ந்து விட்ட பிறகு என் காதுக்குள் கேட்ட இலேசான குரல் ஒலிகளால் விழித்துக் கொண்டேன்.






சமைத்தல், துலக்கல், அரைத்தல், இடித்தல்... மாளாத வேலை, தாளாத சோர்வு. நாளெல்லாம் வீடே கதி. வெளி வேலைகளோ அவளுக்கு வெகு தூரம். இதற்கு விடிவு?

நீங்கள் மனது வைத்தால் நடக்கும் க்ளியர்டோன் உதவியோடு. பிரஷ்ஷர் குக்கர், இஸ்திரிப்பெட்டி மிக்ஸர், மின்விசிறி...இதுபோல் பலப் பல க்ளியர்டோன் சாதனங்கள் உள்ளன. வாங்கிக் கொடுத்துப் பாருங்களேன், டாண் டாண் என்று வீட்டு வேலைகளை முடித்து விடுவாள். அதிக நேரம் மிஞ்சும் வெளி வேலைகளுக்கு.

கிட்டத்திலுள்ள க்ளியர்டோன் வியாபாரியிடம் அவளை இட்டுச் சென்று காண்பியுங்கள்: வகை வகையான வீட்டுபயோக சாதனங்கள். பிடித்தமானவற்றை அவள் எடுத்துக் கொள்ளட்டும். அவள் வாழ்வே மாறிவிடும். உங்கள் வாழ்வும்தான்.



தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட். பம்பாய் • கல்கத்தா • டெல்லி • சென்னை

Kleertone
க்ளியர்டோன்
—வீட்டுபயோக சாதனங்களின் படைப்பகம்

Creative Unit-926 *Tam*

## விசிறிகள் எப்படியோ..?



ராணுவ வீரர்களின் அபிமான நடிகை நீட்டுசிங். அவருடைய பெயரால் ரசிகர் மன்றங்கள் கூடத் தொடங்கி இருக்கிறார்களாம் பல இடங்களில். புனாவில் ஒரு மேஜர் அவருடைய படத்தைத் திறந்து வைத்திருக்கிறார்.



குடும்பப் பெண்கள், தாய்மார்களுக்குப் பிரியமான நடிகை ஜயாபாதுரி. ''என் பெண் உன்னைப் போல இருக்க வேண்டும் என்று நான் மிகவும் ஆசைப்படுகிறேன்'' என்று பல தாய்மார்கள் அவருக்குக் கடிதம் எழுதுகிறார்களாம்!

கல்லூரிப் பெண்களும், சற்று வயதான வாலிபர்களும் தேவ் ஆனந்தின் 'விசிறி'கள். அவருடைய மங்காத இளமையின் இரகசியத்தைக் கேட்டு வருபவைதான் அநேக கடிதங்கள்!

● ● ● ● ●

அப்பா நடுக்கூடத்தில் தொங்கும் ஊஞ்சலில்தான் எப்போதும் படுத்துக் கொண்டிருப்பார்.

அங்கே அவரைக் காணவில்லை.

அம்மா இங்கே என் அறையில் என்னருகில் படுத்துக் கொண்டிருப்பவளையும் காணோம்.

அடுத்து, சமையல் அறையை ஒட்டியிருந்த குறுகிய இடைகழி ரேழியிலிருந்து குரல்கள் கேட்டன. அம்மாவும் அப்பாவும்தான் பேசிக் கொண்டிருந்தார்கள்:

''உங்களுக்கு எத்தனையோ முறை சொல்லி விட்டேன். வயதான பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு...''

''அவளுக்கு ஒரே களைப்பு. நன்றாகத் தூங்குகிறாள்...''

''எனக்குப் பயமாக இருக்கிறது. அந்தப் பொண்ணு வந்து விட்டால் அவமானம் தாங்காது. தூக்குப் போட்டுத் தொங்க வேண்டியதுதான்.''

''உனக்கு இந்த மாதிரி சமயங்களிலே எப்பவும் குதர்க்கமாப் பேசியே பழக்கம்.''

''போறும், வாயை மூடுங்கள்...அடக்கத்தைப் பத்திப் பொண்ணுகிட்டே சாயங்காலம் ஆயிரத்துக்கு வாய் கிழிஞ்சதே! உங்க மனசையே அடக்கி வைச்சிருக்கத் தெரியவில்லை. பெரியவா தப்புப் பண்றது புரியவே இல்லை. பாவம், சரோஜா கண்ணீர் விடாத குறைதான்.''

''பின்னே என்னடி? அவ இன்னைக்கு பஸ் ஸ்டாண்டிலே பஸ்ஸிலிருந்து இறங்கறதை நான் பார்த்தேன். நான் மட்டும்தானா? ஆயிரம் பசங்களுடைய ரெண்டாயிரம் கண்ணும்...''

''இதெல்லாம் இந்தக் காலத்திலே சகஜம். ஒவ்வொருத்தர் மினி ஸ்கர்ட்டெல்லாம் போடறா. தப்பாக நினைக்கிறது நினைக்காதது ஒவ்வொருத்தர் மனசிலேதான் இருக்கிறது. உங்களை ஒண்ணு கேக்கட்டுமா?''

''கேளேன்.''

''உங்க பொண்ணு அப்படி வந்தா அவ அடக்கமா வரணும். அதை விட்டுத் தள்ளுங்கோ. நீங்க உலகத்தைப் பார்க்கறதே இல்லையா?''

''என்ன சொல்றே?''

''போன லீவுக்கு சரோஜாவை ஐதராபாத்துக்கு என் அண்ணா ஆத்துக்கு அனுப்பிச்சுட்டு நீங்க அடிச்ச லூட்டியை மறந்துட்டேளா? கல்யாணம் ஆனதிலிருந்து இதுவரை நான் கொசுவம் வைச்சுத் தானே புடவை கட்டிக்கிறேன்! என்னை மாம் பழக்கட்டு கட்டிக்கச் சொல்லிப் பார்த்து... ஐயையோ, அதுக்கு சரோஜா புடவை ஒண்ணை உபயோகப்படுத்தினேன் என்கிறது அவளுக்குத் தெரிஞ்சா...''

''ஆனால் அந்தக் கட்டு உனக்கு அழகாத்தான் இருந்தது.''

''பார்த்தேளா? என் அளவிலே அந்த நாகரிகம் உங்களுக்குப் பிடிச்சது. ஆனா இந்தக் காலத்திலே சரோஜா அளவிலே அதே நாகரிகம் உங்களுக்கு அடக்கமில்லாமல் தெரியறது...''

''ஏய், நீ என்ன நினைக்கிறே என்னைப் பத்தி? இடுப்பு தெரிய, புடவை நெகிழ நம்ம குழந்தை போகிறதும், அதை நாலு பேர்...''

''அதனாலே சரோஜா அடக்கமில்லாதவளா? அப்படி யெல்லாம் நினைக்காதேயுங்கோ...நீங்கதான் இப்போ அடக்கமில்லாமே நடந்...மெதுவா...''

திரும்பிப் படுத்துக் கொண்ட நான், தலையணையில் படிந்திருந்த கண்ணீர் 'சில்' என்று என் கன்னத்தை வருடிய உணர்ச்சியை அடைந்தேன்.

அப்பா, அம்மாவிடம் எனக்கு எந்த விதமான கோபமும் இல்லை. நன்றாகப் படித்து, முதல் வகுப்பில் பாஸ் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சி எனக்குள் ஒரு பொறுப்பு உணர்வையும் ஏற்படுத்தித் தந்திருந்ததைப் பற்றி அப்பா அறியவில்லையே என்று சற்றே வருத்தமும் ஏற்பட்டது.



''ஞாயிற்றுக் கிழமையிலே கூட நான் ஆபீசுக்குப் போயிடுவேன்......''

''ஏன்?''

''வீட்டிலே பசங்க என்னை நிம்மதியா தூங்க விட்டால் தானே?''

அம்மா! வயது வந்த பெண்ணானாலும், எனக்குத் தெரிந்து விட்டால் என்ன செய்வது என்று அவமானப்படாதே! மனித உணர்வு, மனித தர்மம் இதையெல்லாம் பற்றி எனக்கும் கொஞ்சம் தெரியும், தாயே!

அப்பா! நீங்கள் என்னைப் பெற்றவர். உழைத்துச் சம்பாதித்துச் சக்திக்கு மீறிய அளவில் படிக்கவும் வைக்கிறீர்கள். என்னை எத்தனை வேண்டுமானாலும் கோபித்துக் கொள்ளுங்களப்பா. உங்கள் மகிழ்ச்சியிலே பிறந்தவளப்பா நான். உங்களுக்கு எல்லா உரிமையும் உண்டு......

இடைகழி ரேழியில் குரல்கள் அடங்கி விட்டன; என்னையும் உறக்கம் சூழ்ந்து விட்டது.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு—

காலேஜிலிருந்து வந்த என்னை அம்மாவின் மெதுவான, அழுத்தமான வார்த்தைகள் எதிர்கொண்டழைத்தன:

''சரோஜா! ஒரு வாரமாக எதிர் வீட்டு மங்களம் எங்கேயோ அவள் சித்தப்பா வீட்டுக்குப் போயிருக்கிறாள் என்று சொன்னாளில்லையா?''

''ஆமாம்.''

''அதெல்லாம் சும்மா. மங்களத்தை ஒரு வாரமா எங்கோ காணவில்லையாம். இப்போதான் விஷயம் மெதுவா வரது. அவ அப்பா போலீசில் ரிப்போர்ட் செய்து விட்டு வந்து அசந்து போய் உட்கார்ந்திருக்கார். உங்க அப்பாவும் அங்கே போயிருக்கிறார்.''

மங்களம்! நீ எங்கே போய் விட்டாய்? வீட்டைவிட்டு வெளியே வராதவள், ரொம்ப அடக்கமானவள் என்று பெயர் வாங்கினாயேடி? என்ன காரியம் செய்து விட்டாய்?

''எது அடக்கம், எது அடக்கமில்லைன்னு இந்த உலகத்திலே ஒண்ணுமே தெரிய மாட்டேன் என்கிறதே'' என்று சொல்லிக் கொண்டே வந்தார் அப்பா.




# 6

Since teenagers are too old to do the things little children do, and not old enough to do things adults do, they do everything that no body else does.

—JAMES ALLEN

காலையில் சற்றுத் தாமதமாகத் தான் சாந்தி எழுந்திருந்தாள். அவளுக்கு முன்பே ராஜேஷ் எழுந்திருந்து அவளுக் காக 'பெட் காபி'யும் கொண்டு வந்து விட்டான். அவள் கண் விழித்ததும் குனிந்து அவள் கன்னத்தில் முத்த மிட்டான். அந்த உணர்ச்சியில் அவள் முதல் நாள் இரவு அனுபவித்த துன்பம் எல்லாம் மறைந்து போயிற்று. புன்னகை செய்தபடி, கைகளை மாலையாக அவன் கழுத்தில் போட்டு, அவனைப் பற்றிக் கொண்டபடி எழுந்து உட்கார்ந்தாள்.

காலைச் சிற்றுண்டி முடிந்து ராஜேஷ் புறப்பட்டு விட்டான். அவளை ஆபீசுக்கு சாப்பாடு அனுப்பச் சொல்லி விட்டான். ''சாயங்காலம் ஐந்தரை மணிக்கு வந்து விடுவேன் சாந்தி. மராத்தா மந்திரில் நம் இருவருக்கும் டிக்கெட் வாங்கி இருக்கிறேன். போகலாம். தயாராக இரு'' என்று சொல்லிவிட்டு, அவள் கன்னத்தில் ஒரு தட்டு தட்டி விட்டுப் போய் விட்டான்.

அவள் கண்களுக்கு அவன் இப்போது பழைய ராஜேஷாகத் தோன்றினான். இரவு அவள் மனத்தில் இருந்த கலவரம் இப்போது இல்லை. நயமாகப் பேசி, மெதுவாக அவன் பிடிவாதத்தை மாற்றி விடலாம் என்ற எண்ணம் அவளுக்கு ஏற்பட்டது.

குளியலறைக்குப் போய் வெந்நீர்த் தொட்டியில் அமர்ந்து சுகமாக அமிழ்ந்து குளிக்கலானாள். அவள் மனம் அன்று மாலை அணிந்து கொள்ள வேண்டிய புடவையைப் பற்றியும், போட்டுக் கொள்ள வேண்டிய நகைகளைப் பற்றியும் நினைக்கத் தொடங்கிற்று. காலையில் அவளை ராஜேஷ் செல்லமாக முத்தம் கொடுத்து எழுப்பிய ஞாபகத்தில், அவள் இதயம் சிறிது விம்மிதமும் அடைந்தது.

'அவனைத் திருப்தி செய்ய வேண்டும். அவன் மனம் நோகாதபடி அவன் இஷ்டப்படி எல்லாம் நடந்து கொண்டு தன்னை முழுமையாக அவனிடம் ஒப்படைத்து விடவேண்டும். அவன்

விரும்பும் இன்பம் எதையும், எந்தவித மானாலும் கொடுத்து அவனைக் குதூகலத்தில் ஆழ்த்த வேண்டும்' - இப்படி யெல்லாம் அவள் உள்ளம் மீண்டும் மீண்டும் ஆசைப்பட்டது.

வெளியே எழுந்து வந்து கண்ணாடி முன்னால் நின்று கூந்தலைத் துவட்டிக் கொண்டாள். உடல் முழுவதும் துடைத்து, பவுடரை மென்மையாக உதிர்த்துக் கொண்டாள். நிலைக் கண்ணாடியில் தெரிந்த தன் அழகைக் கண்டு அவளுக்கே பெருமையாக இருந்தது. இளமையின் மெருகும், பருவத்தின் பூரிப்பும், உடலின் வாளிப்பும் அவளிடம் நிறைந்திருந்தன. அதைக் கொண்டு அவள் நிச்சயம் ராஜேஷின் மனத்தை வசப்படுத்தி விடலாம்.



மீண்டும் மீண்டும் அதைச் சொல்லிக் கொண்டாள். அவள் மனத்தில் ஒரு புதிய தெம்பு பிறந்தது. உள்ளத்தின் மகிழ்ச்சியை வெளிக்காட்டுவது போல, அவளுக்குப் பிடித்த இந்திப் பாட்டுக்களை மெதுவாக முனகியபடி சமையலைக் கவனித்தாள். அவனுக்குப் பிடித்த 'ஹாட்கே'ஸில் சமையலைச் செய்து பத்திரப்படுத்தி அனுப்பினாள்.



மாலை நேரம் வந்தது. அவள் தன்னை மிகக் கவனத்துடன் அலங்காரம் செய்து கொண்டு ராஜேஷுக்காகக் காத்திருந்தாள். 'போர்ட்டிகோ'வில் அவனுடைய கார் வந்து நிற்பதைக் கவனிப்பதற்கு அவள் கண்கள் ஆர்வத்துடன் காத்துக் கொண்டிருந்தன. தோட்டத்தில் தோட்டக்காரன் செடிகளைக் கத்தரித்துக் கொண்டிருந்தான். அவன் கத்தரித்த இடங்களில் எல்லாம் அழகான உருவங்கள் வெளிப்படுவதை அவள் அதிசயமாகப் பார்த்தாள்.

அந்தத் தோட்டக்காரன் கெட்டிக்காரன். வீட்டின் முன்னால் நீர் ஊற்றுக்கு அடியில் புல்தரையில் 'ராஜேஷ் சாந்தி' என்ற சொற்களை அழகாகச் செதுக்கி வைத்திருந்தான் அவன். சுற்றிலும் வளையம் வளையமாக மலர்ப் பாத்திகளை அமைத்திருந்தான். மாடியிலிருந்து ஜன்னல் வழியாகப் பார்த்தால், அது ஓர் அழகான சித்திரம் போலத் தெரிந்தது.

ராஜேஷ் அடிக்கடி அதைக் காட்டிப் பெருமைப்படுவான். ஜன்னல் வழியே பார்த்துக் கொண்டிருக்கும் அவளைப் பின்புறமாக அணைத்துக் கொண்டு, முகம் சிவக்கும்படி குறும்பான வார்த்தைகள் எதையாவது சொல்லுவான். அதை நினைத்தபடி, அந்த எழுத்துக்களைப் பார்த்தபடி, தன்னை மறந்திருந்த சாந்தி, கார், கேட்டின் வழியே நுழைந்து போர்ட்டிகோவிற்குள் வந்து நின்றதைக் கவனிக்கவில்லை.

காரை நிறுத்திவிட்டு ராஜேஷ் மாடிப் படியில் ஏறி வந்தான். அவள் அசையாமல் நிற்பதைக் கவனித்ததும், சத்தம் போடாமல் கால் பூட்சைக் கழற்றி வைத்தான். மெதுவாக நடந்து வந்து அவள் பின்னால் நின்று, இடையை வளைத்தபடி கன்னத்தில் முகத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டான். திடுக்கிட்டுப் போன சாந்தி, மறுகணம் மெய்சிலிர்த்துப் போனாள்.

''என் ராணிக்கு என்ன சிந்தனை அப்படி? எந்தக் கோட்டையைப் பிடிக்கத் திட்டம் இப்போது?''

சாந்தி சிரித்துக் கொண்டு திரும்பினாள். அவன் தோள் மீது கைகளை வைத்தபடி எதிரே ஒய்யாரமாக நின்றாள்:

''என்னுடைய இன்றைய டிரஸ் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டாள். ராஜேஷ் சற்று விலகி நின்று கொண்டான். அவளைக் காலில் இருந்து தலைவரை ஒவ்வோர் அங்கமாகக் கவனித்தான். அவன் அப்படிப் பார்த்த போது, வெட்கத்தால் அவள் முகம் சிவந்தது.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்று நாணம் கனியும் குரலில் கேட்டாள்.

''ஒன்றுமில்லை சாந்தி. உனக்கு இன்று இரவு ஒரு 'ஸர்ப்ரைஸ்' காத்திருக்கிறது. இப்போது நான் சொல்ல மாட்டேன். சினிமா முடிந்து திரும்பி வந்த பிறகு சொல்கிறேன்'' என்றான்.

அவள் இதயம் ஒரு கணம் 'படபட' வென்று அடித்துக் கொண்டது. 'ராஜேஷ் அன்று இரவு என்ன புதிய புதிரைப் போடப் போகிறான்? அவளுக்கு இன்பமான அதிர்ச்சியைத் தருவானா? அல்லது முதல் நாள் இரவு நடந்ததைப் போல ஏதேனும் நிகழப் போகிறதா?' —அவள் முகம் வேதனையால் வாட்டம் அடைந்தது.

ராஜேஷ் அதைக் கவனித்தான். அவளுடைய தோள் மீது கையைப் போட்டு அருகே இழுத்துக் கொண்டான்: ''ஏன் உன் முகம் அப்படி மாறுகிறது? ஒன்றும் இல்லை சாந்தி. விஷயத்தை நான் சொன்னதும் என் அன்பைக் கண்டு நீ பிரமிக்கப் போகிறாய். என்னை வெட்கத்துடன் கடிந்து கொள்ளக்கூடப் போகிறாய்; அவ்வளவுதான். வா, போகலாம். போகும் வழியிலேயே ஏதாவது டிபன் சாப்பிட்டுக் கொள்ளலாம்'' என்று அவள் முதுகில் தட்டிக் கொடுத்தபடி படிகளில் இறங்கினான்.

அவர்கள் பார்த்த படத்தில் அந்நியோன்னியமான காதல் காட்சிகள் நிறைய இருந்தன. இளம் வயது நடிகர்களான தால், அப்படி அவர்கள் நெருங்கி நடித்த போது அதில் ஒரு தனியான கவர்ச்சி இருந்தது. வீட்டுக்குத் திரும்பி வரும் வழி யெல்லாம் இருவர் மனத்திலும், அந்தப் படத்தின் இனிய காட்சிகள், மனோகரமான மணம் போலத் தங்கிக் கொண்டே இருந்தன.

வீட்டுக்குத் திரும்பி, சாப்பாட்டை முடித்துக் கொண்டு, இருவரும் மாடிக்கு வந்தார்கள். உடையை மாற்றி இரவு உடை அணிந்து கொண்டு படுக்கை அறைக்குள் வந்தாள் சாந்தி. மாலையில் அழகாகக் கொண்டை இட்டுக் கொண்டிருந்த கூந்தல் அவிழ்ந்து, தோள் மீது அலை அலையாக வழிந்தது. அவன் அருகே மஞ்சத்தின் மீது உட்கார்ந்தாள்.

ராஜேஷ், கட்டிலின் அடியிலிருந்து அட்டைப் பெட்டி ஒன்றை எடுத்தான். அவள் அருகே வைத்து, ''இதைப் பிரித்துப் பார் சாந்தி'' என்றான்.

மனத்தில் ஆவலும், சிறிது கலவரமும் தோன்ற, நடுங்கும் விரல்களால் மெதுவாக அந்தப் பெட்டியைப் பிரித்தாள்.

உள்ளே,

ஒரு பெண்ணுக்குரிய உடை இருந்தது. அதை எடுத்துப் பிரித்ததும் அவள் முகம் நாணத்தால் சிவந்தது. நாகரிகமான ஓட்டல்களில், மேடை மீது கவர்ச்சி நடனம் ஆடும் பெண்கள் அணிந்து கொள்ளும் உடை அது. ஜரிகை மினுமினுப்பும், அலங்காரக் குஞ்சலங்களும்—அணிந்து கொண்டதும் உடம்பை 'சிக்'கென்று பிடிக்கும் மிகக் குறைவான உடை அது.




''என் கணவர் கிட்டேயிருந்தா போன் வந்திருக்கு? நான் இங்கேதான் வந்திருப்பேன்னு அவருக்கு எப்படித் தெரியும்?!...''

''என்ன வெட்கப்படுகிறாய் சாந்தி? நான் ஆசைப்பட்டால் நீ கண்டிப்பாக அணிந்து கொண்டு வருவாய் அல்லவா? உன் அழகை இப்படி ஒரு கவர்ச்சியான தோற்றத்தில் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஓர் ஆசை.''

''நல்ல ஆசை. பொல்லாத ஆசை'' என்று செல்லமாகக் கோபித்துக் கொண்டாள் சாந்தி. பிறகு கொஞ்ச நேரம் சிணுங்கினாள். பின்னர் அவனுக்கு முகத்தைத் திருப்பி அழகு காட்டியபடி அந்தப் பெட்டியை உள்ளே எடுத்துக் கொண்டு போனாள். திரும்பி அந்த உடையை அணிந்து, முகத்தில் நாணம் பொங்கக் கண்களைச் சிமிட்டியபடி சாந்தி வந்த போது, கையில் ஒரு புகைப்படத்துடன் தலையணையில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டிருந்தான் ராஜேஷ். அவள் அருகே வந்து நின்றதும், அவளை அப்படியே ஒரு குழந்தையைத் தூக்குவது போல உயரே தூக்கி, அள்ளி அணைத்துக் கொண்டான்.

பெருமிதத்துடன் அவன் முன் சாய்ந்து அமர்ந்த சாந்தியின் பார்வை, அவன் கீழே வைத்திருந்த புகைப்படத்தின் மீது விழுந்தது. அவள் முகத்தில் இருந்த மகிழ்ச்சி அவ்வளவும் சட்டென்று மறைந்தது. கண்களால் பார்க்க முடியாதபடி நீர் சுரந்தது. உடல் முழுவதும் நடுங்கிற்று. படுக்கை மீது கிடந்த சால்வையை எடுத்து உடலைப் போர்த்தியபடி உட்கார்ந்து, தலையைக் குனிந்து கொண்டாள்.

அது ஆஷாவின் படம். அவள் அப்போது அணிந்திருந்தது போலவே ஒரு கவர்ச்சி உடையில் ஒயிலாக அதில் நின்று கொண்டிருந்தாள் ஆஷா. அந்தக் கவர்ச்சியும், சுண்டி இழுப்பது போன்ற பார்வையும் ஆண்களுக்கு மகிழ்ச்சி வெறியை ஊட்டி இருக்கலாம். ஆனால் சாந்தியின் மனத்தில் அருவருப்பைத் தான் ஊட்டிற்று.

''என்ன அப்படிப் பார்க்கிறாய் சாந்தி? அது ஆஷாவின் படம். அடையாளம் தெரிகிறதோ, இல்லையோ?''

சாந்தி மனம் குமுறினாள். அழுகை பொத்துக் கொண்டு வந்தது.

''தெரிகிறது, நன்றாகத் தெரிகிறது. நேற்று அவளைப் பற்றி அப்படி இப்படி என்று என்னென்னவோ சொன்னீர்கள்? இவ்வளவுதானா?'' என்று தன்னையும் மீறி நடுங்கும் குரலில் கேட்டாள்.

''அப்படிக் கேள் சாந்தி, சொல்கிறேன். நேற்று நான் விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து சொல்கிறேன்'' என்று அவளைத் தன் மடி மீது இழுத்துக் கொண்டான்:

''நான் திரும்பி வந்து இந்திய மண்ணை மிதித்த போது என்னை வரவேற்கக் காத்துக் கொண்டிருந்தாள் ஆஷா. எனக்காக 'ஏர்போர்ட்'டிற்கு ஒரு பூச்செண்டுடன் வந்து நின்று கொண்டிருந்தாள். கஸ்டம்ஸ் சோதனை முடிந்து வெளியே நான் வந்ததும், பூச்செண்டை என் கையில் கொடுத்து விட்டு, என்னை மென்மையாக அணைத்துக் கொண்டாள்.

கை கோத்தபடி இருவருமாக நடந்தோம். என் மனத்தில் ஏதேதோ உணர்ச்சிகள் பொங்கி வந்தன. அவளுடன் உட்கார்ந்து நிறையப் பேச வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று.

'ஓட்டலில் ஏதாவது அறை 'புக்' பண்ணி இருக்கிறீர்களா ராஜேஷ்?' என்று அவளே கேட்டாள்.

'இன்னும் இல்லை' என்றேன்.

'அப்படியானால் என்னோடு வாருங்கள். என்னுடைய 'பிளாட்'டுக்குப் போகலாம்' என்றாள்.

'உன்னோடு யாராவது இருக்கலாம் ஆஷா. அவர்கள் என்ன நினைப்பார்களோ?' என்றேன்.

'ஒன்றும் நினைக்க மாட்டார்கள். ஏனென்றால் என்னோடு யாருமே இல்லை' என்று கூறிச் சிரித்தாள் ஆஷா. நான் திகைத்துப் போனேன். தனியாக அவள் இருக்கும் 'பிளாட்'டில் நானும் அவளுடன் தங்கவா? அதுவும் இரவு நேரத்திலா? என்ன சொல்கிறாள் அவள்?

என் திகைப்பை உணர்ந்தவள் போல 'என் மீது நம்பிக்கை இல்லையா ராஜேஷ்' என்று கேட்டாள் ஆஷா. அவள் கேள்வி என்னை உலுக்கி எழுப்பியது. 'அப்படி இல்லை ஆஷா' என்றேன்.

'பின், என்னோடு தயங்காமல் வாருங்கள்' என்று கூறிவிட்டு, பெட்டிகளை எடுத்துச் செல்லும்படி பணியாளிடம் சொன்னாள் ஆஷா.

அவளுடைய 'பிளாட்'டின் தோற்றமே எனக்கு எதிர்பாராத ஒன்றாக இருந்தது. நான் நினைத்துக் கொண்டு வந்த ஆஷா வேறு, இவள் வேறு. பார்வையிலேயே அவளிடம் ஒரு மாறுதல் தெரிந்தது. அவள் இளமையும் கூடக் கொஞ்சம் முற்றியது போல இருந்தது. ஒவ்வொரு செயலிலும்



''இந்த உடம்புக்காக வைத்தியத்துக்கு நூற்றுக் கணக்காகப் பணம் செலவழித்துக் கொண்டு வருகிறேன்.''

''அட, பாவமே! மொதல்லேருந்து என்னண்டை வராமல் போயிட்டீங்களே!''

---

என்னைக் கவர முயலுவது போலத் தோன்றினாள்.

சாப்பிட்டு விட்டுப் பேச உட்கார்ந்தோம். என்னுடைய வெளிநாட்டு அனுபவங்களை அவளிடம் எடுத்துச் சொன்னேன்.

'பெண்களுடன் நெருங்கிப் பழகினீர்களா?' என்று கேட்டாள், கண்ணைச் சிமிட்டிக் கொண்டே!

'ஆமாம், பழகினேன் ஆஷா. அப்போதுதான் உன்னுடைய சுபாவத்தை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது. நெருங்கிப் பழகலாம்; நயமாகப் பேசலாம்; மனம்விட்டுக் கருத்தைப் பரிமாறிக் கொள்ளலாம். உடனே எல்லாவற்றுக்கும் கா-த-ல் என்ற மூன்று எழுத்துக்களுடைய அர்த்தம்தான் கொடுக்க வேண்டும் என்பது இல்லை. சமயத்தில் ஆண்கள் நண்பர்களாக இருப்பது போல, பெண்கள் பழகுவதைப் போல, ஆணும் பெண்ணும் பழகலாம். அதை அங்கே புரிந்துகொண்டேன். அவர்கள் முகத்தில் உன் முகம்தான் எனக்குத் தெரிந்தது.'

ஆஷா சிரித்துக் கொண்டாள். அது ஒரு வறண்ட சிரிப்பாக இருந்தது. அவள் பார்வையில் ஓர் ஏமாற்றமும், அடிபட்ட வேதனையும் தெரிந்தது.

'நானும் பழகினேன் ராஜேஷ். நானும் புரிந்து கொண்டேன். என்னுடைய உணர்ச்சிகளுக்கு நான் விரும்பிய விதம் நீங்கள் மதிப்புக் கொடுத்தீர்கள். எல்லா ஆண்களும் உங்களைப் போல இருப்பார்கள் என்று நான் நினைத்தேன். எனக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது. ஒரு பெண் இயல்பாக நெருங்கிப் பழகினால் நம் நாட்டில் உடனே வதந்திகள்தாம் தாள் பறக்கின்றன. பெற்றோரோ நண்பர்களோ அதைக் குத்திக் காட்டுகிறார்கள்.

'அதை மீறி ஆண்களோடு பழகும் போது, நமக்கு மதிப்பும் மிஞ்சுவதில்லை. அவர்கள் நம் நட்பை லேசாகக் கிடைத்த ஒன்ருக நினைத்துக் கொள்கிருர்கள். அதை எப்படியும் பயன்படுத்திக் கொள் வது சுலபம் என்று எண்ணிக் கொள்கிருர் கள். இயல்பாகக் கை குலுக்கிஞல்கூட, கையைப் பற்றிய சுவாதீனத்தோடு உடலையும் பற்றிக் கொள்ளலாம் என்று நினைக்கிருர்கள். பல தடவை நான் விபரீதமான சந்தர்ப்பங்களிலிருந்து, இக்கட்டான நிலையில் நழுவித் திரும்பி வரவேண்டி இருந்தது.

'இங்கே ஒரு பருவப் பெண்ணின் நிலை வேறு; அயல் நாடுகளில் இருக்கும் நிலை வேறு. அதுவும் அவள் கலை என்ற பெயரால், நடனம், நாடகம், சினிமா என்று வந்துவிட்டால், அப்புறம் வெகு ஜாக்கிரதையாகத்தான் இருக்க வேண் டும். அநேகமாக வசதிகளும் செல்வமும் படைத்த பெரியவர்கள் எல்லோரும், தன் மனைவியும் தன் வீட்டுப் பெண்களும் தான் கற்பின் சின்னமாக, குத்துவிளக் காக இருக்க வேண்டும் என்று நினைக் கிருர்கள். பிறராஞல் அவர்களுடைய அளவுகோலே வேறு.'

ஆஷா பேசப் பேச, நான் பிரமித்துப் போய் நின்றேன். எவ்வளவு தூரம் போய் இருக்கிருள் ஆஷா? என்ன நேர்ந்திருக்கிறது அவ ளுக்கு? பெற்ருேரை விட்டு ஏன் பிரிந்து வந்து இப்படித் தனியாக இருக்கிருள்? —நான் யோசித்துக் கொண்டிருக்கும் போதேஅவள் உள்ளே போஞள். திரும்பி வந்த போது அவளிடம் ஏழெட்டுப் புகைப் படங்கள் இருந்தன. எல்லாம் அவளுடைய கவர்ச்சியான 'போஸ்'கள். விதம் விதமாக, வெவ்வேறு உடைகளில் எடுத்தவையாக இருந்தன. எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. நான் விரும்பிய போது, என் அன்பைப் போற்றி வைத்துக் கொள்ள ஒரு புகைப் படம்கூடத் தேவை இல்லை என்று சொன்ன ஆஷாவா இவள்?

மேஜை மேல் பரப்பி வைத்த புகைப் படங்களைப் பார்த்தபடி ஆஷா சொன் ஞள்: 'என்னுடைய அழகுக்கும், கலை நயத்துக்கும் எனக்கு சினிமாவில் நல்ல வாய்ப்பு இருக்கும் என்று சிலர் சொன் ஞர்கள். அதற்கு முன்ஞேடியாக நான் 'மாடலிங்' பண்ணிஞல் நன்ருக இருக் கும் என்று ஒருவர் யோசனை சொன்ஞர். ஒரு பிரபல விளம்பரக் கம்பெனிக்கு என்னை அழைத்துக் கொண்டு போஞர். அவர் என்ன சொன்ஞர் தெரியுமா?

'நீங்கள் இப்போது இருப்பது போலப் படம் பிடித்துப் போட்டால் அதை யாரும் ஏறெடுத்துக்கூடப் பார்ப்பதில்லை அம்மா. ஆண்கள் உடைக்கான விளம்பர மாஞலும் கூட, குறைந்த உடை அணிந்த ஒரு பெண்தான் அதை எடுத்துக் காட்ட வேண்டியிருக்கிறது. எந்த விளம்பரத் துக்கும் நல்ல உடல்கட்டுள்ள ஒரு பெண்ணின் கவர்ச்சியான தோற்றம் தான் இன்று தேவைப்படுகிறது. உங்க ளுக்கு நல்ல உடல் அழகு இருக்கிறது. உங்களுக்குச் சம்மதமாஞல்— என்று சொல்லி நிறுத்திஞர்.

'நான் வீட்டுக்குத் திரும்பி வந்தேன். நாலைந்து நாள் யோசனை செய்தேன். பிறகு என் பெற்ருேரிடம் சொன்னேன். அவர்கள்இதைப் பலமாக மறுத்தார்கள். துளியும் அவர்களுக்கு இதில் சம்மதம் இல்லை. நான் வயதான பெண். என் வாழ்க்கை முடிவுகளை நானே எடுத்துக் கொள்ளலாம். யாரும் தடுக்க முடியாது. ஒரு துணிவுடன் விளம்பரக் கம்பெனி யைத் தேடிக் கொண்டு போனேன்.

'ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. புகைப்படம் எடுக்க என்னை அழைத்துக் கொண்டு போஞர்கள். நான் கொடுக்க வேண்டிய 'போஸ்' என்ன என்பதை விளக்குவதற்காக ஒரு சித்திரம் வரைந்து வைத்திருந்தார்கள். அதைப் பார்த்ததும்—'

ஆஷாவின் குரல் விக்கித்து நின்றது.

என் உணர்ச்சி கொந்தளித்து வந்தது. அவள் அடுத்தாற் போலச் சொல்லப் போவதை ஒரு வேதனையுடன் கவனித் துக் கொண்டு காத்திருந்தேன்.''

ராஜேஷின் கண்கள் கலங்கி யிருந்தன. எழுந்து சென்று, விஸ்கி பாட்டில், கிளாஸுடன் திரும்பி வந்தான். பேச்சற்று, பிரமித்துப் போய் அமர்ந் திருந்தாள் சாந்தி. (தொடரும்)



''நல்ல பூவா பார்த்து வாங்கிக் கொண்டு வாங்க. பூக்காரி ஏதாவது வாசனை இல்லாத பூவா பார்த்து உங்க தலையிலே கட்டி அனுப்பி விடுவா...!''



# ரகசியம்

**7**

The heart breaking shame of mine will not attract even a glance from men's eyes. They have no feeling for Life itself. What am I to them but a meadow flower in the path of a torrent in flood.

Tagore in 'The home and the world.'

இரவின் அமைதியை அங்கு நிலவிய மௌனம் அதிகப்படுத்தியது. ராஜேஷ் நிதானமாக இரண்டு மூன்று 'பெக்' குடித்து முடித்தான். அவன் கண்கள் உச்சி முகட்டை வெறித்துப் பார்த்தன.

''சாந்தி, நான் சொல்வதை முழுவதும் கேட்டுக் கொள். கவனமாகக் கேட்டுக் கொள்...'' என்று கூறிவிட்டு, ''ஆஷா என்னிடம் சொன்னதைத்தான் உன்னிடம் அப்படியே சொல்கிறேன் சாந்தி... ஐயாம் ஜஸ்ட் ரிபீட்டிங்...'' என்று கூறி, பேச்சைத் தொடர்ந்தான்:

"ஆஷா தொடர்ந்து பேசினாள்:

'அந்தச் சித்திரத்தில் கடற்கரை மணலில் ஒரு பெண் படுத்துக் கொண்டிருந்தாள். சின்ன 'பிரா'வும், இடையில் 'பிகினி'யும் மட்டும் அணிந்து வெயில்பட மல்லாந்து படுத்துக் கொண்டிருந்தாள். அது முகத்துக்கும் உடலுக்கும் தடவிக் கொள்ளும் ஒரு கிரீமைப் பற்றிய விளம்பரம். அந்த நிலையில் என்னை நினைத்துப் பார்க்கவே கூச்சமாக இருந்தது.

'இன்னொரு விளம்பரத்துக்கானசித்திரமும் எழுதிக் கொண்டிருந்தார்கள். அதில் ஒரு பெண் மிகக் குறைந்த ஆடையுடன் கைகளால் மார்பை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். ஒரு வாலிபன் தன் கோட்டை எடுத்து அவள் மேல் மூட வருகிறான். 'பெண்களும் விரும்பும் ஆண்கள், உடை' என்ற தலைப்பில் ஆண்களுக்கான துணிகள் பற்றிய விளம்பரம் அது. அதற்குப் பெண்களுக்கு இப்படி ஓர் அவமானமான தோற்றமா? அந்த நிலையில் நான் உட்கார்ந்திருக்க, இன்னொரு வாலிபன் என்னோடு இருந்து புகைப்படம் எடுத்துக் கொள்வதா? நினைக்கும் போதே என் நெஞ்சு நடுங்கிற்று.



மணியன்

'''இப்படி யெல்லாம் நான் 'போஸ்' கொடுக்க வேண்டுமா? விளம்பர மாடல்களாக இருப்பவர்கள் நல்ல முறையில் தோன்றவே முடியாதா?'' என்று கேட்டேன்.

'''முடியும். ஆனால் உங்கள் தோற்றமும் வடிவமும் அழகாக இருக்கின்றன. அதை முழுதும் பயன்படுத்திக் கொள்வது தான் என் நோக்கம். அது மட்டுமல்ல; நாளைக்கு ஒரு திரைப்பட சான்ஸ் கிடைக்க வேண்டும் என்றால், இது சட்டென்று கண்ணில்பட்டதும் கவருகிற மாதிரி இருக்க வேண்டும். அதனால் உங்கள் எதிர்காலத்துக்கும் இதுதான் ஒரு நல்ல வழி காட்ட முடியும். நான் ஒப்பந்தம் செய்து கொண்டாயிற்று. உங்களை வற்புறுத்த எனக்கு உரிமை உண்டு. ஆனாலும் உங்களை யோசித்துப் பார்க்கும்படி வேண்டிக் கொள்கிறேன். எவ்வளவுக் கெவ்வளவு துணிச்சலாகவும், ஒத்துழைப்புக் கொடுத்தும் என் விளம்பரங்களுக்கு உதவுகிறீர்களோ, அதற்கு ஏற்றபடி அதிகத் தொகை வேண்டுமானாலும் தருகிறேன்'' என்றார் கம்பெனி அதிகாரி.

'என் கண் முன்னால் பெர்ஸிஸ் கம்பாட்டா, அன்னாபெல் போன்ற புகழ்பெற்ற விளம்பர மாடல்களின் முகம் தெரிந்தது. இதைவிடத் துணிச்சலான மேலைநாட்டு விளம்பரங்களின் தோற்றம் உருவெடுத்து நின்றது. 'வழ வழ'வென்ற பக்கங்களில் பல லட்சம் பிரதிகள் விற்பனையாகும் 'மேல்தர' வகுப்பினர் படிக்கும் ஆங்கிலப் பத்திரிகைகளின் காட்சி தெரிந்தது. என்னையும் அந்தச் சூழ்நிலையில் வைத்துப் பார்த்துக் கொண்டேன்.

'''விளம்பர மாடலாக இருந்தவர்கள், அழகுப் போட்டியில் வெற்றி பெற்றவர்கள், இன்று நம்பர் ஒன் நடிகைகளாக இருக்கிறார்கள்; தொடர்ந்து விளம்பர மாடலாகவும் பணி புரிகிறார்கள். இதில் தவறு ஒன்றும் இல்லை. இவ்வளவு அழகான உடல் அமைப்புக்காக நீங்கள் பெருமைப்பட வேண்டும். எவ்வளவோ புகழ் பெறக் கூடிய நீங்கள் இப்படி அறைக்குள் அடங்கிக் கொண்டு...''

'மூடிய கண்களைத் திறந்து பார்த்தேன். அவர் என்னைத் தன் பார்வையால் விழுங்கி விடுவதைப் போல் பார்த்துக் கொண்டிருந்தார். என் அங்கங்களின் கவர்ச்சியை அவருடைய பார்வை அணு அணுவாக அளந்து கொண்டிருந்தது. ஆனாலும் என்னிடம் பழைய மாதிரி அவ்வளவு கூச்சம் இல்லை. மறுநாள் வருவதாகச் சொல்லி விட்டுப் புறப்பட்டு வந்தேன்.

'ஒரு நாள், என் தயக்கத்தை நான் வென்று விட்டேன். என்னை அழைத்துப் போக கம்பெனியின் கார் வந்தது. நான் பெருமையுடன் அதில் ஏறி அமர்ந்து கொண்டு போய் விட்டேன்.

'விளம்பரங்கள் வெளிவரத் தொடங்கின.



அழகு சாதனம், துணிமணிகள், சமைய லறை, படுக்கை அறைப் பொருள்கள், கார் — எதுவானுல் என்ன? என் னுடைய தோற்றம் — கவர்ச்சியாக, 'பளிச்'சென்று சொன்னுல் முக்கால் நிர்வாணமாக உடலே வெவ்வேறு கோணங்களில் காட்டும் தோற்றம் அங்கே இருந்தது. மினு மினுப்பும் வாளிப்பும் இளமையின் செழு மையும் அங்கே பளிச்சென்று தெரிந்தன. எனக்குப் பெயர் வந்தது. புகழும் பணமும் கிடைத்தது. 'செக்ஸ்ஸிம்பல்' என்ற பட்டமும் கிடைத்தது. தெருவில் நான் போனுல், அடையாளம் கண்டு கொண்டு பித்தர்களைப் போல் வாலிபர் களும், முதியவர்களும் தொடர்ந்து வந்தார்கள்.

''சொசைட்டி, ஃபங்ஷன்ஸ், நாகரிக [illegible]ப்புகள், ஃபாஷன் பரேட் - இப்படி [illegible]வொன்றிலும் கலந்து கொள்ள அழைப்பு வந்தது. நானும் ஆர்வத்துடன் கலந்து கொண்டேன். அடுத்த படியில் கால் எடுத்து வைக்கத் தயாராகக் காத்துக் கொண்டிருந்தேன்.

'மிக நாகரிகமான, பிரபல ஓட்டல் ஒன்றிலிருந்து எனக்கு அழைப்பு வந்தது. வாரத்துக்கு இருமுறை இரவு நேரத்தில் பாட வேண்டும். அங்கே வரும் ரசிகர் களுடன் தாராளமாகப் பழக வேண்டும். ஒப்புக் கொண்டால் எனக்கு வாரத்துக்கு ஐந்நூறு ரூபாய் கொடுப்பார்கள். அங்கே வரும் கண்ணியம் மிகுந்த பெரிய மனிதர் கள் பெருந்தன்மையுடன் கொடுக்கும் டிப்ஸ் வகைகளேயும் ஏற்றுக் கொள்ள லாம். என் சம்மதத்தை இரண்டு நாட்க ளில் தெரிவிக்கும்படி கேட்டிருந்தார்கள்.

'இந்த முறை என் மனச்சாட்சி என்னை வருத்தவில்லே. என்னுடைய உடல் எந்த நிலேயிலும் கூசிக் குறுகவில்லே. மனத்தில் ஒரு புதிய தெம்பும் தைரியமும் உண்டாகி இருந்தது. தயாராக அதை ஏற்றுக் கொண்டேன். என்னு டைய வாழ்க்கையின் தரத்துக்கு அப்படி ஒரு வருமானம் அவசியமாக இருந்தது. அப்படிப்பட்ட ஒரு 'கம்பெனி'— பெரிய மனிதர்களின் சகவாசம் —எனக்குத் தேவை என்று எண்ணினேன்; மனம் விரும்பி ஒப்புக் கொண்டேன்.

'அங்கே பெரிய மனி தர்கள் பலர் வருவார்கள். மேஜையின் முன் அமர்ந்து மது அருந்துவார்கள்.



கொஞ்சம் கொஞ்சமாகத் தங்களை மறந்து போவார்கள். எப்போதாவது நீங்கள் 'ஜின்'னும் 'பீரு'ம் கலந்து சாப்பிட்டிருக்கிறீர்களா? ஒரு பெரிய கோப்பை நிறைய பீர். அதில் இரண்டு ஷாட் 'ஜின்' போட்டு அருந்திப் பாருங்கள். அதுதான் அவர்களுடைய வழக்கமான ஆரம்பம். அப்புறம் அவர்கள் இருக்கும் உலகமே தனி.

'ஹாலில் சுமார் முப்பது பேர் இருப்பார்கள். அவர்கள்முன் குறைந்த உடையுடன் கவர்ச்சியாக உடலை நெளித்து நெளித்து நடனம் ஆடுவாள் தினம் ஒரு பெண். கிதார், குழல், வயலின் இப்படிப் பலவகையான இசையும் கேட்கும். வெளிச்சத்தில் உடல் விதம் விதமாக அழகைக் காட்ட, அந்தப் பெண் ஆடுவாள். உட்கார்ந்திருப்பவர்கள் அருகே போய் அவர்கள் ஆவலைத் தூண்டுவாள்; கன்னத்தைத் தட்டுவாள்; கண்ணைச் சிமிட்டி, வம்புக்கு இழுப்பாள்.



"என்னய்யா இது, இவ்வளவு சின்ன பிளேட்டிலே இட்லி கொண்டு வர்றீங்க?"

"அதுவா? பிளேட்டை சின்னதாக்கினா இட்லி பெரிசா தெரியும்னு எங்க முதலாளி செய்திருக்கிற புது ஏற்பாடு!"

அவர்களில் பலர் எழுந்து ஆடுவார்கள். ஆடத் தெரியாமல் தள்ளாடுவார்கள். இவ்வளவுக்கும் பின்னணியாக என் பாட்டு ஒலித்துக் கொண்டிருக்கும். என் அழகு 'பளிச்'சென்று தெரியும்படியான 'சிக்'கான உடை அணிந்து 'மைக்'கின் முன் நின்று தொடர்ந்து பாடிக் கொண்டு இருப்பேன்.

'இரவு ஒரு மணி, அல்லது இரண்டு மணிக்கு 'பார்ட்டி' கலையும். மதி மயங்கிய, தூக்கம் சோர்ந்த அந்த நிலையில் சிலர் என்னிடம்கூட வந்து தவறான பேச்சுக்களைப் பேச முயலுவதுண்டு. ஒரு சிலர் அந்த நிலையிலும் கண்ணியமாக நடந்து கொள்ள முன்வருவார்கள். என்னைக் கையில் கோத்துக் கொண்டு, காரில் 'லிஃப்ட்' கொடுத்து அழைத்துக் கொண்டு போய் என்னுடைய அறையில் விட்டு விட்டுப் போவார்கள், ஒரு சில நண்பர்கள்.

'அப்படி ஒருநாள் கலைந்துவரும் வேளையில், என்னை வழக்கமாகக் கொண்டு போய்விடும் அந்த மனிதர்—சரத்ராம்-அன்று கொஞ்சம் அதிகமாக அருந்தித் தள்ளாடிக் கொண்டு வந்தார். நான் அவர் கையை என் தோள் மேல் போட்டு சேர்த்துப் பிடித்தபடி அழைத்துக் கொண்டு கிளம்பினேன். குளிர்ந்த காற்றில் என்னுடைய அயர்ச்சி கொஞ்சம் தெளிந்தது போலத் தோன்றியது.

'ஹாலில் விளக்கு ஒளி குறைந்து மங்கி விட்டது. லிஃப்டின் விளக்கு மிகக் குறைவாகத் தோன்றியது. நான் அவர் பையில் இருந்த 'சிகரெட் லைட்டரை' எடுத்து ஏற்றினேன். லிஃப்டில் எனக்கு முன் இருவர் இருந்தார்கள். அவர்களிடமிருந்து வந்த அந்த சப்தம் என்னைச் சுண்டி இழுத்தது. நான் நிமிர்ந்து பார்த்தேன். வயதான ஒரு மனிதரும், இளம் பெண்ணும் அப்படி ஒரு தோற்றத்தில்.

'அந்தப் பெண்...

'கமலா—என்னுடன் படித்த பெண் அவள். ஒரு நடுத்தரக் குடும்பத்திலிருந்து வந்த பெண். கண்ணியமாக வாழ்க்கை நடத்த வேண்டும் என்ற பிரின்சிபிள் உள்ளவள். கல்லூரியில் தலை நிமிர்ந்து பார்க்க மாட்டாள். புடவையைத் தவிர வேறு எந்த நாகரிகமான உடையும் அணியமாட்டாள். படிப்பு முடிந்ததும், சுமாரான சம்பளம் உள்ள உத்தியோகத்தில் இருந்த, உறவினனான வாலிபன் ஒருவனையே மணந்து கொண்டாள். நான்கூட . அந்தக் கல்யாணத்துக்குப் போயிருந்தேன்.

'இங்கே அவள் எப்படி வந்தாள்? இந்த நிலையில், இந்த உடையில், இவ்வளவு நெருக்கமான ஒரு செயலில் எப்படி ஈடுபட்டிருந்தாள்? அவளை அணைத்துப் பிடித்திருந்த மனிதருக்கு கிட்டத்தட்ட ஐம்பது வயது இருக்கும். இருவரும் என்னை நிமிர்ந்து பார்த்தார்கள். அந்த மனிதருக்கு என்ன தோன்றிற்றோ, லிஃப்ட் கீழே இறங்கி வந்து நின்றதும், அவளை விட்டுவிட்டு வேகமாக வெளியேற முயன்றார்.

'கமலா அவரை எட்டிப் பிடித்து, கோட்டின் பையிலிருந்த பர்சை எடுத்து, ஐம்பது ரூபாய் பணத்தை உருவிக் கொண்டு பர்சை அவருடைய பையில்

மீண்டும் திணித்து விட்டாள். அவர் வேகமாக நழுவிப் போய்விட்டார்.

'சரத்ராமின் டிரைவர் வந்து அவரைக் கைலாகு கொடுத்து, மெதுவாக காருக்கு அழைத்துக் கொண்டு போனுன். நான் பின்தங்கிக் கமலாவைப் பார்த்தபடி நின்றேன். அவள் விரல்கள் அந்தப் புதிய ரூபாய் நோட்டுக்களை ஆவலுடன் தடவி எடுத்துக் கைப் பையில் வைத்துக் கொண்டன. கொஞ்சம் கூடக் கலக்க மின்றி என்னை நிமிர்ந்து பார்த்தாள்.

'''இங்கே எப்படி வந்தாய் கமலா? அதுவும் இந்த நிலைமையில் நீ தோன்று வதை என்னுல் நம்பக்கூட முடிய வில்லையே?''

'''என்ன செய்வது? அவர் சம்பாதிப் பது போதவில்லை. எனக்கு வேலை கிடைக்கவில்லை. என்னுடைய தேவை களுக்குக் கொடுக்க அவரிடம் பணம் இல்லை. எங்கள் குடும்பத்தையே கொஞ் சம் சிரமம் இல்லாமல் நடத்த வேண்டு மானுல் கூட, நானும் சம்பாதிக்க வேண் டிய அவசியம் இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக இந்த வாழ்க்கைக்கு என்னைப் பழக்கிக் கொண்டேன். அதிக உபத்திரவம் இல்லை. இதே போல ஏதாவது கிடைக்கிறது...''

'''எவ்வளவு நாட்களாக இது நடக் கிறது கமலா?''

'''ஒரு வருஷமாக.''

'''உன் கணவருக்குத் தெரியுமா?''

'அவளுக்குக் கோபம் வந்தது: ''நீ ஏன் உன் 'பிஸின'சைப் பார்த்துக் கொண்டு போகக் கூடாது?'' என்று அவள் தெறித்தாற் போல் கேட்டாள்.

'''ஆல் ரைட். எனக்கு சம்பந்தம் இல்லைதான்'' என்று புறப்பட்டேன்.

'அவள் அருகே வந்து என் கையைப் பிடித்துக் கொண்டாள்:''எக்ஸ்கியூஸ் மி. உன்னிடம் ஏதாவது பணம் இருக்குமா?'' என்று கேட்டாள்.

'''இல்லை'' என்று என்னையும் அறியா மலே ஒரு பொய்யைச் சொன்னேன்.

'அவள் தன் கைப் பையிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்தாள். ''வைத்துக் கொள். உன் அறைக்குப் போக டாக்ஸிக்கு உபயோகப்படும்'' என்ருள்.

'என் முகத்தில் அடிப்பது போல் இருந் தது அவள் செய்கை. என்னுடைய மரியாதையைக் குறைப்பது போலத் தோன்றியது. கையை உதறிக் கொண்டேன்.



''இவதான் என் தங்கை!''

''பார்த்தவுடனே தெரிஞ் சுக்கிட்டேன்.''

'கோபத்துடன் அவளை நிமிர்ந்து பார்த்தேன்: ''நோ. எனக்குத் தேவை இல்லை உன்னுடைய பணம். அதுவும் இப்படிச் சம்பாதிக்கும் பணம்.''

'அவள் கண்களில் நீர் நிரம்பி இருந்தது. நாங்கள் இருவரும் ஒரு நிமிடம் ஒருவரை ஒருவர் பார்த்தபடி நின்ருேம். அவள் கன்னங்களில் கண்ணீர் வழிய ஆரம்பித் தது. கைகள் என்னை அணைத்துப் பிடித்தன.

'''ரொம்ப நாட்களுக்குப் பிறகு உன் னைப் பார்க்கிறேன் ஆஷா. என்னுடைய மனத்தாங்கலில் ஏதாவது பேசி யிருக் கலாம். என்னை மன்னித்து விடு. இந்தப் பத்து ரூபாயை நீ வாங்கிக் கொண்டால் எனக்குத் திருப்தியாக இருக்கும். அப்புறம் உன் இஷ்டம்.''

'நான் மேலே பேசாமல் அதை வாங்கிக் கொண்டேன். அவள் தோளைத் தொட்டு தட்டிக் கொடுத்தேன். ஏதோ சொல்ல வேண்டும் போல் இருந்தது. ஆனுல், எது வும் சொல்லத் தெரியவில்லை. வேகமாக வெளியே வந்து விட்டேன். அன்றிரவு சரத்ராமிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, அந்தப் பத்து ரூபாய் நோட் டைச் செலவழித்துத்தான் அறைக்கு டாக்ஸியில் திரும்பி வந்தேன்.

'திரை உலகில் ஒரு தாரகை. வெள்ளி விழாக் கொண்டாட்டத்தில் பரிசுக் கேடயம். இருபது படங்களில் சேர்ந்தாற் போல் நடிக்கும் முன்னணி நட்சத்திரம் -இவை எனக்கு எட்டாதவையாகவே இருந்தன. எனக்குச்சில தயாரிப்பாளர்கள்

'ரோல்' சிலவற்றைச் சொல்லி அழைத்தார்கள். ஆனால் அவற்றை நினைத்துப் பார்க்கக் கூட எனக்குப் பயமாக இருந்தது. அவற்றை ஏற்று இறங்கி விட்டால் அப்புறம் திரும்பவே முடியாதோ என்று கலக்கமாக இருந்தது.

'ஒரு நாள் சரத்ராம் என்னைப் படத் தயாரிப்பாளர் ஒருவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். நாகராஜ் என்ற மைசூர்க்காரர் அவர். கன்னட மொழியில் நிறையப் படங்கள் எடுத்து, இப்போது இந்திப் பட உலகில் அடியெடுத்து வைத்திருப்பவர். அவரை நான் அந்த ஓட்டலில்தான் சந்தித்தேன்.

'திரைப்பட வாய்ப்புக் கிடைக்கும் என்று அவரை நான் சிநேகம் பிடித்துக் கொண்டேன். ஆனால் வாய்ப்புக்கிடைக்கவில்லை. நட்புதான் உறுதியாயிற்று. என்னை அவ்வப்போது எல்லா இடங்களுக்கும் அழைத்துக் கொண்டு போவார். கேட்டதை வாங்கிக் கொடுப்பார். என்னை முகம் சுளிக்காமல் பார்த்துக் கொள்வார். பூக்களின் மேல் பட்டாம் பூச்சி பறப்பதைப் போன்ற அந்த வாழ்க்கை எனக்கு உல்லாசமாக இருந்தது. அது நிலையானது இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆனாலும் அதில் எனக்கு ஒரு ரகசிய உலகம் இருந்தது.

'நாகராஜ் எனக்கு விதம் விதமான உடைகள் வாங்கிக் கொடுத்தார். வெவ்வேறு நகைகளை அன்பளிப்பாகக் கொடுத்தார். என்னை அவற்றை அணியச் சொல்லி அழகு பார்ப்பார். அதில் எங்களுக்குள்ளே அந்தரங்கமான விளையாட்டுகளும் கூட இருக்கும். திரைப்பட விழாக்களுக்கும் கூட. என்னை அவருடன் அழைத்துக் கொண்டு போவார். நட்சத்திரங்கள் என்னை நாடி அறிமுகம் செய்து கொள்ள வருவார்கள். அந்த நிலை எனக்கு வேடிக்கையாக இருந்தது. நான் 'ஸ்டார்' ஆக முடியவில்லை. ஆனால் அவர்களிடையே நான் ஒரு 'ஸூபர்-ஸ்டார்' ஆக இருந்தேன். டைரக்டர்கள் என்னை அழைக்கவில்லை. ஆனால், நான் அழைத்தால், டைரக்டர்கள் என் பின்னால் சிபாரிசுக்காக வரத் தயாராக இருந்தார்கள்.

'பெப்பர்மிண்டுக்கு ஆசைப்படும் குழந்தையைப் போல அந்த ரம்மியமான வாழ்க்கையை நான் ஏற்றுக் கொண்டேன். உல்லாசமே எனக்கு முழு நேரப் பொழுது போக்கு ஆயிற்று. நான் என்னுடைய இளமைப் பருவத்தில் வெகு தூரம் கடந்து விட்டேன். நான், நீங்கள் கல்லூரியில் அறிந்து பழகிய ஆஷா அல்ல. நான் இப்போது வாழும் வாழ்க்கை வேறு. என்னுடைய மனப் பான்மையே வேறு. நான் இப்போது ரொம்பத் துணிச்சலான ஒரு பெண்.'

ஆஷா தன் கதையைச் சொல்லி முடித்தாள். மேஜை மீது இருந்த தனது படங்களை என் முன்னால் விசிறி போல வைத்தாள்.

'சொல்லு ராஜேஷ். உனக்கு இதில் எந்தத் தோற்றம் பிடித்திருக்கிறது? அதைப் போல நான் உடை அணிந்து உன் முன்னால் வந்து நிற்கிறேன். நீ என்னை எந்த முறையில் விரும்பி ஏற்க விரும்பினாலும் அப்படி......'

அவள் என் அருகில் வந்து என் கன்னத்தில் தட்டினாள். அவள் கன்னத்தைத் தொட்டேன். அது 'சில்' என்று இருந்தது. சொல்லிக் கொண்டு வரும்போதே அவள் மனம் அழுதிருக்கிறது. கேட்டுக் கொண்டு வரும்போதே என் இதயமும் என்னை அறியாமல் அழுது கொண்டிருந்திருக்கிறது. நான் தொட்டதும் அவள் என் மேல் சாய்ந்து விட்டாள். உணர்ச்சி பொங்க என்னை அணைத்து, என் கன்னங்களில் இணைந்து ஒன்றிப் போனாள்! அவள் குரல் அடங்கி, விசிப்பு மட்டும் கேட்டது. குழந்தையைப் போல் என் மடியில் புரண்டாள். நான் அவளைத் தட்டிக் கொடுத்தேன்.

'ஆஷா டியர், நடந்தது எல்லாம் போகட்டும். இவற்றில் பிரமாதமான தவறு எதுவும் எனக்குப் படவில்லை. வெளி நாடுகளுக்குப் போய் வந்த பிறகு எனக்கு இதைப் போன்ற நட்புகளில், ஒரு பெருந்தன்மையான கண்ணோட்டம் கிடைத்திருக்கிறது. ஐ டோண்ட் மைண்ட். உன்னை வேறு எப்படியும் ஏற்றுக் கொள்ள நான் விரும்பவில்லை. என் மனைவியாகவே ஏற்க விரும்புகிறேன்' என்று சொன்னேன்.

அவள் தன் கையால் என் வாயை மூடினாள்.

'நோ. ராஜேஷ். நோ. எனக்கு அதற்கு அருகதை இல்லை. அதற்கு ஏற்ற நிலையை நான் இழந்துவிட்டேன். இட் ஈஸ் டூ லேட்' என்றாள் ஆஷா. அதன் அர்த்தம் எனக்குப் புரிந்தது. வெளியே பேரிடி ஒன்று சரிந்து விழுந்தது. மழை பெய்யத் தொடங்கிற்று. என் தலையிலும் ஓர் இடி விழுந்தது போல இருந்தது. கண்களிலிருந்து மழை பெய்யத் தொடங்கிற்று.''

(தொடரும்)




# 8

All happy families resemble one another. Every unhappy family is unhappy in its own way.

—TOLSTOY.

ஒன்றன்பின் ஒன்றாக சிகரெட்டைப் புகைத்த வண்ணம் ராஜேஷ் தொடர்ந்து பேசினான்:

"நான் நாற்காலியில் அமுங்கினாற் போல உட்கார்ந்து கொண்டிருந்தேன். என்னுடைய நம்பிக்கைகள் புகையாகி மறைந்து விட்டன. இரண்டு நிமிஷங்களுக்கு நான் இழந்தது எவ்வளவு தூரம் என்று கூட எனக்குப் புரியவில்லை.

என் கற்பனையில் நான் சந்தித்த பெண்களின் முகங்கள் தெரிந்தன. நான் கேட்ட சிரிப்பு ஒலிகள் காதில் விழுந்தன. ஆனால் இங்கே என்னுடனேயே இருந்த ஆஷாவின் முகத்தை என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. அவளுடைய வாழ்க்கையில் சிரிப்புக்கு இடமே இல்லாமல் போய் விட்டது என்பதை என்னால் நம்பவே முடியவில்லை.

அறை முழுவதும் சிகரெட் புகையின் நெடி வீசிற்று. மெதுவாக எழுந்து கண்ணாடி ஜன்னல் வழியாக வெளியே பார்த்தேன். மழை விட்டிருந்தது. நகரம் முழுவதும் புள்ளி புள்ளியாக விளக்குகளால் கோலம் போட்ட மாதிரி இருந்தது.

என் முதுகில் ஆஷரவின் கைபட்டது. திரும்பிப் பார்த்தேன். கவர்ச்சி மிகுந்த உடையில் அவள் என் முன் நின்றுகொண்டிருந்தாள். அவள் மனம் எனக்குப் புரிந்தது போலிருந்தது. ஆனால் என் மனம் அவளுக்கு நிச்சயமாகப் புரியவில்லைதான்.

'சொல்லு ஆஷா. இன்னும் நீ என்னைக் காதலிக்கிறாயா?' என்று கேட்டேன். அவள் கண்களில் நீர் ததும்பி நின்றது. 'என்னைக் கேட்கிறாயா ராஜேஷ்? உன்னைத் தவிர வேறு யாருடைய உருவமும் என் நெஞ்சில் விழுந்ததில்லை. உன் நினைப்பில் நான் தூங்காமல் எத்தனையோ நாட்கள் இருந்திருக்கிறேன். நான் என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ளாமல் போய்விட்ட வாழ்க்கையிலும் கூட, எனக்கு உன் ஞாபகம்தான் ராஜேஷ். இரண்டு ஆண்டுகளாக

இப்படி ஒரு சந்திப்புக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தேன். என்னை எடுத்துக் கொள். நான் இப்போது உனக்காகத் தான். ஆனால் என்னை உன் மனைவியாக்க நினைக்காதே. உன் மேல், உன் புனிதமான அன்பின் மேல் எனக்கு எவ்வளவு மதிப்பு இருக்கிறது! அதனால்தான் நான் ஒப்புக் கொள்ள மறுக்கிறேன். என்னை என் வழியில் விட்டுவிடு ராஜேஷ்.'

அவள் என் கைகளில் இருந்தாள். அவளுடைய இதழ்கள் எனக்கு நெருப்பாகச் சுட்டன. அவளுடைய விரல்கள் என் கன்னத்தில் படிந்தன. அவள் முகம் சட்டென்று மாறிற்று. என்னை அனுதாபத்தோடு அவள் பார்த்தாள்:

'ராஜேஷ், நீ அழுதிருக்கிறாய்; எனக்காக அழுதிருக்கிறாய். என்னுடைய துயரத்துக்காகவும் ஒருவர் கண்ணீர் சிந்த முடியும் என்று...'— அவள் என் கன்னத்தில் முத்தங்களாகப் பொழிந்தாள்.

இரண்டு நாட்கள் ஆஷாவுடன் இருந்தேன். ஆனால் எங்களிடையே எப்போதும் ஒரு கடக்க முடியாத பள்ளம் இருந்தது. அவள் எனக்காக எதையும் கொடுத்திருப்பாள். அதற்காக நான் எவ்வளவோ நாட்கள், எத்தனையோ முறை ஏங்கி இருக்கிறேன். ஆனால் இப்போது எனக்கு அவள் முன்பின் தெரியாத ஒரு பெண்ணைப் போலத் தோன்றினாள். அந்தப் பெண்ணின் வாழ்க்கையில் எனக்கு இடம் இல்லை.

நான் ஓர் ஓட்டலுக்கு, அறை பார்த்துக் கொண்டு வந்து விட்டேன். எனக்கு ஏற்ற ஒரு வேலைக்காகத் தேடிக் கொண்டிருந்தேன். அதற்காக அன்று காலைத் தினசரியைப் புரட்டிக் கொண்டிருந்தபோது, என் கண்களில் அந்த விளம்பரம் பட்டது.

'உங்கள் ஆஷா உங்களை விரும்பி அழைக்கிறாள்.'

அங்கே அவளுடைய கவர்ச்சிகரமான தோற்றமும் படமாக வெளியாகி இருந்தது. நாகரிகமான நகரமும், அதன் கண்ணியம் மிகுந்த மக்களும் பாராட்டும் ஒரு பெரிய ஓட்டலில், ஆஷா ஆடுகிறாள்-ஆமாம், இந்த முறை அவள் பாடவில்லை, ஆடுகிறாள்!

நான் புரிந்து கொண்டேன். ஆஷா என்னிடமிருந்து விலகி வெகு தூரம் போய்விட்டாள். அவளை அறியாமலே அவள் திரும்பி வர முடியாத ஒரு பாதையில் நெடுந்தூரம் சென்று விட்டாள். இனி, நான் அவள் ஆத்மாவை மீட்க முடியாது. அந்தப் படத்தை மீண்டும் பார்த்தேன். ஆறி வந்த காயத்தில் இடித்துக்கொண்டு விட்டதைப் போல ஒரு நுட்பமான வலி என் நெஞ்சில் எழுந்தது.

அப்புறம் நான் ஆஷாவைச் சந்திக்கவில்லை.''

ராஜேஷ் பேசி முடித்து விட்டுத் தலையணை மீது சாய்ந்து கொண்டான். சாந்தி அவன் காலடியில் அமர்ந்திருந்தாள். அவள் விரல்கள் அவன் பாதங்களைப் பற்றின. ராஜேஷ், காலைச் சட்டென்று இழுத்துக் கொண்டான். கைகள் அவளை நீட்டி அணைத்தன.

''என்ன சாந்தி?''

''உங்கள் மனசு எனக்குப் புரிகிறது. ஒளிவுமறைவில்லாமல் உங்கள் வாழ்க்கையில் ஒரு பெண்ணுக்கு இருந்த பங்கைச் சொல்லிவிட்டீர்கள். ஆனால் இது போதும். என்னால் இதற்கு மேல் தாங்க முடியாது. ஏனென்றால் நான் இன்னொரு பெண் அல்ல, உங்கள் மனைவி.''

''அதனால்தான் உன்னிடம் சொன்னேன். உன்னிடம் நான் எதையும் மறைக்க மாட்டேன். உண்மையைச் சொல்கிறேன். நான் வைராக்கியம் மிகுந்த முனிவன் அல்ல. ஆசைகளைத் தேக்கி வைத்துக் கொண்டிருக்கும் ஒரு சாதாரண மனிதன். அந்த உருவக் கவர்ச்சியும், அழகும் அன்று நிலை தவறச் செய்யவில்லை. உண்மைதான். ஆனால் அந்த அனுபவத்தை என் மனைவியாகப்



போகிறவளிடம் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று என் மனம் ஆசையாகக் காத்துக் கொண்டிருந்தது. இத்தனை நாளும் காத்துக் கொண்டிருந்தேன் சாந்தி'' என்றான்.

''ஏற்றுக் கொள்ளுங்கள். நீங்கள் என்னுடையவர். உங்களுடைய கடந்த கால வாழ்க்கை எதுவானாலும், இப்போது நீங்கள் எனக்கு மட்டுமே உரியவர். அது போதும். நடந்தது எதுவும் எனக்கு வேண்டாம். அதற்கு என் வாழ்க்கையில் அர்த்தம் இல்லை. என்னை உங்கள் விருப்பப் படி ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் ஆசை எதுவானாலும் அந்த விதமாக எல்லாம் என்னை அனுபவிக்க......''

அவள், ராஜேஷை அணைத்துக் கொண்டாள். அந்த அணைப்பு அவனுக்கு எவ்வளவோ ஆறுதலாக இருந்தது. அவள் இதயத்தில் ஒரு கனிவு பொங்கி வந்தது. மற்றவை எப்படியானாலும் அவள் அவனுடைய சாந்தி. அவர்களுடைய இதயங்களைப் போல, அவர்களுடைய உணர்ச்சிகளும் இரத்தமும் ஒன்றாக உருவம் பெறப் போகிறது. அவர்களுடைய குழந்தை அதன் வடிவமாக இருக்கும்.

''சாந்தி, டார்லிங்.''

அவள் அவனுடன் ஒன்றிப் போனாள். எங்கேயோ மணி இரண்டு அடித்தது.

இரண்டு நாட்களாக வீட்டில் ஓர் அமைதி குடி கொண்டிருந்தது. சாந்தி அவன் ஆசை எதுவானாலும் அதைத் தயங்காமல் நிறைவேற்றி வைத்தாள். பேசும் போதும், பழகும் போதும் மிகவும் கவனமாக இருந்தாள். 'எதையாவது சாதாரணமாகச் சொல்லுவதற்கே வேறு விதமாக அர்த்தம் கற்பித்துக் கொண்டு



விடுவாரோ? நாம் இயல்பாக மறுப்பதை யும் கூடத் தவருகப் புரிந்து கொண்டு விடுவாரோ?' என்று பயந்தபடியே ஒவ்வொன்றையும் செய்துகொண்டு வந்தாள். உண்மையில் சாந்தியைக் கலவரப் படுத்திவிடக் கூடாது என்ற எண்ணத்தி ஞல்தான், ராஜேஷ் பழைய பேச்சுக்களை மறுபடி எடுக்கவில்லை. தேனிலவுக்குப் பிறகு திரும்பி வந்து அவர்கள் மகிழ்ச் சியை அனுபவித்துக் கொண்டிருக்கும் வேளையில், தன் பேச்சாலும் செய்கை யாலும் சாந்தி அதிர்ந்து போய்விடக் கூடாது என்று அவன் எண்ணினன். அதனலேயே இரண்டு நாட்களாக அவன் எந்தப் பேச்சையும் தொடங்கவில்லை.

அன்று மாலை அவர்கள் இருவரும் கடற்கரைக்குப் போய்விட்டுத் திரும்பி



வந்திருந்தார்கள். அந்த மனேகரமான பொழுது போக்கின் உல்லாசம் இன்னும் சாந்தியின் உள்ளத்தில் ததும்பிக் கொண்டிருந்தது.

மாடிக்கு வந்ததும் ராஜேஷ், 'ரிகார்ட் பிளேய'ரைத் திறந்து, 'அரீதா ப்ராங்க்ளி'னின் அந்த இசைத்தட்டை வைத்தான்.

இருவரும் ஒருவரையொருவர் பார்த் துக் கொண்டனர். சாந்தியின் புன்னகை யில் அவள் அழகு முழு ஒளிவிட்டது. குறுகுறுப்பான பார்வையுடன் அவள் முகத்தை ராஜேஷ் நிமிர்த்தினன்.

''ஷெல் வி டான்ஸ்?'' என்று கேட்டான்.

''ஓஹ்'' என்று சாந்தி முகத்தைக் குனிந்து கொண்டாள்: ''எனக்கு அதிகம் பழக்கம் இல்லை'' என்ருள்.

''ஆல்ரைட்'' என்று அவன் அவளைத் தூக்கி நிறுத்திப் பிடித்துக் கொண்டான்: ''நான் சொல்லித் தருகிறேன்'' என்று அவளை லாகவமாக நடத்திஞன்.

அவன் முழங்கை வளைவிற்குள் சாந்தி அணைத்தாற்போல் புகுந்து கொண்டாள். இசையின் பின்னணியும், ராஜேஷின் ஆதரவான பிடிப்பும் அவள் மகிழ்ச்சி யைத் தூண்டின. முகத்தை உயர்த்தி அவன் முகத்தை நெருங்கிஞள். அளவற்ற உணர்ச்சித் துடிப்புடன் இதழ்கள் [illegible]ந் தன. அவளுடைய கூந்தல் அவன் [illegible] களில் விளையாடிற்று. அந்த உறவில் அவ னுடைய கவலைகள் எல்லாம் ஒரு நிமிடம் மறைந்தது போலத் தோன்றின.

சாந்தி தன் முகத்தைப் பிரித்து இழுத் துக் கொண்டாள். அவன் மார்பின் மீது சுவாதீனமாகச் சாய்ந்தபடி ஆடிஞள். இருவருக்கும் அப்போது ஏற்பட்ட தொட்டுணர்ச்சி, உடம்பின் மீது மற்றவர் படியும் ஆவல்- இவற்றில் இனக் கவர்ச்சி எதுவும் இல்லை. தூய உணர் வுடன் இளம் உள்ளங்கள் கலக்கும் ஆனந்தம்தான் இருந்தது.

'இட் ஈஸ் கிரேட் டு பி அலைவ்'— பாட்டின் அடியைக் கூடவே முணுமுணுத் தான் ராஜேஷ். அவன் கைகள் அவள் இடையைப் பின்னி இழுத்துக் கொண்டன.

''உனக்குத் தெரியாத செய்தி ஒன்று சொல்லப் போகிறேன்.''

''என்னவாம் அது?''

''நான் வேலை விஷயமாகப் பெங்களூ ருக்குப் போகப் போகிறேன்.''

சாந்தி சட்டென்று அவன் [illegible]பி லிருந்து விலகிப் பின்வாங்கி[illegible]ள். அவள் உடலில் ஓடிய சிலிர்ப்பை அவளைத் தொட்ட விரல்களில் ராஜேஷ் உணர்ந்தான்.

''என்ன சாந்தி?''

''ஒன்றும் இல்லை. கொஞ்சம் களைப் பாக இருக்கிறது'' என்று சோபாவில் சாந்தி உட்கார்ந்து கொண்டாள். பிடி யைப் பற்றிய அவள் கைவிரல்கள் மெல்ல நடுங்குவதை ராஜேஷ் கவனித்தான்.

''ஒரு வாரத்தில் திரும்பி விடுவேன் சாந்தி. எப்படி அவ்வளவு நாட்கள் பிரிந் திருப்பது என்று யோசிக்கிருயா? வேண்டு மாஞல் நீயும் என்னுடன் வா.''

''வேண்டாம், வேண்டாம்'' என்று கட்டாயமாக ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டு, சாந்தி தலையை ஆட்டினாள்: ''நீங்கள் மட்டும் போய் விட்டு வாருங்கள். தனியாக அப்படி ஒரு முறை போய் வருவது உங்களுக்கும் ஒரு மாறுதலாக இருக்கும்.''

அந்த வார்த்தைகள் அவனைச் சீண்டுவது போல,விஷமக் குரலில் சாந்தி எப்படிச் சொல்வாள் என்று அவனுக்குத் தெரியும். இந்தப் பேச்சில் அந்தத் துடிப்பே இல்லை.

அவன் சோபாவின் கையில் உட்கார்ந்து கொண்டான்: ''உனக்கு இது உற்சாகமான ஒரு செய்தியாக இல்லை. அதைமட்டும் நான் புரிந்து கொள்ள முடிகிறது சாந்தி.''

சாந்தி எழுந்திருந்தாள். ஹாலின் குறுக்கே நடந்து போய், ஜன்னல் திரையை இழுத்து விட்டாள். அருகே இருந்த பூக் கலசத்தில் மலர்களைச் சரி செய்து வைத்தாள். அவளுடைய செய்கைகளில் ஓர் அமைதியின்மை அவனுக்குத் தெரிந்தது.

''நாளைக்கிருக் கிளம்பப் போகிறேன் சாந்தி. அதனால் இன்று கொஞ்ச நேரம் கூட உன்னை என் கைகளிலிருந்து விடுவதாக இல்லை'' என்று எழுந்து போய் ஜன்னல் ஓரமாக நின்றிருந்தவளின் சந்தன நிற இடுப்பைப் பற்றி இழுத்து, பின்புறமாக அணைத்துக் கொண்டான். சாந்தி வழக்கம் போலக் குலுங்கிச் சிரிக்கவில்லை. அவனுடைய கன்னத்தைச் செல்லமாக நிமிண்டவும் இல்லை. அவள் பேசிய போது அந்தக் குரல் லேசாகக் கலங்கி இருந்தது:

''நீங்கள் எங்கே போனாலும், நான் உங்களையேதான் நினைத்துக் கொண்டிருப்பேன்.''

ராஜேஷ் மெல்ல நகர்ந்து கையைநீட்டி 'ரிகார்ட் பிளேயரை' நிறுத்தினான். நின்ற இசையுடன் அந்த மாலை நேரத்துக் குதூகல உணர்வும் நின்றுவிட்டது போல் இருந்தது.

அறை மூலையில் இருந்த குளிர்சாதனப் பெட்டியிலிருந்து மதுக் கிண்ணத்தில் சிறிது ஒயின் ஊற்றி எடுத்துக் கொண்டு வந்தான். சாந்தியின் பார்வை அவனை 'வேண்டாம் இது!' என்று கெஞ்சுவதைப் போலப் பார்த்தது. ஒரு முறை லேசாக உறிஞ்சிவிட்டு நிமிர்ந்தான். அவன் கைகள் அவளை நீட்டி அழைத்தன.

சாந்தி அருகே வந்ததும் மதுக் கோப்பையை வைத்து விட்டு அவள் தோள்மேல் இரண்டு கைகளையும் வைத்துக் கொண்டான்:

''பெங்களூரில் ஓர் இடத்துக்குப் போய்வர எனக்கு ஆசை. நீ சம்மதம் கொடுக்க வேண்டும்.''

சாந்தியின் மனத்தில் ஒரு சிறு கொந்தளிப்பு ஏற்பட்டது. அவள் பதில் சொல்லவில்லை. அவன் அவளுடைய முதுகை மெல்லத் தடவிக் கொடுத்தான்.

''நீ வேலை பார்த்தாயே, அந்த இடத்துக்குத்தான் சாந்தி!''

அவள் பிடி நழுவிற்று. அவள் அப்படியே சரிந்து சோபாவில் உட்கார்ந்து கொண்டாள். அவளுக்கு ஏற்பட்ட கலவரத்தை இப்போது அவள் மறைக்க முயலவில்லை. அவள் மனக் கதவை மூடித் தாழ்ப்பாள் போடுவது போல இருந்தது.




''பரீட்சைன்னா இப்படியா கமலா? மணி பன்னிரண்டாச்சும்மா... கொஞ்சம் கண்ணை மூடப்படாதா? காலையிலே படிக்கலாம்..''

''சொல்லு டார்லிங். எனக்குத் தெரியக் கூடாதா? என்ன விலாசம் அது?''

மதுக் கிண்ணம் மறுபடி நிறைந்தது. கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்ச உறிஞ்ச அவன் சிரிப்பும் பேச்சும் பொங்கிப் பொங்கிச் சுழன்று வந்தன. கிண்ணத்தைச் சற்றுப் பிடிவாதமாக வாங்கி வைத்தாள் சாந்தி.

''சாப்பிடப் போகலாம் வாருங்கள்.''

''அப்புறம்?''

''தூங்கப் போக வேண்டியதுதான்.''

ராஜேஷ் எழுந்து அவள் முகத்தை நிமிர்த்தினான்:

''இன்று நாம் ஒன்றாகத் தூங்கப் போவதில்லை; இதைப் போலப் பேசிக்

கொண்டிருக்கவும் போவதில்லை'' என்றான் அவன்.

''ஏன் ராஜேஷ்? இன்னும் ஒரு வாரத்துக்கு...''— அவள் குரல் தழுதழுத்தது.

''நீ என்னைப் புரிந்து கொள்ள மறுக்கிறாய். உன்னைப் பற்றி நான் தெரிந்து கொள்வதைக் கூட விரும்பவில்லை. அந்த ஒளிவு மறைவு எதுவும் எனக்குப் பிடிக்கவில்லை சாந்தி!''

எவ்வளவு விரைவில் அவனுடைய உணர்ச்சிகள் மாறிவிட்டன? அந்த மாலை நேரத்தின் மகிழ்ச்சி, எவ்வளவு சீக்கிரம் இப்படிக் கலங்கி மறைந்து விட்டது? ஆசையாக மத்தாப்பு விட்ட குழந்தை, கையில் சுட்டுக் கொண்டு வேதனையில் துடிப்பதைப் போலத் தடுமாறிப் போனாள் சாந்தி:



''என்ன மஞ்சு, இருமல் மருந்தை கிராமபோன் பிளேட்டிலே கொட்டறே...?''

''நேத்திக்கி இது 'கொற... கொற'ன்னு தொண்டை கட்டினாப் போல பாடித்து...!''

''சாப்பிடலாம் வாருங்கள். நீங்களாக எதையோ நினைத்துக் கொள்கிறீர்கள்?''

''எனக்குச் சாப்பாடு வேண்டாம்... சாந்தி. நீ இதைச் சொன்னால்தான், அப்புறம் எல்லாம்.''

''ராஜேஷ்'' என்று கெஞ்சுவது போல நிமிர்ந்தாள் சாந்தி: ''வேண்டாம் ராஜேஷ், வேண்டாம்.''—அவள் குரல் ஆழத்தில் கம்மிக் கிடந்தது. உயிரற்று முனகுவதைப் போலத் தொண்டைக்குள் தேய்ந்தது.

ராஜேஷ் பிடிவாதமாகத் திரும்பிக் கொண்டிருந்தான். அவன் முகம் அவள் புறம் பார்க்கவே இல்லை. கடைசியாக சாந்தி அவன் அருகே போய் முதுகில் சாய்ந்தபடி, ''ஆகட்டும், நான் சொல்கிறேன். இப்போது சாப்பிடலாம் வாருங்கள்'' என்று விம்மிய குரலில் சொன்னாள். அப்படிச் சொல்லும்போது, அவள் மனத்திற்குள் கோபுரமாக உயர்ந்து நின்ற ஏதோ ஓர் உணர்ச்சி, சரிந்தது.

ராஜேஷ் விமானத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

முதல் நாள் இரவு நடந்தவற்றை அவனுடைய மனம் மீண்டும் மீண்டும் நினைத்தது. அவனுடன் ஒன்றிப் போய், இன்பத்தின் வடிவமாய் அவனுடன் இழைந்து பழகிய சாந்தி, முந்தைய நாள் இரவும் கூட அவன் மார்பின் மீது மல்லிகை மாலையைப் போலக் கிடந்த சாந்தி, அன்று காலையிலிருந்து ஏன் அவன் முகத்தை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை?

காலையில், ''அந்த விலாசத்தை உங்கள் டயரியில் எழுதி வைத்திருக்கிறேன்'' என்று சொன்னவள், அப்புறம் ஏன் அவனிடம் சரியாகப் பேசவே இல்லை? வரும்போது கூட வாசல்வரை வழக்கமாக வந்து கையை அசைப்பவள், கூந்தலைத் தொட்டு முகத்தை நிமிர்த்தி நெருங்கி, அவன் விடை பெற்றுக் கொண்ட பிறகு, அவனைத் தொடர்ந்து வராமலே நின்று விட்டாள். விசித்து வந்த அழுகையை, அவள் உதட்டைக் கடித்து அடக்கிக் கொண்டாள். அவனுடைய பிரிவுக்காக மட்டும்தானா அது?

அவன் மனத்தில் இந்த எண்ணங்கள் மாறி மாறி வந்து கொண்டிருந்தன. இருட்டான அறையில் ஒவ்வொரு மூலையிலும் டார்ச்சு ஒளி விழுவதைப் போல, ஒவ்வொரு செய்கையும் பேச்சும் அவனுக்கு இப்போது வேறு கோணத்தில் தெரிந்தன. அவன் எவ்வளவு சமாதானப் படுத்திக் கொண்டாலும், அந்தக் கலவரம் அடங்கவில்லை.

பெங்களூருக்கு அவன் போவது புதிது இல்லை. சாந்தி அங்கே இருந்ததும் பழைய கதைதான். பின்னே?

சாந்தியின் கணவனாக அங்கே அவன் போவதுதான் புதிது. தன் மனைவி என்ற முறையில் அங்கே அவளைப் பற்றி அவன் ஏதோ தெரிந்து கொள்ளப் போகிறான். அந்த அனுபவம்தான் புதிது. அந்தப் புதிய அனுபவம் எப்படி இருக்குமோ?

விமானம் உயர உயர அந்த எதிர் பார்ப்பும் உயர்ந்து கொண்டே போயிற்று.

(தொடரும்)




**9**

> Any man who thinks he is more intelligent than his wife is married to a clever woman.
> —SUE BATES

ஓட்டல் வாசலில் கார் நின்றதும் ராஜேஷ் இறங்கித் தன் பெயரைப் பதிவு செய்து கொள்ளப் போனான். மேலே சுவரில் காஷ்மீர்க் காட்சி ஒன்று பெரிதாக மாட்டி யிருந்தது. அதில் இருந்த படகு வீட்டையும், ஏரியையும், மலைகளையும் பார்த்த போது அவனுக்கு சாந்தியுடன் கழித்த தேனிலவு ஞாபகத்துக்கு வந்தது. படகு வீட்டில் தனியாக அவர்கள் இருவருமாக அனுபவித்த பொழுதுகளையும் நினைத்துக் கொண்டான்.

அங்கு வந்ததைப் போல சாந்தி இங்கு அவனுடன் வரவில்லை. பெங்களூருக்கு மணமாகுமுன் அவளுடன் அவனும் வருவேன் என்று பிடிவாதம் செய்த நினைவு வந்தது. வந்திருந்தால் இங்கே தான் தங்கி யிருப்பாள். ஆனால் அவள் அவனை அனுமதிக்கவில்லை. அப்போது அவள் அப்படி மறுத்தது, ஒரு கண்ணியமான செய்கையாகத் தோன்றியது. இப்போது ஏனோ அவன் மனத்தில் அப்படித் தோன்றவில்லை.

இப்போது சாந்தியை உடன் வரும்படி அவன் வற்புறுத்தவில்லை. வற்புறுத்தியிருந்தால் அவள் வந்திருப்பாளோ என்னவோ? புறப்பட்டு வருவதற்கு முந்தைய நாள் அவளுடைய மூட் - ஓ, சாந்தி, நீ ஒரு பொல்லாத பெண்!

''உங்களுக்கு என்ன வேண்டும் என்று தெரிந்து கொள்ளலாமா?''

வரவேற்பில் நின்ற அந்தப் பெண்ணின் குரல் அவன் சிந்தனையைக் கலைத்தது. அவனுக்காகப் பதிவாகி யிருந்த அறையின் சாவியை, பதிவுப் புத்தகத்தில் விவரம் எழுதிவிட்டு வாங்கிக் கொண்டான். 'லிஃப்டில்' ஏறி மேலே போகும் போதும், சாந்தியின் ஞாபகம் தான் வந்தது. மார்பின் மீது அவள் தன் மேனி அழுந்த சாய்ந்து கொண்டு தூங்கிய உணர்ச்சி இன்னும் அவன் உடம்பில் இருந்தது. அந்த மென்மை,

**மணியன்**

அந்த அழகு, அந்தக் குறும்பு எல்லாம் வேறு எந்தப் பெண்ணுக்கு வர முடியும்? உண்மையில் அவன் அதிருஷ்டசாலிதான்.

லிஃப்ட் நின்றது. பையன் அவனுடைய ஸூட் கேஸையும், கைப் பெட்டியையும் தூக்கிக் கொண்டு வந்து அறையின் முன் வைத்தான். அறையைத் திறந்ததும் ராஜேஷ் உள்ளே சென்று கோட்டைக் கழற்றி மாட்டினான். பெரிய கண்ணாடி ஜன்னலின் முன் இருந்த திரையை விலக்கினான். 'பளீர்' என்று வெளிச்சம் உள்ளே விழுந்தது.

பெங்களூரின் பசுமையான காட்சி அங்கிருந்து தெரிந்தது. அங்கே சாந்தி இருந்திருக்கிறாள். வேலை பார்த்திருக்கிறாள். அதோ அந்தச் சாலைகளில் அவள் நடந்து, நாலு பேருடன் பேசிப் பழகி...

அவனுக்கு பெங்களூரின்மீது தனியான ஒரு பிரியம் ஏற்பட்டது இப்போது. பையன் போய் விட்டான். 'டோண்ட் டிஸ்டர்ப்' என்ற அட்டையை எடுத்து வெளியே கதவின் பிடியில் மாட்டி அறையைப் பூட்டிக் கொண்டான். சாந்தியின் படத்தை எடுத்து மேஜை மேல் வைத்தான். கையில் ஒரு பூவைப் பிடித்துக் கொண்டு அவள் நின்ற அந்தக் காட்சி, காஷ்மீரில் எடுத்தது. அவளுடைய படங்கள், ஆல்பத்தில் மட்டும் ஐம்பதுக்கு மேல் இருக்கும். அவற்றில் அவன் விரும்பித் தேர்ந்தெடுத்த படம் இது.

டிரான்ஸிஸ்டரைத் திருப்பிப் பாட வைத்துவிட்டு, 'ஷேவ்' செய்து கொள்ள ஆரம்பித்தான். சங்கர் - ஜெய்கிஷனின் இசையுடன் முகேஷ் பாடிய பாட்டு அது. பழைய பாட்டானாலும் மிகவும் 'பாப்புல'ராக இருந்த ஒரு பாட்டு. மெல்ல அவனும் கூடவே முனகியபடி ஷேவைச் செய்து முடித்துக் கொண்டு, குளிக்கப் போனான். மேலிருந்து நீர்ப்பொழிவு, இதமான இளஞ் சூட்டில் சுகமாக அவன் மீது விழுந்தது.

உடை அணிந்து கொண்டு சிற்றுண்டிக்காக போன் செய்து விட்டு, தினசரியைப் பிரித்துத் தலைப்புகளைப் பார்த்துக் கொண்டே வந்தான். நடுவில் அந்த விளம்பரமும் இருந்தது. சாந்தி அந்த நிறுவனத்தில்தான் வேலை பார்த்தாள். 'பெரிய நிறுவனமாகத்தான் இருக்க வேண்டும். பெருந்தன்மையான மனிதர்களுடன் பழகக் கூடிய நல்ல வேலையில் தான் இருந்திருப்பாள்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

சிற்றுண்டியைக் கொண்டு வந்து வைத்து விட்டுப் பையன் போய் விட்டான். சாந்தியின் படத்தைப் பார்த்தபடி சாப்பிடத் தொடங்கினான். சாந்தி என்ன செய்து கொண்டிருப்பாள் இப்போது? காலையில் அவள் எழுந்திருப்பது கொஞ்சம் தாமதமாகத்தான் இருக்கும். சில சமயம் அவனே குளித்துவிட்டு 'டிரே'யில் அவளுடைய பெட் காப்பியையும் எடுத்துக் கொண்டு வந்து அவளை எழுப்புவான். தூக்கம் சரியாகக் கலையாமலேயே அவனை அருகே இழுத்து இதழ்களைப் பதித்து விட்டு காப்பியை சாந்தி எடுத்துக் கொள்வாள்.



பையன் தட்டை எடுத்துக் கொண்டு பில்லில் கையெழுத்து வாங்கிக் கொண்டு போய் விட்டான்.

அவனுடைய நிறுவனத்தின் கார் அவனுக்காகக் காத்துக்கொண்டிருந்தது. இந்த மாதிரி ஏற்பாடுகளில் சிறு விஷயங்களைக் கூடக் கவனத்துடன் செய்து வைக்க அவனுக்கு அக்கறை போதாது. அட்கின்ஸன்தான் அவனுக்கு ஞாபகப் படுத்துவார். அவருக்கு அபாரமான ஞாபக சக்தி உண்டு. கார் நெம்பர், டெலிபோன் நம்பர்களைக் கூடச் சட்சட்டென்று சொல்லுவார்.

அலுவலகத்தில் மூன்று மணி நேர வேலை இருந்தது. ''பிற்பகலில் வர மாட்டேன்'' என்று சொல்லிவிட்டு ராஜேஷ் கிளம்பி விட்டான். வழியில் ஓர் ஓட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு நிறுவனத்தின் காரை அனுப்பி விட்டான். அவன் சாந்தியின் அலுவலகத்தைத் தேடிப் போகிறான். அதை டிரைவர் தெரிந்து கொள்ள வேண்டாம் என்று



ராஜேஷிற்குத் தோன்றியது. மனத்தில் ஒரு தனியான ஆவலுடன் டாக்ஸியில் உட்கார்ந்து கொண்டு, சாந்தி எழுதித் தந்த விலாசத்தை டயரியிலிருந்து டிரைவரிடம் சொன்னான்.

அந்த அடுக்கு மாடிக் கட்டடத்தில் மூன்றாவது மாடியில் சாந்தி வேலை

பார்த்த அலுவலகம் இருந்தது. பிற்பகல் நேரமாக இருந்ததால், லிஃப்டில் அதிகக் கூட்டம் இல்லை. பொது அலுவலகங்களில் லிஃப்டில் போவதில் இது ஒரு தொந்தரவு. கூட்டத்தில் நெரிந்து கொண்டு அப்படிப் போவது ராஜேஷிற்குப் பிடிக்காத விஷயம்.

கண்ணை மூடிக் கொண்டான். இதே லிஃப்டில் இதேபோல எத்தனையோ தடவை சாந்தி போயிருக்கிருள். இதோ இந்த லிஃப்ட் பையன் அவளைப் பார்த்துப் புன்னகையுடன் எவ்வளவோ தடவை பேசியிருப்பான். சாந்தியின் இனிய சுபாவத்தை அறிந்த யாரும் அவளிடம் நட்புக் கொள்ளாமல் இருக்க முடியாது. தான் சாந்தியின் கணவன் என்று தெரியுமா அந்தப் பையனுக்கு? சொல்லிப் பார்க்கலாமா? தன்னை அடக்கிக் கொண்டான்:

'நோ! ஐயாம் நாட் கோயிங் டு ஸே.'

அதுதான் சரி என்று அவனுக்குத் தோன்றியது. அவன் சாந்தியின் கணவன் என்று யாருக்குமே தெரிய வேண்டாம். தெரியாமலே அவளைப் பற்றிக் கேட்கலாமே! அவர்கள் சொல்லும் விஷயங்கள் அவனுக்குப் பெருமிதமாகத்தான் இருக்கும். சாந்தியைப் பற்றிய குறிப்புகளை, அப்படிச் சம்பந்தமில்லாத ஒருவனைப் போலக் கேட்பதிலும் ஒரு மகிழ்ச்சி இருக்கத்தான் செய்யும். அப்புறம் அங்கே நடந்தவற்றை சாந்தியிடம் சொல்லி அவளை வம்புக்கு இழுப்பதற்கு நிறைய விஷயங்கள் கிடைக்கும்.

லிஃப்ட் நின்றதும் வெளியே வந்தான். வாசலில் வரவேற்பு அறையில் டெலிபோனும் கையுமாக ஓர் ஆங்கிலோ இந்தியப் பெண் அமர்ந்திருந்தாள். அவனைக் கண்டதும் புன்னகையுடன் தலையை அசைத்து வரவேற்ருள். கைப் பெட்டியை கீழே வைக்காமலே, 'வழ வழ'வென்ற மேஜைத் தகட்டின் மீது விரல்களால் தாளம் போட்டபடி ராஜேஷ் நின்ருன்.

''எஸ்!'' — போனில் பேசுவதை முடித்துக் கொண்டு அவன் புறம் அந்தப் பெண் திரும்பினுள்.



பிடில் வித்வான் (ஜலதரங்க வித்வானிடம்): கொஞ்சம் மெதுவா தட்டி வாசிங்க. என் மேலெல்லாம் தண்ணீர் தெரிக்கிறது!

''நான் மிஸ் சாந்தியைச் சந்திக்க விரும்புகிறேன்.''

ஒரு வியப்புடன் அந்தப் பெண் புருவத்தை உயர்த்திக் கொண்டாள். ஒரு விஷமப் புன்னகையுடன் உதட்டைக் . கடித்துக் கொண்டு தலையை அசைத்தாள்: ''மிஸ்டர், சாந்தி இங்கே இப்போது வேலையில் இல்லை என்று உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்டாள்.

''அப்படியா?''

''ஆமாம். அவள் கல்யாணம் செய்து கொண்டு பம்பாய்க்குப்போய் விட்டாள். எ நைஸ் சார்மிங் கேர்ல். நான் வேறு ஏதாவது உதவி செய்ய முடியுமா?''

''தாங்க்யூ. சாந்தியுடன் நன்ருகப் பழகியவர்கள் யாரையாவது எனக்கு அறிமுகம் செய்து வைக்க முடியுமா? சாந்தியின் இப்போதைய விலாசம், மேலும் சில விவரங்கள் இவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''ஓ'' என்று ஒரு விநாடி நெற்றிப் பொட்டில் யோசனையாகத் தட்டிக் கொண்டாள் அந்தப் பெண். பிறகு அருகில் இருந்த போனை எடுத்து ''மிஸ்டர் ஹெக்டே. உங்களிடம் ஒரு தகவல் கேட்க ஒருவர் வந்திருக்கிருர். அறைக்கு அனுப்பட்டுமா?'' என்று கேட்டாள். பதிலைக் காதில் வாங்கிக் கொண்டு போனைக் கீழே வைத்துவிட்டு ''ஐந்து நிமிடம் கழித்துப் போங்கள். ஏதோ ஒரு 'டிஸ்கஷ'னில் இருக்கிருர். இப்படியே நேரே போய் இடது பக்கம் திரும்பினுல் கடைசி அறை. கே. எ... ஹெக்டே என்று பெயர் போட்டிருக்கும்.''

ராஜேஷ், சோபாவில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். அந்தப் பெண் போனில் பேசுவதும், காகிதத்தில் குறிப்பதுமாக இருந்தாள். நடு நடுவே அவள் அவனைப் பார்ப்பதையும் லேசாகக் கவனித்தான். அப்படிப் பார்த்த போது அந்தப் பெண்ணின் பார்வை கொஞ்சம் விநோதமாக இருந்தது போலத் தோன்றியது. நெற்றியிலும்கூட ஒரு சுளிப்பு விழுந்தது. 'இது யார்? சாந்திக்கும் இவருக்கும் என்னசம்பந்தம்?

அவளுக்குக் கல்யாணம் ஆகி இரண்டு மாதங்கள் ஆன பிறகும், அந்த விவரத்தைக் கூடத் தெரிந்து கொள்ளாத இந்த மனிதர் இப்போது அவளைப் பற்றி என்ன தெரிந்து கொள்வதற்கு வந்திருக்கிறார்?' —இப்படி அந்தப் பெண் நினைப்பது போல அவனுக்குத் தோன்றியது.

ஐந்து நிமிடங்கள் ஆகி இருக்கலாம். கைப் பெட்டியுடன் எழுந்து ஹெக்டேயின் அறைக்குப் போனான். விரற்கணுவால் அறைக் கதவைத் தட்டிய போது, ''கம் இன்'' என்ற குரல் கேட்டது. கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான். அவனைப் பார்த்ததும் எழுந்து கை குலுக்கக் கை நீட்டினான் அந்த நடு வயது வாலிபன். கையைக் குலுக்கி விட்டு, ராஜேஷ் உட்கார்ந்து கொண்டான்.

சாந்தியைப் பற்றிக் கேட்டதும் அந்த வாலிபனின் முகம் ஒரு கணம் சட்டென்று மாறிற்று. ஆனால், உடனே சமாளித்துக் கொண்டான்:

''மானேஜிங் டைரக்டர் பாலிகாவின் பர்ஸனல் செக்ரடரியாக இருந்தாள் சாந்தி. அது உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்.''

''தெரியும்.''

''இப்போது இங்கே வேலையில் இல்லை. இரண்டு மாதங்களுக்கு முன் திருமணம் செய்து கொள்ளப் போவதாகக் கூறி வேலையை ராஜினமா செய்து விட்டு பம்பாய்க்குப் போய் விட்டாள். நாங்கள் ஒரு உற்சாகமான, கெட்டிக்காரப் பெண்ணின் சேவையை இழந்து விட்டோம். ஹூம்!'' என்று ஒரு சின்னப் பெருமூச்சு விட்டான் ஹெக்டே.

''ஆமாம். சாந்தி ஒரு நோமர்த்தியக்காரப் பெண். ரொம்ப 'ஷ்ரூட்'—''

''நான் ஒப்புக் கொள்கிறேன்'' என்று சிகரெட் பெட்டியை எடுத்து ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டு, அவன் புறமாகப் பெட்டியை ஹெக்டே நீட்டினான். ''தாங்க்யூ'' என்று ராஜேஷ் ஒன்றை எடுத்துக் கொண்டான்.

''மிஸ்டர் பாலிகாவுக்கு சாந்தியை ரொம்பப் பிடிக்கும். அவள் போனது அவருக்கு வலது கை போன மாதிரி'' என்று புகையை இழுத்து ஹெக்டே மெதுவாக ஒரு புன்னகையுடன் வெளி விட்டான். கூடவே அவன் கண்களையும் சிமிட்டி இருக்க வேண்டாம்.

''சாந்தியின் பம்பாய் விலாசம் தெரியுமா உங்களுக்கு?''

''நோ - ஏனோ அவள் தன் விலாசத்தையோ, வேறு எந்தத் தகவலையோ சொல்லவே இல்லை. எவ்வளவு கேட்டாலும் சிரித்து மழுப்பி விட்டாள். சாந்தி ரொம்ப பிடிவாதமான பெண்- உங்களுக்குத் தெரிந்திருக்கும். நன்றாக 'ஃப்ரீ'யாகப் பழகினாலும் இஷ்டம் இல்லை என்றால் இல்லைதான். அப்புறம் அவளை வற்புறுத்த முடியாது. என்ன நான் சொல்வது?''

''இப்போது நீங்கள் சொல்வதை நான் ஒப்புக் கொள்கிறேன்'' என்று சிரித்தான் ராஜேஷ். பதிலுக்கு ஹெக்டேபெரிதாக ஒருமுறைசிரித்தான். சிகரெட்டை நசுக்கி 'ஆஷ் டிரே'யில் அமுக்கிவிட்டு ராஜேஷ் பேசினான்: ''ஒன்றுமில்லை. சாந்தியை நான் வெளி நாட்டுப் பயணம் போவதற்கு முன் சந்தித்ததுதான். அப்புறம் அவளிடமிருந்து எனக்குத் தகவல் இல்லை. 'என்ன இப்படி மறந்து விட்டாய்?' என்று கேட்கலாமென்று வந்தேன். இங்கே அவள் இல்லை—

''எஸ்...எஸ். சாந்தி பழகுவதும் மின்னல் வேகம்தான், மறந்து போவதும் மின்னல் வேகம்தான். என்னைத்தான் எடுத்துக் கொள்ளுங்களேன் —'' என்று வேறு ஏதோ பேசத் தொடங்கியவன், சட்டென்று சிகரெட்டைப் புகை இழுப்பது போலப் பேச்சை நிறுத்தி விட்டான். அது எப்படியோஇருந்தது. இரண்டு மூன்று நிமிடங்கள் வேறு விஷயங்களைப் பேசி விட்டு ''தென்?'' என்று நிமிர்ந்து உட்கார்ந்தான் ஹெக்டே.

''தாங்க்யூ. உங்கள் நேரத்தை நான் வீணாக எடுத்துக் கொண்டு விட்டேன்'' என்று கை குலுக்கியபடி ராஜேஷ் எழுந்திருந்தான்.




''கல்யாணிக்கும், சங்கரா பரணத்துக்கும் என்ன வித்தியாசம் சார்?...தெரியுமா?''

''தெரியுமே... கல்யாணி, பெண் ராகம்!... சங்கரா பரணம், ஆண் ராகம்!...''

''அப்படி ஒன்றுமில்லே. உங்களே சந்தித்ததில் எனக்கு மகிழ்ச்சிதான்'' என்று எழுந்து ஹெக்டே அவனே அனுப்பினுன்.

எழுந்து கதவின் பின்புறம் வந்தபோது ராஜேஷின் பார்வை அந்தக் கதவின் கண்ணுடித் தகட்டில் விழுந்தது. அதில் ஹெக்டே உதட்டைப் பிதுக்கிக் கொண்டு தோளேக் குலுக்கியபடி சாய்ந்து அமர்ந்த காட்சி தெரிந்தது. அவ்வளவு நேரமும் முணுமுணுவென்று அவன் மனத்தை லேசாக அலேத்துக் கொண்டிருந்த ஒரு வேதனே, அந்த ஒரு விநாடியில் பெரிதாக உயர்ந்து அடங்கிற்று.

அந்தச் செய்கையைக் கண்டதும் அவ்வளவு நேரமும் ஹெக்டே பேசிய எல்லாவற்றிலும் இப்போது வேறு ஏதோ அர்த்தம் தெரிவது போலத் தோன்றியது. ஒரு பிரமை பிடித்தவனேப் போல வெளியே வந்தான். வரவேற்பு அறையைக் கடந்து வந்த போது, அந்த ஆங்கிலோ இந்தியப் பெண் அவனேக் கவனிப்பதை உணர்ந்தான். அவன் முகம் திரும்பாமலே கடைக் கண்ணுல் பார்த்தான். அந்தப் பெண் ஒரு விஷமச் சிரிப்புடன் அவனேப் பார்த்துவிட்டுத் திரும்பிக் கொண்டாள். அதற்கு என்ன பொருள்?

லிஃப்டில் இறங்கும் போது அந்தப் பையனிடம் கேட்கலாம் என்று தோன்றியது. ஆனுல் அவன் தன்னே அடக்கிக் கொண்டான். சாந்தியைப் பற்றி இந்த 'லிஃப்ட் பா'யிடம் பேசுவதாவது? என்ன அர்த்தமில்லாத நினேப்பு?

அலுவலகத்தை விட்டு வெளியேறி வாசற்படிக்கு வந்தான் ராஜேஷ். அக்கம்பக்கத்து அலுவலகங்கள் கலேய ஆரம்பித்து விட்டன. குடையும், டிபன் பாக்ஸும், கறுப்புக் கண்ணுடியுமாகப் பெண்கள் நடைபாதையில் போய்க் கொண்டிருந்தார்கள்.

அவர்களுடைய ஒவ்வொரு பேச்சுக்கும்,ஒவ்வொரு சிரிப்புக்கும் நடைபாதையில் போகிறவர்களின் பார்வையும் முகமும் திரும்பிப் பார்த்தது. வாலிபர்கள், நடு வயதுக்காரரர்கள், தலேநரைத்தவர்கள் யாரும் அதற்கு விலக்கில்லே.

அவனே ஒட்டினுற்போல் ஒரு பஸ் வந்து நின்றது. கூட்டம் ஒருவரையொருவர் தள்ளிக் கொண்டு ஏறிற்று.நாலேந்து பெண்களாக அதில் தங்களுடைய இயல்பான கூச்சத்தையும் மறந்து ஏறினுர்கள். கூடவே இடித்துக் கொண்டும், அவர்களே அமுக்கிக் கொண்டும் ஏறினுர்கள், சில வாலிபர்கள்.

பின்னுல் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து கறுப்புக் கண்ணுடி அணிந்த ஒரு வாலிபன் எட்டிப் பார்த்தான். அதைக் கண்டதும் நடைபாதையில் இருந்த ஒரு பெண் சிரித்துக் கொண்டே ஓடிப் போய் முன்ஸீட்டில் அவன் பக்கத்தில் சுவாதீனமாக ஏறி உட்கார்ந்து கொண்டாள். அந்த வாலிபனின் கை அவள் தோளின் மீது நீண்டது.

இவை அவனுக்குப் புதிது இல்லே. இந்தக் காட்சிகளே அவன் பம்பாயில் எவ்வளவோ தடவை பார்த்திருக்கிறுன். ஆனுல் இப்போது அவன் மனத்தில் அவை ஓர் ஏக்கத்தை எழுப்பின. ஒரு சோக உணர்ச்சியைத் தூண்டின.

பிழைப்புக்காகவும், உல்லாசத்துக்காகவும், விளேயாட்டாகவும் வேலேக்கு வந்த அந்தப் பெண்களின் தோற்றம் ஒவ்வொன்றிலும் அவனுக்கு சாந்தியின் முகம்தான் தெரிந்தது. அந்த நிலேகளில் எல்லாம் அவனுடைய சாந்தியும் இருந்திருப்பாள். இதே போலக் கண்ணெச்சில் பட்டு, கைபட்டு, கூசி ஒதுங்கி, சிரித்துப் பழகி...

அவனுல் அதற்கு மேல் சிந்திக்க முடியவில்லே.

அறைக்கு வந்து, உடைகளே மாற்றிக் கொண்டு, படுக்கையில் சாய்ந்து கொண்டான். பையன் வந்து கேட்ட போது சிற்றுண்டிக்கோ, சாப்பாட்டிற்கோ 'ஆர்டர்' கொடுக்கத் தோன்றவில்லே.

படுக்கையில் சாய்ந்தபடி அண்ணுந்து கூரையைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுக்குள் ஒரு கலக்கம் பொங்கி எழுந்து கொண்டிருந்தது.

அவனுக்கே புரியாத ஒரு பயம் அவனுக்குள் புகுந்து வாட்டி எடுத்தது. மேஜையின் மீது இருந்த படத்தில் சாந்தி அவனேப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தாள்.அவள் கையில் இருந்த மலரைப் போல அந்த முகத்திலும் ஒரு கள்ளமில்லாத, புனிதமான உணர்ச்சியைக் காண்பதாக அவன் அடிக்கடி நினேத்தது உண்டு. இப்போது எவ்வளவு தூரம் அந்த நினேவு பொருத்தமானது?

அவன் ஏன் அந்த அலுவலகத்திற்குப் போனுன்? சாந்தியை அவ்வளவு தூரம் தொந்தரவு செய்து ஏன் அந்த விலாசத்தைக் கேட்டான்?

டெலிபோன் மணி அடித்தது. கீழே வரவேற்பு அறையில் இருந்த பெண்ணின் குரல் கேட்டது:

''சார், உங்களுக்கு பம்பாயிலிருந்து போன்—''

(தொடரும்)



# ரகசியம்

## 10

Woman is the salvation or the destruction of the family.
She carries its destiny in the folds of her mantle.

G Santhanam

—AMIEL

"நான் ராஜேஷுடன் பேசுகிறேனா?'' என்று கேட்டாள் சாந்தி.

''ஆமாம்.''

''ராஜேஷ் டார்லிங்'' என்று அவள் கனிவான குரலில் அழைத்தாள். அவள் முத்தமிடும் சத்தம் கேட்டது. ராஜேஷ் கண்களை மூடிக் கொண்டான். இரவு நேர உடையில் போனை மார்புடன் அணைத்தபடி படுக்கையில் துவளும் ...ன் சாந்தி—

''உங்களுக்கு என் மேல் கோபமா?''

''இல்லையே!''

''பின்னே ஏன் பதிலுக்குக் கொடுக்கவில்லை?''

வாய்விட்டுச் சிரித்து விட்டு, அவனும் கொடுத்தான்: ''சாந்தி டியர், நீ வேலை செய்த ஆபீசுக்குப் போயிருந்தேன்.''

''அப்படியா?''

''ஹெக்டே என்பவரை-மானேஜரா அவர்?— சந்தித்தேன்.''

சாந்தியிடமிருந்து பதில் இல்லை.

''ஏன் பேசாமல் இருக்கிறாய் சாந்தி?''

''ஐ டோண்ட் லைக் ஹெக்டே.''

''ஆனால் அவர் உன்னைப் பற்றிப் பெருமையாகச் சொன்னார் சாந்தி. நீ அவர்கள் கம்பெனியை விட்டு விட்டுப் போன நஷ்டத்தை இன்னும் அவர்களால் ஈடு செய்ய முடியவில்லையாம்.''

''வேறு ஏதாவது பேசுங்கள்.''

''நான் இங்கே படுத்தபடி உன் படத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். எனக்குப் பசிக்கவில்லை; தூக்கம் வரவில்லை; நீ வேணும் போல இருக்கிறது.''

''நானும் படுத்துக் கொண்டு உங்களையே ; நினைத்துக் கொண்டிருக்கிறேன். என் மேல் உங்கள் பிடியை, அணைப்பை, கற்பனை செய்து கொண்டிருக்கிறேன். எப்போது திரும்பி வருவீர்கள்?''

''இப்போதுதானே வந்திருக்கிறேன்! மூன்று அல்லது நான்கு நாட்களில்

திரும்பி வருவேன். இங்கிருந்து உனக்கு என்ன வேண்டும்?''

''நீங்கள்தான் வேண்டும்...''

''டோண்ட் பி நாட்டி. குட் நைட் டார்லிங்.''

''ஸ்வீட் ட்ரீம்ஸ் ராஜேஷ்.''

சாந்தி, போனை வைத்து விட்டாள். அவளுடைய குரல் எவ்வளவு தெளிவாக, சுத்தமாக இருந்தது? அவளுடைய மனமும் அப்படித் தெளிவாக, நிர்மலமாக இருக்குமா?

ஹெக்டே எப்படிப்பட்டவன்? சாந்தியிடம் ஏதாவது தவறான முறையில் பழகி இருப்பானோ? அதனால்தான் அவளுக்கு அவன் பெயரையே கேட்கப் பிடிக்கவில்லையோ? வேறுவிதமாக இருந்தால்? ஹெக்டேயை நம்பி, பழகி, நெடுந்தூரம் போய்விட்டு, ஏமாந்து—

எழுந்து உட்கார்ந்தான் ராஜேஷ். மேஜைமேல் இருந்த படத்தில் சாந்தி கள்ளமில்லாத சிரிப்புடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். விளக்கை அணைத்தான். நிலா வெளிச்சம் அவள் படத்தின் மீது விழுந்தது. பால் போன்ற தெளிவான அந்த வெளிச்சம் போல, அவளுடைய முகத்திலும் ஒரு தூய்மை தெரிந்தது.

அலமாரியைத் திறந்து மாலையில் வாங்கி வந்த மது பாட்டிலை எடுத்தான். கண்ணாடிக் கோப்பையில் சிறிது எடுத்துக் கொண்டு, சோபாவில் சாய்ந்து கொண்டான்:

'சாந்தி! என் சாந்தி! என் மனத்துக்கும் சாந்தியைக் கொடு.'

சிறிது சிறிதாக மது உள்ளே இறங்கிற்று. அவன் மனத்திலும் புரண்டு எழுந்த அலைகள் கொஞ்சம் கொஞ்சமாகப் படிந்து அமர்ந்தன. தள்ளாடியபடி எழுந்து வந்து, படுக்கையில் சாய்ந்து கொண்டான். தலையணையை மார்போடு தழுவிக் கொண்டான். சாந்தி அவன் அருகே இருந்து அவனை அணைப்பதைப் போல நினைத்துக் கொண்டான். அப்படியே தூக்கத்தில் நழுவிப் போனான்.

காலையில் கொஞ்சம் மெதுவாகத்தான் எழுந்திருந்தான். அப்போதும் பனிப் போர்வை முழுதும் விலகவில்லை. 'பெட் காபி' முடிந்தபின் தலையில் ஒரு கம்பளித் துண்டைக் கட்டிக்கொண்டு 'கப்பன் பார்க்' வரையில் நடந்து வரப்போனான்.

தெருவில் அதிக நடமாட்டம் இல்லை. அன்று ஞாயிற்றுக்கிழமை, காலை நேரத்தில் சர்ச்சுக்குப் போய் விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தவர்களில் சிலர் மட்டும் நடைபாதையில் போய்க் கொண்டிருந்தார்கள். வண்ணப் புடவைகள், குழந்தைகளின் கையில் வர்ண பலூன், சாலை ஓர மரத்தில் சொரிந்தது போலப் பூக்கள் ஒவ்வொன்றையும் பார்த்த போது, நெஞ்சில் ஒரு மகிழ்ச்சியும் குளிர்ச்சியும் பரவின: 'அடுத்த தடவை வரும் போது சாந்தியையும் அழைத்துக் கொண்டு வர வேண்டும். இதைப் போல இளங்காலை நேரத்தில் கைகோத்தபடி நடந்து போக வேண்டும். சாந்தி அவனைப் போல் இப்படி 'காமா சோமா' என்று ஒரு சட்டையைப் போட்டுக் கொண்டு வெளியே வர மாட்டாள். மேனியைத் தழுவினாற் போல மெல்லிய புடவையைக் கட்டிக் கொண்டு, மேலே 'ஓவர் கோட்'போட்டுக் கொண்டு வருவாள்.



முழங்கால் வரை நீளமாகத் தொங்கும் அந்த கோட் அவளுக்கு ரொம்ப அழகாக, பொருத்தமாக இருக்கும்.'

நடந்து போகும் போது யோசனையில் சாந்தியும் கூடவே வந்து கொண்டிருந் தாள். அங்கே பார்வையில் விழுந்த அத்தனை பெண்களில் யாரும் அசப்பில் கூட சாந்தியைப் போல் இல்லை. அவளு டைய அழகு, தோற்றம், துள்ளுகிற பார்வை எல்லாமே தனிதான். அவள் நடையே கவிதைதான்.

அறைக்குத் திரும்பி வந்து, ஷவரில் குளித்துவிட்டு, சிற்றுண்டியை முடிக்கும் போது மணி ஒன்பது ஆகிவிட்டது. அவன் புறப்படத் தயாராக உடை அணிந்து கொண்டிருந்த போது, அறை யின் வாசலில் 'காலிங் பெல்'லை அழுத் தும் ஒசை கேட்டது. கதவைத் திறந் தான். கை கூப்பி வணங்கியபடி உள்ளே வந்தார் மிஸ்டர் பிரபு.

பிரபு, பெங்களூரில் ஒரு முக்கியமான வியாபாரப் புள்ளி. ராஜேஷ் பாங்கின் உதவியுடன் சாமான்கள் பலவற்றை விநியோகம் செய்யும் பொறுப்பு பிரபுவிற்கு உண்டு. ராஜேஷ் சாதா ரணமாக இப்படிப்பட்டவர்களுடன் நெருங்கிப் பழகுவதில்லை. உதவி செய்வது போல அவர்கள் தரும் சௌகரியங்களுக்கு, பதிலுக்குப் பெரிய உதவிகளை எதிர்பார்ப் பார்கள். அதனால் தன் கல்யாணத் துக்குக் கூட இப்படிப்பட்டவர்கள் யாருக்கும் அவன் அழைப்பு அனுப்பவில்லை.

''ஆபீசில் சந்திக்கலாமே, வாருங்கள்...!''



அந்த அரைகுறையான வரவேற்பை அவர் ஒரு சிரிப்பில் மென்று விழுங்கிச் சமாளித்துக் கொண்டார். சோபாவில் அவரை உட்காரச் செய்துவிட்டு அவன் தன் வேலைகளைக் கவனித்தபடி பேசிக் கொண்டிருந்தான்.

''காபி வரவழைக்கட்டுமா மிஸ்டர் பிரபு?''

''வேண்டாம்; இப்போதுதான் சாப்பிட்டுவிட்டு வந்தேன். உங்களை அழைக்கத்தான் இங்கே வந்தேன். சாயங்காலம் என் வீட்டில் ஒரு பார்ட்டி.''

''எனக்கு வேறு வேலை இருக்கிறது; மன்னித்துக் கொள்ளுங்கள்.''

''ஓ! பரவாயில்லை. முக்கியமான பிரமுகர்கள் எல்லாரும் வருவார்கள். உங்களுக்குப் பிடித்திருக்கலாம் என்று நினைத்தேன். இதோ வைத்திருக்கிறீர்களே ஒரு பெண்மணியின் படம், இவர்களைப் போல் முக்கியமான 'ஸோஷல் எலேட்டு'களையும் கூட எதிர்பார்க்கலாம்.''

அவன் திடுக்கிட்டுத் திரும்பினான்.

''யாரைச் சொல்கிறீர்கள்?''

''மன்னிக்கவும். நான் ஏதாவது தவறாகச் சொல்லிவிட்டேனா? இந்தப் பெண் உங்களுக்கு ஏதாவது சொந்தமா மிஸ்டர் ராஜேஷ்?''



''நான் பர்சுலே நிறைய ரூபா எடுத்துக்கிட்டுப் போற வழக்கமில்லேன்னு சொன்னா நம்பணும்!... இந்தா... என் 'விசிட்டிங் கார்டு'... நாளைக்கு பதினோரு மணிக்கா ஆபீசுக்கு வந்து பாரேன்!...''

''ஒன்றும் தவறாக எடுத்துக் கொள்ளவில்லை. மேலே சொல்லுங்கள்.''

''மிஸ் சாந்தி, இங்கே, எங்களுக்கெல்லாம் பழக்கமான 'கம்பெனி'யில் அடிக்கடி சந்திக்கும் பெண். எ நைஸ் கேர்ல். சிரித்துப் பேசினால், இன்றைக்கெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம். பார்ட்டிகளில் அவளைச் சுற்றி எப்போதும் ஒரு கூட்டம் இருக்கும். வாலிபர்கள்தாம் என்று இல்லை. அது சரி, உங்களுக்கு அவளை எப்படித் தெரியும் மிஸ்டர் ராஜேஷ்?''

''அவள் என் மனைவி.''

பிரபு திடுக்கிட்டுப் போனார். எழுந்து நின்று, கையைப் பிசைந்து கொண்டார். ''ஐ ஆம் ஸோ ஸாரி. தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். ஏதேதோ பேசிவிட்டேன். உங்களுக்குக் கல்யாணம் எப்போது ஆயிற்று? எங்களுக்கெல்லா[illegible] தெரியவே தெரியாதே?''

ராஜேஷ் பதில் சொல்லவில்லை. கண்ணாடியின் முன் நின்று, கழுத்து 'டை'யை இறுக்கிக் கொண்டான். அந்தச் செய்கை அவன் நெஞ்சையே இறுக்கிக் கட்டி வைப்பது போல இருந்தது. பிரபுவிற்கு மேலே சரியாகப் பேச ஓடவில்லை. எழுந்து உட்கார்ந்து, மறுபடியும் எழுந்து புறப்படத் தயாரானார்.

'பிரபுவின் 'பார்ட்டி'க்குப் போனால் என்ன? அங்கே யாரையேனும் சந்திக்க நேரலாம். ஏதாவது பேச்சு காதில் விழும். ஆனால் அவை அவன் மனத்துக்கு நிம்மதி அளிக்குமா? யாரேனும் இதைப் போல சாந்தியைப் பற்றி ஏடாகூடமாகப் பேசி, அவன் வேதனையைக் குத்திக் கிளறிவிட நேர்ந்தால்? பரவாயில்லை.... போய்வரலாம், இப்போது ஏதேனும் ஒரு மாறுதலுக்காக'-அவன் மனம் தவித்தது.

''சரி, மிஸ்டர் பிரபு. நான் சாயங்காலம் பார்ட்டிக்கு வருகிறேன்.''

அவர் முகம் சட்டென்று மலர்ந்தது. கை கூப்பியபடி எழுந்திருந்தார்:

''கட்டாயம் வாருங்கள். நா[illegible]து ஆறு மணிக்கு இங்கே காரை அனுப்[illegible] வைக்கிறேன்.''

அவர்கள் தரும் கார் வசதிகளை அவன் ஏற்கும் வழக்கம் இல்லை. இன்று என்னவோ மனம் வேறுவிதமாக இருந்தது. அவன் மறுக்கவில்லை:

''ஆகட்டும், மிஸ்டர் பிரபு.''

அன்று விடுமுறை நாள். வழக்கமாக பெங்களூருக்கு வந்தால் அவன் விடுமுறையன்று அறையில் இருப்பதில்லை.

ஆனால் இன்று அவன் மனநிலை வேறுவிதமாக இருந்தது. பிரபு சொன்னது, சொல்ல வந்தது, இவற்றையே மீண்டும் மீண்டும் நினைத்துக் கொண்டிருந்தான். சாந்தி தனது மனைவி என்று சொல்லியிராவிட்டால், அவர் மேலே என்ன பேசியிருப்பாரோ? நினைக்கும்போதே நெஞ்சு சிலிர்த்தது. மாலையில் சற்று முன்னதாகவே தயாராகி விட்டான்.

கீழே மியூஸிக் ஹாலில் ஏதோ நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. அங்கே யாரும் பாராத ஒரு மூலையில் உட்கார்ந்து, யோசனையாக சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தான். கார் வந்ததும், வரவேற்பு அறையிலிருந்து பையன் வந்து அவனிடம் காதோடு தகவல் சொன்னான். அப்போதும் கூடக் கொஞ்சம் தயக்கம்தான்: அந்த பார்ட்டிக்குப் போவதா, வேண் [illegible]மா? என்ன தகவல் அவனுக்குக் [illegible]க்கக் காத்திருந்தது?

பிரபு அவனுக்காக வாசலிலேயே காத்துக் கொண்டிருந்தார். தோட்டத்தில் வர்ண விளக்குகள், செடிகளிலும் மரங்களிலும் அழகு சேர்ந்தது போலத் தொங்கிக் கொண்டிருந்தன. மேடை ஒன்று போட்டு, அதில் மேற்கத்திய இசைக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். மதுரமான இசை ஒன்று அவனை ஏதோ ஒரு நினைவில் இழுக்க, பிரபுவுடன் போய்க் கொண்டிருந்த ராஜேஷ், அவர் தோளைத் தொட்டதும் நின்றான்.

''ஒரு நிமிஷம். மிஸ்டர் சரத்ராமைச் சந்தியுங்கள். நீங்களும் இங்கேயே உட்காரலாமே!''

ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டு, திரும்பி அவருடன் கை குலுக்கினான். அவன் பார்வை பக்கத்தில் நின்ற பெண்ணின் புறம் திரும்பிற்று. காலடியில் பூமி நகர்ந்தது போன்ற ஓர் அதிர்ச்சியுடன் அப்படியே நின்றான். அங்கே அவனைப் பார்த்துச் சிரிப்பு மாறாமல் லாகவமாக நின்று கொண்டிருந்தவள்...ஆஷா!

''மிஸ் ஆஷாவைச் சந்தியுங்கள், ராஜேஷ்'' என்று கையை அவள்புறம் நீட்டினார் சரத்ராம். அவனுடன் கை குலுக்கத் தயாராக ஆஷாவும் கையை நீட்டினாள்.

ஒரு கணம் அந்தக் கையையே பார்த்தபடி ராஜேஷ் அசைவற்று நின்றான். அந்தக் கையைத் தொட அவன் ஆசைப்பட்ட, ஏங்கிய நாட்களும்உண்டு. அப்புறம் அதை நினைவில் பத்திரமாக வைத்துப் பூஜித்த நாட்களும் உண்டு. அன்று பம்பாயில் அவனிடம் கதைகள்



''சுருக்கமா சொல்லணும்னா... உங்களுக்கு நானூறு ரூபாய் பெறுமானமுள்ள வியாதிங்க இருக்கும்மா!''

சொல்லி, கண்ணீருடன், கன்னத்தைத் தொட்டதும் இந்தக் கைதான்.

இங்கே ஆஷா, சரத்ராமுடன் நின்று அவனை வரவேற்கிறாள். அவனுடன் கை குலுக்கக் கையை நீட்டுகிறாள். என்ன சந்திப்பு இது? அவர்களுடன் அவனும் அமர்ந்தான். அவனுக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை. ஆஷாதான் சரத்ராமைப் பார்த்துப் பேசினாள்:

''ராஜேஷ் எனக்குப் புதியவர் அல்ல. கல்லூரியில் நாங்கள் ஒன்றாகப் படித்தோம். பம்பாயில் கூட அவரை நான் பார்த்திருக்கிறேன். இப்போது.........''

''அங்கேயே, அதே பாங்கில்தான் இருக்கிறேன்'' என்றான் ராஜேஷ்.

''ஆமாம். கல்யாணமும் செய்து கொண்டுவிட்டீர்கள். பேப்பரில் உங்கள் நன்றி கூறும் விளம்பரத்தைப் பார்த்தேன்'' என்று ஆஷா சொன்னாள்.

அந்தக் குரலில் சட்டென்று ஏன் அப்படி ஒரு கலக்கம்? அவனுக்கு மட்டும்தான் புரிந்ததா அது?

''நான் அதிகமாக யாருக்கும் அழைப்பு அனுப்பவில்லை.''

''யார் அந்த 'லக்கி பிரைட்'?'' என்று சரத்ராம் கேட்டார்.

''சாந்தி — உங்களுக்குத் தெரியுமே, மிஸ்டர் சரத்ராம்! போன வருஷம் ரவீந்திர கலாக்ஷேத்ராவில் நடந்த 'சாரிடி பால்' நினைவிருக்கிறதா?''

''ஓ நைஸ்—என் மீது பொறாமைப்படாதீர்கள் ராஜேஷ். அன்று ஒரு மணி நேரம் என்னுடன் ஆடினாள் சாந்தி—கங்கிராஜுலேஷன்ஸ். உங்களுக்கு ஒரு மிகச் சாதுரியமான பெண், மனைவியாகக் கிடைத்திருக்கிறாள்'' என்று தோளைக் குலுக்கிக் கொண்டார் சரத்ராம்.

''அந்த நடனம் ஆடத் தெரியுமா சாந்திக்கு?''

''ஓய் நாட்? எல்லாவற்றிலுமே அவள் வர்ஸடைல் — ரொம்ப சாமர்த்தியசாலி தான்'' என்றுள் ஆஷா. அவனுடன் மார்புடன் ஒன்றித் தோளில் சாய்ந்து, 'பாலே' நடனம் ஆடத் தடுமாறி நின்ற சாந்தியின் ஞாபகம் ராஜேஷுக்கு வந்தது. ஒரு வேதனை அவனை வாட்டி எடுத்தது. தெரியாதது போன்ற அந்த நடிப்பு எதற்காக?

மதுக் கிண்ணங்களுடன் டர்பன் அணிந்த சர்வர் வந்து நின்றுன். பணிவாகத் தட்டைத் தாழ்த்தி அவர்கள் பக்கமாக நீட்டினுன். ஆளுக்கு ஒன்றை எடுத்துக் கொண்டார்கள். கோப்பையில் இதழ்கள் அழகாகப் படிய நேர் எதிரே அமர்ந் திருந்த ராஜேஷையே கவனித்துக் கொண்டு ஆஷா அமர்ந்திருந்தாள்.

சிறிது அருந்திவிட்டு ராஜேஷ் கோப்பையைக் கீழே வைத்தான். அவன் கை சிகரெட்டை எடுத்து வைத்துக்கொண்டு 'லைட்டரை'த் தேடிற்று. அப்படி அமர்ந்தால் சாந்திதான் அவன் முகத்தருகே குனிந்து அதைப் பற்ற வைப்பது வழக்கம். அப்படியே அவன் கன்னத்தில் ஒன்று......

''என்ன ஆழ்ந்த யோசனை மிஸ்டர் ராஜேஷ்?'' என்று சரத்ராம் கேட்டார்.

''மனைவியின் ஞாபகமாக இருக்கும்...!'' என்று ஆஷா சிரித்தாள்.

''எஸ்... அந்த ஞாபகம்தான். ஆனல் இந்த மாதிரி பார்ட்டிகளில் மட்டும் அவள் எனக்குப் பொருத்தமான பார்ட்னர் இல்லை. நான் மது அருந்துவது அவளுக்குப் பிடிக்காது.''

''ஈஸ் இட்? ஆனல் எனக்கு நிச்சயமாகத் தெரியும். அவள் மது அருந்துவது உண்டு. நானே பார்த்திருக்கிறேன்'' என்றுள் ஆஷா.

ஓர் இடி விழுந்த அதிர்ச்சியுடன் அப்படியே நாற்காலியில் ராஜேஷ் சரிந்து உட்கார்ந்தான். 'விண் விண்' என்று மண்டையுள் யாரோ சுத்தியால் அடிப்பது போல் இருந்தது. கண் எதிரே மது அருந்தியபடி அமர்ந் திருந்த ஆஷாவின் முகம் மறைந்து அங்கே சாந்தியின் முகம்தான் தெரிந்தது.

'சாந்தி, நீ ஏன் இதையெல்லாம் என்னிடம் மறைத்தாய்? பழைய கதைகள் எதையும் சொல்லும்படி கேட்காதீர்கள், வற்புறுத்தாதீர்கள் என்று ஏன் நான் பேச்செடுத்த ஒவ்வொரு முறையும் தடுத்தாய்? இதற்குத்தானு? இன்னும் உன் வாழ்க்கையில் என்னென்ன ரகசியங்கள் இருக்கின்றன? எவ்வளவு தூரம் அவை எனக்குத் தெரியும்?'—'ஹோ'வென்று அவன் நெஞ்சில் அலைகள் மோதிப் புரண்டன.

''ராஜேஷ், ஏன் என்னவோ போல் இருக்கிறீர்கள்? வாருங்கள், கொஞ்சம் இப்படி உலாவுவோம்'' என்று எழுந்து அவன் தோளைத் தொட்டு உலுக்கினுள் ஆஷா. சரத்ராம் இருந்த நாற்காலி காலியாக இருந்தது.

(தொடரும்)



''நம்ம கார்தான்! 'அவுட் ஹவுஸா' மாத்திட்டேன்!... இனிமே கார் வெச்சுக்கிட்டு சமாளிக்க முடியாது போலிருக்கே!...''




# 11

The happiness planned for to-morrow does not count today.

-O'HENRY.

ராஜேஷ் எழுந்து ஆஷாவுடன் உலாவத் தொடங்கினான். அவன் மனம் சஞ்சலம் அடைந்திருந்தது. அவன் முகத்திலிருந்து, அவன் மனத்தில் எழுந்த குமுறல்களை ஆஷா உணர்ந்து கொண்டாள். அவன் மனத்தை சமாதானப்படுத்துவதைப் போல, அவன் கையைப் பிடித்து உள்ளங்கையை மெதுவாக அமுக்கினாள்.

ராஜேஷின் மனம் இளகிற்று. தன்னை அனுதாபத்துடன் பார்க்கும் அவளைத் திரும்பிப் பார்த்தான். அவளை அவன் [illegible]மார நேசித்ததுண்டு. இன்று அவளை அவன் பிறருடைய கைப் பொருளாகப் பார்க்கிறான். இருந்தும் அவன் மனம் துடிக்கவில்லை. இன்று சாந்தி அவனுக்கு உரியவள். நேற்று அவள் இன்னொருவருடன் பழகினாள் என்று கேள்விப் பட்டால்கூட மனம் பொறுக்கவில்லை. எவ்வளவு வித்தியாசம்?

''ராஜேஷ், ஏன் என்னவோ போல இருக்கிறீர்கள்?'' என்று ஆஷா கையை ஊஞ்சலாக ஆட்டியபடி கேட்டாள். அவன் நெஞ்சமும் ஊசலாடிற்று.

''ஒன்றுமில்லை ஆஷா. அந்த நாளில் நாம் இதைப் போலப் பழகியதையும் உலாவியதையும் நினைத்துக் கொண்டேன்'' என்று கூறிச் சிரிக்க முயன்றான் ராஜேஷ்.

ஆஷா அவன் முன்னால் வந்து நின்று கொண்டாள். கண்ணுக்குள் கண் பார்ப்பதைப் போல உற்றுக் கவனித்து விட்டுச் சிரித்துக் கொண்டாள்: ''பொய்சொல்லுகிறீர்கள். இன்று உங்கள் வாழ்க்கையில் இடம் பெற்றிருப்பவள் சாந்திதான். அவள் ஒருத்திக்குத்தான் நீங்கள் நெஞ்சிலும் இடம் கொடுக்க வேண்டும். நான் என்றோ உங்கள் வாழ்க்கை மரத்தின் கிளையில், கொஞ்ச நேரம் வந்து உட்கார்ந்துவிட்டுப் பறந்து போன பறவை. என்னைப் பற்றி நீங்கள் நினைப்பதுகூட நியாயம் இல்லை. பாஸ்ட் ஈஸ் பாஸ்ட்— நடந்ததை ஒதுக்கிவிட வேண்டும்.''

அவள் குரல் சற்றுக் கலங்கியது போல் இருந்தது. தன்னைத் தொட்ட அவள் இடையைச் சேர்த்து அணைத்துக்

கொண்டான். அவள் அவனிடமிருந்து விலகிக் கொண்டாள்.

''நோ...ராஜேஷ்...நோ... டோண்ட் தட்...'' என்றாள்.

''நடந்ததை மறந்துவிடத்தான் வேண்டும். நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நடந்தது என்னவென்று தெரிந்து கொள்வதில் தவறில்லையே?''

''யாரைக் குறிப்பிடுகிறீர்கள்?''

''சாந்தியைத்தான்.''

''ஓ ராஜேஷ். இப்போது தான் உண்மையாக உங்கள் மனத்தை வெளிப் படுத்துகிறீர்கள். இங்கே கேட்டவை உங்கள் மனத்தை உறுத்துகின்றன. அப்படித்தானே?''

''அப்படி இல்லை ஆஷா. என் மனம் அவ்வளவு குறுகலானது இல்லை. ஆனாலும், இப்போது என் மனைவியாக இருப்பவளைப் பற்றி எனக்கு முழுவதும் தெரிந்திருப்பதுதான் சரி என்று நினைக் கிறேன். அது நியாயம்தானே?''

''நியாயம் இல்லை ராஜேஷ். அப்படித் தெரிந்து கொண்டால் அதைத் தாங்கிக் கொள்ளும் இதயம் அநேகமாக எந்த ஆணுக்கும் இருக்காது. அதுவும் உங்க ளைப் போன்றவர்களுக்கு இருக்கவே இருக்காது. மனம் குழம்பிப் போய்விடு வீர்கள்.''

''நீ தப்புக் கணக்குப் போடுகிறாய் ஆஷா. இருக்கட்டும். உனக்குத் தெரிந்த வற்றைச் சொல்லு. எனக்கு நீ மிகவும் வேண்டிய 'ஃப்ரெண்ட்' என்பதை மனத்தில் வைத்துக் கொண்டு சொல்லு. அந்த அளவு எனக்குப் போதும்.''

''சாந்தியிடம் இவை பற்றிக் கேட்கப் போகிறீர்களா?''

''எங்களுக்குள்ளே ரகசியம் எதுவும் இல்லை. அப்படி இருக்க வேண்டும் என்பது தான் ஆசை.''

''மனைவியிடம் ரொம்ப ஆசை வைத் திருக்கும் எல்லாக் கணவன்மார்களும் இப்படித்தான் அசடாக ஆகிவிடுகி றார்கள். எதையாவது சொல்லிக் கொண்டு, நினைத்துக் கொண்டு...''

''என்னை 'டீஸ்' பண்ணாதே ஆஷா. மேலே சொல்லு.''

''சாந்தி இந்த ஊரில் ரொம்ப 'ஸோஷியபி'ளாகப் பழகுவதற்குப் பெயர் போன பெண். அவள் வந்தால் அந்த இடத்திலேயே ஒரு கலகலப்பான சூழ்நிலை இருக்கும். நன்றாகப் படித்தவள், அழகாகப் பேசுவாள். நடந்தாலே ஒரு நயம் இருக்கும். பரத நாட்டியமும், 



மேற்கத்திய நடனமும் கற்றுக் கொண்ட தனால் வந்த நிதானமோ என்னவோ— அந்த அழகுக்கும் கவர்ச்சிக்கும் அவளை நாடிச் சுற்றிவர ஆசைப்பட்டவர்கள் பல பேர். ஆனால், சாந்தி ஒரு கண்டிப் பான பெண். சும்மா சொல்லக் கூடாது. வெரி ஸ்ட்ரிக்ட்!'' என்றாள் ஆஷா.

ராஜேஷ் ஒரு பெருமூச்சு விட்டான்.

''போதுமா. நாம் திரும்பிப் போய் உட்காரலாமா?'' என்று திரும்பினுள்.

ராஜேஷ், ஆஷாவின் கையைப் பற்றி நிறுத்தினுன். ஒரு புன்னகையுடன் ஆஷா தன் கையை விலக்கிக் கொண்டாள்.

''இப்பொழுதுதான் ஆரம்பித்திருக்கிருய் ஆஷா.மேலே சொல்லு!'' என்ருன்.

''இன்னும் சொல்வதற்குத் தனியாக ஒன்றும் இல்லே. அந்த மாதிரி 'ஸோபிஸ்டிகேடெட்' நட்புகள் அவளுக்கு மிகவும் பிடிக்கும். அவளுடைய கம்பெனி உரிமையாளர் பாலிகா, ஆபிசில்தான் அவளுக்கு அதிகாரி. வெளியே வந்தால் அவள்தான் உத்தரவு போடுவாள். அவர், அவள் சொன்னபடி கேட்பார். நான் கவனித்திருக்கிறேன். சாப்பிட உட்கார்ந்தால் அவருடைய 'மெனு' என்னவென்று ஆர்டர் கொடுப்பதும் கூடச் சாந்திதான். அந்த மாதிரி அவர் பணிந்து போகிருர் என்பது அவளுக்குப் பெருமை.''

''ஹெக்டேயும் வருவதுண்டா?''

''யார் அந்த ஹெக்டே? எனக்குத் தெரியாது. ஆனுல், தன்னுடன் சாந்தி வரும்போது பிறர் அவளுடன் பேசுவதைக் கூடப் பொறுக்கமாட்டார் பாலிகா. அவரை வேடிக்கை பண்ணுவதற்காகவே சாந்தி, சில சமயம் யாராவது ஒரு கல்லூரி மாணவனேச் சேர்த்துக் கொண்டு 'பால்' நடனம் ஆடுவதுண்டு. ஒரு தடவை அவர்கள் இருவரையும் ஒரு திரைப்பட முகூர்த்த விழாவில் நான் சந்தித்தேன். என்னுடைய நண்பர் நாகராஜ், அந்தப் படத்தின் தயாரிப்பாளர்களில் ஒருவர். வழக்கமாக அந்த மாதிரி விழாக்களுக்கு என்னே அவர் கூட அழைத்துக் கொண்டு போவார். அன்றும் போயிருந்தேன். சாந்தி அதுவரை என்னிடம் அதிகம் பேசுவதில்லே. அன்று எனக்குக் கிடைத்த முக்கியத்துவத்தைக் கவனித்ததனுலோ என்னவோ, என் பக்கத்தில் வந்து அமர்ந்து கொண்டு 'என்னேப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?' என்று கேட்டாள்.



'ஏன், நீ ஒரு அழகான, கெட்டிக்காரப் பெண். உன்னை இதற்குமுன் நான் பார்ட்டிகளில் சந்தித்திருக்கிறேன். மிஸ்டர் பாலிகா வந்து...'

'அவர் என்னுடைய பாஸ். அவ்வளவு தான். எனக்குப் பாடத் தெரியும். நடனம் ஆடத் தெரியும். நீங்களே சொல்லுங்கள். நான் ஏன் ஒரு ஸ்டார் ஆகக் கூடாது?' என்று கேட்டாள். நான் ஒரு கணம் கலகலத்துப் போனேன்.

'சாந்தி, நீ கல்யாணம் செய்து கொள்ளப் போகும் உத்தேசம் உண்டா?'

'உண்டு.'

'ஒரு நல்ல கணவனுடன், அமைதியாக மனம் ஒன்றிக் குடும்ப வாழ்க்கை நடத்த விரும்புகிறாயா?'

'ஆமாம்.'

'அப்படியானால் இது உனக்கு வேண்டாம். உனக்கு என் ஆசிகள் உண்டு. உன் அழகும் சாமர்த்தியமும் உன் குடும்பத்துக்குப் பயன்படட்டும். இங்கே நீ வர வேண்டாம்' என்றேன்.

அவள் என்னை உற்றுப் பார்த்துவிட்டு, 'என் அப்பாவும் இந்த மாதிரிதான் சொல்கிறார்' என்று சிரித்தாள்.



''ஆனா ஒண்ணு சார்!... உங்க பையன், நான் கிளாஸ்லே வைக்கிற பரீட்சை எதுலேயும் காப்பி மட்டும் அடிக்கிறதில்லேன்னு நிச்சயமா சொல்ல முடியும்!...''

''தேவலையே! ...அப்படியா?...''

''எல்லாத்திலேயும் அவன் சைபர்தான் வாங்கறான்!''.

'உன்னுடைய எதிர்காலத்தில் நல்ல அக்கறை கொண்டவர் உன் அப்பா.... நானும் அப்படித்தான்' என்று கை நீட்டினேன். அவள் கையைக் குலுக்கி விட்டு எழுந்து போய்விட்டாள். என் பேச்சு அவளுக்குச் சற்று ஏமாற்றமாக இருந்திருக்கலாம். ஆனால் நான் செய்தது சரி என்று நம்பினேன். நாகராஜிடம் அவளை அறிமுகப்படுத்தி, வற்புறுத்தி, அவளுக்கு ஒரு பாகம் தந்து திரையில் அறிமுகம் செய்யும்படிச் சொல்லியிருக்கலாம். ஆனால் என் மனம் அதற்கு ஒப்பவில்லை.''

''அப்புறம்?''

''அப்புறம் அவளை நான் சந்திக்கவில்லை; அவ்வளவுதான். சரி, போகலாம் வாருங்கள். சரத்ராம் என்னைத் தேடிக் கொண்டிருப்பார். அவர் ஒரு குழந்தை மாதிரி. பார்ட்டிகளில் கூட நான் இல்லாவிட்டால் தவித்துப் போய்விடுவார்'' என்றாள் ஆஷா.

ராஜேஷ் அவளை உற்றுப் பார்த்தான். அவன் பார்வை அவளுடைய மனத்தில் இன்னும் எதையோ தேடுவதைப் போல் இருந்தது.

''கமான் ராஜேஷ். போகலாம். நடந்ததைப் பற்றி நினைக்கக் கூடாது, கேட்கக் கூடாது, கிளறக் கூடாது. அது தான் புத்திசாலித்தனம். என்னுடைய ராஜேஷ் ஒரு புத்திசாலி என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.''

ஆஷா பேசியபடி முன்னால் நடக்கத் தொடங்கினாள். அவளை அவனால் அந்த வேகத்தில் பின்தொடர முடியவில்லை. நடையைப் போலவே அவனுடைய நினைவுகளும் பின்தங்கி நின்றன. 'என்னுடைய ராஜேஷ்' என்ற அவளுடைய வார்த்தைகளை மறுபடி சொல்லிப் பார்த்துக் கொண்டான். எவ்வளவு சுவாதீனமாகச் சொல்கிறாள்? மனத்தளவில் இன்னும் எவ்வளவு நெருங்கியிருக்கிறாள் அவள்!

அன்று அவன் கேட்ட போது, ராஜேஷின் கோரிக்கையை அவள் ஏற்றிருந்தால், ஆஷா இன்று அவன் மனைவியாக இருந்திருப்பாள். கல்யாணம் நடந்திருக்கலாம். அப்புறம்? அவளுடைய கடந்த கால வாழ்க்கையைப் பற்றி அவன் இதே போலத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டிருப்பானா? தெரிந்து கொண்டு மன அமைதியுடன் இருந்திருப்பானா? 'பாஸ்ட் ஈஸ் பாஸ்ட்' — எவ்வளவு

சுலபமாகச் சொல்கிருள்! அவனுடைய மனைவியாக இருந்திருந்தால் அவ்வளவு எளிதாகச் சொல்லியிருக்க முடியுமா?

பார்ட்டி கலைந்து கொண்டிருந்தது. ஆஷாவும் சரத்ராமும் அவனிடம் விடை பெற்றுக் கொண்டு போய்விட்டார்கள். பிரபு அவனைக் கட்டாயமாக உள்ளே அழைத்துச் சென்று 'ஸ்பெஷலாக' உட்கார வைத்து சாப்பிடச் செய்து, வெளியே கார் வரையில் வந்து ஏற்றி விட்டு, வழி அனுப்பினார்.

இரண்டு நாட்களில் வேலை முடிந்து விட்டது. பம்பாய்க்குத் திரும்பிப் பயண மானான். சாந்திக்கு 'போனில்' தகவல் கொடுத்திருந்தான். ஆனாலும் அவள் அவனை வரவேற்க விமான நிலையத்துக்கு வருவாள் என்று எதிர்பார்க்கவில்லை. இறங்கி வந்தபோது, புன்சிரிப்புத் தவழும் அவள் முகத்தைப் பார்த்ததும் அவனுடைய மனக் கலவரம் முழுவதும் மறைந்துவிட்டது போல இருந்தது.

அவளே காரை ஓட்டிக் கொண்டு வந்திருந்தாள். காரில் அவர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. ஏறி உட்கார்ந்த தும் இருபுறமும் கவனித்துவிட்டு அவன் அவளை இழுத்துக் கன்னத்தில் முத்த மிட்டான்.

''என்ன அவசரம் உங்களுக்கு? இது ஒரு 'பப்ளிக் ப்ளேஸ்' '' என்று சாந்தி சிணுங்கினாள்.

''உன்னையும் என்னையும் பொறுத்த வரை, இந்த கார் ஒரு 'பிரைவேட் ப்ளேஸ்' '' என்று ராஜேஷ் சிரித்தான்.

''அந்த காரும் இப்போது ஒரு பப்ளிக் ரோடில்தான் ஓடிக் கொண்டிருக் கிறது'' என்று காரைக் கிளப்பி மெல்ல ஓட்டத் தொடங்கினாள் சாந்தி.

பகல் முழுவதும் அலுவலக வேலை சரி யாக இருந்தது. மாலையில் சற்று நேரம் கழித்தே வீட்டுக்குத் திரும்பினான். சாந்தி அவனுக்காகக் காத்துக் கொண்டிருந் தாள். சாந்தியிடம் பேச அவன் மனமும் காத்துக் கொண்டிருந்தது.

ஒரு வாரமாகப் பிரிந்திருந்த பின் மறுபடி அவளைச் சந்திக்கும்போது, வித்தியாசமாக ஏதும் பேசி அந்த அமைதியைக் குலைக்க ராஜேஷ் விரும்ப வில்லை. அன்று மாலை சாந்தி உற்சாகமாக இருந்தாள். அவனுக்குப் பிடித்த உடை களை அணிந்து, அவன் விரும்பும் ஸ்வீட்டைச் செய்து வைத்து, அவனை மகிழ்ச்சியில் ஆழ்த்தத் தயாராக இருந் தாள்.



''போன மாசம் பத்து ரூபா கடன் கொடுத் தேனே... மறந்துட் டியா?!...''

''சே, சே!...நேத்து கூட நீ தெரு முனையிலே வர்ற தைப் பார்த்துட்டு 'டக்கு'னு பக்கத்து சந்து வழியா போயிட்டேனே!... மறந் திருந்தா போவேனா?!''

மாலை நேரம் கழித்து, இரவு படுக்கப் போகுமுன் அவளிடம் வேறு விஷயங் களையே பேசிக் கொண்டிருந்தான். அதன் பின் அவர்களிடையே 'கிசு கிசு'வென்ற ரகசியப் பேச்சுக்கள்தாம் விளையாட்டாக உலாவிக் கொண்டிருந்தன.

அருகே சாய்ந்து உட்கார்ந்திருந்த ராஜேஷ், கட்டிலிலிருந்து மெதுவாக இறங்கினான்.

''எங்கே போகிறீர்களாம்?'' என்று கொஞ்சலாகக் கேட்டாள் சாந்தி.

''உனக்குத் தெரியுமே; இந்த இன்பத் தில் மதுவும் சேர்ந்தால்தான் எனக்கு முழுத் திருப்தி.''

''அதை விடச் சொன்னால் 'மாட் டேன்' என்கிறீர்களே?'' என்று சிணுங் கினாள் சாந்தி.

ராஜேஷ் உள்ளே சென்று ஒரு கையில் பாட்டிலும், இன்னொரு கையில் மதுக் கோப்பையுமாகத் திரும்பி வந்தான். அவர்கள் முன் முக்காலியில் அவற்றை வைத்தான். அவள் முகம் ஒரு வெறுப்பில் சுளித்தது.

ராஜேஷ் கோப்பையில் சிறிது ஊற்றிக் கொண்டு அவளை அணைத்தாற் போல உட்கார்ந்து கொண்டான். சிறிது

உறிஞ்சிவிட்டு அவள் முகத்தருகே நீட்டினன்.

''ஜஸ்ட் ட்ரை சாந்தி, டார்லிங்.''

அவள் முகம் வெளிறியது. வெறுப்புடன் தலையை வேகமாக அசைத்தாள்: ''என்ன இது? எனக்குக் கட்டோடு பிடிக்காது இந்தப் பழக்கம் எல்லாம்.''

அவன் விடவில்லை. அவளுடைய மேனி மேல் அவன் மேனி அழுந்த அவள் இதழில் கிண்ணத்தின் விளிம்பைப் பதித்தான்.

''இந்த இன்பத்துக்கு இது உற்சாகம் தரும். உனக்குத் தெரியாதது இல்லை சாந்தி. உனக்குப் பழக்கமானதுதானே? என்னிடம் உனக்கு என்ன தயக்கம்? நான் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டேன். ப்ளீஸ்...ப்ளீஸ்.''

அவன் கண்களில் ஒரு வெறி இருந்தது. வார்த்தைகள் தடுமாறின. அவன் கூறியதைக் கேட்டதும், சாந்தியின் உடல் நடுங்கிற்று. நெற்றியில் வியர்வை அரும்பிற்று. இதழ்கள் துடிக்க அவனைக் கெஞ்சுவது போலப் பார்த்தாள்:

''என்னை விட்டுவிடுங்கள். என்னை மன்னியுங்கள். வேண்டாம்!''

'எதற்கு மன்னிப்பு? அவள் அவனுக்கு இணங்காததற்கா? அல்லது அவனிடம் அந்த விஷயத்தை மறைத்ததற்கா? ஏன் அவள் உடலில் இத்தனை நடுக்கம்?'

சாந்தி அவனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு எழுந்து நின்று, 'நைட் கவு'னைப் போட்டுத் தன்னை மறைத்துக் கொண்டாள். அவன் அவள் கையைப் பற்றுமுன் படுக்கை அறைக் கதவைத் திறந்து கொண்டு போய்விட்டாள். அவளுடைய விசிப்பு கதவை மூடும் வரையில் தான் அவன் காதில் கேட்டது. அப்புறம் தொடர்ந்து அவன் நெஞ்சில் இடித்துக் கொண்டே இருந்தது.

அவன் அவளிடம் சொல்லி யிருக்க வேண்டாம். அதுவும் அந்த வேளையில் பேசி யிருக்க வேண்டாம். ஒரு வாரம் பிரிந்திருந்த பிறகு அவர்கள் மகிழ்ந்திருக்க வேண்டிய சமயத்தில், அதில் இந்த வெறுப்பை அவன் கலந்திருக்க வேண்டாம். ஏதோ யோசனையாக அவன் வாய் மது ரசத்தை மெல்ல அருந்திக் கொண்டே இருந்தது.

ஒரு மணி நேரம் ஆகி யிருக்கலாம்.

அவன் தூங்க ஆரம்பித்துவிட்டான். அவன் மார்பில் கையை வைத்து அசைத்து எழுப்புவது புரிந்து, அவன் கண்ணை விழித்தான். குனிந்து அவன் முகத்தின் மேல் முகம் வைத்து, சாந்தி மென்மையான குரலில் பேசினள்:

''கமான். நீங்கள் ஆசையோடு வந்த நேரத்தில் நான் ஏமாற்றம் தந்துவிட்டேன். நமக்குள்ளே என்ன? நீங்கள் இல்லாமல் தனியாக நான் இந்த ஒரு வாரமும்...''

அவர்களுடைய இதழ்கள் கலந்தன. அவன் அவளைப் பின்னித் தன்னேடு இழுத்துக் கொண்டான்.

அவளை அணுஅணுவாக ரசித்த அந்த வேளையிலும், ஏதோ ஒன்று அவன் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது. அவள் முழுவதும் தன்னிடம் ஈடுபடவில்லையோ என்ற நினைப்பு, அவன் இன்பத்தை முழுமை அடையவிடவில்லை. அவனிடம் அவள் ஒன்றிப் போன சமயத்திலும், சற்று முன் அவன் நினைவூட்டிய பழைய ஞாபகங்கள், அவள் மனத்தை அலைத்துக் கொண்டிருந்தனவோ என்ற எண்ணம், அவன் மகிழ்ச்சிக்கு நடுவே ஒரு குறையாகவே இருந்தது.

காலை நேரம்.

அவன் குளித்துவிட்டு உடை அணிந்து காலை நேரச் சிற்றுண்டிக்காக 'டைனிங் டேபிள்' முன் வந்து உட்கார்ந்தான். குளித்துவிட்டு, கூந்தலை உலரும்படி அலை அலையாக விட்டு விட்டு, அப்படியே அவனுக்குச் சிற்றுண்டி எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள் சாந்தி.

டெலிபோன் மணி அடித்தது.

சாந்தி அதை எடுத்துப் பேசிவிட்டு, ''மிஸ்டர் அட்கின்ஸன் உங்களைக் கூப்பிடுகிறுர்'' என்று அவனை அழைத்தாள்.

சிறிது நேரம் ஆகியும் ர்ராஜேஷ் வரவில்லை. சிற்றுண்டி ஆறிக் கொண்டிருந்தது. 'என்னதான் அப்படிச் சுவாரசியமான பேச்சு?' என்று தெரிந்து கொள்வதற்காக டெலிபோன் அறைக்கு மெதுவாகப் போனள் சாந்தி.

கணவன் பேசுவதை ஒட்டுக் கேட்கும் வழக்கம் அவளுக்கு இல்லை. ஆயினும் இம் முறை அவளுக்கு ஏனே ஒரு தனியான ஆவல் இருந்தது.

ராஜேஷ் அவளுக்கு முதுகுப்புறம் தெரிய அமர்ந்திருந்தான். அவள் வந்ததை அவன் கவனிக்கவில்லை. அருகே வந்து நின்றவள், அவன் டெலிபோனில் பேசியதைக் கேட்டதும், அதிர்ந்து போய் சுவரைப் பிடித்துக் கொண்டாள். அவள் உடம்பு முழுவதும் ஒரு முறை சிலிர்த்து அடங்கிற்று.

(தொடரும்)



# ரகசியம்

# 12

The Human need that a woman cannot do without don't include passion at all; they are attraction a sense of achievement, status and security.

—Dr. MARION HILLIARD

டெலிபோனில் பேசிவிட்டு ராஜேஷ் திரும்பினுன். சாந்தியை அங்கே பார்த்ததும் அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இருப்பினும் தன்னை உடனே சமாளித்துக் கொண்டான்.

''அட்கின்ஸனின் மனைவி மர்த்தா ஒரு 'சாரிடிபால்' ஏற்பாடு செய்திருக்கிருள். இன்று இரவு நடனமும் விருந்தும் நடக்கிறது. நம் இருவரையும் கட்டாயம் வரவேண்டும் என்று அட்கின்ஸன் அழைத்தார். ஒப்புக் கொண்டு விட்டேன்.''

''நான் எதற்கு?''

''உன்னைத்தான் முக்கியமாக எதிர் பார்க்கிருள் மர்த்தா. உன்னுல் ஒரு சிறு பரத நாட்டிய நிகழ்ச்சிக்கு ஒப்புக் கொள்ள முடியுமா என்று கேட்டாள். அதற்கு, முன்கூட்டியே அவகாசம் தர வேண்டும் என்று சொல்லி விட்டேன். ஆனுல் 'பால்' நடனத்துக்கு ஒப்புக் கொள்ளச் சொன்ன போது நான் மறுக்கவில்லை......''

''எனக்கு அவ்வளவாகப் பழக்கமில்லையே?''

''அப்படித்தான் மர்த்தாவும் சொன்ஞள். நான் ஒப்புக் கொள்ளவில்லை. நீ அதிலும் ஒரு 'எக்ஸ்பர்ட்' என்று அடித்துச் சொல்லி விட்டேன். எப்படி? இன்று சாயங்காலம் அதை நிரூபித்துக் காட்டுவது உன் கையில் இருக்கிறது...''

''பார்க்கலாம். டிபன் ஆறிப் போகிறது; சாப்பிட வாருங்கள்.''

ராஜேஷ் எழுந்து வந்து உட்கார்ந்து கொண்டான். டிகாக்ஷனில் விட்ட சூடான பாலைப் போல அவள் மனமும் பொங்கிக் கொண்டிருந்தது. டெலிபோனில் மர்த்தாவிடம் ராஜேஷ், 'என் மனைவிக்கா பால் நடனம் தெரியாது என்று சொல்கிறீர்கள்? அவள் அப்படித்தான் சொல்லி நம்மை யெல்லாம் ஏமாற்றிக் கொண்டிருக்கிருள். அவள் அதில் ஒரு எக்ஸ்பர்ட்டாம்' என்று சொன்னது அவள் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தது. அதையே

மணியன்

ராஜேஷ் அவளிடம் அப்புறம் வேறு விதமாக மாற்றிச் சொன்னான். இருந்தாலும் போனில் பேசிய போது அவன் குரலில் இருந்த குத்தலையும் கேலியையும் அவளால் மறக்க முடியவில்லை.

ராஜேஷ் கிளம்பிப் போய் விட்டான்.

பெங்களூரிலிருந்து அவன் கொண்டு வந்திருந்த ஸூட் இரண்டையும் 'ட்ரை-வாஷ்' செய்யக் கொடுப்பதற்காக சாந்தி பெட்டியிலிருந்து எடுத்தாள். அவற்றைப் போடுமுன் பையில் இருந்த காகிதத் துண்டுகள், கைக்குட்டை ஆகியவற்றைத் தனியே எடுத்துப் போட்டாள்.

அந்த நீல நிற ஸூட்டை அணிந்து கொண்டால் ராஜேஷ் மிகவும் அழகாக இருப்பான். ரசனை உள்ள எந்தப் பெண்ணும் அந்த உடையில் அவனை இரண்டு தடவை நிமிர்ந்து பார்க்காமல் இருக்க மாட்டாள். பெங்களூரில் அந்த உடையில் அவன் ஏதாவது பொழுதுபோக்கு நிகழ்ச்சிக்குப் போயிருப்பானோ? அங்கே யாரைச் சந்தித்திருப்பான்?

அந்த ஸூட்டைக் கலைத்துப் போட்ட போது பையிலிருந்து அந்தச் சிறு கைக்குட்டை நழுவிக் கீழே விழுந்தது. அது ஒரு பூப்போட்ட, பெண்கள் உபயோகிக்கும் கைக்குட்டை. கொஞ்சம் கலக்கத்துடன் அதை எடுத்துப் பார்த்தாள். அதன் ஒரு மூலையில் 'ஆஷா' என்று பெயர் போட்டிருந்தது.

நகைப் பெட்டியைக் கெட்டியாய் அமுக்கிப் பிடித்துக் கொள்வதைப்போல அவள் கைகள், அந்தக் கைக்குட்டையின் மேல், ஒன்றின் மேல் ஒன்றாக இறுக்கிப் பொத்திக் கொண்டன. நெஞ்சில் ஒரு தினுசான பீதி எழுந்து அவளை அலைத்தது.

'பெங்களூரில் ஆஷாவைச் சந்தித்தானா ராஜேஷ்? ஒரு வாரம் தனியாக அவன் அங்கே இருந்த சமயத்தில் ஆஷாவும் உடன் இருந்திருப்பாளோ? எல்லாமே ஒரு முன்னேற்பாடாக இருக்குமோ?'—நாற்காலியில் உட்கார்ந்து இரு கைகளாலும் கன்னத்தைப் பிடித்துக் கொண்டாள். அவள் கன்னத்திலிருந்து மெதுவாக நீர் வழிந்தது.

ஆஷாவிற்கும் அவனுக்கும் இது புதுப் பழக்கம் இல்லை. ஏற்கெனவே அவர்கள் நெருங்கிப் பழகியிருக்கிறார்கள். ஒருவரை மற்றவர் அந்தரங்கமாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆனாலும் இப்போது சாந்தி, ராஜேஷின் மனைவி. தன் கணவனிடம் இன்னொரு பெண்



அப்படி நெருங்கிப் பழக, எந்தப் பெண்ணுமே விட்டுக் கொடுக்க மாட்டாள். அதுதான் மனைவியாகி விட்ட ஒரு பெண்ணின் இயல்பு.

ராஜேஷ் ஏன் அதைப் பற்றித் தன்னிடம் எதுவுமே சொல்லவில்லை? தன்னைப் பற்றி ராஜேஷிடம் பேசியது யார்? ஹெக்டேயா? அல்லது ஆஷாவேதானா? நெற்றியைத் தடவிவிட்டுக்கொண்டாள்.



ஆஷாவை அவள் எங்கேனும் சந்தித்திருக்கிருளா? ஆமாம். ஒரு தடவை பார்ட்டியில், அதுவும் ஒரு படத்துக்கு ஆரம்ப பூஜை போட்ட அன்று, அவளருகே உட்கார்ந்து கொஞ்சம் பேசியதும்கூட இப்போது நினைவுக்கு வந்தது. அந்த நினைவில் அவள் உடம்பெல்லாம் சுட்டது.

ஆஷா அவளை அடைந்திருக்க வேண்டியவள். சந்தர்ப்பம் எப்படியோ நழுவிப் போய்விட்டது. ஒரு பெண்ணின் முதற் காதல் அவ்வளவு எளிதில் அடங்கி மறைந்து விடுவதில்லை. எங்கே யாவது, எப்படியாவது ஒரு சிறு 'சான்ஸ்' கிடைத்தாலும் மறுபடியும் அது கண் விழித்துப் பார்க்கும். பழைய உணர்ச்சிகள் மூட்டி விட்ட நெருப்பைப் போலப் பற்றிக் கொள்ளும். பல நாட்களுக்குப் பின் இப்படிச் சந்திக்க நேர்ந்த போது, ஆஷாவும் ஒரு வேளை? இப்போது அவள் எதற்கும் துணிந்தவள். ராஜேஷின் தனிமையைப் பயன்படுத்திக் கொண்டு அவனுடைய அறையில்—

சீச்சி, எவ்வளவு கீழ்த்தரமான நினைவுகள்? அவளுடைய ராஜேஷ் அப்படி ஒருகாலும் ஓர் ஈனமான செயலில் ஈடுபடவே மாட்டான். ஆனாலும் இந்த சந்தர்ப்பத்தில், தன் மீது அவனுடைய விருப்பம் இருக்க வேண்டும் என்று, ஆஷா தாறுமாருக ஏதேனும் ராஜேஷிடம் சாந்தியைப் பற்றிச் சொல்லிக் கொடுத்திருப்பாளோ? ராஜேஷ் பேசும் குரல், பார்க்கும் பார்வை எல்லாவற்றிலும் பின்னே ஏன் இந்தக் கலக்கம் தெரிகிறது?

சமையல் செய்து கொண்டே யோசனை செய்து கொண்டிருந்தாள் சாந்தி. சந்தேகங்கள் பலவாருகவும் அவளைப் பிடித்து ஆட்டி வைத்தன. அவற்றுக்கு நடுவே அவளுக்குத் தன்னைப் பற்றிய பழைய நினைவுகளும் தோன்றின. குளிர் காற்றில் நின்றவளைப் போல அவள் உடல் முழுவதும் அந்த நினைப்பில் நடுங்கிற்று.

ஆஷாவிற்கு எவ்வளவு தூரம் தன்னைப் பற்றித் தெரிந்திருக்கும்? அவளுடைய அலட்சியமான, அஜாக்கிரதையான பழக்கத்தில், பெங்களூரில் எவ்வளவு பேர் அவளைப் பற்றி, எவ்வளவு தூரம் தெரிந்து கொள்ள அவள் இடம் கொடுத்திருப்பாள்? இப்போது அவற்றையே தான் அறிந்து கொள்ள வேண்டிய ரகசியங்களாகக் கருதி ராஜேஷ் அவளிடம் கேட்கிருன். அவள் சொல்வதற்கு மறுக்கலாம். ஆனல் தெரிந்து கொள்ள வேண்டும்

என்ற ஆசை அவனை விடவில்லை. ராஜேஷின் கண்கள் பெங்களூரில் சுற்றித் தேடுகின்றன; காதுகள் பலர் சொல்வதையும் கேட்கின்றன. அதற்கென்று காத்திருக்கும் ஹெக்டே, ஆஷா...

சொல்ல இயலாத வேதனையுடன் சமையலை முடித்துவிட்டு சாந்தி சோபாவில் வந்து சாய்ந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டாள். டெலிபோன் மணி அடித்தது. ராஜேஷ் அவளை அழைத்துப் பேசினான். அன்று அவனுக்கு அனுப்பி வைக்கப் போகும் சமையலைப் பற்றிக் கேட்டான். அன்று மாலை அவள் அணிந்து கொள்ள வேண்டிய உடைகளைப் பற்றிச் சொன்னான். அவளுடைய அந்தரங்கமான அலங்காரப் பொருட்களைப் பற்றியும் கூட விஷமமாகக் குறிப்பிட்டான். கடைசியில் வழக்கம் போல ஒரு 'கிஸ்'.

அவள் மனத்தில் இப்போது ஒரு தெம்பு பிறந்தது. அவளுடைய ராஜேஷ் வழக்கம் போலத்தான் இருக்கிறான். அவனுடைய பேச்சு, அவர்களுக்குள்ளே ரகசியமாகப் பங்கு போட்டுக் கொள்ளும் விஷமங்கள், 'டீஸ்' பண்ணுவது போன்ற விளையாட்டுக்கள் எதுவும் மாறவில்லை. அந்த அளவில் அவளுக்கு ஒரு நிம்மதி உண்டாயிற்று. மாலையில் அவனுடன் கழிக்கப் போகும் இன்பகரமான பொழுதைப் பற்றி எண்ணிக் கொண்டு திட்டம் போடத் தொடங்கினாள்.

முன்னிரவு நேரம்.

அந்தப் பெரிய ஹாலில் இன்பம் கிளுகிளுத்தது. சிறு கோப்பைகளில் மதுவுடன் ஆண்கள் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். மெல்லிய இசையின் பின்னணியில் ஆண் பெண் ஜோடிகள், ஒருவரை மற்றொருவர் லேசாக அணைத்த வண்ணம் ஆடிக் கொண்டிருந்தார்கள். சாந்தி, மர்த்தாவுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தாள். அந்த இள நீல நிற ஜார்ஜெட் புடவையும், அதற்கேற்ற தோள்வரை கைகள் தெரியும்படியான சோளியும் அணிந்து, சாந்தி ஒய்யாரமாக உட்கார்ந்திருந்த விதம், ஒரு தனிக் கவர்ச்சியுடன் தோன்றியது.

ராஜேஷ் அவள் அருகே வந்து, பின்புறமாக நின்று அவள் காதோடு ஏதோ சொன்னான். அதைக் கேட்டதும் அவள் முகம் வெளுத்தது. முடியாது என்பதைப் போலத் தலையை அசைத்தாள். ராஜேஷ் விடவில்லை. மர்த்தா எழுந்து நின்றாள்.

''என்ன 'ஸ்வீட் நதிங்க்ஸ்' ராஜேஷ்? இப்படி அமர்ந்து பேசலாமே? நான் கொஞ்சம் மற்றவர்களைக் கவனித்து விட்டு வருகிறேன்'' என்று, ராஜேஷ் தடுத்து நிறுத்துவதையும் பொருட்படுத்தாமல் நகர்ந்து விட்டாள் மர்த்தா. ராஜேஷ், சாந்தியின் எதிரே உட்கார்ந்து கொண்டான்:

''இது என்ன அசட்டுப் பிடிவாதம் சாந்தி?''

''நீங்கள்தாம் அசட்டுத்தனமாகப் பேசுகிறீர்கள்! அட்கின்ஸனுடன் அவர் தோளைத் தொட்டுக் கொண்டு நான் ஆடுவதாவது?''

''அதில் என்ன தப்பு? இப்படி விருந்தில் கலந்து கொள்ளும்போது நீ அட்கின்ஸனுடனும், நான் மர்த்தாவுடனும் மாறி ஆடுவதுதான் மரியாதை. இதில் குறுகலான எண்ணம் நம்மைப் போன்றவர்களுக்கு வரவே கூடாது.''

''இது சரியில்லை; அவ்வளவுதான். நம்முடைய பண்புகளைப் பிறருக்காக நாம் அலட்சியம் செய்யவும் வேண்டாம்; மாற்றிக் கொள்ளவும் வேண்டாம்.''

''ஏன் சாந்தி? நீ எவ்வளவோ லாகவமாக ஆடுவாய்! எனக்கு அது தெரியும். அட்கின்ஸன் அதைப் பாராட்டினால் எனக்குப் பெருமைதானே?''



இங்கிலாந்தில் 'மேஃபேர்' என்ற ஓட்டலில் பெண்கள் வேலை செய்கிறார்கள். அதில் என்ன அதிசயம்? அவர்கள் 'பர்னிச்சர்'களாக இருக்கிறார்கள். அவர்கள் மீது சாமான்களை வைக்கலாம். கையில் சட்டையை மாட்டலாம். மடியில் உட்காரலாம்! ஆலன் ஜோன்ஸ் என்ற பிரிட்டிஷ் பாப் கலைஞரின் 'ஐடியா' இது!

''எதற்குப் பெருமைப்படுவது என்று இல்லையா? என்னுடைய நல்ல பண்புகளை அவர் பாராட்டட்டும். எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் இதைப் போல நெருங்கித் தொட்டு, மது அருந்திய நிலையில் எதையாவது பேசிப் பழகி, 'அப்படித்தான் பாராட்ட வேண்டும்' என்றால் எனக்கு அது தேவை இல்லை. வேண்டுமானால் நீங்கள் வாருங்கள்; நாம் இருவரும் ஆடலாம்.''

''அவசியம் இல்லை. நீ 'ஸ்பெஷலா'க் குறிப்பிடும் பண்புகளை எவ்வளவு தூரம் மதிப்புக் கொடுத்துக் கடைப் பிடித்தாய் என்று எனக்குத் தெரியாதா சாந்தி? உனக்கு இஷ்டமானால் நீயே உல்லாசப் பறவையாக ஆடவும், சுற்றி வரவும் தயார். அதையே நான் விரும்புவதானால் உனக்குச் சம்மதிக்கப் பிரியமில்லை. அவ்வளவுதானே? லீவ் இட்'' என்று அங்கிருந்து எழுந்து 'விறு விறு' என்று அப்பால் போய்விட்டான்.

சாந்தியின் உடல் முழுவதும் நடுங்கிற்று. புருவங்கள் நெரிந்து, மோவாயும் உதடுகளும் துடித்தன. உட்கார முடியாமல் ஒரு தவிப்புடன் நாற்காலியைத் தள்ளிக் கொண்டு எழுந்து நின்றாள். அங்கே அதன்பின் இருக்கவும் அவளுக்குப் பிடிக்கவில்லை. ஹாலை விட்டு லிஃப்டில் கீழே இறங்கி நேராக காரை நோக்கிப் போனாள்.

அதில் டிரைவர் இல்லை. காரின் பின்கதவைத் திறந்து கொண்டு உள்ளே ஏறி உட்கார்ந்து கொண்டாள். அதுவரை அவளுக்குக் கோபமும் ஆத்திரமும்தான் பொங்கி வந்தன. ஆனால் அப்போது தன் மீதே ஒரு பச்சாத்தாபமும் பிறந்து, கைக்குட்டையால் வாயை மூடிய வண்ணம் விசிக்கத் தொடங்கினாள்.

சிறிது நேரம் ஆனபின் கண்களைத் துடைத்துக் கொண்டு கதவின் கண்ணாடியை இறக்கினாள். வெளியே சற்று ஒதுங்கி டிரைவர் நின்று கொண்டிருந்தான். அவனை விரலால் அருகே வருமாறு அழைத்தாள்.

''என்னை வீட்டில் கொண்டு போய் விடு.''

''ஆகட்டும் அம்மா'' என்று ஏறி உட்கார்ந்தவன், திரும்பிப் பார்க்காமலே ''ஸாப்?'' என்று கேட்டான்.

''அவர் அப்புறம் வருவார். நீ நான் சொன்னதைச் செய்'' என்று சற்றுக் கடுமையாக அவள் சொல்லவே, மேலே பேசாமல் காரை உடனே கிளப்பினான் டிரைவர்.



**கொ**லம்பியாவில் ஸான் அண்ட்ரிஸ் கடற்கரையில் 'டாப்லெஸ்' உடை அணிந்து நடந்ததற்காக ஓர் இளம் நடிகைக்கு 500 பிஸோக்கள் அபராதம் விதிக்கப்பட்டதாம். அபராதத் தொகையை அந்த கடற்கரையில் கூட இருந்த இளைஞர்கள் சேர்த்துக் கட்டினார்களாம்.

**ப**டுக்கையில் படுத்துக் கொண்டு மார்போடு தலையணையைத் தழுவி அணைத்த வண்ணம் சாந்தி யோசிக்கத் தொடங்கினாள்.

பெங்களூரில் என்னென்ன நடந்தது? அவளால் ஊகிக்க முடியவில்லை. ஆனாலும் தன்னைப் பற்றிய பல விஷயங்களை ராஜேஷ் தெரிந்து கொண்டு வந்திருக்கிறான். அவற்றை அவனுக்குச் சொன்னவர் யார்? அன்று அவள் சிரமப்பட்டுத் தன்னை மிகவும் அழகாக அலங்கரித்துக் கொண்டு போயிருந்தாள். ராஜேஷுக்குப் பிடித்த உடையை அவன் ஆசைப்படும் விதமாக அணிந்து கொண்டிருந்தாள். அவன் வற்புறுத்தித் தன்னை பால் நடனத்துக்கு அழைத்தாலும் தன் கவர்ச்சியான தோற்றத்தினால் அவனுடைய மனத்தைக் கவர்ந்து விடலாம் என்று அவள் நினைத்திருந்தாள். அதன் மூலம் அவனுடைய மனத்தில் தெளிவு பிறக்கச் செய்யலாம் என்றும் நம்பினாள்.

ஆனால் ராஜேஷ் அவளை எப்படி நடத்தி விட்டான்? 'நீ என்ன அப்படிப் பிறருடன் பழகவே கூசுகிறவளா? அட்கின்ஸனுடன் நீ ஆடுவதில் என்ன தவறு?' என்றல்லவா கேட்டுவிட்டான்?

இதற்கெல்லாம் மாற்று ஒன்றுதான். கொஞ்ச நாட்களுக்கு அவனை விட்டுப்

பிரிந்திருக்க வேண்டும். தன் அணைப்புக்காக அவன் ஏங்கி இருக்க வேண்டும். அவளுக்காக அவன் மனத்தில் அப்போது தான் ஆசையும்,அனுதாபமும் பிறக்கும். அவனே அவளைத் தேடிக் கொண்டு வருவான். அப்போது பார்த்துக் கொள்ளலாம்.

இரவு எத்தனை நேரம் கழித்து வந்தாலும் அவளை எழுப்பாமல் அவன் தூங்க மாட்டான். அவளுடைய இதழ்களில் இதழ் பதித்து 'குட் நைட்' என்று சொல்லாவிட்டால் அவனுக்கு உறக்கம் வராது. ஆனால் அன்று அவன் அவளை எழுப்பவில்லை. காலையிலும் அவளுக்கு முன்பே எழுந்து உலாவப் போய் விட்டான்.

அவன் திரும்பி வந்த போது அவள் தன் பெட்டியில் சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். விதம் விதமான அலங்காரப் பொருட்கள் வைத்திருந்த அவளுடைய அழகு செய்து கொள்ளும் மேஜை காலியாக இருந்தது. அவனுடைய உடைகளுடன் அவளுடைய புடவைகளும் கலந்தாற் போலத் தொங்கும். அவர்களுக்குள்ளே இருக்கும் நெருங்கிய உறவை அது காட்டுவது போல இருக்கும். ஆனால் அவற்றை அந்த 'வார்ட் ரோபி'ல் இப்போது காணோம்.

''உங்களிடம் ஒரு வேண்டுகோள்'' என்று ஆரம்பித்தாள் சாந்தி.

''எனக்குப் புரிந்துவிட்டது. நீ கொஞ்ச நாள் உன் அப்பாவிடம் போய் இருக்கலாம் என்று நினைக்கிறாய். அவ்வளவு தானே? நீ போய் வரலாம்'' என்று தெரிந்தாற்போல ராஜேஷ் சொன்னான்.

அவன் தன்னை இழுத்து வைத்துக் கொஞ்சுவான், 'போகவேண்டாம்' என்று கெஞ்சுவான். தான் ஒப்புக் கொள்ளாமல் 'பிகு' பண்ணிக் கொண்டு எப்படியும் கிளம்பிப் போய்விட வேண்டும் என்றெல்லாம் சாந்தி திட்டம் போட்டிருந்தாள். ராஜேஷ் அவளை அவ்வளவு சுலபமாக ஒதுக்கிவிடுவான் என்று அவள் எண்ணவே இல்லை. அது அவளுக்கு ஏமாற்றமாகவே இருந்தது. அதனால் அவள் பிடிவாதமும் அதிகமாயிற்று.

**மா**லையில் அவன் வீடு திரும்பு முன் சாந்தி புறப்பட்டுப் போய்விட்டாள். ராஜேஷிற்கும் அன்று நிறைய வேலை இருந்தது. வீடு திரும்பும் வரை அவளுடைய ஞாபகமே அவனுக்கு இல்லை. வந்ததும்தான் வீட்டில் அவனுக்காகக் காத்திருக்கும் அவனுடைய சாந்தி 'இல்லை' என்பது ஞாபகத்துக்கு வந்தது. ஒரு யோசனையுடன் அவளுடைய குளியல் அறையில் நுழைந்தவன், அவள் மறந்து விட்டுப் போயிருந்த சோப்புத் துண்டை எடுத்துக் கன்னத்தில் ஒற்றியபடி சிந்தனையில் ஆழ்ந்தான். அவளுடைய மென்மையான மேனியின் மணத்தைப் போல, அந்த சோப்பின் மணமும் அவளுடைய உடம்பில் பட்டதனால் மணப்பது போல அவனுக்குத் தோன்றியது. என்ன வேடிக்கையான கற்பனை?

அவனுக்கும் வைராக்கியம் உண்டு. அவன் லேசில் மசிந்து கொடுக்க மாட்டான். அவளே கூப்பிடும் வரையில் போனில் அழைத்துப் பேசவும் மாட்டான். எவ்வளவு நாள் அவள் வீறாப்பாக இருக்கிறாளோ பார்க்கலாம்... அப்படி ஒரு பிடிவாதத்தில், நான்கு நாட்கள், ஒரு வாரம் கூடக் கழித்து விட்டான்.

**அ**ன்று அலுவலகத்தில் அட்கின்ஸ் அவனை அழைத்து ஒரு முக்கிய வேலைக்காக டில்லிக்குப் போய்வர முடியுமா என்று கேட்டார். அவர் சொன்னது எதையும் அவன் மறுத்ததில்லை. ஆனால் அப்போது அவனுக்கு இன்னொரு யோசனையும் தோன்றிற்று. தன்னோடு சாந்தியையும் அழைத்துக் கொண்டு போனால் என்ன? அவனுடையநண்பர்கள் பலர் அங்கே இருந்தார்கள். அவர்கள் இருவரையும் வருமாறு அழைத்து ஓயாமல் கடிதம் எழுதிக் கொண்டிருந்தார்கள்.

சாந்தியும் அவனுடன் வெளியூருக்கு வந்து நாளாயிற்று. இந்தப் பிணக்கும் தீர்ந்தது போல இருக்கும். தனியே போகும்போது அவர்கள் மனம் விட்டுப் பேச வாய்ப்புக் கிடைக்கும். அட்கின்ஸிடம் போய் வருவதாக ஒப்புக் கொண்டான். 'ஏர் புக்கிங்' செய்யுமுன் சாந்தியைக் கலந்து கொள்வதற்காக அவளுக்கு போன் செய்தான். எப்படிப் பேசுவது, எப்படி ஆரம்பிப்பது என்பதை எல்லாம் அந்த போன் மணி அடிக்கும் வேளையில் அவன் மனம் கற்பனை செய்து கொண்டிருந்தது.

ஒரு மாதமாக லீவிலிருந்த சாரதியை அவன் அலுவலகத்தில் சந்திக்க முடியவில்லை. போனில் பேசும் போது அவருக்கு அவர்களிடையே இருந்த ஊடல் புரிந்தது போலவும் இல்லை. கடைசியில் ராஜேஷ், ''சரி, சாந்தியைக் கொஞ்சம் பேசச் சொல்லுங்கள்'' என்றான்.

''சாந்தியா? அவள் பெங்களூருக்குப் போயிருக்கிறாளே? உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்டார் சாரதி. அதைக் கேட்டதும் அவனுக்கு நெஞ்சில் யாரோ இடித்தது போல இருந்தது.

(தொடரும்)




# 13

The family is the giant shock absorber of the society. It is the place to which the bruised and battered individual returns after doing battle with the world.

—ALVIN TOFFLER.

ராஜேஷ் போனைக் கீழே வைத்து விட்டான். ஆனல் இன்னும் சாரதியின் வியப்பு மிகுந்த குரல் அவன் காதில் கேட்டுக் கொண்டே இருப்பது போலத் தோன்றியது. சாந்தி அவரிடம் தன்னைப் பற்றி எதுவும் சொல்லவில்லை; பெங்க ளூருக்குப் போவதைப் பற்றித் தன்னிட மும் எதுவும் சொல்லவில்லை. ஏன்?

அறைக் கதவை உட்புறம் தாளிட்டு விட்டு வந்து, சுழல்நாற்காலியில் உட் கார்ந்து கொண்டான். கொஞ்ச நேரம் யாருடனும் பேசாமல் நிம்மதியாக இருக்க வேண்டும் போலத் தோன்றியது. சாந்தி உபயோகிக்கும் 'பிரெஞ்சு சென்ட்' ஒன்று அவன் மூக்கில் கலப்ப தைப் போல உணர்ந்தான். கண்களை மூடிக் கொண்டதும் இமைகளுக்குள் அவள் உருவம் நிற்பது போல இருந்தது. அந்த சென்ட்டின் பெயர் அவன் நினைவுக்கு வந்தது. வேடிக்கையான அந்தப் பெயருக்குப் பொருள்-பாவம்-முட்டாள்.

சரியான பெயர்தான் வைத்திருக் கிறர்கள். அவனுக்கும் பொருத்தமானது தான்.

மங்கிய விளக்கு வெளிச்சத்தில் சாந்தி அவன் மார்பின் மேல் சாய்ந்து கொள் ளும் தோற்றம் நினைவுக்கு வந்தது. அறை யின் மற்ற விளக்குகளை எல்லாம் அணைத்துவிட்டு, சிறு விளக்கு ஒன்றை மட்டும் போட்டுக் கொண்டு இருவரும் அப்படி ஒருவர் கையை மற்றவர் பிடித் துக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். அவளுடைய முகம் அப்போது பார்க்க வெகு அழகாக, குழந்தையின் முகம் போல இருக்கும். அன்பும் ஆசையும் ததும்ப அவளை முத்தமிடுவான்.

அந்த முகம் உண்மையிலேயே ஒரு குழந்தை மனத்துக்குச் சொந்தமானதா?

அவனுடைய அணைப்பில் அவள் இருந்த போது, அவள் மனமும் உணர்ச்சிகளும் அவனுக்கு மட்டுமே சொந்தமானதாக இருந்ததா? அப்படியானுல் அவனுக்கு இப்போது இந்தக் கலக்கம் ஏன்?

பெங்களூரிலிருந்து வந்ததிலிருந்தே அவள் அவனிடம் மனம் விட்டுப் பேச வில்லை; வழக்கம் போலப் பழகவும் இல்லை. அவர்களுடைய தனிமையான உறவுகளும் கூட எப்போதும் போலத் தாராளமாக இல்லை. எல்லாவற்றிலும் ஒரு தயக்கம் இருந்தது. சமயம் வரும் போது அவன் சாந்தியைக் கேட்கலாம் என்று இருந்தான். அதற்குள் அவள் அவனை விட்டுத் தந்தையின் வீட்டுக்குப் போய் விட்டாள். இப்போது அவனிடம் சொல்லாமலே பெங்களூருக்கும் போய் இருக்கிருள்.

அதன் பின்னணி, அவளைப் பற்றி அவன் தெரிந்து கொள்ள விரும்பிய ரகசியம், அப்போது அவனையே ஆட்டி வைப்பதைப் போலப் பெரிதாக எழுந்து நின்றது. அதை எதிர்பாராத ராஜேஷ், அதைச் சந்திக்கும் மன வலிமை இல்லாமல் திண்டாடிப் போனுன்.

கதவை மெதுவாக யாரோ தட்டும் சப்தம் கேட்டது. கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, எழுந்து போய்க் கதவைத் திறந்தான்.

''ஸார், ஜி. எம். உங்களைக் கூப்பிடு கிருர்.''

தன் மேஜைக்குத் திரும்பி வந்தான். அங்கே அவனுடைய டைரியும் உள்ளே சாந்தியின் புகைப்படம் ஒன்றும் இருந் தன. பிரித்து வைத்திருந்த அவற்றைப் பையில் போட்டுக் கொண்டு அட்கின் ஸனைப் பார்க்கப் போனுன்.

அட்கின்ஸன் ஏதோ ஒரு ஃபைலைப் புரட்டிக் கொண்டிருந்தார். அவன் போனதும் கண்ணுல் தன் எதிரே உட்காரும்படி ஜாடை காட்டி விட்டுக் கொஞ்ச நேரம் தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தார். பிறகு அடையாளச் சீட்டு வைத்துக் குண்டூசி குத்தியிருந்த ஃபைலை அவனிடம் கொடுத்தார்:

''இந்த சீட்டு வைத்திருக்கும் பக்கங் களைப் படித்து விட்டு வா, ராஜேஷ். நாளைக்கு இருவரும் பேசலாம். இந்த 'டீல்' முக்கியமான ஒன்று.''

ராஜேஷ் ஃபைலை அங்கேயே பிரித்துப் பார்த்தான்.

''இங்கே பார்க்க வேண்டாம். இது கொஞ்சம் சிக்கலான விஷயம். வீட்டிற் குக் கொண்டு போய்ப் படித்துப் பார். ஆனுல் உன் மனைவி உன்னை வீட்டில் இந்த வேலைகளையெல்லாம் பார்க்க விடு வாளோ என்னவோ?'' என்று புன்னகை செய்தார். ராஜேஷ் பதில் பேசாமல் சிரித்துக் கொண்டான்.

''இன்னொரு விஷயம் ராஜேஷ். உன்னை டில்லிக்குப் போகச் சொல்லி இருக்கிறேன் அல்லவா? எனக்கும் அங்கே போக வேண்டிய அவசியம் வந்திருக் கிறது. நான் மார்த்தாவிடம் சொன்னுல், அவளும் வருகிறேன் என்பாள். ஏன், நீயும் சாந்தியை அழைத்துக் கொண்டு வரக் கூடாது?''

ராஜேஷ் அவரை நிமிர்ந்து பார்த் தான். அவன் முகத்தைப் போல அவன் குரலும் கலங்கியிருந்தது: ''ஸாரி, மிஸ்டர் அட்கின்ஸன். இப்போது அவள் எங்கே இருக்கிருள் என்பது கூட எனக்குத் தெரியாது.''

''என்ன? வாட் ஈஸ் தி மாட்டர்?''

''பெங்களூருக்குப் போயிருப்பதாக அவளுடைய தந்தை போனில் சொன் ஞர். என்னிடம் அவள் அதைப் பற்றி எதுவும் சொல்லவில்லை.''

''மிஸஸ் ராஜேஷ், வீட்டில் இல்லையா இப்போது? என்ன விஷயம்? சும்மா ஒரு மாறுதலுக்காகவா?''

''மாறுதலுக்காகத்தான் அனுப்பி னேன். ஆனுல் அவள் ரொம்ப மாறிப் போய் விட்டாள். என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் இதைப் போல அவள் போனதே இல்லை. அதனுல்தான் நான் கொஞ்சம் 'அப்ஸெட்' ஆகி இருக் கிறேன்.''

''என்ன அவசரமோ? சாந்தி அங்கே தானே வேலை பார்த்தாள்? அதன் சம்பந்தமாக ஏதாவது தகவல் வந்திருக் கலாம். அவள் நேரில் தெரிந்து வரப் போயிருக்கலாம். மார்த்தாவிற்குக் கூட இப்போதும் அவளுடைய 'ஏர்வேஸ்' கம்பெனியிலிருந்து ஏதாவது 'என்க்வயரி' வரும். சில சமயம் ஒரு 'செக்', சில சமயம் கண்டிப்பாக ஒரு கடிதம். அவள் இரண்டையுமே 'ஸீரிய'ஸாக எடுத்துக் கொள்வதில்லை'' என்று சிரிக்க முயன்ருர். ஆனுல் ராஜேஷின் முகத்தில் புன்னகை யைக் காணேம்:

''என்ன இது? சிறிய விஷயங்களை எல்லாம் பெரிது பண்ணுகிருய் ராஜேஷ்? 'சீயர்ஃபுல்'லாக இருக்க வேண்டும்.''

''சிறிய விஷயம் இல்லை என்பதுதான் எனக்குக் கலக்கத்தைத் தருகிறது. பத்து நிமிடங்கள் தனியாகப் பேசலாமா?''

''ஓ, எஸ்.'' என்று அட்கின்ஸன் 'பெல்'லை அழுத்தினார். உள்ளே வந்த பியூனிடம் ''அறை வாசலில் சிவப்பு விளக்கைப் போடு. பத்து நிமிடங்கள் யாரும் என்னைப் பார்க்க வேண்டாம்' என்று சொல்லி அனுப்பினார்.

''மிஸ்டர் அட்கின்ஸன், மணமான பிறகு நாங்கள் ரொம்ப சந்தோஷமான ஜோடியாக இருந்தோம். எங்களுக்குள்ளே எந்த ஒளிவு மறைவும் இல்லை. ஒருவரையொருவர் புரிந்து கொண்ட இந்த நிலைமைக்கு உடல் உறவு மட்டும் போதாது என்று நான் நினைத்தேன். உள்ளங்களும் எந்த மறைவுமின்றி ஒன்றிப் போக வேண்டும் என்று நினைத்தேன்.''



அவன் தொடர்ந்து பேசுமுன், அட்கின்ஸன் குறுக்கிட்டார்: ''அது தன்ளுலே வந்துவிடுமே போகப் போக; சில மாதங்கள் ஆன பிறகு, நீயும் சாந்தியும் பெருமைப்படும் பெற்ருேர் ஆன பிறகு?''

''இருக்கலாம். ஆனுல் நான் எண்ணியது வேறு. இருவருக்கிடையேயும் எந்த ரகசியமும் இருக்க வேண்டாம் என்று நினைத்தேன். அதற்காக நான் இதுவரை எழுதிய என்னுடைய அந்தரங்கமான 'டைரி'கள் எல்லாவற்றையும் அவளுக்கு முன்னுல் எடுத்து வைத்து விட்டேன். அவள் அதை ஏற்கவில்லை. இது அவசியமில்லாத குழப்பம் என்று சொன்னுள்.''

''எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது.''

''ஆனுல் நான் அத்துடன் நிற்கவில்லை. அவளைப்பற்றியஅந்தரங்கமானபின்னணி எல்லாவற்றையும் சொல்லும்படி வற்புறுத்தினேன். அந்த சிரமமான வேண்டுகோளை அவளால் லேசில் ஜீரணிக்க முடியவில்லை. பேசிப் பார்த்த பிறகு அவள் பெங்களூரில் வேலை செய்த இடம் மட்டும் தெரிந்தது. போன தடவை பெங்களூர் போன போது அங்கே போய் விசாரித்தேன்.''

''ஓ, வாட் ஈஸ் திஸ்? உன்னுடைய 'ஸ்வீட் ஹார்ட்'டின் மேல் உனக்கு சந்தேகமா?''

''சந்தேகம் இல்லை. தெரிந்து கொள்ள வேணும் போல ஒரு ஆவல். ஆனுல் நான் எதையும் கேட்கவில்லை. தாமாகவே தகவல்கள் என் காதில் விழுந்தன. என் மனம் அதனுல் ஓரளவு கலங்கிப் போயிற்று. அதைப் பற்றி சாந்தியிடம் கேட்க இருந்தேன். அதற்குள் சாந்தி என் பேச்சிலும், செயலிலும் ஏதோ குற்றம் சொல்லிவிட்டு அப்பா வீட்டிற்குப் போய் விட்டாள். இப்போது எனக்குத் தெரியாமலே பெங்களூர் போயிருக்கிருள். ஏன் அப்படிச் செய்தாள்?''

''உன்னுடைய செய்கைதான் காரணம். நீ ஏதோ சந்தேகப்படுகிருய். அவள் உன் சந்தேகத்தின் அடிப்படையை புரிந்து கொள்ளப் போயிருக்கிருள். நீ எதற்காக அவளுடைய பின்னணியைக் கிளறித் தெரிந்து கொள்ள விரும்புகிருய்?''

''ஒரு க்யூரியாஸிடி;அவ்வளவுதான்.''

''க்யூரியாஸிடி? அவள் உன் மனைவி ராஜேஷ்! இது உங்களுடைய அந்தரங்கமான வாழ்க்கை. துப்பறியும் நாவல் படிக்கவில்லை நீ இப்போது. உன்னிடம் தன்னையே கொடுத்து விட்ட ஒரு பெண்ணின் வாழ்க்கையோடு விளையாடுகிருய். என்னைப் பார். எனக்கு முன் மர்த்தா இன்னொரு வாலிபனுடன் வாழ்ந்தவள். அவர்களுக்குள்ளே உடல் உறவும் கூட இருந்தது. ஒரு குழந்தை- அவனுடைய குழந்தை-அவள் வயிற்றில் தோன்றி வெளி வராமல் மறைந்து விட்டது. நான் அதைப் பற்றி நினைப்பதில்லை. மர்த்தா என் அணைப்பில் என்னேடு கலந்து நிற்கும்போது நான், 'இதேபோல இன்னொருவர் அணைப்பில் அவள் இருந்திருப்பாளே?' என்று நினைத்ததே இல்லை. அது வேறு மர்த்தா. இப்போது அவள் என்னுடையவள். அந்தப் பெருந்தன்மை எனக்கு இருந்தால்தான் நான் கணவன். இல்லாவிட்டால் வெறுமனே அவள் அழகை நாடும் 'லவர்'; அவ்வளவு தான்.''

''மிஸ்டர் அட்கின்ஸன்! யூ ஆர் ரியலி கிரேட்'' என்ருன் ராஜேஷ் பிரமிப்புடன்.

''கிரேட்? அப்படி ஒன்றும் இல்லை. பண்புகள் நம்முடன் பிறப்பதில்லை. நாமாக நம்முடன் வளர்த்துக் கொள்பவைதாம் அவை.''

''அப்படிச் சொல்ல முடியாது. உங்களைப் போன்ற பெருந்தன்மையான மனம் லட்சத்தில் ஒருவருக்குத்தான் இருக்கும். அதுவும் இந்தியாவில் கோடிப் பேருக்கு ஒருவரிடம்கூட இருக்காது. நான் இங்கே பிறந்தவன். இங்கே உள்ள சம்பிரதாயங்களில் ஊறிப் போனவன். ஆனுல் அவற்றையும் சரியாகப் புரிந்து கொள்ளாதவன். உங்கள் வாழ்க்கை முறையைப் பார்த்து அதைக் கடைப் பிடிக்க ஆசைப்படுகிறவன். ஆனுல் அதையும் ஏற்றுக் கொள்ள முடியாமல் தவிக்கிறேன்.''

''ஓ. நீ ரொம்ப அலட்டிக் கொ[illegible]கிருய். சாந்தி ஈஸ் எ நைஸ் கேர்ல். அவளை நீ ஒரு மென்மையான மலரைப் போல நினைத்துப் பழக வேண்டும்; அவ்வளவுதான். பெங்களூரிலிருந்து வந்த பிறகு அவளிடம் எதுவும் கேட்காதே. அவள் மேல் நீ சந்தேகப் படுகிருய் என்ற நினைப்பின் நிழல் கூட அவள் மேல் விழக்கூடாது. அதை அவள் பொறுத்துக் கொள்ள மாட்டாள். அவளாகவே உன்னிடம் சரியாகப் பழக ஆரம்பித்து விடுவாள் பார். உன்னைப் போல அவளுக்கும் பொறுப்பு உண்டு. உன்னைப் போல நினைக்கவும்

செய்யவும் அவளுக்கும் சுதந்திரம் உண்டு. நீ அவளைப் பற்றி அங்கே விசாரித்தாய், பேசினாய். நீ என்ன விசாரித்தாய், என்ன பேசினாய் என்பதைத் தெரிந்து கொள்ள அவள் போயிருக்கிறாள். அவளுக்கும் க்யூரியாஸிடி. அத்துடன் விடு. ஒன்றையொன்று 'கான்ஸல்' செய்து விட்டது.''— அட்கின்ஸன் எழுந்து மேஜையைச் சுற்றி வந்து அவனுக்கு முன் மேஜை மேல் உட்கார்ந்து கொண்டார். அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்தார். அவருடைய பேச்சிலும், எளிய சுபாவத்திலும் அவன் மனம் லேசானதைப் போல இருந்தது:

''சரி, இங்கே பார். நாம் மூவரும் டில்லிக்குப் போகலாம். இந்த 'சீஸனில்' டில்லி நன்றாக இருக்கும். நாளை மறுநாள் பௌர்ணமி. அன்றைக்கு ஆக்ராவில்

அட்கின்ஸன் சொன்னதைப் போலவே டில்லி அந்த சீஸனில் பார்க்க மிக அழகாக இருந்தது.

அங்கே கன்னாட் சதுக்கத்தை ஒட்டி அமைந்திருந்த கடைகளில் நேர்த்தியான கைவேலைப் பொருட்களையும், வேலைப்பாடமைந்த அழகுச் சாதனங்களையும் தேர்ந்து வாங்கினாள் மர்த்தா. அப்போதெல்லாம் ''சாந்தி நம்முடன் வரவில்லையே? வந்திருந்தால் எனக்கு உதவியாக இருந்திருப்பாளே?'' என்று அடிக்கடி அவள் சொல்லிக் கொண்டாள்.

ராஜேஷும் அப்படி அடிக்கடி நினைத்துக் கொண்டான். அவளுடைய சாமர்த்தியத்தைப் பற்றி மர்த்தா உயர்வாகப் பேசும்போதெல்லாம், அவன் மனத்தில்

---

## இப்படி ஒரு புத்தகம்



'சோம்பேறி செல்வனாக வழி' என்று ஒரு புத்தகம். நாற்பத்தெட்டு வயதான ஜோகார்போ என்னும் அமெரிக்கர், பத்து டாலர் விலையுள்ள இந்தப் புத்தகத்தை எழுதி, தானே விற்பனை செய்கிறார். இதுவரை சுமார் ஒன்றரை லட்சம் பிரதிகள் விற்று விட்டாராம்!

சென்ற பத்தாண்டு காலமாக, தபால் மூலம் பல ஆயிரம் பேருக்கும் புத்தக விற்பனை செய்து வந்தவர் ஜோ கார்போ; இப்போது மற்றவர்களும் அவ்வாறு தபால் மூலம் வியாபாரம் செய்யலாம் என்னும் கருத்தைத் தான் 'சோம்பேறி செல்வனாக வழி' என்று புத்தகமாக எழுதியிருக்கிறார். 'ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு திறமை இருக்கும். அது என்ன என்பதைக் கண்டுபிடித்து, வளர்த்து வர வேண்டும்' என்கிறார், இந்த ஆண்டு தமக்கு ஐந்து லட்சம் டாலர் வருவாய் எதிர்பார்க்கும் கார்போ.

—டி. எஸ். வி.

---

'தாஜ்' பார்க்க ரொம்ப அழகாக இருக்கும். உன்னுடைய வேலையை நான்கு நாட்களுக்கு அப்புறம் டில்லியில் தொடங்கலாம். அதற்கு முன் கொஞ்சம் 'ரிலாக்ஸ்ட்' ஆக இரு. என்ன?''

''ஆகட்டும் மிஸ்டர் அட்கின்ஸன். ஹெலன்'ஸுக்கு போன் செய்கிறேன்'' என்று பையில் கையை விட்டு இழுத்தான். அவன் அங்கே வைத்திருந்த சிறு டைரி வெளியில் வந்தது. அதிலிருந்து சாந்தியின் புகைப்படமும் நழுவிக் கீழே விழுந்தது.

''ஓ! ஆபீஸிலும்கூட அவளுடைய படத்தைப் பையில் வைத்துக் கொண்டு அவள் ஞாபகமாகவே இருக்கிறாய். இதில் அவள் மேலே கோபம் வேறேயா உனக்கு?'' என்று அவனிடம் சண்டை பிடிப்பது போல முஷ்டியை மடித்துக் காட்டினார் அட்கின்ஸன். அவனுக்கும் சிரிப்பு வந்து விட்டது இப்போது.

பெருமிதம் ததும்பியது. ஆனால் கூடவே சாந்தி அவனை ஒதுக்கிவிட்டுப் போனதும், சொல்லாமலே பெங்களூருக்குப் போனதும் நினைத்துக் கொண்ட போது, கோபமும் வந்தது.

மறு நாள் அவர்கள் தாஜ்மகாலைப் பார்க்க ஆக்ராவுக்குப் போவதாகவும் இருந்தது. வெண்ணிலவில் தாஜ்மகாலின் தோற்றத்தைக் கற்பனை செய்தபடி ராஜேஷ், கண்ணாடியின் முன்னால் நின்று தலையை வாரிக் கொண்டிருந்தான். அப்போது அதில் தன் பிம்பத்துக்குப் பதில் சாந்தியின் உருவமே அவனுக்குத் தெரிவது போல இருந்தது.

பெங்களூரில் கண்ணாடியின் முன்னால் நின்று கூந்தலைப் பந்து போல முடிந்து கொண்டு நின்ற சாந்தி, தன் முன் நின்ற பிம்பத்தைப் பார்த்தாள். அங்கே



''பார்த்து ரொம்ப நாளாச்சு. உங்க பேரு எனக்கு மறந்து போச்சு!...நீங்க கோதண்டராமன் தானே...?''

ராஜேஷின் உருவம் தெரிவது போல அவளுக்குத் தோன்றியது.

அவள் பெங்களூருக்கு வந்து நான்கு நாட்கள் ஆகிவிட்டன. ஒரு தடவை அவள் தான் வேலை செய்த அலுவலகத்துக்குப் போய் விட்டு வந்திருந்தாள். ஆனால் அங்கே பாலிகா இல்லை. ஹெக்டேயை மட்டும் சந்திக்க முடிந்தது. ஆனால் அலுவலகத்தில் அவனிடம் எதுவும் பேச அவள் விரும்பவில்லை. அதனால் அன்று, விடுமுறை நாளில் அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துப் போவதாக அவன் சொல்லியிருந்தான்.. அவளும் தான் தங்கியிருந்த ஓட்டல் அறையின் விலாசத்தைக் கொடுத்திருந்தாள்.

அப்போது ஹெக்டே வரும் நேரம். அவனுடன் பேசவும் அவளுக்கு விருப்பமில்லை. ஆனால் இப்போது அவனுடன் காரில் வீட்டுக்குப் போக வேண்டியிருக்கிறது. அந்தக் குழப்பத்துக்கு ராஜேஷ் அல்லவா காரணம்? அவன் பெங்களூருக்கு வந்து அந்தக் கலக்கத்துக்கு ஒரு பின்னணியை ஏற்படுத்தியிராவிட்டால்?

அப்படி நினைத்தபோதுதான் அவளுக்கு ராஜேஷின் உருவம் கண்ணாடியில் தெரிவதுபோன்ற பிரமை உண்டாயிற்று. அவர்களுடைய அறையில் அவள் அப்படித்தான் அலங்காரத்தை முடித்துக் கொண்டு அழகு பார்க்கும்போது, ராஜேஷ் அவளைத் தேடி வருவான். 'இன்னும் எவ்வளவு நேரம் சாந்தி?' என்று பொறுமை இழந்து அவளைத் தூண்ட வருபவன் கண்ணாடி முன் நிற்பவளைப் பார்த்ததும், முகம் மாறிப் பின்புறமாக வந்து அவள் இடையைச் சுற்றிப் பின்னி அணைத்துக் கொள்வான். அவள் முகத்தோடு முகம் வைத்து அப்படியே இதழ் முத்திரையைப் பதிக்க முயலுவான்.

''போதும். அப்புறம் நானும் பதிலுக்குச் செய்து விடுவேன். உங்கள் கன்னத்தில் என் 'லிப்ஸ்டிக்' உதட்டின் உருவத்தை 'ஸ்டாம்ப்' போட்டு விடும். ஆமாம்'' என்று சொல்வாள்.

அவளுடைய ராஜேஷ் சுபாவத்தில் குழந்தைதான். அவளை முழுவதும் கவர்ந்தவன்தான். அவனால் தீவிரமாகக் கோபித்துக் கொள்ளவே முடியாது. ஆனால் பிடிவாதம் ரொம்ப அதிகம். அவன் சொன்னபடி செய்யவில்லை என்றால், வம்புதான். அந்தப் பிடிவாதம் இனிமையானதாக இருக்கும்போது, அவள் தன்னையே அவன் கையில் முழுவதும் விட்டுக் கொடுத்து விடுவாள். ஆனால் சிக்கல்களை ஏற்படுத்தும் போது!

ராஜேஷிடம் அனுமதி கேட்டிருந்தால் அப்போது பெங்களூருக்கும் கூட வந்திருக்க முடியாது. அப்படிக் கேட்கவில்லை என்பதை அப்பாவிடமும் சொல்லவில்லை அவள். சொல்லியிருந்தால் அவரும் அனுமதித்திருக்க மாட்டார்.

'பூம்...பூம்' என்ற 'ஹார்ன்' சத்தம் கேட்டதும் தன் நினைவுகளிலிருந்து மீண்டு, ஜன்னல் ஓரமாக வந்து சாந்தி எட்டிப் பார்த்தாள்.

கீழே ஹெக்டேயின் கார் நின்று கொண்டிருந்தது. மாடிப்படியில் ஹெக்டே ஏறிவரும் சத்தமும் கேட்டது. அவன் தன் அறைக்குள் வரும் சந்தர்ப்பத்தை விரும்பாதவளாக சாந்தி, கைப்பையை எடுத்துக் கொண்டு அறையை அவசரமாகப் பூட்டிக் கொண்டு கிளம்பினாள். அவள் 'மளமள' வென்று படிகளில் இறங்கியபோது, மேலே ஏறி வந்த ஹெக்டே அவள் மீது இடிப்பது போல வந்து நின்று, சட்டென்று ஒதுங்கினான்.

''குட் ஈவினிங் சாந்தி'' என்று சொன்னவன், அவளை மேலிருந்து கீழ் வரை கண்ணால் அளந்துவிட்டு, ''யு லுக் ஸோ லவ்லி'' என்று கண்ணைச் சிமிட்டினான். அவள் கையைப் பற்ற அவன் கை நீண்டது. சாந்தி சற்று இறுகிய குரலில், ''முதலில் சரியாக நடந்து கொள்ளக் கற்றுக் கொள்ளுங்கள்'' என்று அவனைக் கண்டிப்பது போலச் சொன்னாள்.

அதைக் கேட்டதும் அவன் முகத்தில் வெறுப்பு பெருகிற்று. ஆனால் சாந்தி தன்னைக் கவனிப்பதற்குள் அதை வேகமாக மறைத்துக் கொண்டு படிகளில் இறங்கினான். (தொடரும்)




# 14

It is generally agreed that society is at cross road. But there is a difference of opinion as to what the signposts say.

—HARRY TURNER.

**சா**ந்தி, ஹெக்டேயுடன் காரில் ஏறினாள். இன்னும் அவள் மனத்தில் கொந்தளிப்பு அடங்கவில்லை.

''முன்னால் என் பக்கத்தில் உட்கார்ந்து கொள்வதுதானே சாந்தி?''

''இது போதும். பின்னாலேயே உட் காருகிறேன். ராஜேஷ் ஒருவருடன்தான் நான் காரில் முன்புறம் உட்காருவேன் இப்போதெல்லாம்.''

''நீ ரொம்ப மாறிவிட்டாய் சாந்தி. அந்த நாளில் 'ஃப்ரீ பேர்ட்' ஆக இருந்த போது எவ்வளவு கவர்ச்சியாக, ஆனந்த மாக இருப்பாய்? எனக்கும்கூட அந்த மகிழ்ச்சியில் பங்கு கிடைத்ததே? எவ்வ ளவு சிக்கிரம் நீ எல்லாவற்றையும் மறந்து விட்டாய்?''

''மறக்கவில்லை, ஆனால் மறந்துவிட முயன்று கொண்டிருக்கிறேன். அப்போது தான் என்னுடைய இப்போதைய வாழ்க்கையின் மகிழ்ச்சி நிலைக்கும். கணவரின் அன்பையும் நம்பிக்கையையும் பெற முடியும். ராஜேஷ் உங்களைப் பார்ப்பதற்கு வந்தாரா? அதைப் பற்றிப் பேசுவோம் இப்போது.''

''ஆபீசிற்கு வந்தார். கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தார். உன்னைப் பற்றி என்னிடமிருந்து தெரிந்து கொள்ள அவருக்கு ஆவல். ஆனால் அதை 'ப்ளெயின்' ஆகக் கேட்டிருக்கலாம்.''

''ஏன்?''

''அவர் உன் கணவராக என்னைச் சந்திக்கவில்லை. உன் நண்பர் என்றுதான் சொல்லிக் கொண்டார். நீ வேலையை விட்டதும், பம்பாய்க்குப் போய்விட்ட தும் கூடத் தெரியாததுபோல நடித்தார். அப்போதுதான் வெளிநாட்டிலிருந்து திரும்பியதாகவும், உன்னைப் பற்றிய தகவல்களைத் தெரிந்துகொள்ள விரும்புவ தாகவும் கூறினார்.''

மணியன்

''ஈஸ் இட்?'' என்று அதிர்ந்து போய்க் கேட்டாள் சாந்தி. அவளால் அப்படி ஒரு நிலையைக் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை.

ராஜேஷ் இப்படி யெல்லாம் ஒரு நாடகம் ஆட வேண்டிய அவசியம்? அவளை மணந்து கொண்டவர், அவளுக்குத் தெரிந்த பிறரிடம், அவளுடைய நண்பர் என்று சொல்லிக் கொள்வதா?... அப்படிப் பேசி, அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள நினைப்பதா? என்ன அநாகரிக மான செயல்?

ஹெக்டே அவளைத் திரும்பிப் பார்த்தான். அவளுடைய முக பாவனையிலிருந்து அவள் மன நிலையைப் புரிந்து கொண்டான். சாந்தியின் அனுதாப உணர்ச்சிகளைத் தன்வசப்படுத்திக் கொள்ள, இது தான் சந்தர்ப்பம் என்று எண்ணினான்.

''ஆமாம் சாந்தி, எப்படி அவர் அந்த மாதிரி நடந்து கொள்ளலாம்? இஸ் ஹி எ ஜெண்டில்மேன்? தன் மனைவியைப் பற்றி இப்படிப் பிறரிடம் பேசலாமா? அதுவும் உன்னைப் போன்ற ஒரு மனைவியைப் பற்றி?''

''எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கிறது. அவர் இப்படிச் செய்வார் என்று நான் நினைக்கத்தான் இல்லை'' என்று கைகளால் முகத்தை மூடிக் கொண்டாள் சாந்தி.

''உன்னுடைய மதிப்பு என்ன? எவ்வளவு உயர்வான பெண் நீ? உன்னை மனைவியாக அடையும் அருகதை இருப்பவரானால், இப்படி நடந்து கொள்வாரா? நீ அவசரப்பட்டு விட்டாய் சாந்தி.''

சாந்தி வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டாள். ''நோ, மிஸ்டர் ஹெக்டே. அப்படி எதையும் பேசாதீர்கள். என்னால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியாது. என் கணவரைப் பற்றி என் முன்னால் யாரும் சிறிதும் தப்பாகப் பேசுவது எனக்குப் பிடிக்காது. என்னைப் பற்றி எந்த அபிப்பிராயமும் கொள்வதற்கு அவருக்கு உரிமை உண்டு'' என்றாள்.

''ஐ ஆம் ஸாரி சாந்தி. நான் ஒன்றும் பேசவில்லை'' என்று சட்டென்று குரலை மாற்றிக் கொண்டான்: ''ஆனாலும், உனக்கு என் அனுதாபங்கள். உனக்கு ராஜேஷைவிட இன்னும் பெருந்தன்மையாக நடந்துகொள்ளும் கணவர் கிடைத்திருக்கலாம். எனக்கு இப்படி ஒரு மனைவி கிடைத்திருந்தால், இதயத்தில் தாங்கிப் பூஜை செய்திருப்பேன். உம்... எனக்குக் கொடுத்து வைக்கவில்லை'' என்று பெருமூச்சு விட்டான்.

சாந்தி பதில் சொல்லவில்லை. அவள் மனம் இன்னும் ராஜேஷின் விநோதமான சுபாவத்தையே நினைத்துக்கொண்டிருந்தது. அவளுடைய மௌனத்தை ஹெக்டே, தனக்குச் சாதகமான ஓர் உணர்ச்சியாக எண்ணிக் கொண்டான். அவளுடைய மனநிலை அப்படி இருக்கும் போதே, மேலும் பேச விரும்பினான்:

''நாம்இருவரும் பிருந்தாவன்கார்டன் ஸுக்குப் போனது நினைவிருக்கிறதா சாந்தி? எவ்வளவு மகிழ்ச்சியாக, உல்லாசப் பறவையாகப் பழகுவாய் நீ. உன் பேச்சில்தான் எவ்வளவு குறும்புத்தனம்? எப்போதும் புன்சிரிப்புத் தவழும் முகம்! ஓ...! அந்த இன்பகரமான நாட்கள்...'' என்றான் ஏங்கும் குரலில்.

அந்தப் பேச்சு சாந்தியின் மனத்தில் ஒரு லேசான திகிலையே ஊட்டிற்று. அதை யெல்லாம் ராஜேஷிடமும் சொல்லியிருப்பானோ ஹெக்டே? அவர்கள் ஓரளவு சுதந்திரமாகப் பழகியது உண்மைதான். ஆனால் அவன் இப்போது பேசும் விதமாகச் சொல்லியிருந்தால், ராஜேஷ் என்ன நினைத்துக் கொண்டிருப்பான்?

''அதையெல்லாம் மறந்து விடுவது தான் நல்லது மிஸ்டர் ஹெக்டே. உங்களிடம் வேறு என்ன கேட்டார் என் கணவர்?.. நீங்கள் என்னென்ன சொன்னீர்கள்?''

''உன்னைச் சந்தித்து 'என்ன இப்படி மறந்துவிட்டாயே?' என்று கேட்க வந்தாராம். நீ இல்லையாம். அது அவருக்குப் பெரிய ஏமாற்றமாம். நானும் விளையாட்டாகச் சொன்னேன்: 'சாந்தி பழகுவதும் மின்னல் வேகம்தான்; மறப்பதும் மின்னல் வேகம்தான்.' அத்துடன் உன்னைப் பற்றி இன்னொன்றும் சொன்னேன்.''

சாந்தி வியப்புடன் 'என்ன அது?' என்று கேட்பது போல் தலை நிமிர்ந்து பார்த்தாள்.

''சாந்தி ரொம்பப் பிடிவாதமான பெண். உங்களுக்குத் தெரிந்திருக்கும். 'ஃப்ரீயாகப் பழகினாலும் இஷ்டம் இல்லை என்றால் இல்லைதான். எதற்கும் அவளை வற்புறுத்த முடியாதுதான்' என்று சொன்னேன்.'' —இப்படிக் கூறிவிட்டு ஹெக்டே அவளைப் பார்த்து விஷமமாகக் கண்ணைச் சிமிட்டிச் சிரித்தான். அவளுக்கு மனத்தில் வெறுப்பு பொங்கிற்று. ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ள முடியாமல் தவித்தாள்.

கார் 'கப்பன் பார்க்' வழியாகப் போயிற்று. ஹெக்டே ஒரு நிமிடம் காரை நிறுத்தினன்: ''கொஞ்ச நேரம் இங்கே உட்கார்ந்து விட்டுப் போகலாமே சாந்தி? எத்தனை நாட்களாயிற்று நாம் இப்படித் தனியாக வெளியே வந்து?... உனக்கும் அப்படித் தோன்றவில்லையா?''

''இல்லை, தோன்றவேயில்லை. நீங்கள், பாலிகா, நாகராஜ் போன்றவர்கள் என் நினைவில் கூட இல்லை இப்போது. நான் இப்போது எல்லாவிதத்திலும் ராஜேஷ் ஒருவருக்குத்தான் சொந்தமானவள். ஒரு பெண் தன்னுடைய வாழ்க்கையில் மணம் செய்து கொள்வதற்கு முன்



எல்லா 'ஃபன்'(Fun)னையும் அனுபவிக்கலாம். ஆனல் மணமான பின் எல்லாம் 'ஓவர்'!'' என்ருள்.

அவளுடைய பேச்சு ஹெக்டேயின் மனத்தில் ஏமாற்றத்தை விளைவித்தது. ''ஓ. நான் எதற்கும் உன்னை வற்புறுத்த மாட்டேன் சாந்தி. 'லெட் அஸ் கோ''' என்று காரைக் கிளப்பினன். கொஞ்ச நேரம் இருவரும் பேசவேயில்லை. மறுபடி சாந்தியே அவனிடம் கேட்டாள்:

''ராஜேஷின் சுபாவத்தைப் பற்றி என்ன ஊகிக்கிறீர்கள் மிஸ்டர். ஹெக்டே?''

''அவர் உன் மீது வைத்திருக்கும் நம்பிக்கை முழுமையாக இல்லை போலத் தோன்றுகிறது. அதே சமயம் உன்னிடம் கொள்ளை ஆசையும் இருக்கிறது அவருக்கு. உன்னைப் பற்றித் தெரிந்து கொள்ளவே விரும்புகிருர். ஆனல், அந்த உண்மைகளை அதன் சுய வடிவில் ஏற்றுக் கொள்ளும் தைரியம் அவருக்கு இல்லை. வேடிக்கைதான்! இத்தனை நாள் அவரைப் போன்ற ஒரு 'பாச்சிலர்', ஒரு முனிவரைப் போல வாழ்க்கை நடத்தி இருப்பாரா? அவருடைய வாழ்க்கையில் ஆசாபாசங்கள் இருந்திருக்காதா? எத்தனையோ நிகழ்ச்சிகள் நடந்திருக்காதா? பல பேருடன் நெருக்கமாகப் பழகி இருக்கமாட்டாரா? அவற்றையெல்லாம் நீ தெரிந்து கொள்ள நினைக்கிருயா? அவரும் அதைப் போல ஏன் பெருந்தன்மையாகப் போய்விடக் கூடாது?''

முதல்தடவையாக சாந்திக்கு ஹெக்டேயின் மீது ஒரு மதிப்பும் பரிவும் இப்போது உண்டாயிற்று. 'எவ்வளவு சரியாகச் சொல்லிவிட்டான் ஹெக்டே? அவளுடைய மண வாழ்க்கையில் இன்று நெருடிக் கொண்டிருக்கும் முள்ளை எவ்வளவு கணக்காகப் பார்த்துக் கண்டு பிடித்து விட்டான்? ஆபீஸ் விவகாரங்களில் அவனுடைய புத்திசாலித்தனத்தை அவள் கண்டு வியந்ததுண்டு! இப்போது பொதுவாகவே அவனுடைய கூர்மையான பார்வையையும் கண்டு அவளுக்கு வியப்பு ஏற்பட்டது.

''போகப் போக எல்லாம் சரியாகி விடும் என்று நினைக்கிறேன் மிஸ்டர் ஹெக்டே. மணமான புதிதில் ஒருவரை ஒருவர் நன்ருகப் புரிந்து கொள்ளும்வரையில் ஏற்படும் சிறு சஞ்சலம்தான் இது என்று நினைக்கிறேன். மொத்தத்தில் அவர் நல்ல மனிதர்.''

''ஆல் தி பெஸ்ட் சாந்தி. உன் நல்வாழ்வில் எனக்கு என்றும் அக்கறை உண்டு. உனக்காக நான் எந்த உதவியும் செய்வேன். ஹெக்டே என்று ஒரு வாலிபன் உன் வாழ்க்கையில் இடம் பெற்றிருந்ததை நீ எளிதில் மறந்து போகலாம். ஆனல் என்னல் அவ்வளவு சீக்கிரம் மறந்துவிட முடியாது.''

அவள் கண்களை மூடிக் கொண்டாள். ஹெக்டேயும் அவளும் பிருந்தாவன் கார்டன்ஸில் உலாவப் போன நினைவுகள் அவள் மனத்தில் உலாவின. அவளுடைய பேச்சை மிகவும் ரசித்துப் பாராட்டுவான் ஹெக்டே. கைகளில் அழகான நகம் முதல், எடுப்பான அவளுடைய 'பர்ஸனலிட்டி'வரை, ஒவ்வொன்றையும் அனுபவித்துப் பாராட்டுவான். இருவரும் எங்கேயாவது போக நினைத்தாலும் அவள் என்ன சொல்கிருளோ அப்படித் தான் நடப்பான். நல்ல நாள், பண்டிகை நாள் என்று வந்து ஒட்டலுக்குப் போக நேர்ந்தால், அவள்தான் 'ஸ்வீட்'டுக்கு ஆர்டர் கொடுப்பாள். எல்லாம் அவள் சொன்னபடிதான்.

சாந்தி அங்கே வேலைக்குச் சேர்ந்த புதிதில் அவனுடைய கம்பீரம், நயமான பேச்சு, வேலை பார்க்கும் சாமர்த்தியம் எல்லாவற்றையும் கண்டு பிரமித்துப் போனள். தன்னை யறியாமல் அவளுக்கு அவனிடம் ஒரு பிரமைகூட உண்டாயிற்று. ரொம்ப நாளைக்கு ஹெக்டேயை



**தந்தை:** கண்ணு... ராத்திரி பயமாயிருந்தா 'அப்பா'ன்னு ஒரு குரல் கொடு... நான் அம்மாவை எழுப்பி அனுப்பறேன்...!

ஒரு 'மணமாகாத வாலிபன்' என்றே அவள் நினைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் ஒரு நாள், சினிமாவில் அவனுடைய மனைவியுடன் அவன் அமர்ந்திருப்பதைப் பார்த்து விட்டாள். அன்று இரவு ஏதோ ஓர் ஏமாற்றத்தில் அவள் கண் கலங்கியதும், சாப்பிடாமலே படுத்துக் கொண்டதும்......

அது ஒரு 'சீரிய'ஸான உணர்ச்சி இல்லைதான்! வாழ்க்கையில் எவ்வளவோ பாலங்களைக் கடந்து வருகிறோம். அவற்றில் அதுவும் ஒன்று, அவ்வளவுதான். ஆனால் ஒரு சந்தர்ப்பம் நேர்ந்திருந்தால்— ஹெக்டே மணமாகாத வாலிபனாகவே இருந்திருந்தால்— ராஜேஷ் அவளிடம் கேட்டதைப் போல அவனும் நெருங்கிக் கேட்டிருந்தால்-அவள் என்ன பதில் சொல்லியிருப்பாள்? 'சரி' என்று தலையை அசைத்துப் புன்னகை செய்திருப்பாளோ? இந்நேரம் வேறு ஓர் உரிமையுடன் அவனுடன் காரில் போய்க் கொண்டிருப்பாளோ?

சே! எத்தகைய பவித்திரமில்லாத நினைவுகள்? அப்படிப்பட்ட ஒரு சிந்தனைக்கும் கூட இப்போது இடம் இல்லை. அதைப் போன்ற ஒரு சந்தர்ப்பத்தை இப்போது நினைப்பதும் கூட அர்த்தமில்லாதது.

''வீடு வந்தாயிற்று சாந்தி. உன்னுடைய சிந்தனைகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு இறங்கலாம்'' என்று காரின் வேகத்தை ஹெக்டே மெல்ல மெல்லக் குறைத்தான். எண்ணங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, கண்ணைத் திறந்தாள் சாந்தி. கார் 'காம்பவுண்டு கேட்'டின் அருகே போய் நின்றது. அதைத் திறப்பதற்கு ஹெக்டேயின் மனைவி ஓடி வந்தாள். அவள் பின்னாலேயே அவர்களுடைய இரண்டாவது குழந்தை, அழகான இரண்டு வயதுச் சிறுவன், கையை உயர்த்திச் சிரித்தவாறு தள்ளாடி நடந்து ஓடி வந்தது.

அந்தப் பூந்தோட்டம், மிஸஸ் ஹெக்டேயின் மலர்ச்சியான முகம், அந்த அழகான குழந்தை எல்லாவற்றையும் பார்த்தபோது, அவள் மனத்தில் ஓர் அபூர்வ நிம்மதி உண்டாயிற்று; கூடவே ஓர் ஏக்கமும் பிறந்தது.

'எவ்வளவு அழகான குடும்பம்? எவ்வளவு நிம்மதியான, இன்பமான சூழ்நிலை? அவளுக்கு ஏன் இப்படி நேரவில்லை? ஹெக்டே அப்படி ஒன்றும் தன் மனைவியைத் தவிர வேறு பெண்களைக் கண்ணெடுத்தும் பாராதவன் அல்ல.



டாக்டர்: இன்னும் ஒரு வாரத்துக்கு ஸ்கூல் போக வேண்டாம்னு சொல்லியிருக்கேன்....உங்க பையன் இப்பவே எழுந்து உட்கார்ந்துடுவான்...!

அவனிடமே நெருங்கிப் பழகியிருக்கிறாள். அவளுடைய மனத்தைக் கவருவதற்கு, தனக்கு மணமான செய்தியைக் கூட மறைத்திருக்கிறான். சந்தர்ப்பம் அமைந்தால் எந்தப் பெண்ணையும் ஏற்றுக் கொண்டு விடுவான். வெளிப்படையாகச் சொல்லப் போனால் ஒரு 'ஹிபோக்ரிட்' — வேஷக்காரன். ஆனாலும் என்ன? அவனுடைய மறு பிம்பங்களைப் பற்றி அவன் மனைவி கவலைப்படவில்லை. தனக்கே உரிய கணவனாக மட்டும்தான் ஹெக்டேயை நினைக்கிறாள். அவளுடைய மனத்தில் வேறு எந்த சஞ்சலமும் இல்லை. வேறு எதையும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலும் இல்லை. ரகசியங்களைத் தேட வேண்டும் என்ற தீவிரமும் இல்லை. அவர்களுடைய நிம்மதியான குடும்ப வாழ்க்கையின் இரகசியமே அதுதான்.'

சாந்தியின் மனத்தில் தன்மீதே ஓர் இரக்கம் பிறந்தது. கண்ணில் நீர் பொங்கி வந்தது. கைக்குட்டையினால் ஒற்றிக் கொண்டாள். கார் வீட்டினுள் நுழைந்து, 'போர்டிகோ'வில் நின்றது. ஹெக்டே கீழே இறங்கி, சுற்றி வந்து அவளுடைய பக்கத்துக் கதவைத் திறந்து விட்டான்.

சாந்தி அவனுடன் முன்னால் உட்கார்ந்து வந்திருந்தால், வீட்டுக்கு வருவதற்கு முன், பின் 'ஸீட்'டுக்கு இறங்கி மாற்றிக் கொண்டிருப்பாள். அவனுடைய மனைவிக்கு முன் அப்படி அருகே அமர்ந்து வந்து இறங்கியிருக்க மாட்டாள். அது ஒரு போலியான செய்கை. நடிப்பது போன்ற காரியம். ஆனாலும் அதுதான் இன்றைய உலக

நியதி. இன்றைய போலி வாழ்க்கையின் ஒரு முக்கியமான கோலம்.

சாந்தி கீழே இறங்கினாள்.

''இவள்தான் என் மனைவி பிருந்தா. இது மிஸஸ் சாந்தி. இங்கே வேலையில் இருந்தபோது உன்னிடம் சொல்லியிருக்கிறேனே?'' என்று ஒருவரை மற்றவருக்கு அறிமுகம் செய்து வைத்தான். குழந்தை ஓடி வந்து காலைக் கட்டிக் கொண்டது. அதைத் தூக்கி எடுத்துக் கொண்டான். ''இவன் என் பையன் அசோக். என்னுடைய பெண் 'எக்ஸ்கர்ஷ'னுக்காக வடக்கே போயிருக்கிறாள்.''

''போதும் போதும். ஒரு சரித்திரமே படித்து விடுவீர்கள் போலிருக்கிறதே!'' என்று பிருந்தா சிரித்தாள்.

''அது மிஸ்டர் ஹெக்டேயின் வழக்கம். எதையும் ஆரம்பித்தால் சுத்தமாக முடித்து வைத்தால்தான் அவருக்குத் திருப்தி'' என்று சாந்தி புன்னகை செய்தாள்.

''உள்ளே வாருங்கள்'' என்று பிருந்தா அவளை அழைத்தாள். எல்லோருமாக வீட்டுக்குள் போனார்கள்.

சாப்பாட்டு மேஜை தயாராக இருந்தது. ஒருபுறம் பூக்களால் அலங்காரம் செய்திருந்தது. இனிய மணம் கமழும் ஊதுவத்திகளைக் கொளுத்தி வைத்திருந்தாள் பிருந்தா. சிகரெட்டைப் புகைக்க எடுத்த ஹெக்டேயைப் பார்த்து ''போதும். கொஞ்ச நேரம் இந்த நல்ல வாசனையைக் கெடுக்காதீர்கள்'' என்று சிரித்துக் கொண்டே கண்டிப்பாகச் சொன்னாள். ஹெக்டேயும் பயந்தது போல முகத்தை வைத்துக் கொண்டு சிகரெட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டான்.

ராஜேஷ் அங்கே அந்த இடத்தில் இருந்திருந்தால்? இந்தத் தம்பதியருக்குப் பதிலாக அவர்கள் இருந்திருந்தால்? அவளால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. ராஜேஷ் பிடிவாதமாக சிகரெட்டைக் கொளுத்தியிருப்பான். அவள் முகத்திலும் புகையை ஊதியிருப்பான். அவள் வெறுப்புடன் முகத்தைச் சுளிக்கும் போது, அந்த முகத்தை ஆசையுடன் கிட்டே இழுத்து...

''என்ன, சாந்தி எதுவும் பேசவே காணோம்?'' என்ற பிருந்தாவின் குரல் அவள் நினைவைக் கலைத்தது. சிரித்து மழுப்பியவாறே ''நான் தயார். உங்கள் சமையல் திறமையை அனுபவித்து 'சர்டிபிகேட்' கொடுக்கக் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள் புன்னகையுடன்.

''நிச்சயமாக சர்டிபிகேட் கொடுப்பாய் சாந்தி. அவள் செய்கிற 'பேணி' ஒரு ஸ்பெஷாலிடி. நீயே இன்று சாப்பிட்டு விட்டுச் சொல்லுவாய்'' என்றான் ஹெக்டே.

''இவருக்கு நாக்கு ரொம்ப நீளம். லேசில் சமைத்துப் போட்டு இவரைத் திருப்தி செய்துவிட முடியாது'' என்று கணவனைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினாள் பிருந்தா.

சாந்தி மனத்துக்குள் நினைத்துக்கொண்டாள்: 'ஊருக்குப்போய், ராஜேஷ் சமாதானம் ஆனதும், அவளும் யாராவது நண்பரைச் சாப்பிடக் கூப்பிடவேண்டும். இதைப் போலவெல்லாம் பேசிப் பார்க்க வேண்டும். ராஜேஷை ஏதாவது சாக்கில் வம்புக்கு இழுக்க வேண்டும். அது ஒரு தனி இன்பமாகத்தான் இருக்கும்.'

தக்காளி 'சூப்' வைத்த சிறு கண்ணாடித் தம்ளர்களை அவர்கள் முன் கொண்டு வந்து பிருந்தா நீட்டினாள். ''நாம் இதை சாப்பிட்டுக் கொண்டிருக்கலாம். என்னுடைய தோழி ஒருத்தியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அநேகமாக இன்னும் இரண்டொரு நிமிஷத்தில் வந்து விடுவாள். நாம் ஆரம்பித்து விடுவோம்; பிறகு அவளும் சேர்ந்து கொள்ளட்டும்'' என்று சொன்னாள்.

''நோ. நோ. அது நன்றாக இராது. நான் காத்திருக்கிறேன்!'' என்று அந்தச் சிறு தம்ளரைக் கீழே எடுத்துக் கொண்டாள் சாந்தி. அப்போது வாசல் 'கேட்'டைத் திறக்கும் சப்தம் கேட்டது. சில விநாடிகளுக்கெல்லாம் அந்தப் பெண், கை கூப்பியபடி உள்ளே வந்தாள்.

''எக்ஸ்க்யூஸ் மீ. நான் உங்களையெல்லாம் காக்க வைத்துவிட்டேன்.''

''அப்படி ஒன்றும் இல்லை. நீ சரியான 'டய'த்துக்குத்தான் வந்திருக்கிறாய். ராதா, சாப்பாட்டுக்கு மணி அடித்ததும் வருவார்களே, அந்த மாதிரி. கமான், எங்களுடன் சேர்ந்து கொள்'' என்று சாந்தியின்புறம் திரும்பினாள்.

''இது எங்கள் பம்பாய் கெஸ்ட், மிஸஸ் சாந்தி ராஜேஷ். மிஸ்டர் ராஜேஷைப்பற்றித்தான் உனக்குத் தெரியுமே. இவர்தான் அவருடைய மனைவி'' என்று அறிமுகப் படுத்தினாள் பிருந்தா.

அதைக் கேட்டதும் ராதாவின் முகம் சட்டென்று மாறியது.

(தொடரும்)




# 15

A woman talks as carefully as she puts on the make-up. Before either shows up she takes leave of you.

—FRANKLIN JONES.

அந்தப் பேச்சைக் கேட்டதும் ஹெக்டேயின் முகமும் மாறிற்று. தன் மனைவி இவ்வளவு தூரம் விஷயம் அறிந்தவளாக இருப்பாள் என்று அவன் நினைக்கவே இல்லை. பிருந்தாவுக்கும் ராதாவுக்கும் ராஜேஷை எப்படித் தெரியும்? அவன் வேலை செய்யும் நிறுவனத்தின் பெயரை அவள் குறிப்பிட்டிருந்தாலும் பரவாயில்லை. 'மிஸ்டர் ராஜேஷைப் பற்றி உனக்குத் தெரியுமே' என்றல்லவா சொன்னாள்?

ஒரு வேளை சாந்தியைப் பற்றியும் இவளுக்கு விவரங்கள் தெரிந்திருக்குமோ? அப்படியானால் எவ்வளவு தூரம் தன்னைப் பற்றித் தெரியும்? தன் மனைவியை ஒன்றும் தெரியாத பெண் என்று அதுவரை நம்பி வந்தது எத்தகைய அறியாமை?

சாந்திக்கும் அளவில்லாத அதிர்ச்சி உண்டாயிற்று: அங்கே அவள் வந்த காரணமே, தன்னைப் பற்றி ஏதாவது அவர்கள் பேசிக் கொண்டிருந்திருப்பார்களோ என்று தெரிந்து கொள்ளத்தான். ஆனால் எங்கேயோ அவள் எதிர்பார்த்திராத ஒரு பெண்ணைச் சந்திக்க நேரிடுகிறது. அவள் மூலம் ராஜேஷைப்பற்றித்தெரிந்து கொள்ள ஒரு சந்தர்ப்பம் கிடைக்கிறது. அவள் எவ்வளவு தூரம் அதில் அக்கறை காட்ட வேண்டும்? ராஜேஷுக்கும் இந்த ராதாவுக்கும் என்ன தொடர்பு? அதில் அக்கறை காட்ட வேண்டாம் என்று நினைத்தாலும் மனம் மீண்டும் மீண்டும் அலை பாய்ந்தது.

ராதாவும் எளிதில் தனது மனக் குழப்பத்திலிருந்து விடுபடவில்லை: இந்தச் சந்திப்பு முன்னேற்பாடாகச் செய்யப் பட்டதுதானா? ராஜேஷின் மனைவியை அவள் பார்க்க விரும்பியதுண்டு. பிருந்தாவிடமே அதைப் பற்றிச் சொல்லியதும் உண்டு. அதற்காகத்தான் அவளை அன்று விருந்துக்கு அழைத்தாளா? ஆனால் ஏன் தன்னிடம் அதைப் பற்றிச் சொல்லவில்லை?

இப்படி மூவர் மனத்திலும் எண்ண அலைகளை எழுப்பி விட்டு விட்ட பிருந்தாவோ, எதுவும் அறியாதவளைப்போல, அவர்களை அமரச் செய்துவிட்டு, 'டைனிங் டேபிளை' விதம் விதமான

மணியன்

சுவை மிகுந்த உணவுகளால் நிரப்பிக் கொண்டிருந்தாள். அவள் காலைக் கட்டிக் கொண்டு கூடவே நடந்த குழந்தை அசோக்கைப் போல, அவள் சுபாவத் திலும் ஒரு குழந்தைக்கே உரிய களங்க மற்ற தன்மை தென்பட்டது.

எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தார் கள். ஆனால் சாந்தியின் மனம் அதில் ஈடுபடவில்லை. எதிரே உட்கார்ந்திருந்த ராதாவைக் கவனித்தாள். அவளைக் காட்டிலும் அந்தப் பெண் அழகு என்று சொல்ல முடியாது. அப்படி யாரையும் தன்னைக் கவனிக்கச் செய்யும் கவர்ச்சியும் அவளிடம் இல்லை. ஆனால் அவளிடம் தென்பட்ட ஓர் அமைதியும், அடக்கமும் பலரையும் அவளிடம் நயமாகப் பழகத் தூண்டுவது போல இருந்தன. பேசும் போதும் அவள் மிக நிதானமாக, தன்னை முழுவதும் வெளிப்படுத்திக் கொள்ள விரும்பாத ஒரு பெண்ணைப் போலவே பேசினாள். சுறுசுறுப்பும், உணர்ச்சிக் கொந்தளிப்பும் மிகுந்த ராஜேஷின் கவனத்தை இவள் எவ்வாறு கவர்ந் திருக்க முடியும்? நினைக்கவே சாந்திக்கு வியப்பாக இருந்தது!

ராதாவின் கண்கள், சாந்தி வேறு புறம் பார்க்கும்போதெல்லாம் அவளையே கவனித்தன. சாந்தியின் அழகும் கவர்ச்சி யும் அவளைப் பிரமிக்க வைத்தன. பேசும் போது அவள் குரலில் இருந்த மெருகு, யாரையும் அவளிடம் கவனம் செலுத்தத் தூண்டிற்று. சாந்தி தன்னைப் பொருட் படுத்தியதாகத் தெரியவில்லை. ஆனால் பலரும் குறிப்பாகச் சொல்லும் அளவுக்கு



பிரபலமாக இருந்த ஒருவரை, தான் கணவராக அடைந்திருக்கிறோம் என்ற பெருமை அவளுடைய நிமிர்ந்த பார்வையில் நன்ருகத் தெரிந்தது.

சாப்பாடு தொடர்ந்து நடக்க, எல்லோரும் பேசத் தொடங்கினர்கள். உணவு வகைகள், சங்கீதம், நாகரிகம், உடைகள், குழந்தை வளர்ப்பு இவையெல்லாம் அதில் அடிபட்டன. பெண்களே அதிகமாக இருந்ததால் அரசியலும், பொருளாதாரச் சிக்கலும் அதில் புகுந்து கொள்ளவில்லை. ஹெக்டே ஓர் அமைதியான கவனத்துடன் அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தான். சாப்பாடு முடிந்தபின் அவர்களைத் தனியே பேசிக் கொள்ள விட்டுவிட்டுத்



தான் ஓய்வெடுத்துக் கொள்ள மாடிக்குப் போய்விட்டான்.

ஹாலில் சோபாவின் முன் தாம்பூலத் தட்டைக் கொண்டு வந்து வைத்துவிட்டு அவர்கள் இருவரையும் பார்த்து, ''கொஞ்சம் பேசிக் கொண்டிருங்கள். நான் சமையலறைக் காரியங்களைச் சீக்கிரம் முடித்துக் கொண்டு வந்து விடுகிறேன்'' என்று உள்ளே போய் விட்டாள் பிருந்தா. சாந்தி, ராதா இருவருக்குமே, தாங்கள் அப்படித் தனியே விடப்பட்டதும் ஒரு முன்னேற்பாடாக இருக்குமோ என்ற சந்தேகம் எழுந்தது.

தாம்பூலத் தட்டிலிருந்து கொஞ்சம் பாக்கை மட்டும் எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள் ராதா. சாந்திக்கோ அந்த மணம் கமழும் பாக்கையும் வெற்றிலையையும் பார்த்ததும் தாம்பூலம் போட்டுக் கொள்ள ஆசை ஏற்பட்டது. வெற்றிலையை எடுத்துத் துடைத்து பின்புறம் சுண்ணும்பைத் தடவும் அவளுடைய விரல்களையே ராதா ஓர் ஆவலோடு கவனித்துக் கொண்டிருந்தாள்.

''நீங்களும் தாம்பூலம் போட்டுக் கொள்ளலாமே?''

''வேண்டாம். நான் போடுவதில்லை.''

''ஏன்?''

''மணமாகாதவர்கள் தாம்பூலம் தரிப்பதில்லை என்று ஒரு சம்பிரதாயம் நம்மிடையே உண்டு. நான் அதை மதிக்க விரும்புகிறேன்'' என்ருள் ராதா, ஒரு புன்னகையுடன்.

''மணமாகாதவர்கள் கல்யாணமே செய்து கொள்கிருர்களே? தாம்பூலம் போட்டுக் கொண்டால் என்னவாம்?'' என்று சாந்தி சிரித்தாள்.

அவள் குறும்புத்தனமான கேள்வியைக் கேட்டு ராதாவுக்கும் சிரிப்பு பொங்கி வந்தது. எழுந்து போய் 'வாஷ்பேஸி'னில் வாயைக் கொப்புளித்துச் சுத்தம் செய்து கொண்டு திரும்பினுள். அதுவரை கவனித்தபோது, ஊகம் செய்திருந்தாலும், சாந்திக்கு அவள் மணம் செய்து கொள்ளவில்லை என்ற தகவல் சிறிது வியப்பையே தூண்டிற்று.

ராதாவிற்கு அவளுடைய வயதுக்குக் கொஞ்சம் கூடுதலாகவே இருக்கலாம். அவள் உடையணிந்த விதம், பழக்கம் ஆகியவை அவள் சற்று வசதியான குடும்பத்திலிருந்து வந்தவள் என்பதையே காட்டின. ஆனல் அவள் ஏன் மணம் செய்து கொள்ளவில்லை என்பதுதான் புரியவில்லை. அதைப் பற்றிக் கேட்பது

கொஞ்சம் 'பர்ஸனலா'க இருக்குமோ என்று எண்ணிச் சிறிது தயங்கினாள்.

ராதா திரும்பி வந்து இடத்தில் அமர்ந்ததும், அவளே வெகு சாதாரணமாக விசாரிப்பது போன்ற குரலில், ''ராஜேஷ் எப்படி இருக்கிறார்? சௌக்கியமாக இருக்கிறாரா? அவர் ரொம்ப கெட்டிக்காரர் ஆகி விட்டார். திருமண அழைப்பை, நன்றாகத் தெரிந்து பழகியவர்களுக்கும் கூட அனுப்பவில்லை. கூட்டமாகச் சாப்பிட வந்து விடுவோம் என்ற பயமோ என்னவோ?'' என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டாள்.



''ராதா, எங்க ஆபிசிலே நீ வேலைக்கு மனுப் போட்டிருந்தாயே, என்ன ஆச்சு தெரியுமா?''

''சொல்லாமலேயே தெரியுமே! சிபாரிசு பேர்லே யாராவது ஒரு மக்கு, மடசாம்பிராணிக் கழுதைக்கு அந்த உத்தியோகத்தைக் கொடுத்திருப்பாங்க!''

''உனக்குத்தான் அந்த வேலையைக் கொடுத்திருக்காங்க. நாளைக்கு தபால்லே 'ஆர்டர்' வரும்!''

''அப்படி இல்லை. அது சட்டென்று எடுத்த முடிவு. தபாலில் பலருக்கும் அழைப்பு அனுப்பக்கூட இல்லை. மொத்தமாக பேப்பரில் மட்டும் போட்டிருந்தார்.''

''ஆமாம். அதுவும் திருமண அழைப்பு இல்லை. வாழ்த்துக்களுக்கு நன்றி தெரிவிக்கும் அறிவிப்புத்தான். எனக்கு ஞாபகம் இருக்கிறது. நான் அந்த அறிவிப்புக்கு 'வெயிட்' கொடுக்கவில்லை. ஏனென்றால் முன்னால் தெரிந்து நான் வாழ்த்து ஏதும் அனுப்பவில்லையே! அந்த நன்றியை மட்டும் நான் எப்படி ஏற்க முடியும்? நீங்களும் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா?''

சாந்தி காலை மடித்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தாள். வேடிக்கையாகப் பேசுவது போலத் தோன்றினாலும், அந்தக் குரலில் உள்ளூற ஏதோ ஒரு வேதனை தெரிந்தது. தான் அவ்வாறு புறக்கணிக்கப்பட்டதைப் பொருட்படுத்தவில்லை என்று அவள் சொன்னாலும், அதை மனத்தில் நினைத்து நினைத்து அவ்வளவு நாட்களுக்குப் பிறகும் ஓர் ஆற்றாமையுடன் வெளிப்படுத்துவது புரிந்தது. அந்த அளவுக்கு அவள் மனம் கலங்கும்படி ராதாவுக்கும் ராஜேஷுக்கும் என்ன தொடர்பு?

''உங்களிடம் ஒன்று கேட்கலாமா? உங்களுக்கும் ராஜேஷுக்கும் எப்படி பழக்கம் ஏற்பட்டது? அவரை உங்களுக்கு எத்தனை நாட்களாகத் தெரியும்? உங்களுக்கு ஏதும் தயக்கம் இல்லை என்றால் சொல்லலாம்.''

ராதா ஒரு கணம் பதில் சொல்லவில்லை. இந்தக் கேள்வியைச் சிறிது நேரமாகவே எதிர்பார்த்திருந்த போதிலும், அவளுடைய மனத்தில் இப்படி ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டதும் சிறு அதிர்ச்சியே உண்டாயிற்று. அதை மறைத்துக் கொண்டு நிதானமான குரலில் பேசினாள்:

''அவரைச் சிறு வயதிலிருந்தே எனக்குத் தெரியும். கல்லூரியில் சேருவதற்கு முன்பே அவரை நான் பார்த்திருக்கிறேன். பம்பாயில் நாங்கள் குடி யிருந்த பகுதியில்தான் அவரும் குடி யிருந்தார். நான் அவருடன் அப்போது பேசியதில்லை. ஆனால் அவர் தெருவில் நடந்து போவதைக் கவனிப்பேன். அப்போதிலிருந்தே நான் அவரை ஒரு 'ஹீரோ ஒர்ஷிப்' செய்வதுண்டு. என்னை அப்படிப் பார்க்காதீர்கள்'' என்று குறும்பாகச் சிரித்தாள் ராதா.

''ஓ! ஒன்றுமில்லை. என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அது ஒரு 'ஸ்கூல் கேர்ல்' 'டிஸைர்'! அவ்வளவுதான். அந்த உணர்ச்சிகளுக்குப் பிரமாதமான அர்த்தம் எதுவும் இல்லை.''

''நானும் ஒப்புக் கொள்கிறேன். அதுதான் நான் அவரைத் தெரிந்து கொண்ட விதம். அப்புறம் நாங்கள் நண்பர்களாக இருந்தோம்; அவ்வளவுதான். இது போதும் அல்லவா உங்களுக்கு?''

''யெஸ் அண்ட் நோ. நான் உங்களுக்கு அதிகம் பழக்கம் இல்லாதவள். என்னிடம் நீங்கள் இந்த அளவுக்குத்தான்

சொல்ல முடியும். நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனல் நான் ராஜேஷின் மனைவி என்பதை மறந்துவிட்டு நீங்கள் பேசலாம். வெகு நாள் உங்களுடன் பழகிய ஒரு தோழியாகவே எண்ணிக் கொண்டு என்னிடம் இன்னும் கொஞ்சம் மனம் விட்டுப் பேசலாமே? வாருங்கள், எழுந்து வீட்டைச் சுற்றித் தோட்டத்தில் கொஞ்சம் உலாவி விட்டு வரலாம்'' என்று எழுந்திருந்தாள்.

ராதா உடனே எழுந்திருக்கவில்லை. மேலே பழகவும் பேசவும் அவள் தயங்கியது என்னவோ உண்மை. ஆனல் ராஜேஷிடம் பழகியவர்கள் யாராக இருந்தாலும் அவர்களுடன் பேசுவதில் அவளுக்கு ஒரு தனி மகிழ்ச்சி உண்டாவது வழக்கம். இப்போது அவள் முன்னல் இருப்பது அவனுடையஅந்தரங்கத்தையே பகிர்ந்து கொண்ட மனைவி. ராஜேஷை அவளைக் காட்டிலும் மிக அதிகமாக நெருங்கிய, உரிமை உள்ள பெண் வேறு யாரும் இல்லை. அதை எண்ணியபோது, சாந்தியிடம் பேசுவதிலேயே அவளுக்கு ராஜேஷை மனக்கண் முன் நெருங்கிப் பார்ப்பது போன்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. தோட்டத்தில் அவளுடன் உலாவிப் பேசுவதற்கு எழுந்து, பின் தொடர்ந்தாள்.

''மேலே சொல்லுங்கள். அப்புறம்?''

''ராஜேஷ் கல்லூரியில் சேர்ந்து விட்டார். அப்போது கல்லூரி விளையாட்டுப் பந்தயங்களில் அவர் ஆடுவார். நானும் அப்போது கல்லூரியில் படிக்கத் தொடங்கியிருந்தேன். நான் அவருடைய விசிறி. அவர் ஆடும் பந்தயம் எதுவானலும் நான் அங்கே இருப்பேன். அவருடைய 'ஷாட்' ஒவ்வொன்றுக்கும் பலமாகக் கை தட்டுவேன்.

''ஒருநாள் அவரிடம் 'ஆட்டோகிராப்' புத்தகத்தில் கையெழுத்து வாங்க 'ஆட்டோகிராப்' புக் கொண்டு போனேன். கடைசி நேரத்தில் மனத்தை மாற்றிக் கொண்டு அவரிடம் என் கைக் குட்டையையும், பால்பேனவையும் கொடுத்து, 'இதில் கையெழுத்துப் போடுங்கள்' என்று கேட்டுக் கொண்டேன்.''

'''புத்தகத்திலேயே போடுகிறேனே!' என்ருர் அவர்.

'''இல்லை. கைக்குட்டையிலேயே போடுங்கள். புத்தகம் உள்ளே பூஜை செய்தாற் போலத் தூங்குவது. கைக் குட்டை எப்போதும் என்னுடன் இருப்பது' என்றேன்.

'''அதை உபயோகிப்பீர்கள்; அழிந்து போகும்.'

'''நான் அழிந்து போக விட மாட்டேன்' என்றேன். அவர் என்னை ஒரு தினுசாகப் பார்த்தார். பிறகு சிரித்துக் கொண்டே, 'நீ ஒரு குறும்புக்காரப் பெண்' என்று சொல்லிக் கையெழுத்துப் போட்டார்.

'''இல்லை. நான் ஒரு பிடிவாதக்காரப் பெண்' என்று பதில் சொன்னேன். அவர் வியப்போடு என்னைப் பார்த்தார். ஆனல் மேலே எதுவும் கேட்கவில்லை.



''என்னப்பா, மூணு பைசா கேட்டது போக, இப்ப முப்பது பைசா கேக்கறே?''
''என்னங்க செய்யறது... எல்லாம் ஒண்ணுக்கு பத்தா விலை ஏறிடிச்சுங்களே!''

''அதற்குப் பிறகு நான் போகும்போதெல்லாம் எந்தக் கூட்டத்திலும் அவர் என்னை அடையாளம் கண்டு கொள்வார். சில சமயம் தனியாக என்னிடம் வந்து பேசுவார். நண்பர்களிடம் 'இவள் என் விசிறி' என்று அறிமுகப்படுத்துவார். எனக்கு அது ரொம்பப் பெருமையாக இருக்கும். சில சமயம் நான் நினைப்பதுண்டு: அவர் 'கோச்' ஆக இருந்து பழக்கிக் கொடுப்பதானல் நான் ஒரு டென்னிஸ் மட்டை அல்லது கிரிக்கெட் பாட்டை வைத்துக் கொண்டே என் ஆயுள் பூராவையும் கழித்திருப்பேன் என்று.''

ராதா பேசுவதை நிறுத்திப் பெருமூச்சு விட்டாள். அவள் மனத்தில் ஆழமாகத் தோய்ந்திருந்த உணர்ச்சிகள் அந்தக் குரலில் வெளிப்படையாகத் தெரிந்தன. அவ்வளவு தூரம் தான் பேசி விட்டது தவருே என்று அவள் இப்போது

எண்ணினாள். சாந்தியின் புறம் திரும்பி ''அது போதும் என்று நினைக்கிறேன். அதற்கு மேல் நான் உங்களிடம் பேசுவது சரி இல்லை'' என்று சொல்லிவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள்.

சாந்திக்கு அவள் அப்படி நிறுத்தி விட்டதே மேலும் ஆவலைத் தூண்டிற்று. ஆனால் கூடவே அவள் தன் மனம் அதிர்ச்சி அடையும் அளவுக்கு எதையாவது சொல்லி விடுவாளோ என்று பயமாகவும் இருந்தது. அப்போது ராதா அவளை நிமிர்ந்து பார்த்தாள். அந்தக் கண்களில் அளவில்லாத ஒரு புனிதம் தெரிந்தது. ராஜேஷின் மேல் அவளுக்கு ஏதாவது ஈடுபாடு இருந்திருந்தாலும், அது ஒரு தூய உணர்ச்சியாக, பக்தியைப் போன்ற புனித உணர்ச்சியாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்பதை, அந்தப் பார்வை சொல்லாமற் சொல்லிற்று.

மேலே அவளைத் தூண்டிக் கேட்க அவள் முற்படுமுன், அவர்கள் பின்னால் யாரோ நடந்து வரும் சப்தம் கேட்டது. இருவரும் திரும்பினார்கள். பெரிய பூப்போட்ட அலங்காரத் துணி ஒன்றைக் கழுத்தில் கட்டிக் கொண்டு பிருந்தா அங்கே வந்து நின்றாள்.

''என்ன இது? இரண்டு பேருமாக என்னைத் தனியாக விட்டு விட்டு வந்து பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? அந்தரங்கமான பேச்சா?அல்லது நானும் கலந்து கொள்ளலாமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''எதுவும் இல்லை பிருந்தா. உன் தோட்டத்தை நாங்களும் சுற்றிப் பார்க்கலாம் என்று பார்த்தோம்; அவ்வளவு தான். பூக்களில் எவ்வளவு வகைகள் உண்டோ அத்தனையையும் அருமையாக வளர்த்து வைத்திருக்கிறாயே!'' என்று ராதா ஓர் உற்சாகத்தை வரவழைத்துக் கொண்டு சொன்னாள்.

''எனக்குப் பரிசே வேண்டாம். பலன் எதையும் எதிர்பார்க்காமல் பாடுபடுவதில்தான் எனக்கு ஆனந்தம். உனக்குத் தெரியாதது இல்லை ராதா.''

சாந்தி இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். அவள் மனத்தில் சிறு கலக்கம் ஏற்பட்டது. அவள் முதலில் பிருந்தாவைப் பற்றிப் போட்ட மதிப்பீடு சரிதானா? பழகப் பழக அது சரியானதாகத் தோன்றவில்லையே?அவள் எண்ணியதைப் போல எதையும் குழந்தைத்தனமாகப் பார்த்து, நினைத்துப் பழகிவிடும் மனம் கொண்டவள் அல்ல பிருந்தா. அவளுக்குத் தன் கணவன் ஹெக்டே எப்படிப் பட்டவன் என்பதைப் பற்றி முழுவதும் தெரியாமலும் இல்லை. ஆனால் வெளியாருக்குத் தன் மனக் குமுறல் எதுவும் தெரியாமல், சாதுரியமாக மறைத்துக் கொள்வதன் மூலம், அவள் அந்தக் குடும்பத்தின் ஒற்றுமையைப் பெருமையுடன் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள். மனம் தடுமாறும் தன்னையும், மனம் திறந்து வேதனைப்படும் ராதாவையும் காட்டிலும் பிருந்தா நிச்சயம் கெட்டிக்காரப் பெண்.

மூவருமாக உள்ளே திரும்பினார்கள். அவர்களுக்குக் காபி தயாரித்துக் கொண்டு வந்தாள் பிருந்தா. சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு ராதா வீட்டுக்குப் போகக் கிளம்பினாள்.

''என்ன அவசரம்? இன்னும் சற்று நேரம் இருந்துவிட்டுப் போகலாமே?'' என்று பிருந்தா வற்புறுத்தியும் நிற்கவில்லை.

''சரி. கொஞ்சம் இரு. குங்குமம் கொண்டு வருகிறேன்'' என்று பிருந்தா உள்ளே எழுந்து போன சமயம், சாந்தியின் பார்வை ராதாவின் மீது திரும்பிற்று. ராதாவின் கண்கள் பேசின.

''எப்போது மறுபடி சந்திக்கலாம்?'' என்று சாந்தி கேட்டாள்.

''கட்டாயம் என் வீட்டுக்கு வாருங்கள்'' என்று விலாசத்தைக் கூறினாள்.

இருவரும் ராதாவை வாசல் வரை போய் வழியனுப்பி விட்டுத் திரும்பினார்கள்.

''நானும் புறப்பட வேண்டியதுதானே பிருந்தா?'' என்று சாந்தி கேட்டாள்.

''அப்படியா? நீங்கள் வந்த காரியம் முடிந்து விட்டதா?'' என்று பிருந்தா அவளுடைய மனத்தில் ஆராய்வது போலப் பார்த்தாள்.

''ஸ்பெஷலாக ஒன்றும் இல்லையே!'' என்று சொன்னாலும் சாந்தியால் மறைத்துக் கொள்ள முடியவில்லை.

''சாப்பிடுவதற்கும், தோட்டம் பார்க்கவும், காபி சாப்பிடவும்தான் இங்கே வந்தீர்கள் என்று நீங்கள் சொன்னாலும் என்னால் நம்ப முடியவில்லை. என்னால் உங்களுக்கு ஏதாவது உதவி தேவையானால், செய்ய முடியும் என்றே தோன்றுகிறது. எங்கே? என்னிடம் நீங்கள் கொஞ்சம் மனம் விட்டுப் பேசக் கூடாதா?'' என்று இளகிய குரலில் கேட்டாள்.

சாந்தியின் மனத்தில் அந்தக் கனிவான அழைப்பு ஓர் எதிர்பார்ப்பைத் தூண்டிற்று.

(தொடரும்)




**16**

Out your hand through the night.
Let me hold it fill and keep it.
Let me feel its touch along the lengthening
shadow of my loneliness.
— TAGORE.

"ராதா உன்னிடம் என்ன பேசினாள்?'' என்று பிருந்தா கேட்டாள். சாந்தி அதற்குப் பதில் சொல்லவில்லை. தான் எவ்வளவு தூரம் பிருந்தாவை நம்பலாம் என்று அவளுக்கு இன்னும் புரியவில்லை.

''உனக்குத் தயக்கமாக இருந்தால், எது[illegible]ம் சொல்ல வேண்டாம் சாந்தி'' என[illegible] சொல்லிவிட்டு, பிருந்தா எழுந்து போக முயன்றாள். சாந்தி அவள் கையைப் பற்றித் தன் அருகே உட்கார வைத்துக் கொண்டாள்: ''என்னைத் தப்பாகப் புரிந்து கொள்ளாதீர்கள். என் மனநிலை சரியாக இல்லை; அவ்வளவுதான்'' என்றாள்.

பிருந்தா அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தாள்: ''நீயாக உன்னை மீண்டும் மீண்டும் குழப்பிக் கொள்கிறாய் சாந்தி. உனக்கு என்ன இல்லை? கண்ணுக்கு நிறைவான கணவர், வசதியான சூழ்நிலை, அந்நியோன்யமான மண வாழ்க்கை எல்லாம் இல்லையா? உன் கணவர் உன்னைப் பார்த்து பொறாமைப்படும்படியான அழகு உனகது இல்லையா? உன் அப்பா உன்னை அருமையாக வைத்துக் கொண்டிருந்ததைப் போல, உன் கணவரும் வைத்துக் கொண்டிருக்கவில்லையா? உனக்கு என்ன மனக்குறை?'' என்று கேட்டாள்.

சாந்தியின் கண்களில் நீர் ததும்பியது. தன் மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சிகளை அவள் எவ்விதம் சொல்வாள்? தனக்கும் ராஜேஷிற்கும் உள்ள மனத்தாங்கலை, அவள் தன் அப்பாவிடம் கூடச் சொன்னதில்லை. பிருந்தாவிடம் எப்படி மனம் விட்டுப் பேச முடியும்?

''இல்லை பிருந்தா. நீங்கள் நினைப்பது போல் அப்படி ஒரு நிம்மதியான வாழ்க்கை எனக்கு இல்லை. அதில் எவ்வளவோ சிக்கல்கள்'' என்று விசிக்கும் குரலில் சொன்னாள்.

''எதைச் சிக்கல் என்று நீயாக நினைத்துக் கொள்கிறாய்?. ராதாவிடம் பேசி

மணியன்

இருப்பாயே! அவள் பேச்சிலிருந்து நீ எவ்வளவு பெரிய பாக்கியசாலி என்பது உனக்குப் புரிந்திருக்குமே! எளிதில் கிடைக்க இயலாத, எந்தப் பெண்ணும் ஆசைப்பட்டு ஏங்கக் கூடிய, ஓர் இன்பகரமான தாம்பத்திய வாழ்க்கை உனக்குக் கிடைத்திருப்பதை நீ உணர்ந்து கொண்டிருப்பாயே! அதற்காகத்தானே நான் உங்கள் இருவரையும் சந்திக்கச் செய்தேன்'' என்ருள் பிருந்தா.

''சந்திக்கச் செய்தீர்களா? நீங்கள் தெரிந்து, வேண்டுமென்று ஏற்பாடு செய்த சந்திப்பா இது? எதற்காக? நான் உங்களை இதற்கு முன் பார்த்ததுகூட இல்லையே?''

''ஆமாம். இது ஏற்பாடு செய்த ஒன்றுதான். இதை நான் உனக்காகவும் ஏற்பாடு செய்தேன் என்பது உண்மை. ஆனல் என் மனத்தில் இருந்தது ராதாவின் ஆசை. உன்னைப் பார்க்க வேண்டும் என்று அவள் விரும்பியது எனக்குத் தெரியும். அவளே என்னிடம் பல முறை சொல்லி யிருக்கிருள்.''

''எதற்காக? அவள் தனக்குப் பழக்கமானவர் என்று என் கணவரைப் பற்றிச் சொன்னுள். அந்தப் பேச்சில் அவள் மனத்தையும் ஓரளவு புரிந்து கொண்டேன். எனக்கு அதில் சிறு கலக்கம்கூட ஏற்பட்டது.''

''கலக்கமா? எதற்கு?''

''பெண்ணின் மனம் பெண்ணுக்குப் புரியாதா பிருந்தா? அவளுடைய மனப்பாங்கில் எத்தனையோ தூய்மை இருக்கலாம். ஆனல் ராதா அவரிடம் கொண்டிருந்த உணர்ச்சி, ஆழ்ந்த காதல் என்பதை என்னல் தெரிந்து கொள்ள முடிந்தது. இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் அது அணையாத தீபமாக இருக்கிறது. அவரிடம் அவள் காட்டும் இந்த நேசம், ஒரு மனைவி என்ற முறையில் என்னைக் கொஞ்சம் கலங்கச் செய்வது நியாயம்தானே?''

''இல்லை சாந்தி. உனக்கு ஏன் இந்தக் கலக்கம்? நீ அவளைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ராஜேஷை அவள் நேசித்தது உண்மைதான். அவரைக் கணவராக அடைய அவள் எதையும் கொடுத்திருப்பாள். அவ்வளவு தூரம் அவரிடம் ராதாவுக்கு அசைக்க முடியாத ஒரு ஆழ்ந்த பாசம் இருந்தது; இன்னும் இருக்கிறது. அவரை அவள் பார்த்து ஆசைப்பட்டது மட்டும் இல்லை; அவருடைய பார்வைக்காக அந்த நாளில் ஏங்கியது மட்டும் இல்லை; இன்று அவரைப் பார்க்காமலே அவள் அவருடைய உருவத்தை மானசீகமாகப் பூஜை செய்து கொண்டிருப்பதும் உண்மை. அவரை அடைய அவள் எவ்வளவோ ஆசைப்பட்டாள்! ஆனல் அது நிறைவேருது என்று தெரிந்து கொண்டதும், தன்னுடைய மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு விட்டாள். அவரைப் பற்றிய நினைவு இன்று அவளுக்கு ஒரு தவமாகவே இருக்கிறது. வெளிநாட்டுக்குப் போயிருந்தபோது, அவர் அவளுக்காக அனுப்பிய சிறு பரிசுகள், கடிதங்கள் எல்லாவற்றையும் அவள் பொக்கிஷமாகப் போற்றி வைத்துக் கொண்டிருக்கிருள். அவை ஒவ்வொன்றையும் பார்ப்பதில் அவரையே பார்ப்பது போன்ற ஆறுதலை அடைகிருள். தனக்கு அவர் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் அவளுக்கு இல்லை. இது ஒரு தூய, கலப்பில்லாத அன்பு. அது அமுதம் போன்றது என்று புரிந்து கொண்டால், நீ மனம் கலங்க வேண்டியதே இல்லை.''

பிருந்தாவின் வார்த்தைகளைக் கேட்டதும் சாந்தியின் உடல் புல்லரித்தது. ராதாவைப் பற்றி அவள் சொல்லச் சொல்ல ராஜேஷை தான் மணந்து கொண்டிருப்பது எவ்வளவு பெரிய பாக்கியம் என்று எண்ணி எண்ணி, மனம் தவித்துப் போனுள். எதுவும் பேச முடியாமல் அவளுடைய மனத்தில் உணர்ச்சிகள் பொங்கி எழுந்தன.



''ராதா புத்திசாலி. அடக்கமான அழகும், பண்பும், பதவிசும் கொண்ட அவளை மணந்து கொள்ள எத்தனையோ வாலிபர்கள் முன்வந்தார்கள். அவளை மகிழ்ச்சியோடு வைத்துக் கொண்டு போற்றி ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தார்கள். அதுவும் எனக்குத் தெரியும். ஆனால் ராதா, மணம் செய்து கொள்ளவில்லை. யாரையும் ஏற்றுக் கொள்ளவும் இல்லை. அந்த மனத்தில் இனி வேறு யாருக்குமே இடம் இல்லை. ராஜேஷ் அவளுடைய அன்பை மதித்தது அவளுக்குத் தெரியும். ஆனால் அவள் கேட்டது அந்த மரியாதையை அல்ல. அவளைத் தன் வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ளும் காதலைத்தானே அவள் விரும்பினாள்? அதை அவரால் கொடுக்க முடியவில்லையே! அவளை ஒரு அன்புச் சிநேகிதியாக அவர் மதித்தது, அவள் மனத்துக்கு எந்தவிதமான திருப்தியைத் தந்திருக்க முடியும்? ஆனால் ஆண்களின் மனத்தை யாரால் புரிந்து கொள்ள முடியும்? அவர் ஆசைப்பட்ட மனைவியின் - உருவத்தை - அப்படி ஒரு 'இமேஜை' சாந்தி என்ற பெண்ணிடம்தான் அவர் கண்டார் போலும்!'' என்றாள் பிருந்தா சிரித்துக் கொண்டே!

''பிருந்தா, என்னால் இந்தப் பவித்ரமான அன்பை நினைத்தும் பார்க்க முடியவில்லை. தனக்கு எந்தப் பலனும் கிடைக்காது என்று தெரிந்தும் அவள் செய்து கொண்டிருக்கும் இந்தத் தவம், உருக்கமான ஆராதனை என் நினைவுக்கும் எட்டக்கூடிய ஒன்றாக இல்லையே?'' என்றாள் சாந்தி.



மனைவி: ரொம்ப அழகாயிருக்கு! நீங்க என்ன காரியம் செய்திருக்கீங்க தெரியுமா...?

கணவன்: தப்புத்தான்... கோபித்துக் கொள்ளாதே ராதா... ஆமா, நான் என்ன செய்தேன்...?

''அவள் எந்தப் பலனையும் எதிர் பார்த்துத் தன் மனத்தை அவர் காலடியில் வைக்கவில்லை. ஆனால் அவள் மனத்தில் தொடர்ந்து அந்த ஆராதனை நடந்து கொண்டுதான் இருக்கிறது. அவருடைய பிறந்த நாளை ஞாபகம் வைத்துக் கொண்டு, கோயிலில் அவர் பெயருக்கு அர்ச்சனை செய்து, அந்தப் பிரசாதத்தை அவருக்கு அவள் அனுப்பி வைப்பதை நான் பார்த்திருக்கிறேன். அதற்காக ஒரு பதில் கடிதத்தைக் கூட அவள் எதிர் பார்த்ததில்லை. உன்னைப் பார்க்க வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டது கூட அதற்குத்தான். அவர் முழு மனத்துடன் நேசிக்கும் ஒரு அன்பு மனைவியைப் பார்க்க வேண்டும், அந்த மனத்தில் அவர் குடி கொண்டிருக்கும் நிறைவைக் காண வேண்டும் என்ற ஆசைதான் அதற்குக் காரணம். அதை என்னிடம் அவள் சொல்லி யிருக்கிறாள். அதனாலேயே அவளுக்குத் தெரியாமல் நான் இந்த ஏற்பாட்டைச் செய்தேன்.''.

சாந்தி அவள் மடி மீது சாய்ந்து கொண்டாள். அவள் கண்களில் இப்போது கண்ணீர் இல்லை. அவள் மனத்தில் ஒரு தூய்மையான நிம்மதி நிறைந்து பெருகிக் கொண்டிருந்தது. அந்த உணர்ச்சியில் ராஜேஷின் பிம்பம் ஒவ்வொரு முறையும் மேலும் மேலும் புது ஒளியுடன் அவள் மனக்கண் முன் தெரிந்தது. தன் கணவனின் மீது அதுவரை அவள் கொண்டிருந்த சஞ்சலமான நினைவுகள் எல்லாம் சிறிது சிறிதாக மறைந்து, அவள் மனத்தில் ஓர் அமைதி குடிகொள்ளத் தொடங்கிற்று.

மாலை நேரம் நெருங்க ஆரம்பித்தது. சாந்தி, வீட்டுக்குப் போக எழுந்தாள். தூங்கி எழுந்து உடைகளை மாற்றிக் கொண்டு கீழே இறங்கிவந்த ஹெக்டே, அவளை அழைத்துச் செல்ல காரை வெளியே எடுத்து நிறுத்தினான்.

பிருந்தா அவளுக்குக் குங்குமம் கொடுத்து அனுப்பும்போது, ''சாந்தி, நான் சொன்னது நினைவிருக்கட்டும். எதையும் அநாவசியமாக நினைத்துக் கொண்டு அலை பாய விடாதே. உன் அதிருஷ்டத்தை முழுமையாக உணர்ந்து, உன் தாம்பத்திய வாழ்க்கையைக் காப்பாற்றிக் கொள்'' என்று சொல்லி வாசல் வரை வந்து காரில் ஏற்றிவிட்டுப் போனாள்.

வரும் வழியில் ஹெக்டேயுடன் சாந்தி பேசவில்லை. அவன் வீட்டுக்குப் போன போது அவளுக்கு இருந்த மனக் கொந்தளிப்பு, இப்போது இல்லை. ராஜேஷைப் பற்றி அவனிடம் பேசியதும் கூட அவளுக்குத் தன் மீதே ஒரு தவறாகவும் இப்போது தோன்றியது.

அறைக்குத் திரும்புவதற்கு கார் உள்ளே வருமுன் ஹெக்டே ஒரு கணம் நிறுத்தினான்: ''சாந்தி, இன்று இரவு ஒரு நல்ல நாட்டிய நிகழ்ச்சி இருக்கிறது. நீ மட்டும் ஒரு மன மாறுதலை விரும்பினால்...'' என்று அவள் முகத்தைப் பார்த்தான்.

சாந்தியின் முகம் சுளித்தது: ''என்ன கேள்வி இது? உங்களுக்கு அப்படிப் போக ஆசையானால் பிருந்தாவை அழைத்துச் செல்லுங்கள். மறுமுறை இப்படி நீங்கள் என்னிடம் பேசுவதுகூடச் சரியில்லை'' என்றாள்.

''சாந்தி, தவறாக எடுத்துக் கொள்ளாதே. உன்னுடைய மகிழ்ச்சியைக் கருதித்தான் நான் இதையும் சொன்னேன். உனக்காக நான் எதையாவது செய்ய முடியுமானால், அதுவே எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும். ஒன்று மட்டும் சொல்வேன்: பிருந்தாவைப் போன்ற ஒரு பெண் எனக்கு ஏற்ற நல்ல மனைவியாக இருக்கலாம். ஆனால் உன்னைப் போன்ற 'ஸ்மார்ட் கேர்ல்' ஒருத்திக்குமுன் அவள் இணையாக நிற்கவே முடியாது'' என்று ஹெக்டே அவள் அழகைப் பருகும் பார்வையுடன் சொன்னான்.

''போதும், போதும். என்னை என் அறையில் விட்டு விட்டுத் திரும்புங்கள்'' என்று சற்றுக் கடுகடுப்பான குரலில் சொல்லிவிட்டு, சாந்தி காரின் ஜன்னல் வழியே பார்வையைத் திருப்பிக் கொண்டாள்: 'பிருந்தாவைப் போன்ற ஒரு பெண்ணுக்கு இப்படிச் சபல புத்தியுடன் ஒரு கணவனா? கணவன் மீது அழியாத மன உறுதி கொள்ள வேண்டும் என்று தனக்கு யோசனை சொல்லும் பிருந்தாவிற்கு, இப்படி மனம் அலையும் ஒருவனா புருஷனாக வாய்க்க வேண்டும்?' என்று அவள் மனம் எண்ணி எண்ணிக் குமுறியது.

அறை வாசலில் அவளை விட்டுவிட்டு, ''ஏதாவது நான் செய்ய வேண்டுமா சாந்தி?'' என்று தயங்கிய குரலில் ஹெக்டே கேட்டான்.

''பிருந்தாவிற்கு என் நன்றியைச் சொல்லுங்கள். பம்பாய்க்கு வர நேர்ந்தால், என் வீட்டுக்குக் கட்டாயம் வரவேண்டும் என்று சொல்லுங்கள். அவ்வளவுதான்'' என்று சாந்தி உள்ளே போகத் திரும்பினாள்.

''அந்த அழைப்புக்கூட எனக்கு இல்லையா சாந்தி?''

''உண்டு. பிருந்தாவின் கணவராக, ஒரு நல்ல குடும்பத்தின் பொறுப்புள்ள தலைவராக நீங்கள் கட்டாயம் வரலாம். நானும் என் கணவரும் உங்களை ஏற்று வரவேற்போம்'' என்று சொல்லிவிட்டு, சாந்தி கதவை மூடிக் கொண்டாள்.

திகைத்தவனாய் ஹெக்டே வெளியே வந்து காரில் ஏறிக் கொண்டான். அவளுடைய மன மாறுதல் அவனுக்குப் பிரமிப்பாக இருந்தது. தன் வீட்டுக்குச் செல்லும் போது மனம் இளகி, அவனுடைய வழியிலேயே நினைப்பவளைப் போல இருந்த சாந்தியை இப்படி மாற்றியது யார்? பிருந்தாவா? ராதாவா? அந்த வீட்டில் என்னதான் நடந்தது? - இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டு காரை வேகமாக ஓட்டினான்.



''மெழுகுவத்தி மாதிரி ஒரு டைட்டில் நம்ப படத்துக்கு சொல்லுங்க...! கதாநாயகன் தன்னையே அழிச்சிக்கிறான்...!''

''சாம்பிராணி!''

சாந்தியும் அதே சமயம் அறையில் பிரமிப்புடன் உட்கார்ந்திருந்தாள். அவள் கையில் பம்பாயிலிருந்து அவள் தந்தை எழுதியிருந்த கடிதம் இருந்தது: 'உனக்கும் ராஜேஷிற்கும் ஏதாவது மனஸ்தாபமா? அவரிடம் நீ பெங்களூர் போகப் போவதைப் பற்றி ஏன் எதுவும் சொல்லவில்லை? உன்னை டில்லிக்கு அழைத்துப் போக ராஜேஷ் விரும்பினார். இப்போது அட்கின்ஸன் தம்பதியருடன் டில்லிக்குப் போயிருக்கிறார். இந்த வாரக் கடைசியில் திரும்புவார். நீ இல்லாதது

ராஜேஷிற்குப் பெரும் ஏமாற்றம்!' என்று சாரதி எழுதியிருந்தார்.

அதைப் படிக்கப் படிக்க அவள் மனம் குமுறியது. அவள் உதாசீனமாக வந்து விட்டாலும், ராஜேஷ் அவளைத் தேடி யிருக்கிறன். அவளை டில்லிக்கு அழைத்துப் போக விரும்பி யிருக்கிறன். எப்படிப் பட்ட ஒரு சந்தர்ப்பத்தை அவள் அலட்சி யத்தினுல் இழந்து விட்டாள்? அங்கே போயிருந்தால், அவர்களுடன் பழகும் வாய்ப்பில் தங்களிடையே இருந்த பழைய அன்பை அவள் புதுப்பித்துக் கொண் டிருக்கலாம். அதை அவள் தன்னுடைய அலட்சியத்தினுல் இப்படி நழுவ விட்டு விட்டாளே?

அந்த நினைப்பில் அன்று இரவு சாந்தி யினுல் தூங்கவே முடியவில்லை. உடனே பம்பாய்க்குப் புறப்படத் தோன்றியது. ஆனுலும் அதற்கு முன் ஒரு முறை ராதா வுடைய வீட்டிற்கே போய், அவளைச் சந்தித்து விட்டு வர விரும்பினுள். காலையில் எழுந்ததுமே அதற்காகத் தயாரானுள்.

அவ்வளவு விரைவில் சாந்தி தன்னைச் சந்திக்க வருவாள் என்று ராதா எதிர் பார்க்கவில்லை. அதனுல் சாந்தி அங்கே போன போது, அவள் வீட்டில் இல்லை. கொஞ்ச நேரத்தில் திரும்பி விடுவாள் என்று அவளுடைய வயதான தகப்பனுர் அவளிடம் சொன்னுர்.

வீட்டின் முன்புறமிருந்த சிறு அறை யில் அவளுக்காகக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் சாந்தி. அந்த அறை யின் கண்ணுடி அலமாரிகள் பலவற்றி லும் நிறையப் புத்தகங்கள் இருந்தன.



"என்னப்பா, முழுத் தேங்காய் வாங்கிக்கிட்டு போறே...? லாட்டரி யிலே ஏதாவது பணம் வந்ததா?"

புத்தகங்கள் படிப்பதில் ராதாவிற்கு இருந்த தீவிரமான ஆசையை அது எடுத்துக் காட்டிற்று. மேலும் அவ்வளவு தீவிரமாக அதில் ஈடுபட்டிருப்பவள், வேறு லேசான பொழுது போக்குகளில் ஈடுபட்டிருக்க முடியும் என்றும் தோன்ற வில்லை.

இப்படி ஸீரியஸாக வாழ்க்கையை எடுத்துக் கொண்டு பள்ளிக்கூடப் பெண் ணைப் போலவே வாழ்ந்துவிட்ட ராதா வையே நினைக்க நினைக்க அவளுக்கு வியப் பாக இருந்தது. கூடவே அவள்பால் இருந்த மதிப்பும் உயர்ந்தது. பொழுது போக்காக, அவள் படிக்கும் புத்தகங்கள் எப்படிப்பட்டவை என்பதைக் கவனிப்ப தற்காக, அவள் ஓர் அலமாரியைத் திறந்தாள்.

அவை பெரும்பாலும் ஆங்கில நாவல் களாகவும், கவிதைப் புத்தகங்களாகவும் இருந்தன. அவற்றில் நயமாக இருந்த பகுதிகளை அவள் பென்சிலால் அடையா ளம் குறித்து வைத்திருந்தாள். எதையும் ஓர் ஆழ்ந்த கவனத்துடன் பார்க்கும் மனப்பான்மையும், அதில் அப்படியே ஆழ்ந்து ஈடுபட்டுவிடும் போக்கும் கொண்டவள் அவள் என்புதை அது எடுத்துக் காட்டுவது போல் இருந்தது. புத்தகப் படிப்பிலும், பொழுது போக்கிலும் மட்டும் தானு? வாழ்க்கையே அவளுக்கு அப்படி ஒரு புத்தகமாக அல்லவா அமைந்து விட்டது?

புத்தகங்களை மறுபடி வைத்துவிட்டு, அவள் அந்த அலமாரியை மூடினுள். அப் போது அதில் வைத்திருந்த சாவிக் கொத்து கீழே விழுந்தது. அதைக் குனிந்து கையில் எடுத்தவள், அதில் இருந்த சிறு சாவி ஒன்றைக் கொஞ்சம் வியப்புடன் பார்த்தாள். அப்போது அவள் கவனம் அதே அறையில் இருந்த சிறிய பூஜை அலமாரி போன்ற ஒன்றின்மீது திரும் பிற்று. இதற்காகவா அந்த அழகிய சிறு சாவி? அதை அவள் பூட்டி வைத்திருக் கிறேன்? அங்கே அவள் அத்தனை கருத்துடன் பூஜிக்கும் சுவாமியின் படம்தான் என்ன?

பார்க்க வேண்டும் போல் அவளுக்கு உள்ளே ஓர் ஆவல் எழுந்தது. ஆனுல் தான் செய்வது சரி என்றும் தோன்ற வில்லை. திடீரெனத் தோன்றிய ஆவலை- தன்னுடைய அந்த ஆவலை, அடக்க முடியாதவளாக அவள் அந்தச் சிறு அலமாரியைத் திறந்தாள். கதவு திறந்த தும் அங்கே அவள் பார்த்த காட்சி, அவளைச் சிலையாக நிற்க வைத்தது.

(தொடரும்)




# 17

Our wisdom comes from our experience. But our experience comes only from our mistakes

— LASK.

சாந்தி அப்படியே அசையாமல் நின்று கொண்டிருந்தாள். அங்கே இருந்த போட்டோவிலிருந்து அவளால் கண்களை எடுக்க முடியவில்லை. அன்று ராதா கூறியதும், பின் பிருந்தா அவளைப் பற்றிச் சொன்னதும் அவள் நினைவில் ஓடின. அப்படியும் இதைப் போன்ற ஒரு சந்தர்ப்பத்தை அவளால் நினைத்துப் பார்க்க முடியவில்லை.

அறை வாசலில் கட்டியிருந்த அலங்கார மணிகள் குலுங்கின. சாந்தி திரும்பிப் பார்த்தாள். அங்கே ராதா நின்று கொண்டிருந்தாள். அவள் வந்து எவ்வளவு நேரமாயிற்றோ? ஆனால் அவள் குரல் கொடுக்கவோ, சாந்தியின் கவனத்தைத் திருப்பும்படி எதுவும் செய்யவோ இல்லை. இருவரும் ஒருவரையொருவர் பார்த்தபடி, ஏதோ ஓர் அதிர்ச்சியில் திகைத்தவர்களாக நின்று கொண்டிருந்தார்கள்.

சாந்தி புடவைத் தலைப்பைத் திருகிக் கொண்டே ''உன்னை இங்கே பார்க்கலாம் என்று வந்தேன்'' என்றாள்.

''பார்க்கலாம் என்று வந்ததற்கு மேலேயே பார்த்தாயிற்று அல்லவா?'' என்று, அவளைக் கண் கொட்டாமல் பார்த்தபடி கேட்டாள் ராதா.

''நான் செய்த காரியத்திற்கு என்னை மன்னித்து விடு ராதா. நான் இதை எதிர்பார்க்கவில்லை.''

''உண்மைதான் சாந்தி. இயற்கையாக யாரும் எதிர்பார்த்திருக்க முடியாத, எண்ணிப் பார்க்க முடியாத நிலை இது. உன்னால் இதைப் புரிந்து கொள்ள முடிகிறதோ என்னவோ? உனக்குக் கோபம் வந்தாலும் எனக்கு ஆச்சரியமில்லை'' என்றாள்.

சாந்தி அந்த அலமாரியின் கதவை மூடினாள். சாவிக் கொத்தை ராதாவின் கையில் வைத்துவிட்டு, அருகே இருந்த

மணியன்

நாற்காலியில் உட்கார்ந்தாள். அவளுடைய பார்வை ராதாவை உச்சி முதல் உள்ளங்கால் வரை அளந்தது. அந்தச் சமயத்தில் அவள் மீது சாந்திக்குப் பொறாமை ஏதும் ஏற்படவில்லை. சொல்ல முடியாத அளவு பச்சாத்தாபமே மனத்தில் பொங்கிற்று.

''இந்த உணர்ச்சிக்கு உன்னுடைய வாழ்க்கையில் இப்போது என்ன அர்த்தம் ராதா? அன்று நீ சொன்னபோது அதை 'ஸ்கூல்-கேர்ல் டிஸையர்' என்று சொன்னேன். இப்போது இதைப் பற்றி என்ன சொல்வதென்று தெரியாமல் திகைக்கிறேன்.''

''ஆமாம். இதுதான் நான் அவர் மீது கொண்டுள்ள அன்பு. அதற்குஇப்படித்தான் ஓர் உருவம் கிடைக்க முடியும். இப்போது என் வாழ்க்கையில் அவர் ஒரு தெய்வம். என்னால் பூஜிக்கப்படும் நிலையில் உள்ள ஒருவர். அவரை அப்படித்தான் என்னால் நினைக்க முடிகிறது.''

ராஜேஷின் புகைப் படத்தைப் பூஜை அலமாரியில் வைத்து வழிபடும் அந்தப் பெண்ணைப் பார்த்து அவளுக்குக் கோபமோ பொறாமையோ ஏற்படவில்லை. இப்படி நிறைவேற முடியாத ஒரு கனவை உண்மையாக நினைத்து வாழ்ந்து கொண்டிருக்கிறாளே என்ற அனுதாபம் மட்டுமே உண்டாயிற்று சாந்திக்கு.

''நீ யோசித்துப் பார்த்தாயா ராதா? இதனால் என்ன லாபம்? அவர் உன்னைத் தன் வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ளவில்லை. அப்படி ஏற்றுக் கொள்ளாத ஒருவரை நீ வழிபடுவதில் என்ன அர்த்தம் இருக்க முடியும்? ஒரு பெண் பதி-பூஜை செய்யலாம். ஆனால் நீ செய்வது? அவருடைய வாழ்க்கையில் உனக்கு என்ன இடம்?''

''எதுவும் இல்லை சாந்தி; எதுவுமே இல்லை. ஆனால் அவர்தான் எனக்கு எல்லாம். இதை அவருடைய மனைவியான உன்னிடமே சொல்லுகிறேன். நீ எப்படி எடுத்துக் கொள்வாயோ, எனக்குத் தெரியாது. அவர் என்னை ஏற்றுக் கொள்ளவில்லை. உலகம் இந்த அன்பை மதித்து ஏற்றுக் கொள்ளாது. ஆனால் நான் அவரை என்றோ மனத்தில் வரித்து ஏற்றுக் கொண்டு விட்டேன். பிஞ்சு உள்ளத்திலேயே அந்த உருவம் ஆழமாகப் பதிந்து விட்டது. அது அப்படியே இன்று வரை அழியாமல் நின்று விட்டது. அவரே இந்தப் படத்தைப் பார்க்க நேர்ந்து, கேட்டாலும்கூட நான் பதிலுக்குக் கேட்பேன், 'நீங்கள் யார் என்னைத் தடுக்க? இது என்னுடைய வாழ்க்கையின் ஆதாரமாக இருக்கும் சுருதி. இதை நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும் என்பது என்ன அவசியம்?' என்று.''

சாந்தி அவளைக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அந்த அறையின் வெளிச்சம் ராதாவின் புனிதமான முகத்திற்கு ஒரு



மெருகு தருவது போல. அவளுக்குத் தோன்றியது. கையை நீட்டி அவளுடைய விரல்களோடு சேர்த்துத் தன் பக்கமாக இழுத்து உட்கார வைத்துக் கொண்டாள். ஒரு தாய் தன் குழந்தையைத் தேற்றுவதைப் போல அவள் கூந்தலை மெல்லத் தடவிக் கொடுத்தாள்:

''ராதா, உன்னை எனக்குப் புரிகிறது. உன்னுடைய தூய்மையான உள்ளம் எனக்குப் புரிகிறது. உலகத்துக்கு அது ஏற்காத ஒன்றாக இருக்கலாம். ஆனால் உன்னுடைய பூஜிதமான அன்பை இந்த அளவுக்குப் பெற்ற ஒருவரின் மனைவியாக இருக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததற்காக நான் பெருமைப்படுகிறேன். உனக்குக் கிடைக்கவில்லை என்று ஏங்காதே. உன் வாழ்க்கையே ஒரு ஆராதனை'' என்றாள்.



ராதா அதற்குப் பதில் சொல்லவில்லை. அவளுடைய கண்களிலிருந்து நீர் உதிர்ந்து கொண்டே இருந்தது. அது மானசீகமாக அவள் ராஜேஷை அர்ச்சிப்பதுபோலவே சாந்திக்குத் தோன்றியது. அந்த ஒவ்வொரு துளி நீரும் புனிதமான ஒவ்வொரு மலராகவே அவள் கண்களுக்குப் பட்டது.

அதற்குப் பின் சுமார் ஒரு மணி நேரம் அங்கே சாந்தி தங்கி யிருந்தாள். ராதாவின் சகோதரியுடனும் தாயுடனும் என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தாள். ஆனல் அவை எதுவும் சாந்தியின் மனத்தில் பதியவே இல்லை. அவள் மனத்தில் அவள் பார்க்க நேர்ந்த காட்சியும்,ராதாவின் வார்த்தைகளும் மட்டுமே பசுமையாக நின்று கொண்டிருந்தன.

அவள் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தாள். அப்போது அவளை 'கேட்'வரை வந்து வழியனுப்புவது போலக் கூடவே ராதாவின் தாய் வந்தாள். அந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டவளாய், சாந்தியிடம் சொன்னள்:

''உன்னிடம் அவள் பேசியதில் உனக்கு ஏதேனும் தவருகத் தோன்றி யிருந்தால் அவளை மன்னித்து விடு. எல்லாத் தாய்மார்களையும் போல நான் ஒரு பெண்ணைப் பெற்றேன். எல்லாப் பெண்களையும் போலவே அவளும் ஒரு நாள் ஒரு மனைவியாகவும் ஒரு தாயாகவும் இருப்பாள் என்று நினைத்தேன். ஆனல் அதற்கு நாங்கள் கொடுத்து வைக்கவில்லை. அவள் தன்னைத் தானே வீணடித்துக் கொள்வதைப் போலவே எனக்குத் தோன்றுகிறது. அதே சமயம் நம்மைப் போன்ற சாதாரண மனிதர்கள் புரிந்து கொள்ள முடியாத ஓர் உணர்ச்சிக்காக அவள் வாழ்வது போன்ற பிரமையும் ஏற்படுகிறது. போய் வா அம்மா. எதையும் மனத்தில் போட்டுக் கொள்ளாதே!''

சாந்தி அவளைக் கரம் குவித்து வணங்கி விட்டு நடக்கத் தொடங்கினள்.

ஓட்டல் அறைக்குச் செல்ல வாசலுக்கு வந்தபோது, கொஞ்சம் வயதான மனிதர் ஒருவரின் கையில் கையைக் கோத்துக் கொண்டு, ஒரு பெண் எதிரே நடந்து வந்தாள். அவளுடைய எடுப்பான தோற்றமும் கவர்ச்சிகரமான உடையும் சாந்தியின் கவனத்தை அவளுடைய பக்கம் திருப்பின. அவள் நிமிர்ந்து பார்த்த அதே சமயம், அந்தப் பெண்ணும் அவளைப் பார்த்தாள்.

எங்கேயோ அவளைப் பார்த்த நினைவு சாந்தியின் மனத்தில் அலை எழுப்பிற்று. யோசனையுடன் நெற்றியைத் தடவி விட்டுக் கொண்டாள். கொஞ்ச தூரம் போய் அந்தப் பெண்ணைத் திரும்பிப் பார்த்தாள். அதே சமயம் அவளும் சிறிது தூரம் சென்று திரும்பி சாந்தியைக் கவனித்தாள்.

இப்போது ஞாபகத்துக்கு வந்து விட்டது: அவள்தான் ஆஷா.

அந்தப் பெண் திரும்பி வந்து சாந்தியின் கையைப் பிடித்துக் கொண்டாள்: ''எக்ஸ்க்யூஸ் மீ. நீங்கள் மிஸ்டர் ராஜேஷின் மனைவி சாந்தியைப் போலவே இருக்கிறீர்கள்....'' என்றள்.

''ஆமாம். நான்தான் சாந்தி. நீங்கள் ஆஷாதானே?''

''எஸ். நாம் ஒரு தடவை சந்தித்திருக்கிறேம்.''

''நினைவிருக்கிறது. ராஜேஷ் உங்களைப் பற்றி நிறையச் சொல்லி யிருக்கிறர்.'' -வாய் தவறி அந்த வார்த்தைகள் வெளி வந்து விட்டன. ஆஷாவின் முகம் சட்டென்று மாறிற்று.அதைக் கவனிக்காமல் இருப்பதுதான் பண்பு ஆகும் என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள் சாந்தி.



''பெட்ரோல் இல்லாமல் மின்சாரத்திலேயே ஓட்டுவதற்கு ஒரு கருவி கண்டு பிடிச்சிருக்கேன். சென்னையிலிருந்து டில்லிக்குப் போக மூணு யூனிட் கரெண்ட் தான் தேவை..''

''அட...அப்படியா?''

''ஆமாம்.. அதோட 1200 மைல் நீளத்துக்கு ஒயரும் தேவை!''

''ராஜேஷ் இங்கு வந்திருந்தார். என்னைச் சந்தித்தார். உன்னிடம் சொன்னாரோ என்னவோ?''

ராஜேஷ் சொல்லவில்லை என்பதைக் கூற அவளுக்கு விருப்பமில்லை. அப்படிக் கூறினால் கணவனைக் காட்டிக் கொடுத்தது போல ஆகும்; கூறாவிட்டால் அவள் அதைப் பற்றி மேலே கேட்கக்கூடும். அதற்கு சாந்தியினால் பதில் சொல்ல முடியாது. என்ன சொல்வதென்று தெரியாமல் குழம்பியவளாக நின்று கொண்டிருந்தாள். ஆஷா அதை வேறு விதமாகப் புரிந்து கொண்டாள்:

''நீ என்னிடம் 'ஃப்ரீ'யாகப் பேசலாம் சாந்தி. எதுவும் கேட்கத் தயங்காதே! இங்கே நீ இன்னும் எவ்வளவு நாள் இருப்பாய்?''

''நாளைக்குத் திரும்புகிறேன்.''

''மாலையில் உன்னைச் சந்திக்கட்டுமா? உன் ரூம் நம்பர் என்ன? உனக்கு என் உதவி ஏதாவது தேவையானால் செய்து தருகிறேன். என்னை நீ தாராளமாக நம்பலாம். என்ன?'' என்று சாந்தியின் கையைக் குலுக்கினாள்.

சாந்தியின் மனம் கலங்கிற்று. பம்பாயிலிருந்து வந்தபோது இந்தப் பெண்ணைச் சந்திக்கும் எண்ணத்துடன் தான் அவள் வந்தாள். கணவனைப் பற்றி அவளிடம் என்னென்னவோ கேட்க வேண்டும் என்ற ஆவேசம் அவளுக்கு அப்போது இருந்தது. ஆனால் இப்போது அந்த உணர்ச்சி இல்லை. ராதாவைப் பார்த்த பிறகு, அந்தக் கலக்கம் எல்லாம் மறைந்து மனம் தெளிவடைந்திருந்தது. இங்கே ஆஷாவைச் சந்தித்ததும் மறுபடியும் உள்ளத்தில் சஞ்சலம் தலையாட்டிற்று.

''என்ன யோசிக்கிறாய் சாந்தி?''

'அந்தப் பேச்சை ஏற்பதா? ராஜேஷின் அந்தரங்கத்தைப் பகிர்ந்து கொண்ட ஆஷாவிடம், அவளே தன் கணவனைப் பற்றிக் கேட்பதா? உள்ளத்தோடு உள்ளம் ஒட்டிய உண்மைகள் கணவன் மனைவியருக்கு இடையே அல்லவா ரகசியமாக இருக்க வேண்டும்? அதை அவளே வெளிக் காட்டவும் பேசவும் முற்படுவது எப்படிப் பண்பாகும்?'—அவள் மனம் ஒரு முடிவுக்கு வந்து விட்டது:

''வேண்டாம் ஆஷா. எனக்கு இப்போது எந்த உதவியும் தேவை யில்லை. அவசியமானால் நானே உனக்கு போன் செய்கிறேன்'' என்று உறுதியான குரலில் சொன்னாள் சாந்தி.

ஆஷா ஒரு புன்னகையுடன் தன் போன் நம்பரை அவளிடம் குறித்துக் கொடுத்து விட்டுப் போய் விட்டாள். போகும் போது ஆஷாவிற்குக் கொஞ்சம் ஏமாற்றமாகவே இருந்தது. சாந்தியின் மனத்தில் அவள் சந்தேகங்கள் எதையும் எழுப்பி இருக்க மாட்டாள். ஆனால் ராஜேஷைப் பற்றி அவளுக்குப் புத்திமதி சொல்லும் நிலையில் தான் இருப்பதை வெளியே காட்டிக் கொள்ள வேண்டும் என்ற லேசான தற்பெருமை அவளுக்கு இருந்தது. அதை சாந்தியிடமே காட்டிக் கொள்ளவும் நினைத்தாள். அதற்கு வாய்ப்பு இல்லாமற் போனது அவளுக்கு ஏமாற்றமாகவே இருந்தது.

சாந்தி திரும்பிப் பாராமலே அறைக்குப் போய் விட்டாள். மறுபடி ஆஷாவைப் பார்த்தால் தன்னுடைய மனம் மயங்குமோ என்ற பயம் அவளுக்கு இருந்தது. நேரே அறைக்குப் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

பௌர்ணமி நிலவில் தாஜ்மகாலின் அழகை ரசித்தபடி நின்று கொண்டிருந்தாள் மர்த்தா. அட்கின்ஸன் எதிரே இருந்த பளிங்குக் கல்மேடையில் அமர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். தன் அருகே நின்ற ராஜேஷைப் பார்த்து மர்த்தா, ''எப்படிப்பட்ட நினைவுச் சின்னம்? உலகத்தில் எங்கேயும் காதலுக்காக சமர்ப்பிக்கப்பட்ட இப்படிப்பட்ட ஒரு நினைவு மாளிகையைப் பார்க்கவே முடியாது'' என்றாள்.

ராஜேஷின் மனத்திலும் அதைப் போல ஓர் உருக்கம் ததும்பிக் கொண்டிருந்தது. அதை வெளிக் காட்ட முடியாமல் தடுமாறிக் கொண்டிருந்தான். அவன் முகத்தைக் கவனித்த மர்த்தா, ''உங்களுக்கு சாந்தியின் ஞாபகம் வருகிறதா? இயற்கைதான் அது. அவள் நம்முடன் இங்கே வந்திருக்கலாம்'' என்று சொன்னாள்.

'சாந்தி அங்கே வந்திருந்தால் ...... அதைப் போல அவள் அருகே நின்று கொண்டிருந்தால்...... அவள் என்னென்ன கேள்விகள் கேட்டிருப்பாள்? அவன் என்னென்ன பதில்கள் சொல்லியிருப்பான்? காதல் ஜோடிகள் யாராக இருப்பினும் தவறாமல் வந்து பார்க்க வேண்டிய இடம் அல்லவா இந்த நினைவு மாளிகை?' நினைவுகள் மேலும் ஓடுவதைத் தடுத்துக் கொண்டு மர்த்தாவுக்குப் பதில் சொன்னான் ராஜேஷ்: ''நானும் அதைத்தான் நினைத்தேன். அடுத்த தடவை கட்டாயமாக அழைத்து வரலாம். உங்களை நான் ஒன்று கேட்கலாமா? நீங்கள் தப்பாக

நினைக்கக் கூடாது'' என்று அவள் முகத்தை உற்றுப் பார்த்தான்.

''தாராளமாகக் கேளுங்கள். நான் ஒரு 'ஸிம்பிள் உமன்''' என்று லேசாகச் சிரித்தாள் மார்த்தா.

''தன் மனைவி இறந்த பிறகு பல ஆண்டுகள் பாடுபட்டு ஷாஜஹான் இந்த மாளிகையை எழுப்பினன். வாழ்வின் கடைசி நாள் வரை இதைப் பார்த்த படியே இருந்து உயிர் விட்டான். இப் படிப்பட்ட ஒரு வைராக்கியம் நம்மைப் போன்றவர்களுக்கு இருக்க முடியுமா? இல்லை என்றால் அது தவருகுமா?''

மார்த்தாவின் முகத்தில் சோகம் தலை காட்டிற்று: ''நான் இதற்கு என்ன பதில் சொல்ல முடியும்? என்னுடைய வாழ்க்கையில் நானே ஒரு முறை அபூர்வ மான காதலை உணர்ந்து, அனுபவித்து இழந்தவள். அதற்குப் பிறகு அந்த நினைவிலேயே இருக்கும் வைராக்கியம் எனக்கு இல்லை. நான் மிஸ்டர் அட்கின் ஸனின் மனைவிஎன்ற நினைவு மட்டும்தான் எனக்கு இப்போது இருக்கிறது. என் னுடைய முதல் கணவரின் ஞாபகம் எனக்கு வரலாம். ஆனல் அவரை நான் ஒரு தெய்வமாக நினைப்பதோடு சரி. என்னுடைய இன்றைய வாழ்க்கையில் அந்த நினைவுக்கு வேறு எந்த இடம் கொடுத்தாலும் அது சரியாகாது. குழப்பம்தான் உண்டாகும். அதனல் நான் நினைப்பதில்லை ராஜேஷ்'' என்ருள்.

ராஜேஷ் அந்தப் பதிலைக் கேட்டு அசந்து போனன்: 'இந்த எளிய பெண் மணி எவ்வளவு உலக அனுபவத்துடன் பேசுகிருள்? அவளுடைய மனத்தில் இருப்பதை ஒளிவு மறைவின்றி எவ்வ ளவு சுத்தமாகச் சொல்லி விட்டாள்? பழைய நினைவுகள் அவளுக்கு இருக் கின்றன. ஆனல் அதனல் அவள் மனம் அலை பாயவில்லை. தன்னுடைய வாழ்க் கைக்கு ஏற்ப அவள் தன்னை அனுசரித்துக் கொண்டுவிட்டாள்.அந்த மனப்பக்குவம் அவளுக்கு வந்து விட்டது; அட்கின் ஸனுக்கும் இருக்கிறது. இருவருக்கும் உண்மைகள் தெரியும்.ஆனல் இருவருமே குழம்புவதில்லை':

''உங்களுடைய மனத் தெளிவு எல்லாருக்கும் வராது என்று நினைக் கிறேன். கடந்த காலம் என்று ஒன்று இருந்தால், அதை மனம் நினைக்கத்தான் தோன்றுகிறது. அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்றுதான் ஆவல் உண்டாகிறது. கணவனும் மனைவியுமாக இருவர் ஆகி விட்டாலும் இந்த ஆசையைத் தடுக்க முடிவதில்லை.''

''தெரிந்து கொள்ளலாம். ஆனல் அதன்பின் அதைப் பற்றிக் குழம்பாத மனம் வேண்டும். அப்படிப்பட்ட மன நிலை எளிதில் அமைய முடியாது. அதனல் பெரும்பாலும் இந்த ஆவல் சங்கடத்தி லேயே முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. உங்களையே எடுத்துக் கொள்ளுங்கள்: சாந்தியைப் போன்ற ஓர் அழகான பெண்ணை நீங்கள் காத லித்து மணந்து கொண்டிருக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை எவ்வளவோ சந்தோ ஷமாக இருக்கிறது. இந்த நிலையில் நீங்கள், உங்களை மணந்து கொள்ளு முன் சாந்தி எப்படி இருந்தாள் என்று தெரிந்து கொள்ள விரும்பினல்...? அதில் தீவிரமாக ஈடுபட்டால்...? கலக்கமும் குழப்பமும் அல்லவா உண்டாகும்?''

ராஜேஷ் வியப்புடன் அவளைப் பார்த்தான்: 'அட்கின்ஸன் அவளிடம் ஏதாவது சொல்லி யிருப்பாரோ? தெரிந்து கொண்டே மார்த்தா இந்தச் சந்தர்ப்பத்தில் நாசூக்காக இடித்துக் காட்டுகிருளோ?'

அவள் மேலும் சொன்னள்:

''ஆனல் எனக்கு உறுதியான நம்பிக்கை இருக்கிறது ராஜேஷ். சாந்தி ஒரு 'ஸென்ஸிபிள்' கேர்ல். ஆசைமிகுந்த கணவன்மார்களிடம் மன சஞ்சலம் இருக்கலாம். ஆனல் பொறுப்புள்ள மனைவி அமைதியாக இருப்பாள். கணவனின் மனத்தில் கலக்கம் உண்டா னலும் அவள் அமைதியைத் தோற்று விப்பாள். சாந்தி அப்படிப்பட்ட பெண் தான்'' என்று சொன்னள் மார்த்தா.

அதைக் கேட்ட போது ராஜேஷிற் குத் தன் மீதே ஒருவித வெட்கம் உண்டாயிற்று.

நள்ளிரவுக்குப் பிறகு அவர்கள் ஓட்டலுக்குத் திரும்பினர்கள். அப்போது அவன் மனம் அந்தப் பேச் சையே மீண்டும் மீண்டும் நினைத்துக் கொண்டிருந்தது. காலையில் எழுந்ததும் பம்பாய்க்கு ஒரு 'டிரங்க்கால்' போட்டு ஸாரதியுடன் பேச வேண்டும் என்று தோன்றியது. சாந்தி அதற்குள் பம்பாய்க்குத் திரும்பி யிருக்க மாட் டாளா என்ற ஓர் ஆசையும் எழுந்தது.

ஆவலுடன் காலையில் அவன் எழுந் திருக்கு முன்னரே, டெலிபோன் மணி ஓசை அவனைக் கலைத்து எழுப்பியது. போனை எடுத்து அவன் பேசு முன் 'ஆபரேடர்' பெண்மணி பேசினள். அவள் சொன்னது அவன் மனத்தில் சொல்லவொண்ணுத வியப்பைத் தூண்டிற்று. (தொடரும்)



# ரகசியம்*

**18**

The Natural Flights of the Human mind are not from pleasure to pleasure, but from hope to hope.

— *SAMUEL JHONSON.*

சாந்தியின் குரல் அவன் காதில் விழுந்தது. தலையணையை அணைத்துக் கொண்டு ராஜேஷ் அவளைக் கற்பனையில் தழுவிப் பார்த்துக் கொண்டான்.

''ஹாப்பி மார்னிங். எப்படி இருக்கிறீர்கள் ரராஜேஷ்?''

''இங்கே ரொம்பக் குளிர். உன்னை நினைத்துக் கொண்டு, இங்கே இப்படித் தலையணையைக் கட்டிப் பிடித்துக் கொண்டு...''

போனில் அவளுடைய 'இச்' என்ற சப்தம் கேட்டது. நாணம் பொங்கும் அந்த முகத்தை நினைத்துப் பார்த்துக் கொண்டான். இப்போதுதான் அவளும் எழுந்திருப்பாள். அவனைப் போலவே கட்டிலில், 'நைட் கவுனை'க் கூட மாற்றிக் கொள்ளாமல் படுத்தபடி, பேசிக் கொண்டிருப்பாள்.

''ரொம்ப நாளாக டில்லிக்கு வர வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தேனே இல்லையா? எப்படி என்னை விட்டுத் தனியாகப் போனீர்கள்?''

''தனியாக இல்லை டார்லிங். இரண்டு பேர் துணையுடன்தான். நீ மட்டும் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே....''

— மேலே பேசாமல் அந்த வாக்கியத்தை நிறுத்திக் கொண்டான் ராஜேஷ். அந்தப் பேச்சை எடுத்தாலே, அவளுடைய குரலில் இருக்கும் அந்தக் குதூகலம் மறைந்து விடும் என்று தோன்றியது. டில்லியில் அவளுக்காக அவன் வாங்கிக் கொண்டு வருபவற்றையெல்லாம் சொன்னான்.

''எனக்கு நீ என்ன கொடுக்கப் போகிறாய் சாந்தி?''

''உங்கள் 'ஸ்வீட் ஹார்ட்'டை'' என்று சாந்தி சிரித்தாள். அவனும் சிரித்தான். அவன் நெஞ்சுவரை மகிழ்ச்சி நிறைந்து ததும்பிற்று. சாந்தி அவன் வீட்டுக்குத் திரும்பி வந்துவிடப் போகிறாள். வெகு நாட்களுக்குப் பிறகு அவர்கள் மீண்டும் சந்திக்கப் போகிறார்கள். அவனுடைய சாந்தி அவனுக்கென்றே என்னென்ன 'ஸர்ப்ரைஸ்' பரிசுகளை எல்லாம் கொடுத்து, அவனை இன்பத்தில்

மணியன்

ஆழ்த்தப் போகிறாளோ? நினைக்கும் போதே அவனுக்கு அத்தனை நாட்கள் பிரிவில்பட்ட வேதனை எல்லாம் மறைந்து போயிற்று.

சாந்தியின் குரல் கொஞ்சி விளையாடிற்று. வழக்கம் போலத் தன் அன்பு முத்திரையை போன் மூலம் கொடுத்துவிட்டு அவள் வைத்து விட்டாள். ராஜேஷ் கொஞ்ச நேரம் போனை வைக்கக்கூட மனம் இன்றிக் கையில் வைத்துக் கொண்டிருந்தான். ஆபரேட்டர் ஞாபகப்படுத்தி அவனைக் கீழே வைக்கச் சொல்ல வேண்டியதாயிற்று.

மர்த்தாவும் அவனுமாக சாந்திக்கு என்னென்னவோ பரிசுகள் வாங்கினார்கள். மணிமாலை, நகை வைக்க தந்தப் பெட்டி, ஒரு 'பெண்டெண்ட்', அழகான கைப் பை எல்லாவற்றையும் வாங்கினான். 'ஒப்ராய் ஓட்ட'லில் ஒரு ராஜஸ்தானிப் பெண் அணிந்திருந்த விநோதமான செருப்பு அவனுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. ஆனால் அவனால் வாங்க முடியவில்லை. அவளுடைய கால் அளவு அவனுக்குத் தெரியாதே! அதற்காகத் தன் மீதே அவனுக்குக் கொஞ்சம் கோபம்கூட வந்தது.

''நிறைய வாங்கி வையுங்கள். சாந்திக்கு உங்கள் மேல் நிறையக் கோபம் இருக்கும். அவளை நீங்கள் ரொம்ப நேரம் சமாதானம் செய்ய வேண்டியிருக்கும்'' என்று கேலி செய்தாள் மர்த்தா.

''கோபம் அதிகமாக இருந்தால்,பிரியமும் அதிகம் என்று அர்த்தம். கோபித்துச் சண்டை போட்டுக் கொண்ட பிறகு ஒன்றாகச் சேருவது இருக்கிறதே'' என்று விரலைச் சொடுக்கினார் அட்கின்ஸன்.

''உங்கள் சொந்த அனுபவத்தில் தெரிந்து கொண்டதாக்கும்?'' என்று ராஜேஷ் சொன்னதும், அவரும் மர்த்தாவும் ஒருவரை யொருவர் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு சிரித்தார்கள்.

**வி**மான நிலையத்துக்குச் சாந்தி வந்திருந்தாள். பின்னால் சாரதியின் முகமும் தென்பட்டது. அவன் இறங்கி வந்ததும் அவன் முன்னால் வந்து, அட்கின்ஸன் இருந்ததையும் பொருட்படுத்தாமல் கையை அவன் இடையில் கொடுத்து அவன் அணைப்பில் சேர்ந்து கொண்டாள். அப்படி அவள் அவனிடம் நெகிழ்ந்து போகும் வழக்கமே இல்லை. அன்று அப்படி அவள் செய்தது, அவளுடைய மனம் அவனுக்காக உருகிக் காத்துக் கொண்டிருப்பதைக் காட்டுவது போலத் தோன்றியது.

அட்கின்ஸன் தம்பதியர் விமான நிலையத்திலேயே விடைபெற்றுக் கொண்டு போய் விட்டார்கள். காரை





சாரதி ஓட்டிக் கொண்டு வந்தார். பின்ஸீட்டில் இருவரும் அமர்ந்திருந்தார்கள். ராஜேஷின் கையைத் தன் கையுடன் சேர்த்துத் தன் மடிமேல் வைத்துக் கொண்டு பேசாமலே வந்தாள் சாந்தி. அந்த உணர்ச்சியும் பார்வையும் அவனுக்கு ஆயிரம் கதைகள் சொல்வது போலத் தோன்றின.

சாரதி தன்னுடைய வீட்டுக்குப் போகவில்லை. ராஜேஷின் வீட்டுக்குத்தான் கார் போய் நின்றது. எதிர் பாராமல் அப்படித் தாங்கள் இருவரும் போனது, அவனுக்கு மகிழ்ச்சியும் வியப்பும் தந்தது. ஆனால் சாந்தி அதை எதிர்பார்த்து ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தாள் போலும். அவனுடைய பொருட்கள், அவனுடைய அறை, வீட்டின் அலங்காரம் எல்லாமே அவள் இரண்டு நாட்களாகவே அங்கே வந்து காத்திருந்து, ஒவ்வொன்றையும் அவன் வருகையை எதிர்பார்த்துச் செய்திருந்ததை அவனுக்கு எடுத்துக் காட்டின.

சாரதி அவர்களைத் தனியே விட்டு விட்டு, உடனே வீட்டுக்குத் திரும்பி விட்டார். உடையைக் கழற்றி மாற்றிக் கொண்டே ராஜேஷ் அவளைத் திரும்பிப் பார்த்தான். சாந்தி ஒயிலாக அவனுடைய படுக்கையில் சாய்ந்து கொண்டிருந்தாள்.

''இங்கிருந்து இப்படித்தான் உங்களுக்கு 'டிரங்க் கால்' செய்தேன்.''

அவளுடைய இனிய குரலும் பார்வையின் அழைப்பும் அவனை மெய்ம்மறக்கச் செய்தன. அப்படியே அவள்மீது சாய்ந்து அவளைத் தழுவிக் கொண்டான். ''சாந்தி டார்லிங்'' என்று அவள் கன்னங்களை மாறி மாறி இதழ்களால் ஒற்றினான்.

''என்னை மன்னித்து விடு சாந்தி ஸ்வீட்டி! நான் ஒரு முட்டாள். உன் மலர் போன்ற இதயத்தின் மென்மை தெரியாத முரடன். உன்னை ரொம்ப வேதனைப்படச் செய்து விட்டேன்'' என்று புலம்பினான்.

சாந்தி அவனுடைய உதடுகளில் விரலை வைத்து மூடினாள். அவன் முகத்தைத் தன் மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டாள். அது அவனுக்காகத் துடிக்கும் தன்னுடைய இதயத்தை ராஜேஷிற்குக் காட்டுவது போல இருந்தது. அவள் அப்படிச் செய்தபோது, அந்தச் சுகத்தில் ராஜேஷ் கண்களை மூடிக் கொண்டான்.

''ஸில்வி, நீங்கள் இப்படி யெல்லாம் கூடப் பேசலாமா என்ன? என்னை நீங்கள் எப்படியும் நடத்தலாம். அந்த உரிமை உங்களுக்கு உண்டு. ஏதோ ஒரு 'மூட்'— இருவருக்குமே மனம் சரி இல்லை. அவ்வளவுதான். அதை மறந்து விடுங்கள்'' என்று, அவன் முகத்தை நிமிர்த்தி அவன் கண் இமைகளில் மெதுவாக முத்தமிட்டாள் சாந்தி.

அத்தனை நாட்களுக்குப் பிறகு மறுபடி ஒன்று சேர்ந்ததில் அன்று இரவு அவர்கள் தூங்கவே இல்லை. சாந்தியைப் பிரிந்து இருந்த நாட்களில் கிடைக்காத இன்பங்களை எல்லாம் அன்று வட்டியும் முதலுமாகச் சேர்த்து வாங்கிக் கொண்டான் ராஜேஷ். அவளுக்காக வாங்கி வந்த பரிசுகளைக் கொடுக்கும்போது ஒவ்வொரு தடவையும் அவளுடைய அன்பு முத்திரையையும் பெற்றுக் கொண்டான். அப்படியும் அவனுடைய ஆசைத் தாகம் தணியவே இல்லை.

அலுவலகத்திலிருந்து சில நாட்கள் வெளியே போயிருந்தபடியால், நிறைய ஃபைல்கள் குவிந்து கிடந்தன. அதனால் வீட்டுக்கு மாலையில் சீக்கிரம் திரும்ப முடியவில்லை. அதற்கு ஈடு செய்வதுபோல் இருவரும் வெளியே கிளம்பிப் போய் விடுவார்கள். வெளியிலேயே உணவருந்தி விட்டுப் பொழுதைக் கழித்து, நள்ளிரவுக்கு முன்புதான் வீடு திரும்புவார்கள்.

அன்று காலையில், எலெக்டிரிக் காபி இயந்திரத்திலிருந்து காபியை வடித்துக் கொண்டிருந்தாள் சாந்தி. பக்கத்தில் இரு கோப்பைகளையும் தட்டுகளையும் வைத்திருந்தாள். ராஜேஷ் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைத் தெரிந்து கொண்டு சாந்தி பேசாமல் இருந்தாள்.

''நான் காபியை 'ஸர்வ்' பண்ணுகிறேன் சாந்தி'' என்று அவன் 'நாப்கின்' துணிகளை ஆசையாக எடுக்கத் தொடங்கினான். அப்போது அவற்றுக்கு நடுவில், சலவை செய்து மடித்து வைத்த அந்தக் கைக்குட்டையும் இருந்தது. அதை எடுக்கும்போது அவன் விரல்கள் கொஞ்சம் நடுங்கின. அது ஆஷா உபயோகித்த பெண்கள் கைக்குட்டை. கைத் தவறுதலாக அங்கே வந்திருந்தாலும், அவன் செய்த தவற்றை எடுத்துக் காட்டுவது போல அங்கே இருந்தது.

சாந்தியை நிமிர்ந்து பார்த்தான். அவள் அவனைக் கவனிக்காதது போலத் திரும்பிக் கொண்டாள்.

''அவளை பெங்களூரில் சந்தித்தாயா சாந்தி?''

''அவள் என்னைத் தற்செயலாகச் சந்தித்தாள். ஆனால் நான் அவளிடம் எதுவும் பேசவில்லை.''

''என்ன சொன்னாள் அவள்?''

'''ஸ்பெஷ'லாக எதுவும் சொல்லவில்லை. ஆனால் என்னிடம் தன்னை வெளியிட்டுக் கொண்ட இன்னொரு பெண்ணைச் சந்தித்தேன். தன் இதயத்தை அப்படியே எடுத்து அவள் என் கையில் வைத்து விட்டாள். அதில் உங்களைப் பார்த்தேன் ராஜேஷ்....''

''சாந்தி, நீ சொல்வது?''

''அவள் பெயர் ராதா. அது எதிர்பாராமல் நேர்ந்த சந்திப்புதான். ஆனால் அதில் எனக்கு அதிர்ச்சி எதுவும் இல்லை. கோயிலுக்குப் போய் நின்று தரிசித்து, ஒரு பக்தி உணர்ச்சியை அனுபவித்து விட்டுத் திரும்பியது போலத்தான் இருந்தது. அந்த உள்ளக் கோயிலில் உங்களுக்குத் தினமும் ஒரு ஆராதனை நடந்து கொண்டிருக்கிறது ராஜேஷ்.''

ராஜேஷ் அலட்சியமாக ஒரு முறை 'சூள்'கொட்டிக் கொண்டான்: ''அர்த்தமில்லாத ஒரு பிரமை சாந்தி. எனக்குப் புரியவில்லை. ஏனோ அவள் இப்படித் தன் வாழ்நாட்களைப் பாழ் பண்ணிக் கொண்டிருக்கிறாள். நான் அவளைச் சந்திப்பதும் இல்லை.என் பிறந்த நாளன்று வழக்கமாக அவள் அனுப்பும் வாழ்த்து, பிரசாதம் இவற்றுக்குப் பதிலாக ஒரு கடிதம்கூடப் போடுவதில்லை.''

''தெரியும் ராஜேஷ். அந்த அன்பில் நமக்குப் புரியாத ஏதோ ஒரு தத்துவம் அடங்கி இருக்கிறது. அது அவளுக்கு மட்டும் புரியட்டும், அது போதும். அந்தச் சந்திப்பில் உங்களுடைய உருவம் என் மனத்தில் எத்தனையோ கம்பீரமாக உயர்ந்து விட்டது. பெரிய மழை ஒன்று பெய்து தூசிகள், அழுக்குகளை யெல்லாம் அடித்துக் கொண்டு போவதைப் போல என் மனத்தை எவ்வளவோ சுத்தமாக ஆக்கிவிட்டது.''

''நான் ரொம்ப சாதாரணமான மனிதன் டார்லிங். எத்தனையோ பலவீனங்களை ஏற்றுக் கொண்டிருக்கும் ஒருவன். நீ செலுத்துகின்ற இத்தனை அன்புக்கு அருகதை கூட எனக்கு இல்லை'' என்று ராஜேஷ் உருகிப் போனான்.

சாந்தி, சோபாவில் அமர்ந்திருந்த அவன் மடிமீது உட்கார்ந்து கொண்டாள். காபி இருந்த கோப்பையைக் கையில் எடுத்து, அவன் உதட்டில் வைத்துக் குழந்தைக்குக் கொடுப்பது போலக் கொஞ்சம் கொஞ்சமாகத் தந்தாள்.

கையை அவளுக்குக் காட்ட முடியும்? அவளுடைய அங்க அசைவுகள், அன்பைக் கொட்டும் பார்வை, அப்படி அவனை ஆதரவாக அணைக்கும் விரல்கள், ஒவ்வொன்றிலும் அவனிடம் அவள் ஆசையாகக் காட்டும் காதலை ராஜேஷ் உணர்ந்தான். ஆனால் அவனால் அவளுடைய முக மலர்ச்சியையும், மனத்தின் மென்மையையும் ஏற்று அனுபவிக்கும் உணர்ச்சியை அப்படியே எடுத்துக் காட்டுவதைப்போல எதுவும் செய்ய முடியவில்லையே! எப்படிச் சொல்வான் அவன்? ''நீ எனக்கு வேணும் சாந்தி. நீதான் வேணும். இன்னும் கொஞ்சம்.... இன்னும் கொஞ்சம்....''

காபி முடிந்து விட்டது. அவளை இன்னும் கண்களால் பருகிக் கொண்டே உதட்டை எடுக்காமலே ராஜேஷ் அமர்ந்து கொண்டிருந்தான். சாந்தி காபி இருந்த கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, கையைத் தட்டி அவன் அருகே குனிந்து ''ஆச்சு, இன்றைக்குக் காலையில் இவ்வளவுதான்'' என்று சிரித்தாள்.

அப்போதுதான் விழித்துக் கொண்டது போல அவனுக்கு உணர்வு திரும்பிற்று.

*

அலுவலகத்தில் தன் மேஜை மீது வைக்கப்பட்டிருந்த அந்தப் பெரிய கடித உறையை விநோதமாகப் பார்த்துவிட்டு எடுத்துக் கிழித்தான் ராஜேஷ். உள்ளிருந்த ஜரிகை அலங்காரம் செய்த பிரமாதமான அழைப்புக் கடிதத்தை வெளியே எடுத்தான்.

பிரபல நட்சத்திரங்கள் இருவர் நடிக்கும் திரைப்படம் ஒன்றுக்கு முகூர்த்தம் போடுவதற்காக, அவனுக்கு வந்த அழைப்பு அது. பிரித்துப் பார்த்ததும் ராஜேஷ், சாந்தியை நினைத்துக் கொண்டான். அவள் திரைப் படங்களில் வைத்திருந்த பிரமையைப் பற்றி அவன் கேள்விப்பட்டிருக்கிறான். இந்த விழாவுக்கு அவளை அழைத்துக் கொண்டு போனால்...? இருவருக்குமே அது ஓர் இனிமையான பொழுதுபோக்காக இருக்கும்.

மாலையில் சாந்தியுடன் பேசிக் கொண்டிருக்கும்போது அவளிடம் அதைப் பற்றிச் சொன்னான். அவன் நினைத்ததைப் போல, அவள் உடனே மகிழ்ச்சியோடு அவன் சொன்னதை ஒப்புக்கொள்ளவில்லை:

''நாம் எதற்கு அங்கேயெல்லாம்போக வேண்டும்? எனக்கு அப்படிப்பட்ட ஆசை



''கன்னத்திலே ஒரு முத்தம் கொடுன்னு நம்ம பையன் ஏன் இப்படி பயப்படறான்...?''

எதுவும் இல்லை!'' என்று சாந்தி தயக்கத்தோடு சொன்னாள். தான் பெங்களூரில் கேட்டறிந்ததை ராஜேஷ் சொல்ல நினைத்தான். ஆனால் தன்னை அடக்கிக் கொண்டான். 'அந்த ரகசியம் வெளி வராத ஒன்றாகவே இருந்து விட்டுப் போகட்டும்' என்று எண்ணினான்.

''நான் இதுவரை போய்ப் பார்த்ததில்லை என்றுதான் உன்னை அழைத்தேன். அதுவும் ஹீரோ ஒரு ஸூபர் ஸ்டார். ஹீரோயின் ஒரு உலகப் புகழ் பெற்ற நாட்டிய மணி. அதனால் உனக்கும் இந்த விழாவில் ஒரு ஈடுபாடு இருக்கும் என்று நினைத்தேன். நீ வர இஷ்டப்படாவிட்டால் நானும் போகவில்லை.''

''அதற்காகச் சொல்லவில்லை. நமக்குள்ளே தனியாக எத்தனையோ பொழுதுபோக்குகள் இல்லையா? அங்கே கூட்டத்தில் நாம் எதற்குப் போய்க் கலந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். நீங்கள் விரும்பி ஆசைப்பட்டால்....''

''எனக்கு ஆசைதான் சாந்தி. அழகான திரைப்பட நட்சத்திரங்களுக்கு இணையான ஒரு பெண் என் மனைவி என்பதைப் பற்றி எனக்கும் பெருமை உண்டு. அவள் நாட்டியம் ஆடுவதிலும் கெட்டிக்காரி என்பதைப் புகழ்ந்து கொள்வதில் எனக்கு ஒரு தனி மகிழ்ச்சி உண்டு. உன்னோடு இப்படி ஒரு விழாவிற்குப் போய் வருவதில் எனக்கு எப்படி ஆசை இல்லாமல் இருக்க முடியும்?'' என்றான்.

சாந்திக்கு அவன் பேச்சும் பாராட்டும் பெருமையாக இருந்தது. ஆனால் கூடவே மனத்தில் ஏனோ ஒரு திகிலும் உண்டாயிற்று. ராஜேஷ் அவ்வளவு ஆசையுடன் அழைக்கும்போது மறுக்க அவளுக்கு மனம் இல்லை. அவளுக்கும் அந்தப்



*மனைவி:* நம்ம உஷாவுக்கு வயசு ஏறிக் கிட்டே போவுதே, சீக்கிரம் கல்யாணம் பண்ண வேண்டாமா..?

*கணவன்:* அழகா லட்சணமா ஒரு பையன் வர்ற வரைக்கும் அவ காத்துக் கிட்டிருக்கட்டுமே...!

*மனைவி:* எங்கப்பா அது மாதிரியா காத்துக்கிட்டிருந்தார்...!

---

புகழ்பெற்ற நாட்டிய நடிகையை நேரில் சந்திக்க ஆசைதான்.

''சரி, நாளைக்குக் கொஞ்சம் முன்ன தாகவே வந்து விடுங்கள், போகலாம். நீங்கள் என்னிடம் கேட்ட எதை நான் 'இல்லை' என்று சொல்லி இருக்கிறேன்?'' என்று அவன் தோளில் சாய்ந்து கொண்டாள்.

மறுநாள் அவனுக்கு அலுவலகத்தில் வேலையே ஓடவில்லை. அது போன்ற சந்தர்ப்பங்களில் சாந்தி தன்னை மிகவும் கவனத்துடன் அலங்காரம் செய்து கொண்டு வருவாள். அவளுடைய இயற்கையான அழகுக்கும், எடுப்பான தோற்றத்துக்கும் அவளுடைய புதுமையான அலங்காரங்கள் மெருகு தந்தது போல இருக்கும். அப்போது அவளைப் பார்ப்பதும், அவளோடு செல்வதுமே ராஜேஷிற்கு ஒரு தனிப் பெருமையாக இருக்கும்.

வீட்டுக்கு வந்ததும் அவன் செய்து கொண்டு வந்திருந்த கற்பனைகூட அவளுடைய தோற்றத்துக்குப் போதுமான தாக இல்லை. ஆசையுடன் அவளைத் திருப்பி ஒவ்வொரு கோணத்திலும் நிறுத்தி அழகு பார்த்தான். அத்தனை அழகான மனைவியை அடைந்திருப்பது பற்றி அவன் மனத்தில் சொல்லவொண்ணாத பெருமை உண்டாயிற்று.

அவர்கள் புறப்பட்ட பிறகு வழிநெடுக ஏதோ ஒரு சாக்கில் அவளைப் புகழ்ந்து கொண்டே வந்தான். அப்போதுதான் மணமான தம்பதியரைப் போல அவள் அழகையும் பேச்சையும் ரசித்தான். சாந்தியின் மனத்தில் இதை யெல்லாம் உணர்ந்து அனுபவித்த போது, அளவு மிகுந்த குதூகலம் ஏற்பட்டது. ஸ்டுடியோவில் தான் பிறர் கவனத்தைக் கவரப் போவதை எண்ணிக் கொஞ்சம் கர்வமும் தோன்றியது.

ஸ்டுடியோவில் பம்பாய் நகரின் புகழ் பெற்ற, பிரபலமான புள்ளிகள் பலரும் வந்திருந்தார்கள். அலங்காரங்களுக்கு நடுவே முதற் காட்சிக்கான ஏற்பாடுகளே புதுமையாக இருந்தன. காமிராவை முடுக்கிவிட, பெரிய படத் தயாரிப்பாளர் ஒருவர் வந்திருந்தார். விழாவை ஒட்டி, ஒரு சிறு விருந்தும் மது வகைகளும்கூட ஏற்பாடாகி இருந்தன.

'ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச்' நிபுணர் ஒருவருடன் ராஜேஷ் சற்று ஒதுங்கினாற்போல நின்று பேசிக் கொண்டிருந்தான். சாந்தி வேறு ஒரு பெண்மணியுடன் பேசியபடி 'செட்'டின் அருகே போய்க் கொண்டு இருந்தாள். அப்போது ஒரு குரல் அவளைத் தடுத்து நிறுத்தியது. சாந்தி வியப்புடன் திரும்பிப் பார்த்தாள்.

அவளை அழைத்தவள் ஆஷாவேதான். கவர்ச்சியான 'மினி ஸ்கர்ட்' உடையும், விரித்துத் தோள்மேல் புரளவிட்ட கூந்தலுமாக, இளம் மேனியின் பளபளப்புத் தெரிய நின்றாள் ஆஷா. அவள் கையுடன் கரம் கோத்து நின்றவரைப் பார்த்ததும் சாந்தி திடுக்கிட்டாள். கண்களில் மது அருந்திய தடுமாற்றம் தெரிய, அவர் விஷமமாகச் சிரித்தார்.

'நாகராஜ்! இங்கே எப்படி வந்தார் இவர்?'

அவள் திகைப்பு தணிவதற்கு முன், அவளை இன்னொரு குரல் அழைத்தது. அந்தக் கனிவான குரலும், அவளை அப்படி அழைக்கும் விதமும் சாந்திக்கு மிகவும் பழக்கமானவை. பார்க்காமலேயே அது யார் என்பதை அவள் சொல்லிவிடுவாள். சாந்தியின் உடலில் குப்பென்று வியர்வை பொங்கிற்று; தலை சுற்றியது.

''மிஸ்டர் ராஜேஷ், உடனே வாருங்கள்'' என்று ஒருவர் ஓடி வந்து ராஜேஷின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போனார். அவருடன்கூட பரபரப்புடன் ராஜேஷ் அந்த இடத்தை நோக்கி விரைந்தான்.

மயங்கி விழுந்திருந்த சாந்தியை அங்கே ஒரு சோபாவில் சாய்த்துப் படுக்க வைத்திருந்தார்கள்.

(தொடரும்)




**19** We make a big mistake in not telling the truth when we can, because we do not always tell it when we want to.

— MONTESQUIEU.

அங்கேயிருந்த ஒரு டாக்டர், சாந்தியின் நாடியைப் பிடித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். ஆஷா அவள் முகத்தின் மேல் கைக்குட்டையினல் விசிறுவதை ராஜேஷ் பார்த்தான். பரபரப்புடன் சாந்தியைத் தொட்டு, ''சாந்தி, சாந்தி, என்ன ஆயிற்று?'' என்று உலுக்கினன். சாந்தி கண் திறக்கவில்லை.

''ஒன்றும் கவலை இல்லை. அதிர்ச்சிதான். உடனே காரில் நர்ஸிங்-ஹோமுக்கு அனுப்புங்கள்'' என்ருர் அந்த டாக்டர். ஆம்புலன்ஸுக்கு போன் செய்ய ஒருவர் விரைந்து ஓடினர். அதற்குள் மயக்கம் தெளிய, முதலுதவி செய்வதில் அந்த டாக்டர் ஈடுபட்டார். ஒருமுறை கண்ணை விழித்துப் பார்த்துவிட்டு சாந்தி மறுபடியும் கண்களை மூடிக் கொண்டு விட்டாள்.

ராஜேஷ் அந்த ஆம்புலன்ஸ் வண்டி வந்து நின்றதும், 'ஸ்ட்ரெச்ச'ரில் அவளைத் தூக்கிக்கொண்டு போய் ஏற்றுவதற்கு ஏற்பாடு செய்தான். ஆம்புலன்ஸ் வண்டியைத் தொடர்ந்து அவனும் செல்ல, தன் காரைத் திறந்து ஏறப் போனன். அப்போது அவன் தோள்மீது ஒரு கை படிந்தது.

திரும்பிப் பார்த்தபோது, ஆஷா நின்று கொண்டிருந்தாள். அவளை சாந்தியின் அருகே பார்த்தது அவனுக்கு நினைவில்லை. அப்போதுதான் அவள் அங்கே நிற்பதை முதன் முதலாகத் தெரிந்து கொண்டவனைப் போலத் திகைத்துப் போனன். புருவத்தை நெரித்து ஆச்சரியத்துடன் கேட்டான்:

''நீ எங்கே வந்தாய்?''

''இப்போது உங்களுடன் நர்ஸிங்-ஹோமிற்கு வருவதற்காக.''

''சரி, ஏறிக் கொள். அவசரமாகப் போக வேண்டும்.''

''சாவியை என்னிடம் கொடுங்கள் ராஜேஷ். நான் ஓட்டிக் கொண்டு வருகிறேன். இப்போது உங்கள் மனம் இருக்கும் நிலையில் நீங்கள் 'ட்ரைவ்' பண்ண

முடியாது'' என்று கெஞ்சுவது போல ஆஷா சொன்னாள்.

ராஜேஷ் ஒரு நிமிடம் யோசனையுடன் நின்றான். பிறகு ''சரி, இந்தா'' என்று சொல்லி சாவியைக் கொடுத்துவிட்டு உள்ளே ஏறிக் கொண்டான். ஆம்புலன்ஸ் வண்டி புறப்பட்டு விட்டது. அதன் சிவப்பு விளக்கையே தொடர்ந்து காரை ஓட்டிக் கொண்டு போனாள் ஆஷா.

''என்ன ஆயிற்று ஆஷா? நீ அவள் அருகில் இருந்தாயா? எப்படி அவள் மயக்கம் போட்டு விழுந்தாள்?'' என்று கேட்டான்.

''ஒன்றுமில்லை. நீங்கள் வேறு குழப்பிக் கொள்ளாதீர்கள். அவளுக்கு ஏதோ ஓர் அதிர்ச்சி; அவ்வளவுதான்'' என்றாள் ஆஷா.

''எதற்காக அதிர்ச்சி ஏற்பட வேண்டும்? மாலையில் நாங்கள் வரும்போது அவள் மகிழ்ச்சியே உருவாக இருந்தாள். அவளுடைய நடை, உடை, பேச்சு எல்லாவற்றிலும் உல்லாசம் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்தது. நான்கூட அவளை 'சாந்தி, இன்றைய படத்தின் 'ஹீரோயின்' நீ அல்ல. உன்னைப் பார்த்தால் அப்படி சந்தேகப்பட்டுவிடப் போகிறார்கள்' என்று பரிகாசம் செய்தேன்.''

''இப்போது இந்த விழாவில் சாந்திதான் ஹீரோயின் ஆகிவிட்டாள். எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்துவிட்டாளே! மயக்கமுற்று அவள் கீழே விழுந்த பிறகு முக்கியமான நடிக நடிகையரைக் கூட யாரும் கவனிக்கவில்லை. ஆனால்....உங்களை ஒன்று கேட்கலாமா?''

''கேள், ஆஷா.''

''எதற்காக சாந்தியை இங்கே அழைத்து வந்தீர்கள்? அவளுக்கு இந்த சபலம் இன்னும் இருக்கிறதா என்று பார்க்கவா? அவளுக்கு இப்படி ஒரு சந்திப்பு நேரக் கூடும் என்று கற்பனை செய்து பார்த்து அழைத்துக் கொண்டு வந்தீர்களா? உண்மையை என்னிடம் சொல்லுங்கள்.''

''நோ. நோ. டோன்ட் பி ஸில்லி! நான் அவ்வளவு குறுகலான மனம் கொண்டவன் இல்லை. ஒரு பொழுது போக்காகத்தான் வந்தோம். சந்திப்பு என்று எதைச் சொன்னாய் ஆஷா?''

''நீங்கள் கவனிக்கவில்லையா? மிஸ்டர் பாலிகாவும், நாகராஜூம் அவள் அருகே நின்று கொண்டிருந்தார்களே?''

ராஜேஷ் திடுக்கிட்டுப் போனான். அந்தப் பெயர்கள் அவன் நெஞ்சில் லேசான கலக்கத்தை உண்டு பண்ணின. அவர்கள் பெயர்களை மட்டும் தான் கேள்விப்பட்டிருக்கிறான். அவர்களை நேரில் சந்தித்த தில்லை. அதனால்தான் அவர்களைப் பார்த்தும் அவன் அடையாளம் கண்டு கொள்ளவில்லை:

''அவர்களை நான் சந்தித்ததில்லைஆஷா. உன்னுடன் எப்போதும் வருவாரே ஒரு 'ராம்', அவரை மட்டும்தான் எனக்குத் தெரியும்.''



ஆஷா அவன் தோள்மீது கையை வைத்தாள். ஆதரவுடன் அவனைத் தட்டிக் கொடுத்தாள். அவனுக்குத் தைரியம் சொல்லுவதைப் போல அவள்செய்கை இருந்தது:

''இன்று அவர்கள் அங்கே வந்திருந்தார்கள். மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள். அவர்களைப் பார்த்ததும் தான், உங்கள் சாந்தி அப்படி மயங்கி விழுந்து விட்டாள்.''

ராஜேஷிற்குத் தூக்கி வாரிப் போட்டது. கண்களைச் சுற்றிக் கைக்குட்டையை எடுத்துக் கட்டிக் கொண்டான். இரு கைகளையும் தலைக்குமேல் வைத்துக் கொண்டான். அவனுடைய மனக் கலக்கத்தை அவள் புரிந்து கொண்டு விட்டாள்:

''ராஜேஷ், நீங்கள் ஏன் இப்படி உடனே கலங்கிப் போகிறீர்கள்? என்ன ஆகிவிட்டது இப்போது? நீங்கள் இப்படியெல்லாம் தடுமாறிப் போவீர்களோ என்றுதான், நான் உங்களுடன் வந்திருக்கிறேன். எங்கே? என்னைப் பாருங்கள். என் மேல் சாய்ந்து கொள்ளுங்கள்'' என்று அவனை ஆதரவுடன் தன்புறம் இழுத்துக் கொண்டாள்.

ராஜேஷ் ஒரு குழந்தையைப் போல அவள்மீது சாய்ந்து கொண்டான். ஆஷா ஒரு கையால் 'ட்ரைவ்'செய்தபடி, மறு கையால் அவன் தலைமுடியை மெதுவாகத் தடவிக் கொடுத்தாள்: ''டோண்ட் ஒர்ரி. நீங்கள் சிறு குழந்தை இல்லை. தைரியமாக இருக்க வேண்டும்'' என்று மீண்டும் மீண்டும்



சொல்லி அவன் முதுகில் தட்டிக் கொடுத்தாள்.

நர்ஸிங் - ஹோம் வந்து விட்டது. சாந்தியை இறக்கி உள்ளே அழைத்துக் கொண்டு போனார்கள். ஆஷா அவனை மெல்லத் தட்டி எழுப்பினாள். கைக் குட்டையினால் முகத்தை ஒற்றிக் கொண்டு ராஜேஷ், காரிலிருந்து கீழே இறங்கினான்.

''ஆஷா, நீயும் என்னுடன் வாயேன். எனக்கு என்னவோ போல இருக்கிறது'' என்று ராஜேஷ் அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

''வேண்டாம் ராஜேஷ். நான் இங்கேயே காரில் இருக்கிறேன். நீங்கள் உள்ளே போய் வாருங்கள். உங்களுடன் நான் வருவது சரியில்லை. என் உடையைக் கவனித்தீர்களா? என்னை ஒரு நிமிடம் பார்க்கும் யாரும், உங்களைப் பற்றித் தப்புக் கணக்குப் போட்டு விடுவார்கள். நீங்கள் கண்ணியமாக இருக்க வேண்டியவர். அப்படியே போற்றப் பட வேண்டியவர். உங்களுடன் வருவதற்கு எனக்கு அருகதை இல்லை'' என்றாள்.

''ஆஷா..ஆஷா'' என்று குரல் தழுதழுக்கக் கூறி நின்றான் ராஜேஷ். பிறகு அவளை வற்புறுத்திப் பயனில்லை என்று நர்ஸிங்-ஹோமினுள் செல்ல,

மெதுவாக நடக்கத் தொடங்கினன். அந்த நிலையிலும் அவனுக்கு ஆஷாவின் மீது ஒரு பச்சாதாப உணர்ச்சி ஏற்பட்டது. அவ்வளவு நல்ல உள்ளம் படைத்தவளுக்கு அவனால் எதுவும் செய்ய முடியவில்லையே என்று அவன் மனம் ஏங்கிற்று.

உள்ளே வந்ததும் சாந்தியை எடுத்துச் சென்ற அறையின் வெண்ணிறக் கதவு மூடப்பட்டிருப்பதைப் பார்த்தான். டாக்டரும் நர்ஸும் உள்ளே போயிருக்க வேண்டும். ஏனென்றால் வெளியே சிவப்பு விளக்கு எரிந்தது. யாரும் அங்கே வரக் கூடாது என்று அது அடையாளம் காட்டி எரிந்து கொண்டிருந்தது.

ராஜேஷ் வெளியே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். அவன் மனத்தில் பல்வேறு உணர்ச்சிகள் அலை புரண்டன. ஆஷா அங்கே இருந்து பேசிக் கொண்டிருந்தால் அவனுடைய மனம் சமாதானம் ஆகியிருக்கும். ஆனால் அவள் அருகில் இல்லை. எல்லாவற்றையும்விட அவன் மனத்தில் ஓங்கி நின்ற உணர்ச்சி ஒன்றுதான்: 'சாந்திக்கு எப்போது நினைவு திரும்பும்?' என்ற ஒரே கவலைதான் அது.

சில நிமிடங்களில் கதவு திறந்தது. டாக்டர் வெளியே வந்தார். அவனைப் பார்த்துவிட்டு ''நீங்கள் அந்தப் பெண்ணின் கணவரா? உங்கள் பெயர்தான் ராஜேஷா?'' என்று கேட்டார்.

''எஸ், டாக்டர்.''

''நினைவு திரும்பியதும் அவள் உங்கள் பெயரைத்தான் முதலில் சொன்னாள். எப்போதும் உங்கள் ஞாபகம்தானா உங்கள் மனைவிக்கு?''

அதைக் கேட்டதும் அவன் உள்ளம் பாகாய் உருகிற்று. டாக்டரின் கையைப் பிடித்துக் கொண்டான்: ''சாந்திக்கு நினைவு திரும்பிவிட்டதா டாக்டர்? அவள் எப்படி இருக்கிறாள்? நான் உள்ளே போய்ப் பார்க்கலாமா?''

''தாராளமாகப் பார்க்கலாம். ஆனால் அதிகம் தொந்தரவு செய்ய வேண்டாம். இன்று இரவு முழுவதும் 'ரெஸ்ட்'டில் இருப்பது நல்லது'' எனறு சொல்லிவிட்டு கையைப் பிடித்திருந்த அவன் கைவிரல்களைப் பிடித்துக் குலுக்கினார்:

''கங்கிராஜுலேஷன்ஸ் மிஸ்டர் ராஜேஷ்.''

''எதற்கு டாக்டர்?''

''நீங்கள் ஒரு 'ப்ரௌட் ஃபாதர்' ஆகப் போகிறீர்கள். உங்கள் மனைவி தாய்மை அடைந்திருக்கிறாள்'' என்றார்.

''ஓ! உண்மையாகவா டாக்டர்? நீங்கள் சொல்வது உண்மைதானா?'' என்று மகிழ்ச்சி துள்ளக் கேட்டான் ராஜேஷ்.

''உண்மைதான். ஆனால் எந்தக் கணவருமே தனக்கு இப்படி ஒரு செய்தி முதலில் காதில் விழுந்ததும் உடனே நம்புவதில்லை'' என்று சிரித்தார் டாக்டர்.




''முன்னாலே போறவர் அஸிஸ்டெண்ட் டைரக்டர்...பின்னாலே போறவர்தான் டைரக்டர்!...''




அவனுடைய தோளில் தட்டிக்கொடுத்து விட்டு, "உங்கள் மனைவியிடம் இப்போது இதைச் சொல்ல வேண்டாம், தூங்கட்டும். காலையில் சொல்லிக் கொள்ளலாம்" என்று மேலே நடந்து போய்விட்டார். சிறு குழந்தையைப் போல அவன் பரபரப்புடன் கையைச் சொடுக்கிக் கொண்டு உள்ளே ஓடுவதைப் பார்த்த நர்ஸ், புன்னகையுடன் கைகளைத் துடைத்தபடி டாக்டரைத் தொடர்ந்து போனாள்.

**சா**ந்தி கண்களை மூடியவாறு படுத்திருந்தாள். கழுத்துவரை வெண்ணிற மான துணி போர்த்தி யிருந்தது. அவள் கூந்தலைப் பிரித்துக் கட்டிலுக்கு வெளியே தொங்கவிட்டிருந்தார்கள். அவளுடைய வெளுத்த முகத்தில் ஓர் அசாத்தியமான தூய்மை குடி கொண்டிருந்தது. ராஜேஷ் அவள் அருகே அமர்ந்து, "சாந்தி.. டார்லிங்" என்று அழைத்தான். குனிந்து அவள் கண்ணிமைகளின் மேல் மெதுவாக முத்தமிட்டான்.

சாந்தி சற்றே கண்களைத் திறந்தாள். அவன் முகத்தைப் பார்த்து அடையாளம் கண்டு கொண்டவுடன் கைகளை உயர்த்தி அவன்புறம் நீட்டினாள். அவளுக்கு அழுகை பொங்கி வந்தது. ராஜேஷ் அவளை அணைத்துக் கொண்டான். மெள்ள தடவிக் கொடுத்தான். ஆறுதல் சொல்வதற்குக் கூடக் குரல் வெளியே வராமல் தொண்டையை அடைத்துக் கொண்டது.

கொஞ்ச நேரம் விசித்துவிட்டு, சாந்தி தலையணையில் சாய்ந்து கண்களை ஆயாசத்துடன் மூடிக் கொண்டாள். ராஜேஷ் கைக்குட்டையினால் அவளுடைய கண்களை ஒற்றினான்:

"டார்லிங், ஒன்றும் இல்லை. உனக்கு ஒன்றும் இல்லை. பேசாமல் கொஞ்சம் தூங்கு. ஓய்வு எடுத்துக் கொண்டால் நீ சாதாரணமாக ஆகிவிடுவாய். டாக்டர் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்வார்."

அந்தக் குரல் சாந்திக்குத் தண்ணீருக்குள்ளிருந்து பேசுவது போலக் கேட்டது. டாக்டர் என்று அவன் சொன்னது அவளுக்குப் புரியக்கூட இல்லை. அவள் எங்கே இருக்கிறாள்? என்ன நடந்தது? கொஞ்சம் சிரமத்துடன் நினைத்தபோது கடைசியாக அவள் பாலிகாவைப் பார்த்ததும், தான் மயங்கி விழுந்ததும் ஞாபகத்துக்கு வந்தது. நெற்றியைச் சுளித்துக் கொண்டாள்; பல்லைக் கடித்துக் கொண்டாள்.

"வேதனையாக இருக்கிறதா சாந்தி? ஒன்றும் இல்லையே? நிம்மதியாக இரு" என்று அவள் கூந்தலைத் தடவிக் கொடுத்தான்.

"நீங்கள்.. இங்கேயே.. இருங்கள்.. என்னை விட்டு விட்டுப்.. போய் விடாதீர்கள்" என்று முணுமுணுத்த குரலில் சொன்னாள்.

"ஆகட்டும்" என்று அவன் சொல்வதற்கு முன் சாந்தியின் கண்கள் ஆயாசத்துடன் மூடிக் கொண்டன. அப்போது கதவைத் திறந்து கொண்டு டாக்டர் உள்ளே வந்தார்:

"மிஸ்டர் ராஜேஷ். நீங்கள் வெளியே போகலாம். உங்கள் மனைவிக்கு மன அமைதிக்கு ஊசி மருந்து கொடுக்கப்

போகிறேன். யாரும் அவளை இப்போது 'டிஸ்டர்ப்' செய்யக்கூடாது.''

ராஜேஷ் எழுந்து நின்று கொண்டான். தயங்கிய குரலில், ''நான் இன்று இரவு இங்கே இருக்கட்டுமா?'' என்று கேட்டான்.

''தேவை இல்லை. நீங்கள் போய் விட்டுக் காலையில் வரலாம். கவலைப்பட ஒன்றுமே இல்லை. எதற்கும் உங்கள் 'போன்' நம்பரை வேண்டுமானால், நர்ஸிடம் கொடுத்துவிட்டுப் போங்கள்'' என்று சாந்தியின் அருகே போய் நின்று கொண்டார் டாக்டர். நர்ஸ் கதவைத் திறந்து அவனை வெளியே போகச் சொல்வதைப் போல ஓரமாக ஒதுங்கி நின்றாள்.

வெளியே வந்த ராஜேஷ் சிறிது நேரம் பொறுத்திருந்தான். டாக்டர் போன பிறகு அவனுடைய போன் நம்பரை நர்ஸிடம் கொடுத்து விட்டுக் கிளம்பினான்.

காற்றில் பறப்பது போன்ற ஒரு மகிழ்வு உணர்ச்சியுடன் அவன் வெளியே நடந்து வந்து கொண்டிருந்தான். 'தான் ஒரு தந்தையாகப் போகிறோம்' என்ற நினைவு அவனைத் தாலாட்டிற்று. வாயைக் குவித்து உல்லாசமாக ஊதினான். பார்ப்பவர்கள் யாராவது என்ன நினைத்துக் கொள்வார்களோ என்பதையும் மறந்து வாய்விட்டுச் சிரித்தபடி தன் காரை நோக்கி ஓடினான்.

காருக்குள் கண்ணை மூடிக் கொண்டு 'ஸ்டியரிங் வீல்' மீது சாய்ந்து படுத்திருந்தாள் ஆஷா. கதவைத் திறந்து அவள் தோள்மீது தட்டி உலுக்கினான்: ''எழுந்திரு ஆஷா, எழுந்திரு. ஒரு சந்தோஷ சமாசாரம்'' என்று அவள் காதோடு சொல்லி அவள் கன்னத்தைக் கிள்ளினான்.

அவள் பதில் சொல்லவில்லை. நகர்ந்து அவனுக்கு உட்கார இடம் கொடுத்தாள். அவனுக்கு மகிழ்ச்சி வெறி தலைக்கேறி நின்றது. அவள் இடையைச் சுற்றிக் கையை வளைத்துக் கொண்டான். அவள் கைகள் அவன் மார்பின்மீது பதிந்து அவனை நிறுத்தியும், அவளால் தடுக்க முடியவில்லை.

அவன்,அவள் துவண்ட உடலைச் சிறிது நெகிழ்த்தித் தளர விட்டதும் ஆஷா நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள்: ''என்ன ராஜேஷ், சிறு குழந்தையைப் போல் இருக்கிறீர்கள்? என்ன நடந்தது? சாந்தி எப்படி யிருக்கிறாள்?'' என்று கேட்டாள்.

''ஆல்ரைட்.அவளுக்கு ஒன்றும் இல்லை. ஆனால் எனக்குத்தான் ஒரு 'ஸர்ப்ரைஸ்'. மகிழ்ச்சி ததும்ப வைக்கும் ஒரு அதிர்ச்சி'' என்றான் ராஜேஷ்.

''இஸ் இட்? சொல்லுங்களேன்'' என்று ஆஷா அவன் கையைப் பிடித்துக் கொண்டாள்.

''சாந்தி தாய்மை அடைந்திருக்கிறாள். நான் அப்பா ஆகப் போகிறேன். அவளுக்கு நேர்ந்த மயக்கமும்கூட இதனால்தான் என்று நினைக்கிறேன். ஓ, ஆஷா, கங்கிராஜுலேட் மீ'' என்று மகிழ்ச்சி துள்ளக் கூறினான். அவளைச் சீண்டுவது போல இழுத்துக் கொண்டான்.

இப்போது ஆஷாவின் குரலிலும் ஒரு மகிழ்ச்சி விளையாடிற்று: ''ஓ! எவ்வளவு சந்தோஷமான நியூஸ்? ஓ! ராஜேஷ்.. நீங்கள் ஒரு அப்பா ஆகப் போகிறீர்களா? நான் இதை எதிர்பார்க்கவே இல்லை'' என்று அவனை அன்புடன் தழுவிக்கொண்டாள். ஒரு குழந்தையைச் செல்லமாகக் கொஞ்சுவது போல அவன் முதுகைத் தொட்டுத் தொட்டு அணைத்துக் கொண்டாள்.

அவளுடைய ஸ்கர்ட்டிலிருந்து அவள் வைத்திருந்த பர்ஸ் அப்போது நழுவிக் கீழே விழுந்தது. 'ஓ' என்று அவள் குனிவதற்கு முன் ராஜேஷ் அதைக் குனிந்து எடுத்தான்.

''இது ஆண்கள் உபயோகிக்கும் பர்ஸ் அல்லவா? எங்கிருந்து உன்னிடம் வந்தது?'' என்று கேட்டபடி 'ஸ்விட்சை'ப் போட்டான். உள்ளே பரவிய வெளிச்சத்தில் அந்த பர்ஸைப் பிரித்துப் பார்த்தான்.

''கொடுங்கள் இப்படி. எதற்கும் இருக்கட்டும் என்று அவசரமாக பாலிகாவின் பர்சைக் கூடவே எடுத்துக் கொண்டு வந்தேன்'' என்று ஆஷா அதைப் பிடுங்கினாள். அப்போது அது அவர்களுக்கு நடுவே விழுந்து நன்றாகப் பிரிந்தது. குனிந்து பார்த்த இருவரும் 'ஷாக்' அடித்தது போல விலகி உட்கார்ந்தார்கள்.

(தொடரும்)




## 20

Call no man Foe. But never love
a stranger. Build no plan, nor any star persue.
—STELLA BENSON.

பாலிகாவின் பர்ஸில் வைத்திருந்த புகைப்படம் இருவர் பார்வையிலும் விழுந்தது. அவர்களால் அதிலிருந்து கண்ணை எடுக்கவே முடியவில்லை. அது ஓர் அழகான பெண்ணின் படம். ஆனால் அதை அந்த இடத்தில் இருவரும் எதிர் பார்க்கவே இல்லை. அதுவும் அந்தத் தோற்றத்தில்....

அது சாந்தியின் படம்; அன்று மாலை அவள் செய்து கொண்டிருந்த அதே கூந்தல் அலங்காரம், அதே போன்ற தோள் அழகு தெரியும் சோளி, புடவையின் இழுத்துக் கட்டிய அமைப்பு-எல்லாம் அப்படியே அந்தப் புகைப் படத்திலும் இருந்தது.

இருவருக்கும் இப்போது அன்று மாலை நடந்த நிகழ்ச்சி புரிந்தது. சாந்தியின் மயக்கத்துக்குக் காரணமும் புரிந்தது. ராஜேஷின் மனைவியாக இன்று அவர்களிடையே நடமாடும் சாந்தியின் தோற்றமும், அன்று பாலிகாவுடன் பழகிய அந்தப் பெண்ணின் தோற்றமும் எப்படி ஒரே மாதிரியாக ஒத்திருந்தது? அந்த நிலையில் தன்னை பாலிகா சந்தித்து விட்டதுதான் சாந்திக்கு அதிர்ச்சியா? அத்துடன் அப்படி அவளைப் பார்த்ததும், பாலிகாவுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய உணர்ச்சிகளையும் சாந்தி ஓரளவு புரிந்து கொண்டு விட்டாளா?

ஆஷா 'பட்'டென்று அந்த பர்ஸை மூடித் தன் கழுத்துக்குக் கீழே சோளியின் மறைவில் போட்டுக் கொண்டாள். எதுவும் பேசமுடியாமல் அவள் குரல் அடைத்தது. கண்களில் லேசாக நீர் ததும்பிற்று. அன்று அந்த நிலையில், அவனுடைய மகிழ்ச்சி பொங்கி வரும் வேளையில் இப்படி ஓர் அனுபவமா? நினைக்கும் போது அவளுக்கு அவன் மீது இரக்கம் பிறந்தது. அது அவள் கண்ணிலும் நீராகப் பெருகிற்று.

மணியன்

எவ்வளவோ சந்தோஷத்துடன் அங்கே வந்தான் ராஜேஷ். ஏதும் நடந்திராவிட்டால், அன்று இரவு அவன் மகிழ்ச்சியின் பெருக்கில் தூங்கி இருக்கக் கூட மாட்டான். மறு நாள் காலையில் சாந்தியைப் பார்க்கப் போகும் நிகழ்ச்சியையும், அவளுடன் பேசப் போவதையுமே மீண்டும் மீண்டும் நினைத்து, கண் விழித்தபடி கனவு கண்டு கொண்டிருந்திருப்பான்.

இப்போதும் அவனால் தூங்க முடியாது. ஆனால் இந்த நினைவுகள் வேறு விதமாகத்தான் இருக்கும். தேனிலவு முடிந்து திரும்பிய பிறகு அவர்கள்கழித்த இரவு ஒன்றில், அவளிடம் ''உன் வாழ்க்கையில் இதுவரையில் நேர்ந்துள்ள ரகசியமான அனுபவங்கள் என்ன?'' என்று அவன் கேட்டான். எவ்வளவு பயங்கரமான செய்கை ஒன்றன் மூலம் தன் வாழ்க்கையின் நிம்மதியையே அழித்துக் கொள்கிறான் என்பதை அவன் அப்போது உணரவில்லை.

இப்போது உணர்ந்து கொண்டு வருகிறான். அவன் வாயால் பேசி மனத்தைத் திறந்து கொட்டினான். அவள் தன் செய்கைகள் மூலம் அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் புரிய வைத்துக் கொண்டு வருகிறாள். அன்று அவன் அதை ஏன் தொடங்கி வைத்தான்? அதன் விளைவுகளுக்காக இப்போது வேதனைப்படுகிறான்? நினைத்தபோது நெஞ்சில் அந்தக் கேள்வி இடித்தது.

ஆஷா அவன் தலையைத் தன் மீது மெல்லச் சாய்த்துக் கொண்டாள். அவன் தோளை மெல்ல வருடிக் கொடுத்தாள். அன்பு ததும்பும் குரலில் ஆறுதலாகப் பேசினாள்: ''வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள் ராஜேஷ். ஒரு வேளை நாம் சந்தேகப்பட்டு, கலங்கும் விஷயங்களுக்கு ஆதாரமே எதுவும் இல்லாமல் போகலாம். இன்னும் நான் சாந்தியை...''

ராஜேஷ் அவள் வாயைக் கையால் மூடினான். எதுவும் பேச வேண்டாம் என்பதைப் போல விரலை அசைத்துக் காட்டினான். அவளை நகரச் சொல்லி விட்டு காரைத் தானே 'ட்ரைவ்' செய்யத் தயாரானான்.

''எங்கே போகிறோம் ராஜேஷ்? உன் வீட்டுக்கு வேண்டுமானாலும் போகலாம். உனக்கு என் 'கம்பெனி' தேவை என்று நீ நினைத்தால் நான் இன்று இரவு உன்னிடமே தங்கி விடுகிறேன். எனக்கு எந்த அசௌகரியமும் இல்லை. ஆனால் நீ தனித்திருக்க விரும்பினால் நான் உன்னைத் தொந்தரவு செய்யமாட்டேன். என்னை என் ஓட்டலில் இறக்கி விட்டுவிடு. அப்புறம் சந்திப்போம்'' என்றாள்.

''உன் ஓட்டலில் நீ இறங்கிக் கொள் ஆஷா. நான் வீட்டுக்குப் போகிறேன். நான் தனியாக இருக்கவே விரும்புகிறேன்'' என்று ராஜேஷ், காரை ஸ்டார்ட் செய்தான். அப்புறம் அவர்கள் பேசவே இல்லை. விளக்குக் கம்பங்களிலிருந்து ஒளி அவன் முகத்தில் விழுந்து மறையும் போதெல்லாம், ராஜேஷின் சோகம் ததும்பும் முகம், ஆஷாவின் மனத்தில் பரிதாப உணர்ச்சியைத் தூண்டிற்று. ஆனால் அந்த நிலையில் தான் எது பேசினாலும் அவனுடைய வருத்தம் அதிகமாகவே ஆகும் என்று உணர்ந்த ஆஷா, மௌனமாகவே அமர்ந்து வந்தாள். ஓட்டலுக்குச் சற்று முன்பாகவே இறங்கி, விடை பெற்றுக் கொண்டாள்.

இரவு முழுவதும் ராஜேஷ் தூங்கவே இல்லை. வீட்டுக்குத் திரும்பியதும் அவன் உடைகளைக் களைந்துவிட்டு வெகு நேரம் வெந்நீரைப் பொழியவிட்டு 'ஷவ'ரில் குளித்துக் கொண்டே இருந்தான். அப்புறம் சாந்தி மாலையிலேயே தயார் செய்து வைத்திருந்த உணவைக் கொஞ்சம் சாப்பிட்டுவிட்டு நாற்காலியில் சாய்ந்து கொண்டான். சிகரெட்டுகள் சங்கிலியாகப் புகைந்து கொண்டே இருந்தன. ஆனால் அவன் மனத்துக்கு மட்டும் நிம்மதி கிடைக்கவே இல்லை.

மதுவை எதுவும் சேர்க்காமல் 'நீட்'டாகவே அருந்திவிட்டு, படுக்கையில் சாய்ந்து கொண்டான். வழக்கமாக அதற்குப் பின் அவன் தூங்கி விடுவான். ஆனால் அன்று மூன்று மணி வரையில் அவனால் தூங்கவே முடியவில்லை. அதற்குப் பிறகு ஏதோ கனவு மாதிரி இருந்தது. சாந்தியின் உருவம், அந்த உல்லாசமான தோற்றம் அந்த நினைவில் வந்து மறைந்து கொண்டிருந்தது.

காலையில் கண்ணைக் கசக்கிக் கொண்டு எழுந்திருந்தான். 'பளீர்' என்று முகத்தில் வெயில் அடித்தது. மணி ஏழு இருக்கலாம். முந்தைய நாள் மாலையிலும் இரவிலும் நடந்தவை எல்லாம் அவனுக்கு அப்போது ஒரு கனவு போலத்தான் இருந்தன. எழுந்து பல் தேய்க்க பிரஷ்ஷுடன் கிளம்பினான். அப்போது அவன் பார்வையில் சாந்தியின் படுக்கை பட்டது.

அந்த அறைக் கதவு திறந்திருந்தது. உள்ளே அலங்காரம் செய்து கொள்ளும் மேஜையின் முன் இருந்த ஸ்டூலில், அவள்



முதல் நாள் மாலை அவிழ்த்துப் போட்டிருந்த புடவையும் உள்ளாடைகளும் குலைந்து கிடந்தன. தடுமாறிய வண்ணம் ராஜேஷ் அங்கே போனான். அந்த ஆடைகளை அப்படியே அள்ளி எடுத்துக் கொண்டான். மார்பில் அவை பட்டபோது

அவனுக்கு அவளுடைய அந்தரங்கத்தையே பகிர்ந்து கொள்வது போன்ற ஒர் உணர்ச்சி ஏற்பட்டது. அவனையும் மீறிக் கண்களில் நீர் ததும்பிற்று. இன்னும் அவள் அவன் சாந்திதானா?

இப்போதும் என்ன நடந்து விட்டது? சாந்தி அவனுடைய மனைவி அல்லவா? அவளுடைய அழகும், அந்தரங்க உணர்ச்சிகளும் அவனுக்கே சொந்தம் அல்லவா? அவர்கள் ஒருவருக்கொருவர் அனுபவித்துக் கொண்ட இனிய சுகம் தம்பதியரான அவர்களுக்கு மட்டும் நேர்ந்ததுதானே? பின் அவனுடைய மனத்தில் இந்த ஏக்கம் ஏன்?

ஆனாலும் அந்த இன்ப உணர்ச்சி இப்போது முழு இன்பமாகத்தான் இல்லை. ஏதோ ஒன்று அதில் கலந்து



"ஏன் சார், வயலின் புதுசா இருக்கே!... எப்போ வாங்கினீங்க?"

"அது என்னுது இல்லே சார்... பக்கத்து வீட்டுக்காரருடையது!"

"நீங்க கத்துக்கலாம்னு வாங்கி வச்சிருக்கீங்களா?"

"இல்லே... அவர் கத்துக்காம இருக்கறதுக்காகத்தான் இரவல் வாங்கி வச்சிருக்கேன்!"

நின்று அவனை உறுத்திக் கொண்டிருக்கிறது. சாந்தியை நினைக்கும் போதெல்லாம் அந்த உணர்ச்சியும் கூட வருகிறது. அந்த பர்ஸ் - அந்தப் புகைப்படம் - 'ஐயோ பாவம்' என்று ஆஷா தட்டிக் கொடுத்தது - எல்லாம் நினைவுக்கு வருகிறது. நெஞ்சு பொறுத்துக் கொள்ள மறுக்கிறது.

டெலிபோன் மணி அடித்தது. நர்ஸிங் ஹோமிலிருந்து நர்ஸ் பேசினாள்:

"மிஸ்டர் ராஜேஷ், குட் மார்னிங். உங்கள் மனைவிக்கு உடம்பு நன்றாகத் தேவலை. உங்களைப் பார்க்க மிகவும் விரும்புகிறாள். முடிந்தால் சீக்கிரமே கிளம்பி வாருங்கள். உங்கள் மனைவி கேட்டால் என்ன சொல்லட்டும்?"

ராஜேஷ் அரை நிமிடம் தயங்கினான். பிறகு, "அரை மணியில் வந்து பார்ப்பதாகச் சொல்லுங்கள்" என்று சொல்லி விட்டு, போனைக் கீழே வைத்துப் பெருமூச்சு விட்டான். அந்த நேரத்திலும் அவளைப் பார்க்கும் ஆசைதான் அவன் மனத்தில் மேலோங்கி எழுந்தது. முதல் நாள் மாலை அதே இடத்தில் சாந்தி முழு அலங்காரத்துடன் வந்து நின்று கொண்டு "எப்படி இருக்கிறது?" என்று அவனைக் கேட்டதும், அவன் பின்புறமாக நின்று அவளைக் கலையாமல் அணைத்துக் கொண்டதும் ஞாபகத்துக்கு வந்தன. எவ்வளவு பெருமையுடன் காரில் ஏறிப் போனான் அவன்? இப்போது அவன்[illegible]லே? எங்கேயோ சரிந்து விழுந்து விட்ட[illegible]னா?

ராஜேஷ் அவசரமாகக் குளித்து, உடையணிந்து காரில் புறப்பட்டான். சாந்தியை முதன் முதலில் பார்க்கும் போது தன் மன உணர்ச்சிகள் எதையும் காட்டிக் கொள்ளக் கூடாது என்று முடிவு செய்து கொண்டான். அவளாகப் பேச்செடுத்தாலொழிய முதல் நாள் மாலையில் நடந்ததைப் பற்றிப் பேசுவதே இல்லை என்றும் தீர்மானித்துக் கொண்டான்.

அவளுடைய அறை வாசலில் பூட்ஸைக் கழற்றிவிட்டு, மெல்ல அடி மேல் அடி வைத்து உள்ளே நுழைந்தான். சாந்தி கண்களை மூடியபடி படுத்திருந்தாள். அவனைக் கண்டதும் அவளுடைய உதட்டில் ஒரு புன்னகை மலர்ந்தது. கண் ஜாடையால் அவனை அருகே அழைத்தாள். ராஜேஷ் அருகே வந்து அமர்ந்ததும் அவன் கையை எடுத்துக் கன்னத்தில் ஒற்றிக் கொண்டாள். மெதுவான குரலில் பேசினாள்:

"நமக்கு நடுவே ஒரு ஜூனியர் ராஜேஷ் வரப் போகிறான்."

அவள் கண்கள் ஆச்சரியத்தினால் [illegible]ந்தன. அவன் அந்த விஷயம் தனக்குத் தெரியும் என்று சொல்லிக் கொள்ளவில்லை. அவள் சொல்வதை அப்போது தான் கேட்பவனைப் போல "ஈஸ் இட்?" என்று அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டான். குனிந்து அவள் நெற்றியில் முத்தமிட்டான்.

"நர்ஸ் சொன்னாள். நான் உங்களை ரொம்பவும் பயமுறுத்தி விட்டேன் இல்லையா?"

''பயந்துதான் போய் விட்டேன் சாந்தி. ஆனுல் டாக்டர் கவலைப்பட ஒன்றும் இல்லை என்று சொன்னுர்.''

''நான் மயக்கம் போட்டு விழுந்ததும் கூட அதனுல் தானும். ஆரம்பமே பெரிய 'சஸ்பென்'ஸுடன் இல்லை, ஏதோ ஒரு சினிமா மாதிரி?'' என்று சாந்தி சிரித்தாள். சினிமா என்ற சொல்லைக் கேட்டதும் ராஜேஷின் நெற்றி சுருங்கிற்று. அவள் அதைப் பார்க்கவில்லை.

இருவரும் ஐந்து நிமிடங்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது நர்ஸ் அங்கே வந்து அவனை டாக்டர் கூப்பிடுவதாக அழைத்துப் போனுள். அறையில் அவர், ராஜேஷை எதிர்பார்த்து உட்கார்ந்து கொண்டிருந்தார்.

''அவள் உடம்பு எப்படி இருக்கிறது டாக்டர்?''

''அநேகமாக நார்மல். இங்கே இரண்டு நாள் 'ரெஸ்'டில் இருக்கட்டும். நாளை மாலை நீங்கள் அழைத்துக் கொண்டு போகலாம். இது குழந்தையின் ஆரம்ப நிலை. இரண்டு மாதங்களுக்குள் இருக்கலாம் என்று நினைக்கிறேன். அதிர்ச்சி எதுவும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் குழந்தைக்கு ஆபத்து.''

''நேற்று மயக்கம் ஏற்பட்டது இந்த உடல் நிலையினுல்தான் என்று நீங்கள் நினைக்கிறீர்களா டாக்டர்?''

''அப்படி முழுவதும் சொல்லி விட முடியாது. ஏதோ ஒரு அதிர்ச்சிக்கு உள்ளாகி யிருந்ததை நான் காண முடிந்தது—ஸம்திங் ஸடன். அதனுல் தான் நான் சொல்கிறேன். அப்படிப்பட்ட அதிர்ச்சி எதுவும் மறுபடியும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.''

''இந்த அதிர்ச்சிக்கு என்ன காரணமாக இருக்கலாம்?''

''என்னுல் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. 'பேஷண்டின் கேஸ் ஹிஸ்டரி' தெரியாமல் எதையும் சொல்வதற்கில்லை. வேதனை தரும் நிகழ்ச்சி ஏதாவது நடந்திருக்கலாம்; அல்லது அப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சி திடீரென்று ஞாபகத்துக்கு வந்திருக்கலாம். நீங்கள் அதைப் பற்றி மனம் 'ரிலாக்ஸ்' ஆகும்படி லேசாகப் பேசிப் பார்த்துக் கொள்ளுங்கள். நீங்கள் அவருடைய கணவர். நான் அதிகம்சொல்ல வேண்டியதில்லை.''

''முக்கியமாக நான் தெரிந்து கொள்ள வேண்டியது ஏதாவது?''



''இந்தப் புத்தகத்திலிருந்து 'ஜோக்' திருடினதாகச் சொன்னீங்களே... பாருங்க... அந்த 'ஜோக்' இதோ அப்படியே இருக்கு...!''

''அவள் ஒரு 'சென்ஸிடிவ் உமன்' என்று தோன்றுகிறது. அதனுல் மன வருத்தம் ஏற்படும்படி ஏதும் நிகழாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அப்படி எதுவோ ஏற்கெனவே நிகழ்ந்திருக்கிறது. மற்றபடி கணவன் - மனைவி என்ற முறையில் உங்கள் உறவு எல்லாவிதத்திலும் வழக்கம் போல இருக்கலாம். அவசியமானுல் இரண்டு வாரத்துக்குப் பிறகு 'கன்ஸல்டேஷ'னுக்கு அழைத்துக் கொண்டு வாருங்கள்.''

அவர் மேஜைமீது 'போன்' மணி அடித்தது. அவனுக்குக் கை குலுக்கி விடை கொடுத்து விட்டு டாக்டர் போனை எடுத்தார். ராஜேஷ் விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தான்.

சாந்தி வீட்டுக்கு வந்துவிட்டாள். வந்தவுடனேயே வழக்கம் போல நடமாட ஆரம்பித்து விட்டாள். அவனுடைய சிறு தேவைகளையும் கவனிக்கத் தொடங்கினுள். அவள் மனத்தில் ஒரு புதிய உற்சாகம் தோன்றியிருந்தது. அது அவளை நடையிலும் பழக்கத்திலும் ஒரு தனியான தெம்பை ஊட்டி யிருந்தது.

நடந்த நிகழ்ச்சியை அவள் முழுதும் மறந்து விட்டாள். அதைப் பற்றி அவனிடம் பேசவே இல்லை. ராஜேஷ் அதைப் பற்றி அவளிடம் கேட்கவில்லை. அவளுடைய போக்கிலேயே அவளை விட்டு விட்டான். மேலும் அவளுடைய புதிய உடல் நிலைமையையும் அதன் மாறுதல்களையும் அக்கறையுடன் கவனிக்கத் தொடங்கினுன். அது சாந்திக்கு மிகவும் பெருமையாக இருந்தது.

ஆனாலும் அவன் மனத்தின் அடித் தளத்தில் அந்தக் கேள்விக்கு இன்னும் முழு விடை கிடைக்கவில்லை. அதைப் பற்றி அவனுக்குப் பதில்கிடைக்கவேண்டு மானால், அதை சாந்தியிடம் கேட்க முடியாது; ஆஷா ஒருத்திதான் தெரிந்து சொல்ல முடியும். அவளைச் சந்தித்துப் பேசி ஒரு வாரம் ஆகி விட்டது. அவள் ஏனோ அதற்குப் பிறகு அவனைச் சந்திக் கவோ, அவனுடன் பேசவோ முயல வில்லை!

அலுவலகத்தில் மேஜை மீதிருந்த செய்தித் தாள் ஒன்றைப் புரட்டினான். அது இரண்டு நாளைக்கு முந்தைய செய் தித் தாள். அலட்சியமாக அவன் பார்வை



''அப்பா! அப்பா! நம்ம வீட்டுக் கிணத்திலே எண்ணெய்...''

''அப்படியா? அதிருஷ்டம் தான்...''

''இல்லேப்பா... கிணத்திலே எண்ணெய்ச் சொம்பு விழுந் துட்டுது...!''

அதில் ஓடியபோது விளம்பரத்துக்கு நடு வில், ஆஷாவின் கவர்ச்சிகரமான தோற் றம், அங்கே வெளியாகி யிருந்தது. ஒரு கணம் அதைப் பார்க்கவே அவனுக்குக் கூச்சமாக இருந்தது. பம்பாயின் பிரபல ஓட்டல் ஒன்றின் விளம்பரம் அது:

'ஸ்பெஷல் நிகழ்ச்சி: ஆஷாவின் இனிய பாட்டுக்கள் - கவர்ச்சியான நடனம்! தேர்ந்தெடுத்த சீன, காண்டி னெண்டல், மொகலாய் உணவு வகைகள்! ரிஸர்வேஷன் செய்து கொள்ள வேண்டிய போன் நம்பர்..'

என்று அந்த விளம்பரத்தில் வெளி யாகி யிருந்தது. ஆஷா அந்த ஓட்டலில் இருக்கலாம். இன்னும் பம்பாயி லேயே இருக்கலாம். அவன் முயன்றால் சந்திக்க முடியும். சாந்திக்கு போன் செய்து அன்று மாலை வீடு திரும்பக் கொஞ்சம் நேரம் ஆகலாம் என்று தகவல் கொடுத்தான். டிரைவரை சற்று முன்பா கவே வீட்டுக்குப் போகச் சொல்லி விட்டு, கார் சாவியை வாங்கிக் கொண் டான். காஷியரிடமிருந்து கொஞ்சம் பணம் வாங்கி வைத்துக் கொண்டான். ஒரு வேளை அவளை வெளியே அழைத்துக் கொண்டு போய்ப் பேச வேண்டி இருக்கலாம்.

ஐந்து மணிக்கு காரைத் தானே ஓட்டிக் கொண்டு புறப்பட்டான். ஆஷா அவன்மீது கோபித்துக் கொள்ளலாம். சாந்தியைப் பற்றி அவளுக்குத் தகவல் ஏதும் சொல்லவில்லை என்று அவனைச் சீண்டலாம். அவனுக்கு மீண்டும் எதையும் ஞாபகப்படுத்த வேண்டாம் என்று சும்மாவே இருந்து விடலாம். அல்லது அவனுக்கு அதிர்ச்சி தரக்கூடிய புதுத் தகவல் ஏதாவது அவளிடம் இருக்கலாம்.

அந்த பர்ஸ்...

அதை நினைத்தவுடன் அவன் மனத்தில் வேதனை நிறைந்தது. கொஞ்ச நேரம் காரைச் சாலை ஓரமாக நிறுத்தி ஒரு சிகரெட்டை எடுத்துப் புகைத்தான். எதையும் நினைக்காமல் மனத்தைக் கொஞ்சம் சமாதானப்படுத்திக் கொண் டான். பிறகு காரை மறுபடியும் ஸ்டார்ட் செய்து கொண்டு புறப் பட்டான்.

ஓட்டல் 'ரிஸப்ஷ'னில் இருந்த பெண், அவன் ஆஷாவின் பெயரைச் சொன்னவுடன் அவனைச் சற்று வியப் புடன் பார்த்தாள். பிறகு, ''உங்களுக்கு அவர்களுடன் 'எங்கேஜ்மெண்ட்' ஏதா வது இருக்கிறதா?'' என்று கேட்டாள்.

''இல்லை. நான் ஆஷாவுடன் ஒரு முக்கிய விஷயமாகப் பேச வேண்டும். அவர்கள் அறையை எனக்குச் சொல்ல முடியுமானால்..''

''ஸாரி'' என்றாள் அவள்.

''ஏன்? முன்னால் 'எங்கேஜ்மெண்ட்' பதிந்து கொள்ளாமல் பார்க்க முடியாதா?''

''இல்லை. அவர்கள் நேற்று 'செக்அவுட்' செய்து கொண்டு போய் விட்டார்கள். தகவல் ஏதும் இருந்தால் அனுப்ப வேண்டிய அடுத்த விலாசத்தை யும் கொடுக்கவில்லை'' என்றாள் அந்தப் பெண்.

ராஜேஷ் திகைத்துப் போய் நின்றான். அப்போது— (தொடரும்)



# ரகசியம்*

## 21

Life is like a mirror. Smile at it, and it is charming. Frown at it and it becomes siniste:. It is what you are and not what you see.
—EDWIGE.

"மிஸ்டர் ராஜேஷ், ஹௌ டு யு டு?''

அவன் அருகில் கேட்ட அந்தப் பெண் குரலைக் கேட்டு வியப்புடன் திரும்பிப் பார்த்தான். அதே சமயம் 'ரிசப்ஷ'னில் இருந்த அந்தப் பெண்ணும் ஒரு விஷமச் சிரிப்புடன், ''ஹலோ, ரீனு! எப்போது வந்தாய்?'' என்று கேட்டாள்.

ராஜேஷ் அவளைத் திகைப்புடன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய குழம்பிய மன நிலையில் யாராவது தெரிந்தவர்களைப் பார்த்தாலே கொஞ்சம் நிம்மதியாக இருக்கும் போலத் தோன்றியது. ரீனு! அவளை அவன் ஐந்தாறு ஆண்டுகளாகப் பார்க்கவே இல்லை. அந்தப் பெயர் எங்கேயாவது காதில் விழுந்தாலும் அங்கிருந்து நகர்ந்து விடுவான் ராஜேஷ். ஆனாலும் அவளை இப்போது எதிர்பாராமல் சந்தித்ததும் அவன் மனத்தில் ஒரு கிளுகிளுப்பு ஏற்பட்டது. இப்போது அவளும்கூட தனக்கு உதவ முடியும் என்று அவனுக்குத் தோன்றிற்று. கோட் பைக்குள் கையை விட்டபடி அவள்புறம் திரும்பினான்: ''குட் ஈவினிங் மிஸ் ரீனு. இது எனக்கு 'ப்ளெஸண்ட் ஸர்ப்ரைஸ்''' என்று ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டான்.

''அப்படியா? என்னுடைய தோழி இங்கே என்னைப் பெயர் சொல்லி அழைத்திருக்காவிட்டால், உங்களுக்கு என் பெயரே மறந்து போயிருக்குமோ என்னவோ என்று நினைத்தேன். நல்ல வேளை...'' என்று மந்தகாசமாகச் சிரித்தாள் ரீனு. ராஜேஷுக்கு என்னவோ போல இருந்தது. அங்கே உள்ள வேறு சிலரும் அவனைத் திரும்பிப் பார்த்தார்கள். அங்கிருந்து கிளம்பி விடலாம் என்று நினைத்தான்.

மணியன்

அதற்குள் ''மிஸ் ஆஷாவைத் தேடிக் கொண்டு வந்தார் இவர். அவர்கள் 'செக் அவுட்' செய்துவிட்டுப் போய் விட்டார்கள். எங்கே போயிருக்கிறார்கள் என்ற தகவலும் இல்லை. மிஸ்டர் ராஜேஷிற்கு நீ ஏதாவது 'ஹெல்ப்' பண்ண முடியுமா ரீனு?'' என்று அந்த 'ரிஸப்ஷனிஸ்ட்' கேட்டாள். ராஜேஷுக்கு அவள் அப்படிச் சொன்னதும் கேட்டதும் பிடிக்கவில்லை. ஆனாலும் ரீனு ஏதாவது செய்ய முடியுமா என்ற யோசனையுடன் அவள்புறம் திரும்பிப் பார்த்தான்.

''உங்களுக்கு என்னுடைய 'ஹெல்ப்' தேவையா மிஸ்டர் ராஜேஷ்?'' என்று ரீனு உதட்டை முறுவலித்துக் கொண்டு மென்மையான குரலில் கேட்டாள்.

''எஸ். உன்னால் முடியுமானால்...''

''வாருங்கள், போகலாம். காரில் தானே வந்திருக்கிறீர்கள்?''

''ஆமாம். எங்கே போக வேண்டும்?''

''ஆஷா போயிருக்கும் இடத்துக்கு. கமான்... போகலாமா?'' என்று கைப் பையைத் தோளில் மாட்டிச் சரி செய்து கொண்டாள். 'ரிஸப்ஷன்' புறம் திரும்பி ''பை...பை'' என்று கையை அசைத்து விட்டுப் புறப்பட்டாள். ராஜேஷ் அரைமனத்துடன் அவளைப் பின் தொடர்ந்தான்.

காரின் முன்கதவைத் திறந்து ரீனு தானே அவனுக்கு அருகில் நெருங்கி உட்கார்ந்து கொண்டாள். அப்படி அவள் இடித்தாற்போல உட்கார்ந்தது ராஜேஷுக்குக் கொஞ்சம் கூச்சமாகக் கூட இருந்தது. அவள் அணிந்திருந்த கவர்ச்சியான உடையும் அவனுக்குப் பிடிக்கவில்லை. அவள் போட்டிருந்த விலையுயர்ந்த பிரெஞ்சு ஸெண்டின் மணம் காரை நிறைத்து அவனையும் திக்குமுக் காட வைத்தது.

''என்னை மறந்து விட்டாயா ராஜேஷ்?''

சட்டென்று அவள் அப்படிப் பழக்க மான ஒருமையில் அழைத்தது அவனை நெகிழ வைத்தது. தன் தோள்மீது பதிந்த அவள் கையை அவன் ஒதுக்க வில்லை.

''இல்லை, ரீனு. எங்கே போக வேண்டும் சொல்லு?''

அவள் ஓர் ஓட்டலின் பெயரைச் சொன்னாள். பிறகு ''ரொம்ப அவசரமா ராஜேஷ்? எங்கேயாவது 'நைட் கிளப்' பில் கொஞ்சம் பொழுது போக்கிவிட்டுப் போகலாமே? ரொம்ப நாளாயிற்று இப்படி நான் உன்னைச் சந்தித்து?'' —ரீனுவின் குரலில் கவர்ச்சியும் ஆவலும் பொங்கிற்று. அந்தக் குரல் அவனுடைய ஆசைகளைத் தூண்டுவது போல இருந்தது. அவள் முகம் அவன் கழுத்தில் பதிந்தது.

''இன்று எனக்கு அவகாசம் இல்லை ரீனு. நான் ஆஷாவைச் சந்திக்க வேண் டும். அவளிடம் ஒரு தகவல் தெரிந்து கொள்ள வேண்டும். இது அவசரம்'' என்று காரை ஓட்டினான்.

''ஓஹோ'' என்று விரலைச் சொடுக் கினாள் ரீனு: ''ஹும். இப்போதெல் லாம் ஆஷாதான் உன் 'ரெகுலர் கம்பா னிய'னா? '' என்று கேட்டாள்.

''ரீனு, என்னை நீ தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறாய். இப்போது நான் மணமானவன். எனக்கென்று ஓர் எளி குடும்பம் இருக்கிறது. நானும் என் மனைவியும் நிம்மதியான வாழ்க்கை நடத்துகிறோம். ஆஷாவுக்கும் எனக்கும் இடையே உள்ள தொடர்பு நன்மையை விரும்பும் ஒரு நட்பு மட்டும்தான்'' என்று ராஜேஷ் காரை ஓரமாக நிறுத் தினான்: ''எனக்கு ஒரு சிகரெட் தேவைப் படுகிறது.. .என்னவோ போல இருக் கிறது'' என்று காரின் 'டாஷ் போர்டி' லிருந்து ஒரு பாக்கெட்டை எடுத்தான்.

அவன் கையிலிருந்த சிகரெட் லைட்ட ரைப் பிடுங்கி ரீனு அவனுக்காக அதைக் கொளுத்தினாள். அவனுக்குப் பழைய ஞாபகங்கள் அப்போது வந்தன. அவனு டைய சாந்தி, ஆஷா, அந்த ஓட்டல் பெண்மணி எல்லோரும் அவனுக்காக அப்படிச் செய்வது வழக்கம். பெண் களுக்கே பொதுவான ஒரு குணமா இந்தச் சாதுரியம்?

அந்த இரவில் அவன் வீடு திரும்பாமல் எங்கேயோ போய்க் கொண்டிருப்பது அவனுக்குச் சிறிது மனச்சங்கடமாக இருந்தது. அது மட்டும் இல்லை, சாந்தி அவனுக்காகக் காத்துக் கொண் டிருப்பாள். அவன் சாப்பிடும் முன் சாப்பிடக்கூட மாட்டாள். அவளுடைய இந்த உடல் நிலையில், அவள் பசியும் கவலையுமாக அவனைப் பற்றி எதுவும் தெரியாமல் கண் விழித்திருப்பதா?

''ஒரு நிமிடம் ரீனு. ஒரு 'போன்' செய்துவிட்டு வந்து விடுகிறேன்'' என்று பக்கத்தில் இருந்த கடை ஒன்றில் நுழைந்தான்: ''போனை நான் உப யோகிக்கலாமா?'' என்று கேட்டுவிட்டுப் பதிலுக்குக் காத்திராமல் போனை எடுத்து வீட்டுக்கு 'டயல்' செய்யத் தொடங்கினான். உடனே மறு முனையில்

சாந்தியின் குரல் கேட்டது. போன் அருகிலேயே அவள் இருந்திருக்க வேண்டும்.

''உங்களுக்கு இப்போதுதான் ஆபீஸுக்கு போன் செய்தேன். நீங்கள் புறப்பட்டுப் போய் இரண்டு மணி நேரம் ஆயிற்று என்றார்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை'' என்று சாந்தி பேசினாள்.

''அதற்காகத்தான் போன் செய்தேன் சாந்தி. எனக்கு வெளி நாட்டி லிருந்து ஒரு முக்கிய நண்பர் வந்திருக் கிறார். அவரை அழைத்துக் கொண்டு வந்தேன். ஓட்டலில் அறையைப் பார்த்துத் தங்கச் செய்துவிட்டு வருகி றேன். நீ எனக்காகக் காத்திருக்க வேண்டாம். நான் திரும்ப நேரமாகும்.''

''அப்படியா டார்லிங்? நான் ஏமாந்து தான் போனேன். உங்களுக்குப் பிடித்த சமையலைச் செய்து வைத்திருக்கிறேன். இருவருமாகச் சாப்பிட்டுவிட்டு நிலா வெளிச்சத்தில் கொஞ்சம் 'வாக்' போகலாம் என்று எண்ணி இருந்தேன். போனால் போகிறது...'' என்று குரலில் ஒரு குறையுடன் நிறுத்தினாள் சாந்தி.

ராஜேஷ் அவளுக்கு ஆறுதலாக ஏதோ சொல்ல நினைத்தான். ஆபீஸாக இருந்தால், அறையில் யாரும் இல்லா



''நானைக்குள்ளே என் கடனைத் திருப்பிக் கொடுக்கல்லே.. நான் செய்யற காரியத்தைப் பற்றி பின்னாலே வருத்தப் படுவே... ஆமாம்..!''

''அப்படி என்ன செஞ்சுப் பிடுவே..?''

''உன் மற்ற கடன்காரங்க கிட்டே போய், நீ என் கடனைத் திருப்பிக் கொடுத்துவிட்டதா சொல்லுவேன்.''

விட்டால், கொஞ்சுவது போன்ற குரலில் செல்லமாக ஏதாவது சொல்லி அவளைச் சமாதானப்படுத்தி இருப்பான். ஆனால் அங்கே கடையில் பலர் முன்னிலை யில் அப்படி அவனால் பேச முடியவில்லை.

''எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு விரைவில் வந்து விடுகிறேன். டோண்ட் ஒர்ரி'' என்று மட்டும் சொல்லி விட்டு போனைக் கீழே வைத்து விட்டான். போன் செய்வதற்கான வழக்கமான சார்ஜைவிடக் கூடுதலாகவே சில்லறையை மேஜை மேல் வைத்துவிட்டு வெளியே வந்தான்.

அவனுடைய மனச்சாட்சி அவனை உறுத்திற்று. சாந்தியிடம் அப்படி ஒரு பொய் அவன் சொன்னதே இல்லை. அவன் ரீனாவுடன் இருப்பது அவளுக்குத் தெரிந்தால் அவளுடைய மனம் என்ன வெல்லாம் நினைக்கும்? கணவன் - மனைவி யரிடம் எல்லாம் வெளிப்படையாக இருக்க வேண்டும் என்று சொன்ன ராஜேஷ்தானா அவன்? அவன் சொன்னது என்ன? இப்போது செய்வது என்ன?

அவன் வெளியே வருவதைப் பார்த்து ரீனா காரிலிருந்து இறங்கி வந்தாள். அவன் கைக்குள் கையைசுவாதீனத்தோடு கொடுத்துக் கொண்டாள். அவன் தோள்மீது ஆசையோடு உராய்ந்து கொண்டே ''கம் ஆன் ராஜேஷ்! ஒரு 'மூன் லைட் வாக்' போய்விட்டு வருவோம்'' என்றாள்.

சாந்தி சொன்ன அதே வார்த்தைகள். அவன் உடல் ஒரு சிறு அதிர்ச்சியினால் குலுங்கிற்று. ரீனா அதை வேறுவிதமாக எடுத்துக் கொண்டாள்.

''உனக்கு த்ரில் ஆக இருக்கிறது. அப் படித்தானே ராஜேஷ்? எனக்குத் தெரி யும். என்னுடைய பழக்கத்தை நீ அவ் வளவு விரைவில் மறந்துவிட மாட்டாய் என்று எனக்குத் தெரியும்'' என்று குழந் தையைப் போல ஓர் ஆர்வத்துடன் அவன் கைப்பிடியில் துள்ளினாள்.

''இல்லை ரீனா. இப்போது எதுவும் வேண்டாம். முதலில நாம் ஓட்டலுக் குப் போவோம். இப்போதே மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. வெகு நேரம் கழித்துப் போனால் ஆஷாவைச் சந்திக்க முடியாது'' என்று கையை இழுத்துக் கொண்டான்.

கொஞ்சம் கோபத்துடன் ரீனா ஒரு பெருமூச்சு விட்டாள். கொஞ்சம் ஏமாற்றத்துடன் அவனிடம் பேசாமலே காரில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். கார் கிளம்பிற்று. ராஜேஷின் மனம் பழைய நினைவுகளில் ஆழ்ந்தது...

...ராஜேஷ் அப்போது அநுபவம் அதிகம் இல்லாத இளைஞன். வாலிபத் துடிப்பு அவன் இரத்தத்தில் முழுவதும் முறுக்கேறி இருந்தது. நல்ல வருவாயும், வசதியான வாழ்க்கையும் அவன் பருவத்து ஆசைகளுக்குத் தூண்டு கோலாக அமைந்தன. அவனுடைய வயதை ஒத்த, நல்ல நிலையில் உள்ள நண்பர்களுடன் சேர்ந்து பொழுது போக்குவதற்குப் போவான். வேகமான வாழ்க்கைக்காக அவன் உணர்ச்சிகள் கட்டுமீறித் துடித்துக் கொண்டிருந்தன.

அப்படி நண்பர்களுடன் ஒரு 'நைட் கிளப்' நடனத்துக்குப் போன போது தான், ரீனா அவனுக்கு அறிமுகம் ஆனாள். அழகான ஸூட் அணிந்து அமர்ந்திருந்த அவனுடன் பேசவும் பழகவும் ரீனாவுக்கு ஓர் ஆவல் எழுந்தது. ஒரு நண்பன் மூலம் அவளாகவே வந்து ராஜேஷை சந்தித்துப் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள்.

''டோண்ட் யூ நோ ரீனா? என்னால் நம்ப முடியவில்லை ராஜேஷ்'' என்று கண்ணைச் சிமிட்டினான் அந்த நண்பன். அவளுடைய மென்மையான விரல்கள் அவன் கைவிரல்களில் சேர்ந்து குலுங் கின. அப்புறமும் அவள் கைவிரல்கள் பிரிந்து விலகவில்லை.

இளமைப் பருவத்துக் கவர்ச்சிக்கு ஓர் அடையாளமாக ரீனா விளங்கினாள். அவளுடைய பார்வை, பேச்சு, நடை ஒவ்வொன்றிலும் கவர்ச்சி ரசம் ததும்பி நின்றது. அவளுடன் இருக்கும்பொழுது ராஜேஷுக்கு மட்டில்லாத உல்லாசத் தைக் கொடுத்தது. அவனைப் போலவே அவளுக்கும் வேகமான வாழ்க்கையில் ஓர் ஆசை இருந்தது. அதனால் பொழுது போக்குகளில் இருவரும் சரியான ஜோடியாக இருந்தார்கள்.

ரீனா ஒரு பெரிய ஓட்டலில் பணி புரிந்து கொண்டிருந்தாள். வசதி படைத்த செல்வந்தர்கள் பலருடைய அறிமுகமும் அவளுக்குக் கிடைத்திருந் தது. ஆனால் ராஜேஷிடம்தான் அவ ளுக்குத் தனியான பிரியம் ஏற்பட்டது. ராஜேஷும் அவளுக்குக் கணக்குப் பார்க்காமல் எதையும் வாங்கிக் கொடுப்பான். அவர்களுடைய பொழுது போக்குகளில் எவ்வளவு செலவு ஆனாலும் பொருட்படுத்த மாட்டான்.

வாரத்தில் சில கிழமைகளை அவன் ரீனாவுக்காக 'ரிஸர்வ்' செய்து வைத் திருப்பான். இருவரும் மாலையிலேயே கிளம்பி விடுவார்கள். அவன் வீடு திரும்ப இரவு பத்து மணிக்கு மேல் ஆகி



''ஊரைச் சுத்தி கடன் வச்சிண்டு புதுசா ஒரு கார் வாங்கியிருக்கியாமே...... எதுக்கு...?''

''கடன்காரங்க கிட்டேயிருந்து தப்பிச்சுக்கிட்டு ஓடத்தான்...!''

விடும். அன்று அவர்கள் அப்படிப் போன போது கொஞ்சம் அளவு தாண்டி விட்டது. ராஜேஷின் மது மயக்கம் சற்றுக் கூடுதலாகவே இருந்தது. அவனை வீட்டுக்கு கார் ஓட்டிச் செல்ல அனுமதிக்காமல் தன் அறைக்கே ரீனா அழைத்து வந்து விட்டாள்.

உள்ளே போனதும் ராஜேஷ் ஏதோ சொல்ல நினைத்தான். அவனால் பேச முடியவில்லை. ரீனா கதவை இழுத்து மூடினாள். அவன் அவள் முதுகில் கையை வைத்து அவளைத் தன் முகத்தைப் பார்க் கும்படித் திருப்பினான். அவன் உதடுகள் அவள் நெற்றியில் படிந்தன. அப்புறம் உதட்டிலும் கழுத்திலும் - அதற்குப் பின்..

அவள் கைகள் அவனைப் பற்றித் தழுவின. உடல் முழுவதும் ஆசையுடன் தொட்டுத் தொட்டு உணர்ந்தான் ராஜேஷ். அவள் ஏதோ பேச முயன்றாள். ஆனால் அவன் கைகள் அவள் முகத்தை அவன் முகத்துடன் நெருங்க வைத்துக் கொண்டன.

அன்று நிலைமை அளவு கடந்துதான் போய்விட்டது....

மது மயக்கம் மட்டும் இன்றி, அவளு டைய மயக்கமும் தன்னை நிலைதவறச் செய்து விட்டதை அவன் உணர்ந்தான். அப்படி அவனுக்கு ஒரு விழிப்பு ஏற்பட்ட போது, இரவு நீங்கி விடிந்துவிட்டது. ரீனா அவன் அணைப்பில் தூங்கிக் கொண் டிருந்தாள்....

முதலில் அது ஒரு குற்றமாக அவன் நெஞ்சில் இடித்துக் காட்டிக் கொண்டே இருந்தது. ஒரு வாரம் ரீனாவைச் சந்திக் காமல்கூட இருந்தான். அப்புறம் அது அவர்களுடைய பழக்கத்தில்

ஒரு பகுதியாக அமைந்து விட்டது. மது அருந்துவதும் தொடர்ந்து அவன், அவளை நாடுவதும்—

அவனுடைய வாலிபத் துடிப்புக்கு ரீனு ஒரு வடிகாலாக இருந்தாள். அவளுடைய இளமை பொங்கும் அழகும் உடலும் அவனுடைய ஆசைகளை ஏற்றுத் தேக்கிக் கொண்டன. முதலில் அவன் விளையாட்டாக இறங்கிய ஒரு பொழுது போக்கு அப்புறம் அவனை ஒரு வெறியாகப் பிடித்துக்கொண்டு விட்டது. தன்னுடைய கட்டுப்பாடுகள் எல்லாவற்றை யும் ராஜேஷ் இழந்து விட்டான்.

அந்தச் சமயத்தில்தான் ரீனு ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு விட்டாள். நகரத்தில் முக்கியமான ஒரு 'பிஸினஸ்' புள்ளி திடீரென்று இறந்து போனார். அவர் இறந்துபோன விதம் சந்தேகங்களைக் கிளப்புவதாக இருந்தது. போலீஸில் புலன் விசாரிக்கத் தொடங்கினார்கள். பத்திரிகைகளில் இதில் தொடர்பு இருப்பதாகக் கருதப்படும் பலருடைய படங்களும் தொடர்ந்து வரத் தொடங்கின. வழக்கு வரவரப் பெரிதாக வளர்ந்து கொண்டு போயிற்று.

அப்படி வெளிவந்த படங்களில், ஒரு கேள்விக்குறியுடன் ரீனுவின் படமும் 'பிளிட்ஸ்' பத்திரிகையில் சிவப்புக் கட்டத்துக்கு நடுவே நின்றது. அதைப் பார்த்ததும் ராஜேஷுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி. அவளுடன் பல இடங்களுக்குப் போனதும், பொழுது போக்கியதும் பல நண்பர்களுக்குத் தெரியும். அவள் இந்த வழக்கில் தீவிரமாக அகப்பட்டுக் கொள்ள நேர்ந்தால், அடுத்ததாக அவன் மீதும் சட்டத்தின் இரும்புக் கரம் விழுமோ?

ராஜேஷ் கலங்கிப் போனான். ரீனுவின் நண்பர்கள் சிலர் அவளுக்கு உதவினார்கள். ராஜேஷும் செலவு செய்தான். கொஞ்சம் தணிந்ததும் ரீனு பம்பாயை விட்டுத் தலை மறைவாகப் போய் விட்டாள். அப்புறம் அவனுக்கும் ரீனு என்ற ஒரு பெண் அவன் வாழ்க்கையில் வந்து போனதும், அவன் இன்பத்துக்குச் சின்னமாக விளங்கியதும் மெல்ல மெல்ல மறந்து போய்விட்டது.

இப்போது ஐந்தாறு ஆண்டுகளுக்குப் பிறகு அவன் ரீனுவை எதிர்பாராமல் சந்திக்கிறான். அவள் எப்போது பம்பாய்க்குத் திரும்பினாள் என்பதும் கூட அவனுக்குத் தெரியாது. ஆனால் அவ்வளவு நாட்களுக்குப் பிறகு அவளைப் பார்த்ததும் அவன் உள்ளத்தில் ஒரு படபடப்பு எழாமற் போகவில்லை. அவனுடைய பழைய அனுபவங்கள் மனத்தில் தலைகாட்டி மறைந்தன.

ஆனால் அவன் இப்போது பழைய ராஜேஷ் இல்லை. அவன் மனத்தில் பழைய சபலங்கள் இல்லை. அவன் முன்போலத் தன்வயம் இழக்க மாட்டான். ரீனுவின் உடல் அவனை நெருங்கியதும் அவன் நெகிழ்ந்து தன்னை விட்டுக் கொடுத்துவிட மாட்டான். ஆனால் அவளுக்கு எவ்வளவு தூரம் அவனுடைய இப்போதைய நிலை தெரியும்?

ரீனுவின் வெளித்தோற்றம் மாற வில்லை. இன்னும் அவளுடைய இளமை யும் உடற்கட்டும் பார்ப்போரின் கவனத்தை இழுக்கும் விதமாகத்தான் இருந்தது. வாலிப உள்ளங்களின் பலவீனத்தைக் கணக்கிடுவதில் முன்னைவிட இப்போது அவளுக்குச் சாமர்த்தியம் கூடுதலாக இருக்கும். நினைத்தால் அவனை ஒரு கணத்தில் வசப்படுத்தி விடலாம் என்று ரீனு நினைக்கலாம்.

கொஞ்சம் கோபத்துடன் பேசாமலே வந்த ரீனு, சட்டென்று அவன் தோளில் கையை வைத்து "ஒட்டல் வந்தாயிற்று. நிறுத்துங்கள். நான் உள்ளே போய் விசாரித்துக் கொண்டு வருகிறேன். நீங்கள் காரிலேயே இருக்கலாம்" என்று சொன்னாள். கார் அவளை 'போர்ட்டிகோ' வில் இறக்கி விட்டுவிட்டு வரிசையாக நிறுத்தி இருந்த கார்களை ஒட்டினாற் போலப் போய் நின்று கொண்டது.

கதவின் ஜன்னல் வழியாகக் கையை மடக்கி வெளியே வைத்துக்கொண்டு ராஜேஷ் உட்கார்ந்திருந்தான். சுருள் சுருளாகப் புகையை விட்டுக் கொண்டு யோசனையில் ஆழ்ந்திருந்தான். கைக்கடிகார முள் இருட்டில் பச்சை நிறத்தில் மினு மினுவென்று தெரிந்தது. மணி பத்தை நெருங்கிக் கொண் டிருந்தது.

கைப்பையை ஊஞ்சலாட்டிக்கொண்டு ஒரு துள்ளல் நடையுடன் ரீனு அவன் காரை நோக்கி வந்தாள். அவள் முகத்தில் இருந்த கோபம் மறைந்து விட்டது. ஒரு புன்னகையுடன் அவனை நெருங்கி "கம் ஆன், லெட் அஸ் கோ" என்றாள்.

"ஆஷா தூங்கிவிடவில்லையே?"

"இறங்கி வாயேன், சொல்கிறேன்."

என்னென்னவோ நினைவுகளுடன் ஓர் எதிர்பார்ப்புடன் ராஜேஷ், காரை விட்டு இறங்கினான். ரீனு அவன் கையைப் பற்றிக் கொண்டு நடந்தாள்.

(தொடரும்)



# ரகசியம்

**22** Never write up your diary on the day itself. Because it takes longer than that to know what had happened. — *CHRISTOPHER MURLEY.*

படிகளில் ஏறி முதல் மாடியில் ஓர் அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள் ரீனா. கொஞ்சம் தயக்கத்துடன் ராஜேஷ் அவளைப் பின் தொடர்ந்தான். சுற்று முற்றும் பார்த்தபடி அவளைக் கேட்டான்:

''ஆஷா எங்கே?''

''வெயிட்'' என்று அவள் பாத் ரூமிற்குள் போனாள். சுற்றிலும் ஒரு முறை பார்த்துவிட்டு, கோட்டைக் கழற்றி மாட்டினான் ராஜேஷ். ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

ரீனா வெளியே வந்தாள். அவள் உடலில் இப்போது மெல்லிய இரவு உடை மட்டுமே இருந்தது. ஒரு மூலையில் இருந்த வாஷ் பேஸினில் குனிந்து முகம் கழுவிக் கொண்டாள். ஒரு டவலை எடுத்து அழுத்தித் துடைத்ததும், மேக்கப் கலைந்த முகத்தில் வயதான அடையாளங்கள் தெரிய ஆரம்பித்தன. நெற்றியிலும் கன்னங்களிலும் சுருக்கங்கள் தோன்றின.

அவன் முன்னால் ரீனா, படுக்கையில் உட்கார்ந்து சோம்பல் முறித்தாள். அவள் உடலின் வனப்பு மட்டும் இன்னும் மெருகு குறையவில்லை. வளைத்த உடலில் விண்ணென்று ஓர் இளமை இன்னும் நிமிர்ந்து நின்றது. சந்தன வெண்மை நிறத்தில் இருந்த அவள் மேனியும், இடையும், அவள் படுக்கையில் சாய்ந்த விதமும் ராஜேஷுக்கு அந்த நாளை ஞாபகப்படுத்தின. காலைத் தூக்கித் தலையணைமேல் அலட்சியமாகப் போட்டுக் கொண்டு படுத்துக் கொண்டாள்.

''நீயும் முகம் கழுவிக் கொள்ளேன் ராஜேஷ். ஏன் கொஞ்சம் ரிலாக்ஸ் செய்து கொள்ளக் கூடாது?'' என்று கண்ணை ஒற்றையாகச் சிமிட்டினாள்.

ராஜேஷுக்கு இனி விளக்கம் தேவை இல்லை. அவனுக்கு எல்லாம் புரிந்து விட்டது. அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டான்.

மணியன்

''எனக்கு எதுவும் தேவை இல்லை. ஐ மீன் பிஸினஸ். ஆஷா எங்கே, அதைச் சொல்லு?''

''விசாரித்தேன். அவள் காலையிலேயே 'செக் அவுட்' செய்து கொண்டு போய் விட்டாளாம். அதைச் சொன்னால் நீயும் அப்படியே போய் விடுவாய். அதற்காகத்தான் இங்கே அழைத்துக் கொண்டு வந்தேன்'' என்று சொல்லி விட்டு அவள் எழுந்து வந்து அவன் கழுத்தை அணைத்துக் கொண்டாள்.

''சொல்லு ராஜேஷ். என்னால் செய்ய முடியாதது எதையும் ஆஷா உனக்குச் செய்துவிட முடியாது. உனக்காக நான் காத்துக் கொண்டிருக்கிறேன் இங்கே'' என்று கண்ணைச் சிமிட்டினாள். அவள் கை அவன் மார்பைத் தடவிக் கொடுத்தது.

அவள் பொய் சொல்லித் தன்னை ஏமாற்றுகிறாள் என்று எண்ணிய ராஜேஷின் மனம் குமுறியது. இதற்காக அவன் அங்கே வரவில்லை. இரவில் அந்த நேரத்தில் ரீனாவுடன் அந்த அறையிலா? யாருக்காவது தெரிந்தால் என்ன அவமானம்? சாந்திக்கு இது தெரிய வந்தால்? அவள் இதயம் என்ன பாடுபடும்?

ரீனா அவன் மடிமேல் உட்கார்ந்து கொண்டாள். அவன் முகத்தை நிமிர்த்தி தன் முகத்துடன் வைத்துக்கொண்டாள். அங்கே அவனுக்கு ரீனாவின் முகம் தெரியவில்லை; சாந்தியின் முகம்தான் தெரிந்தது. அவன் மௌனமாக இருந்ததை ரீனாவேறுவிதமாகப் புரிந்துகொண்டாள். கொஞ்சம் தூண்டினால் அவன் தன்வசப் பட்டு விடுவான் என்று நினைத்தாள். கைகள் இரண்டையும் அவன் கழுத்தைச் சுற்றி மாலையாகப் போட்டுக் கொண்டாள். அவளுடைய உடலின் மென்மையும் சூடும் அவன் மேல் ஆசையாகப் படிந்தன. அழுந்த ஒரு முறை முத்தமிட்டாள்.

ராஜேஷ் உதறிக்கொண்டு எழுந்தான். அந்த வேகத்தில் அவள் கீழே விழப் போனாள். சமாளித்துக் கொண்டு படுக்கையில் அப்படியே ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டாள். கையை நீட்டி அவன் கையைப் பிடித்து இழுத்தாள். அந்த வேகத்தில் ராஜேஷ் அவள்மீது விழுந்தான். அவள், அவனை அப்படியே இறுக அணைத்துக் கொண்டாள்.

''வாட் ஈஸ் த மாட்டர் பாய்? பயமாக இருக்கிறதா?''

ராஜேஷின் மனத்திரையில் சாந்தியின் முகம் தெரிந்தது. அவளுடைய கண்கள் அவன் பார்வையைச் சந்திப்பதுபோல் இருந்தது. அந்த நினைவு இருக்கும் போது அவன் எந்தச் சோதனையிலும் வெற்றி பெற்றுவிடுவான். ரீனா எம்மாத்திரம்?

''பயம் இல்லை. ஆனால் நான் இதை விரும்பவில்லை'' என்று விலகினான்.

''யாருக்கும் இது தெரியாது. உன் மனைவிக்கும் கூடத்தான்'' என்று அவள் அவன் தோளைத் தடவிக் கொடுத்தாள்: ''ரொம்ப நாளாயிற்று ராஜேஷ்.''

''என்னை விடு'' என்று ராஜேஷ் எழுந்து நின்றான். சாந்திக்குத் துரோகமா? அவனுக்கு ரீனாவின் உறவுப் பழக்கம் இல்லை என்று சொல்ல முடியாது. ஆனால் அந்தப் பருவம் வேறு. அப்போது அவன் இருந்த நிலை வேறு. இன்று அவன் சாந்தியின் கணவன். அவனுடைய ஆசை, பிரியம், நெருக்கமான உறவு எல்லாம் அந்தப் பெண்ணுக்கு மட்டும்தான். வேறு யாரும் அதைப் பங்குபோட்டுக் கொள்ள முடியாது.

அவள் படுக்கையிலிருந்து குதித்து எழுந்தாள். ஒரு வேகத்துடன் அவள் அவன்மேல் சாய்ந்து தழுவிக் கொண்டாள். அவள் ஆடைகள் தாறுமாறாகக் குலைந்தன. அவனுடைய வைராக்கியம் அவ்வளவையும் சோதிப்பதைப் போல, தன்னுடைய கவர்ச்சியின் சக்தி அவ்வளவையும் வெளிப்படுத்தி நின்றாள். இந்தப் பெண்ணுக்குத்தான் என்ன சாகசம்? அந்த நாளில் அதைப் போல அவனை மயக்கிவிட்ட துணிச்சலா?

ராஜேஷ் அவளை உதற முயன்றான். அவள் அவனை விடவில்லை.

''என்னை விடு ரீனா. இது நாகரிகம் இல்லை. நான் உன்னுடையவன் இல்லை. உன்னை நான் ஒரு காலத்தில் விரும்பி இருக்கலாம். இப்போது வெறுக்கிறேன். இப்படி ஓர்



ஆசை பிடித்து நீ அலைவதை அடியோடு வெறுக்கிறேன்'' என்று தன்னைத் தழுவிய அவள் கைகளைப் பிடுங்கி எறிந்தான். அவள் நிலைதவறிப் படுக்கையில் விழுந்தாள்.

ராஜேஷ், கொக்கியில் மாட்டியிருந்த தனது கோட்டை எடுக்கப் போனான். அவள் குரல் இப்போது ஓர் ஆவேசத்துடன் கேட்டது: ''நில்லு ராஜேஷ். இன்று நான் உன்னை விடுவதாக இல்லை. நீ சம்மதிக்கவில்லையானால் நான் கூச்சல் போடுவேன். நீ விரும்பாவிட்டாலும் இன்று இந்த வேளையில் நீ எனக்குத்தான் சொந்தம். ஆஷாவோ, உன் மனைவியோ உன்னை என்னிடமிருந்து பிரிக்க முடியாது. அவர்களுக்கு முன் உன்னைக் கவர்ந்த உரிமை எனக்கு உண்டு.''

அவன் திரும்பிப் பார்த்தான். ...த வெறியிலும் அவள் கண்கள் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவளுடைய அடங்காத ஆசை அதில் தெரிந்தது. இது கீழ்த்தரமான உணர்ச்சியாக இருக்கலாம். ஆனால் அவளுடைய ஒவ்வோர் அங்கமும் உள்ளமும் அவனுக்காக ஏங்குகின்றன. அதை அவனால் புரிந்து கொள்ள முடிந்தது.

உள்ளத்தால் அவனை ஆராதித்த ஒரு பெண் — உரிமையால் அவனைக்



கைபிடித்த இன்னொரு பெண்—என்றோ அவனுடன் பழகிய பெருந்தன்மையான நட்பை இன்றும் போற்றிக் கொண்டிருக்கும் ஒரு பெண்—இதோ அவனுக்காக ஏங்கித் துடிக்கும் இந்தப் பெண். ராதாவுக்கும், சாந்திக்கும், ஆஷாவிற்கும் உள்ள பெருந்தன்மை இவளுக்கு இல்லாமல் போகலாம். ஆனால் இவளுடைய மனமும் அவனுக்காக உண்மையாக ஏங்குகிறது. அவன் தனக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் அவளைச் சுட்டு எரித்துக் கொண்டிருக்கிறது. பாவம்!

அவன் மனத்தில் அவளுக்காக ஒரு பரிதாப உணர்ச்சி தோன்றியது. பையிலிருந்த பர்ஸை எடுத்தான். அதிலிருந்து இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்து அவள்முன் படுக்கையில் வைத்தான். அவள் கோபம் கொஞ்சம் தணிந்தது.

''எடுத்துக் கொள் ரீனா. எவ்வளவோ தடவை நீ என்னிடம் இதைப் போல வாங்கிக் கொண்டிருக்கிறாய். ஆனால் இப்போது நான் எந்தப் பலனுக்காகவும் இதைக் கொடுக்கவில்லை. உன்னுடைய ஆசைகளுக்கு இப்போது என்னால் இடம் தரமுடியாது. இது அதற்குப் பதிலாக ஒரு சமாதானம் — சிறு காம்பன்ஸேஷன்.''

அலட்சியத்துடன் அவள் அதைப் புறங்கையினால் தள்ளினாள்: ''யாருக்கு இது வேண்டும் ராஜேஷ்? நான் உன்னைத் தான் விரும்புகிறேன். உன் பணத்தை நான் விரும்பவில்லை. பணத்துக்காக நான் ஏற்றுக் கொண்டவர்களும் உண்டு.




''இது பிடிக்கல்லேன்னு சொல்லி என் கணவர் இதை திருப்பிக் கொடுக்க வந்தா, அதை வாபஸ் வாங்க முடியாதுன்னு நீங்க சொல்லணும். அதுக்கு காரண்டி கொடுக்கிறதா இருந்தா நான் இதை வாங்கிக்கிறேன்!...''

உன்னிடம் கண்ட அன்பின் முழுமையை என்னால் அவர்களிடம் காண முடியவில்லை. நாம் கொண்டது உனக்கு வெறும் உடல் உறவாகத் தோன்றலாம். ஆனால் நான் உன்னிடம் பார்த்ததும் உணர்ந்ததும் அப்படி இல்லை. இன்று நீ என்னை உதறிவிட்டுப் போனால்...''

ராஜேஷ் கோட்டை மாட்டிக் கொண்டு கதவருகே போனான். திரும்பி அவளைப் பார்த்துத் தலையை அசைத்தான்: ''டோண்ட் பி ஸில்லி'' என்று லேசாகக் கடிந்து கொண்டான். உள்ளூற அவனுடைய மனமும் அவளுடைய மனவேதனையை உணர்ந்து வருந்திற்று. ஆனால் அவன் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. காட்டினால் வசப்படுத்த அவள் முயலுவாள்.

''போ. நீ உன் சாந்தியிடமே போ. எனக்கு உன் அனுதாபம் தேவை இல்லை. இதற்காக உன்னை உணர்ந்து வேதனைப் படச் செய்வேன். இன்று நாம் சந்தித்ததை நீ மறக்க முடியாதபடி செய்யத்தான் போகிறேன். உன்னை உரிமை கொண்டாடும் சாந்தியும் அதைப் புரிந்து கொள்ளத்தான் போகிறாள்.''

''சாந்தியைப் பற்றிப் பேசாதே.. ஐ டோண்ட் லைக் தட்.''

''ஹ் ஹே'' என்று அவள் கையை அலட்சியமாக உதறினாள்: ''பெரிய மரியாதை அவளுக்கு. யார் அவள் என்று என்னால் தெரிந்து கொள்ள முடியாதா? உன்னை இப்படி இழுத்துப் போட அவளால் எப்படி முடிந்தது என்று நான் தெரிந்து கொள்ளாமல் போய் விடுவேனா? போ, போ. இங்கிருந்து போய் விடு. உன்னைப் பார்க்கவும் எனக்குப் பிடிக்கவில்லை'' என்று அந்த இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களையும் அவன்புறம் விட்டெறிந்துவிட்டு அவள் கவிழ்ந்து படுத்துக் கொண்டாள். தலையணையை அணைத்துக் கொண்டு குலுங்கக் குலுங்க அழுதாள்.

ராஜேஷ் கதவை மூடிக் கொண்டு வெளியே வந்து விட்டான். அவனுக்கு அங்கே மேலும் நிற்கத் தைரியம் இல்லை: அவன் மனம் இளகிப் போகலாம். அவளைச் சமாதானப்படுத்துவதற்கு முயலலாம். அது அவனை எங்கே கொண்டு போய்விடும் என்று அவனாலேயே சொல்ல முடியாது. தன்னுடைய மன உறுதியைச் சோதித்துப் பார்க்க அவன் விரும்பவில்லை.

தலைமுடியைக் கையால் ஒற்றிச் சரி செய்து கொண்டு படிகளில் இறங்கி வந்தான். குளிர்சாதனம் செய்த பெரிய

ஹாலை விட்டு, பெரிய கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். காவலுக்கு நின்றிருந்த கூர்க்கா அவனுக்கு 'ஸெல்யூட்' அடித்து வழி விட்டான். மெர்க்குரி விளக்கின் வெளிச்சத்தில் தன் காரைத் தேடிக் கொண்டு போனான்.

வீட்டை அடைந்தபோது நள்ளிரவு ஆகிவிட்டது. சாந்தி நிம்மதியான உறக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். அவன் உடைகளை மாற்றிக் கொண்டு வெறும் பைஜாமாவுடன் வந்து அவள் அருகே படுத்துக் கொண்டான். அவளுடைய குழந்தை போன்ற முகத்தைக் குனிந்து பார்த்தபோது அவனுடைய மனத்தில் ஒரு வேதனை உணர்ச்சி பொங்கி எழுந்தது:

இவளையா சந்தேகிக்கிறோம்? இந்த முகத்தைப் பார்த்த பிறகுமா மனத்தில் சஞ்சலம் உண்டாயிற்று? அந்த இரவு வேளையில் எங்கேயோ அவனை அனுப்பி விட்டு அவள் எவ்வளவு நிம்மதியாகத் தூங்குகிறாள்? அந்த மனத்தில்தான் எப்படி ஓர் அசைக்க முடியாத நம்பிக்கை! கொஞ்சம் நிலை நழுவி இருந்தால் அவன் அவளுக்கு அன்று இரவு எத்தகைய துரோகம் செய்திருப்பான்?

அவன் மனம் உருகிற்று. அன்புடன் குனிந்து அவள் நெற்றியில் முத்தமிட்டான். அதில் அவளுடைய தூக்கம் சற்றே கலைந்தது. அரைக்கண் திறந்து கொஞ்சம் மயக்கத்துடன் அவனைப் பார்த்தாள். பிறகு ஒரு புன்முறுவலுடன் அவனை அணைத்துக் கொண்டாள். 'ஏன் இவ்வளவு நேரம்?' என்றோ, 'எங்கே போயிருந்தீர்கள்?' என்றோ அவனைக் கேட்கவில்லை. அவன், அவள் அருகே இருந்த அந்த உணர்ச்சியே 'போதும்' என்பதைப் போன்ற திருப்தி அவள் முகத்தில் தெரிந்தது. ஒரு திருப்தியுடன் கண்ணை மூடிக் கொண்டாள்.

ராஜேஷ், சாந்தியை லேசாக உலுக்கி எழுப்பினான். அன்று அந்த வேளையில் அவனுக்கு அவள் தேவை. அன்று மாலையிலிருந்து நேர்ந்த குழப்பங்கள் எல்லாம் அதில் மறைந்து போகும். அவன் மனத்தில் தோன்றிய சபல உணர்ச்சிகள் யாவும் அந்த ஒன்றிய உறவில் அடையாளம் இல்லாமல் போய் விடும்.

''சாந்தி டார்லிங்'' என்று அவளைத் தன்புறமாக இழுத்துக் கொண்டான். நாணம் கலந்த புன்னகையுடன் அவனைத் தழுவியபடி ஒன்றிப் போனாள் சாந்தி.



''நான் யாரு, சொல்லு பார்க்கலாம்?..''

விடிந்து அவன் எழுந்திருக்கக் கொஞ்ச நேரம் ஆகிவிட்டது. அதற்குள் சாந்தி எழுந்து விட்டாள். ஆரம்பத்தில் அவளுக்குக் காலையில் இருந்த சிறு மயக்கம், தலைவலி எல்லாம் இப்போது இல்லை. தாயாகப் போகும் அழகு வெளியே லேசாகத் தெரியத் தொடங்கி இருந்தது.

சாந்தி குளித்துவிட்டு அவனுடைய காலைச் சிற்றுண்டியையும் தயார் செய்து கொண்டிருந்தாள். அவன் எழுந்து கையில் பிரஷ்ஷுடன் அவள் அருகில் போய் நின்றான். அவளுடைய முகத்தைப் பார்த்தபோது அவனுக்கு முதல் நாள் நடந்தவை யெல்லாம் ஞாபகத்திற்கு வந்தன:

''சாந்தி, எனக்கு வழக்கம் போல நீ குட்மார்னிங் சொல்லவில்லையே?'' என்று கண்ணைச் சிமிட்டிச் சிரித்தான்.

''சொல்வேன். அப்புறம் என் கன்னம் எல்லாம் பேஸ்ட் ஆகிவிடும்'' என்று அவள் புன்னகையோடு பதில் சொன்னாள். நெற்றியில் கலைந்து விழுந்த கூந்தலைச் சரிசெய்து கொண்டு ''என்ன சொன்னார் உங்கள் அயல்நாட்டு விருந்தாளி?'' என்று கேட்டாள். உடனே பொய் சொல்ல அவன் மனம் துணியவில்லை. பேச்சைத் திசை மாற்ற எண்ணினான்: ''என்னை அவரோடு இரவு தங்கச் சொன்னார். நான்தான் உன்னை நினைத்துக் கொண்டு ஓடி வந்து விட்டேன். உன்னைத் தூக்கத்தில் டிஸ்டர்ப் பண்ணி'' என்று குறும்பாகப் பார்த்தான் ராஜேஷ்.

''உங்கள் காபி ரெடி. நல்ல பிள்ளையாகப் பல் துலக்கிவிட்டு மேஜை முன் போய் உட்காருங்கள்'' என்று தன்னிடம்

எழுந்த நாணத்தைச் சாமர்த்தியமாக சாந்தி மறைத்துக் கொண்டாள்.

ராஜேஷின் உள்ளம் தவித்து அடங்கிற்று: அவன் ஏன் சஞ்சலத்துடன் இப்படிப் பிறர் சொல்வதை எல்லாம் கேட்கவேண்டும்? அவளுடைய ஒவ்வொரு பேச்சும் செய்கையும் அவனிடம் சாந்தி கொண்டுள்ள ஆழ்ந்த அன்பை நினைவுபடுத்துவது போல இல்லையா? அவன் அவளுடன் இருந்தால் போதும். அந்த அன்பை அனுபவித்துக் கொண்டு இருந்தாலே போதும். யாரையும் எதுவும் கேட்க வேண்டியதே இல்லை.

காபியைத் தட்டில் எடுத்துக் கொண்டு வந்த சாந்தியை ''இங்கே உட்கார்'' என்று தன் மடியைக் காட்டினன் ராஜேஷ்.

''என்னவாம்?'' என்று அவன் மடி மீது உட்கார்ந்து காபியை அவளே கொடுக்கப் போனள். அவன், அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

''முதலில் குட்மார்னிங், அப்புறம் காபி''. என்று அவளை அணைத்துக் கொண்டான். 'உன்னை இப்படிக் கவர்ந்து கொள்ள சாந்தியால் எப்படி முடிந்தது?' என்று ரீனு கேட்டது ஞாபகத்திற்கு வந்தது. இப்படித்தான்.. இப்படித்தான்..

''என்ன, உங்களை மறந்து என்னை இப்படியே—'' என்று அவனிடமிருந்து விலகி, கன்னத்தை ஒற்றித் துடைத்துக் கொண்டு சாந்தி எழுந்து போனள்.

அன்று பிற்பகல் அவன் ஒரு பையனை அனுப்பி ஆங்கிலப் படம் ஒன்றுக்கு டிக்கெட்டுகள் 'ரிஸர்வ்' செய்து கொண்டு வரச் சொன்னன். ஸோபியா லாரன் நடித்த படம் அது. காதலிக்காக மனைவி தியாகம் செய்து அவன் வாழ்க்கையைவிட்டு விலகிப் போகும் கதை. பதினைந்தாவது வாரமாக ஓடிக் கொண்டிருந்தது. நான்கு வாரங்களுக்கு முன்பே சாந்தி பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டாள்.

அவனும் சாந்தியும் அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு வெளியே போகவில்லை. அவளுக்கு உடம்பு சோர்வு அதிகமாக இருந்தது. டாக்டர் சொல்லி இருந்தபடி அவளுக்கு எந்தவித ஆயாசமும் இல்லாமல் ராஜேஷ் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டி இருந்தது. சில சமயம் இரவில் அவளுடைய வீட்டு வேலைகள் சில வற்றைக் கூட அவனே செய்வான். சாந்திக்கு அது பெருமையாக இருக்கும். அவனையும் கேலி செய்வாள். தானும் அவன் செய்யும் பரிகாசங்களை அனுபவிப்பாள்.

ராஜேஷ் போனில் சாந்திக்குப் படத்துக்குப் போவதைப் பற்றிச் சொல்லி அவளைத் தயாராக இருக்கச் சொன்னன். அவள் என்ன உடை அணிந்துகொண்டு வரவேண்டும் என்றும் கூட ஸெலக்ஷன் செய்து சொல்லி வற்புறுத்தினன். சாந்தியும் அவன் அணிய வேண்டிய ஸூட்டை அவளே தேர்ந்தெடுத்து பிரஷ் செய்து வைத்தாள்.

அப்போது அவன் முதல் இரவு அணிந்து சென்ற ஸூட் அவள் கண்ணில் பட்டது. சற்றே கசங்கி இருந்த அதை ட்ரை வாஷ் செய்யக் கொடுத்தனுப்பலாம் என்று எண்ணினுள். கோட்டை கையில் எடுத்து முன்னும் பின்னுமாகத் திருப்பியவள், அந்தச் சிறு கறையை அடையாளம் கண்டு திகைத்து நின்ருள். அது ஒரு 'பிங்க்' வர்ண லிப்ஸ்டிக்கின் முத்திரை. ராஜேஷ் கோட்டில் அது எப்படிப் பதிந்தது? அந்த கோட்டை முதல் நாள் காலையில் அவள்தான் எடுத்து பிரஷ் செய்து அவனுக்கு அணிவித்து அனுப்பினுள். அப்போது அதில் எந்தக் கறையும் இல்லை. அப்படியானல் மாலையில் விழுந்த கறையா இது?

முதல் நாள் இரவு அவன் வெளியே போய், நேரம் கழித்துத் திரும்பியபோது இதுவும் நிகழ்ந்திருக்குமா? அப்போது அவனுடன் இருந்தது ஒரு பெண்மணியா? அதை அவன் ஏன் தன்னிடம் சொல்லவில்லை? இத்தனை நெருக்கமாக அவனிடம் பழகிய அவள் யார்? அந்த இரவு நேரத்தில் அவளிடம் ராஜேஷிற்கு என்ன வேலை?

காலையில் அவள் உள்ளத்தில் மலர்ந்த புத்துணர்ச்சியும், மகிழ்ச்சியும் சட்டென்று வாடிப் போயின. ராஜேஷ் போனில் சொன்ன திரைப் படத்தின் பெயர் நினைவுக்கு வந்தது: 'ஸன் ஃப்ளவர்' — சூரியகாந்தி. சூரியன் போகும் பக்கமெல்லாம் திரும்பி ஏங்கும் அந்த மலரைப் போல இந்த சாந்தியும் ஒரு சூரியகாந்திதானு?

அவளுக்கு அழுகை பொங்கி வந்தது. கண்ணைத் துடைத்துக் கொள்ள அந்த கோட்டின் பையில் இருந்த அவனுடைய கைக்குட்டையை எடுக்கக் கையை விட்டுத் துழாவினுள். அப்படியே பிரமித்து நின்ருள்.

(தொடரும்)



# ரகசியம்*

## 23

A small gift under a pillow can convey regret — and the permanence of affection. A touch of hand can restore broken communications.

— VINCENT PEALE.

அது ஒரு வெள்ளி 'ப்ரூச்'. கவர்ச்சியாக ஸ்கர்ட் அணியும்போது மார்பின் மீது செருகிக் கொள்ளும் அலங்கார 'ப்ரூச்'. அதன்மேல் 'ஐ லவ் யூ' என்று செதுக்கி இருந்தது. பெண்கள் அணியும் இந்த ப்ரூச், அதுவும் பகட்டாக உடை அணியும் ஒரு பெண் மட்டுமே உபயோகிக்கக் கூடியது, ராஜேஷின் பையில் எப்படி வந்தது? அப்படி ஒரு நட்பு அவளுடைய ராஜேஷுக்கு உண்டா?

முதல் நாள் இரவு நேரம் கழித்து அவன் திரும்பியது இதனால்தானா? 'கோட்டில்' தெரிந்த கறையும், இந்த 'ப்ரூச்' காட்டும் அடையாளமும் கவர்ச்சி நிறைந்த ஒரு பெண் அவனுடன் முதல் நாள் இரவு நெருங்கிப் பழகி இருக்கிறாள் என்பதைக் காட்டுபவை தானா? அந்த நெருக்கம் எவ்வளவு தூரம்? அவளுக்கு இப்படி ஒரு துரோகம் செய்ய அவனுக்கு எப்படி மனம் வந்தது?

முதல் நாள் இரவு ராஜேஷ் தன்னுடன் ஒன்றிப் பழகிய நினைவு அவளுக்குவந்தது. இப்போது அந்த அணைப்பும் இன்பமும் அவளை மகிழ்ச்சியில் ஆழ்த்தவில்லை. அந்தக் கரங்கள் அன்று இரவே அவளுக்கு முன் இன்னொரு பெண்ணைத் தழுவி அணைத்து விட்டு வந்தவை. அவளுடன் கன்னத்தில் கன்னம் வைத்து ராஜேஷ் நெருங்கிய நேரம், அதற்கு முன் அதே போல இன்னொரு பெண்ணுடன் இருந்து ரசித்தவற்றின் நிழல்தாம். அதை அடையாளம் காட்டும் அந்த 'லிப்ஸ்டிக்' கறை—

சாந்தியின் உடல் முழுவதும் நெருப்பாகச் சுட்டது. கையில் எடுத்த 'ப்ரூச்' நழுவிக் கீழே விழுந்தது. குனிந்து அதை எடுத்தபோது அதன் உட்புறத்தை அவள் கவனிக்க நேர்ந்தது. அங்கே

மணியன்

சிறு எழுத்துக்களில் ஏதோ ஒரு பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. 'ரீனு.'

யார் இந்தப் பெண்? நாகரிகமான அந்தப் பெயரும், அது ஒலித்த விதமும் அவள் நெஞ்சில் வேதனையைத் தூண்டின. எவ்வளவு நினைத்துப் பார்த்தாலும், ராஜேஷ் அவ்விதம் செய்திருப்பான் என்று அவளால் நம்பவே முடியவில்லை. மணமாவதற்கு முன் அவன் அந்த சுதந்திரப் பறவையாக இருந்திருக்கலாம். அதை அவள் அறிந்ததில்லை. ஆனால் இப்போது அவனுடைய உள்ளமும் உடலும் அவளுக்கு மட்டும்தான் சொந்தம். அப்படி ஓர் அந்தரங்கமான இன்பத்தை அனுபவிக்க அவளுக்கு மட்டுமே உரிமை உண்டு. அப்படித்தான் அவள் அதுவரை எண்ணி இருந்தாள். ஆனால் இப்போது நடந்திருப்பதோ? ஒரு பெண்ணின் மார்பு அணிகலன் அவன் பையில்...

ஒரு விசிப்புடன் தன் படுக்கை அறைக்குச் சென்று மஞ்சத்தின் மேல் விழுந்தாள். தலையணையை மார்புடன் அணைத்துக் கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அன்று மாலை ராஜேஷ் அவளுடன் சினிமாவுக்குச் செல்ல ஏற்பாடு செய்திருந்ததும், அவள் எவ்வாறு உடை அணிந்து கொள்ள வேண்டும் என்று கூறி- யிருந்ததும் அவளுக்கு மறந்து போயிற்று. நிலை குலைந்து கிடந்த அவளை 'க்ரிங் க்ரிங்' என்ற டெலிபோன் சப்தம் மீண்டும் எழுப்பிற்று.

போனில் ராஜேஷ்தான் பேசினான். ஒரு முக்கியமான 'ஃபைலை'ப் பார்த்து அனுப்ப வேண்டியிருப்பதால் அவனால் வீட்டுக்கு வந்து போக முடியவில்லையாம். அவளை நேரே அலுவலகத்திற்கு வந்து விடும்படியும், அங்கிருந்து இருவருமாகப் போகலாம் என்றும் சொன்னான். ஒரு நிமிடம் 'தனக்கும் உடம்பு சரியில்லை' என்று சொல்லிவிட்டு, அந்த மாலைப் பொழுது போக்கையே ரத்து செய்து விடலாமா என்றுங்கூட அவள் எண்ணினாள். ஆனால் அப்படி ஏமாற்ற அவளுக்கு மனம் வரவில்லை. தன் வருத்தத்தை எல்லாம் மறைத்துக் கொண்டு பதில் சொன்னாள்.

'இந்தச் சிறு விஷயத்திலுங்கூட அவரை ஏமாற்ற எனக்கு மனம் வரவில்லையே? நேற்று அவர் என்னை எப்படி ஏமாற்றத் துணிந்தார்?' என்று நினைத்தபோது அவளுக்கு அழுகை பொங்கி வந்தது.

முகத்தைக் கழுவியபோது, அழுது சிவந்த கண்களுக்குப் பஞ்சில் குளிர்ந்த நீரால் ஒத்தடம் கொடுத்துக் கொண்டாள். ராஜேஷ் விரும்பியபடியே உடை அணிந்து கொண்டாள். எப்போதும் அவள் உடை அணிந்து முடியும் நேரத்தில் ராஜேஷ் வந்து விடுவான். அவள் பின்புறம் நின்று தலைப் பூவை அவன்தான் வில்லாகச் செருகி வைப்பான். அப்படியே அவளைப் பின்புறமாக அணைத்துக் கழுத்தில் முத்தம் இடுவான். அப்புறம் அந்த சந்தோஷம் அவளை வழி நெடுக ஆட்டி வைக்கும்.



ஆனல் இன்று ராஜேஷ் வரவில்லே. அப்படி அவன் இல்லாமல் தனியாகக் கிளம்பிப் போவது அதுதான் அவளுக்கு முதல் தடவை. ஒரு நிமிடம் மனத்தில் அந்த சந்தேகம் எழுந்து மறைந்தது. உண்மையாகவே அலுவலக வேலேதான? அல்லது அன்றும் அந்த ரீன வந்து அவனே எங்கேயாவது திரும்ப அழைத்துக் கொண்டு போயிருக்கிருள? தன்னேயே கடிந்து கொண்டாள். சீசீ! என்ன சந்தேகம் இது?

அந்தப் பத்து மாடிக் கட்டடத்தில் அவனுடைய அலுவலகம் நான்காவது மாடியில் இருந்தது. அங்கிருந்து பார்த்தால் கடற்கரைச்சாலே 'நெக்லெஸ்' விரித்தது போல அழகாகத் தெரியும். அதற்கு முன் ஓரிரு தடவை தன் தந்தையைச் சந்திக்க சாந்தி அங்கே வந்திருக்கிருள். ஆனல் அதுவரை ராஜேஷைத் தேடி அதைப்போல வந்ததில்லே.

'லிஃப்டில்' ஏறி மேலே போனள். அலுவலகம் மூடியாகி விட்டது. அநேகமாக எல்லா நாற்காலிகளும் காலியாக இருந்தன. காவலுக்கு இருந்த கூர்க்கா அவளே ராஜேஷின் அறைக்கு அழைத்துக் கொண்டு போனன். மூடியிருந்த கதவை லேசாகத் தட்டிவிட்டு, அவள் உள்ளே போனள்.



சுழல் நாற்காலியில் அமர்ந்திருந்த ராஜேஷ், அவளே ஒரு சுற்றுச் சுற்றித் திரும்பிப் பார்த்தான். அவன் கண்களில் ஒரு மகிழ்ச்சியும் வியப்பும் தெரிந்தன. நாற்காலியிலிருந்து எழுந்து வந்து அவள் கையைப் பிடித்துக் குலுக்கினன்: ''வெல்கம் மேடம்'' என்று தலேயைச் சாய்த்துக் குறும்புடன் ஆபீஸில் பேசுவது போலச் சொன்னன்.

அதற்குப் பதிலாக சாந்தி வழக்கம் போலச் சிரிக்கவில்லே. கண்ணேச் சுருக்கி

அவனுக்குப் பதில் ஜாடை காட்டவும் இல்லை. 'உம்'மென்று முகத்தை வைத்துக் கொண்டிருந்தாள். அதைப் பார்த்த ராஜேஷ், ''ஓஹோ! கோபமாக்கும் என் ராணிக்கு'' என்று அவளை அணைக்க வந்தான். அவள் தன் கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு ஒதுங்கி நின்றாள். ரகசியமான குரலில் ''இதெல்லாம் நம் வீட்டில் படுக்கை அறையில் நடக்கலாம். இங்கே உங்கள் ஆபீஸ் அறையில் அல்ல'' என்று சொன்னாள். அப்படியும் ராஜேஷ் அவளை விடவில்லை. இடையைக் கைகளால் வளைத்துக் கொண்டான். அதற்கு மேல் சாந்தியினால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

அங்கேயே முகத்தைக் கழுவி உடையைச் சரி செய்து கொண்டு ராஜேஷ் கிளம்பி விட்டான். காரில் அமர்ந்து 'ஃபிளாஸ்க்'கில் அவள் போட்டுக் கொண்டு வந்திருந்த காபியைப் பருகினான். இருவருமாகப் படத்துக்குப் புறப்பட்டார்கள்.

தியேட்டரின் இருட்டில் ராஜேஷின் கை அவள் இடையை அணைத்துப் பிடித்த வண்ணம் இருந்தது. அவனுடைய வழக்கமான குறும்புகளை அன்று காணோம். அது உணர்ச்சிகள் நிறைந்த படம். பார்க்கும்போது இருவரும் அதில் ஒன்றிப் போய் அமர்ந்திருந்தார்கள். கதையும் நடிப்பும் அவள் கண்ணில் நீரை வருவித்தன. அது சோகம் ததும்பி நின்ற ஒரு கணவன் மனைவி கதை....

கணவனைத் தெய்வமாக மதிக்கும் ஒரு மனைவி, காதலித்து அவனை மணந்து அன்போடு பழகிய மனைவி, அவனை இன்னொரு நாட்டுக்கு அனுப்பி வைக்கிறாள். அங்கே இன்னொருத்தியின் நட்பு அவனுக்கு ஏற்படுகிறது. அவன் அவளை மறந்து விடுகிறான். அவனைத் தேடிக் கொண்டு வந்த மனைவி, கணவன் இன்னொருத்தியிடம் மனத்தைப் பறி கொடுத்து நிற்பதை அறிகிறாள். அவனுடைய இன்பத்துக்காகத் தன் வாழ்க்கையைத் தியாகம் செய்து விடுகிறாள். வந்த அடையாளம் தெரியாமல் திரும்பிப் போய் விடுகிறாள்.

படம் முடிந்து திரும்பிய பின்னும் அவள் மனம் அந்த சோகமான கதையையே எண்ணிக் கொண்டிருந்தது. கணவனுக்காக எதையும் தியாகம் செய்யலாம். ஆனால் அவனுடைய அன்பையே தியாகம் செய்து விட முடியுமா? அப்படி ஒரு நிலை அவளுக்கு ஏற்பட்டால் அவள் என்ன செய்வாள்? அதை எண்ணியதும் அவள் உடல் ஒரு முறை நடுங்கிற்று. அவளுடைய வாழ்க்கையின் எதிர் காலம் எப்படியோ?

காரை ஓட்டிக் கொண்டு வந்த ராஜேஷ் அதைக் கவனித்ததும், ''என்ன சாந்தி! குளிராக இருக்கிறதா? என் 'கோட்டை' தரட்டுமா? மேலே போர்த்திக் கொள்கிறாயா?'' என்று கேட்டான்.

''இல்லை. படத்தின் ஞாபகமாக எதையோ நினைத்துக் கொண்டேன். அவ்வளவுதான்'' என்று கண்களை மூடியபடி அவன் தோள்மீது சாய்ந்து கொண்டாள்.

''எனக்கும் வேதனையாகத்தான் இருந்தது சாந்தி. என்ன இருந்தாலும் அப்படி ஓர் அழகான மனைவிக்கு, அன்பு உள்ளம் படைத்த மனைவிக்கு அவன் அப்படித் துரோகம் செய்திருக்கவே கூடாது'' என்று இடது கையால் அவளை அணைத்துக் கொண்டான். கன்னத்தைச் செல்லமாக வருடிக் கொடுத்தான்.

சாந்தி அவனை நிமிர்ந்து பார்த்தாள். சாலையின் விளக்கு வெளிச்சம் அவன் முகத்தில் விழுந்து மறைந்தது. அவன் மனமார உணர்ந்துதான் பேசுகிறான். அவன் சொல்வதில் பொய் இல்லை. அவளுடைய ராஜேஷ் தன் மனைவிக்குத் துரோகம் என்பதையே நினைக்காதவன் தானா? அப்படியானால் அன்று மாலையில் அவள் பார்த்த அடையாளங்கள்? கண்டு மனம் கலங்கி அழுத நிகழ்ச்சி?

அதைப் பற்றி இப்போது அவள் கேட்க விரும்பவில்லை. அவன் மனத்தில் ஒரு கலவரம் உண்டாகும்படி எதையும் செய்ய அவளுக்கு விருப்பமில்லை. அவனாகவே சொன்னாலொழிய அவள் ரீனாவைப் பற்றிக் கேட்கவே மாட்டாள்.

**வீ**டு திரும்பியதும் அவள், மாடியில் படுக்கை அறைக்கு உடையை மாற்றிக் கொள்ளச் சென்றுவிட்டாள். எவ்வளவு நேரமானாலும் வெந்நீரில் குளித்துவிட்டுத் தான் அவன் உணவருந்திப் படுக்கச் செல்வான். அன்றும் அதைப் போல 'கெய்ஸ'ரில் வெந்நீரைப் போட்டு, அதன் பொழிவில் உடல் ஆறக் குளித்து விட்டு, தன் அறைக்குத் திரும்பி வந்தான் ராஜேஷ். அப்போது திறந்திருந்த அவர்களுடைய படுக்கை அறையும், மஞ்சமும் அவன் பார்வையில் பட்டன. சாந்தி களைந்து போட்டிருந்த உடைகள் சிதறிக் கிடந்தன. அவற்றுக்கு நடுவில், அவள் தலையணைக்கு மேல் கிடந்த அவனுடைய நீண்ட 'டர்க்கி டவல்' அவன் கண்ணில் விழுந்தது. அது அங்கே வரக் காரணம்? அதை அவனையன்றி சாந்தி

உபயோகிப்பதேயில்லை. சற்று யோசனையுடன் உள்ளே வந்தான். உடம்பைத் துடைத்துக் கொள்ள அதை எடுத்து உதறினான். அப்போது அதிலிருந்து உதிர்ந்தாற்போல அந்த 'ப்ரூச்' வெளியே விழுந்து வெள்ளி ஒலியுடன் உருண்டது.

திகைப்புடன் அதைக் குனிந்து எடுத்தான் ராஜேஷ். அது அவன் பல ஆண்டுகளுக்குமுன் ரீனாவுக்கு வாங்கிக் கொடுத்த 'ப்ரூச்'. திருப்பி விளக்கொளியில் பிடித்துப் பார்த்தான். அவன் சந்தேகம் நீங்கிவிட்டது. உள்ளே 'ரீனா' என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன.

அவன் அப்படியே அயர்ந்து போய் நின்றான். அது அங்கே எப்படி வந்தது? அவனுக்கே தெரியாமல், ஒரு வேளை அவன் கோட்டின் பையில் ரீனா போட்டு விட்டதாக இருக்குமோ? அப்படியானால் சாந்தி அவன் கோட்டை எடுத்துப் பார்த்திருப்பாளோ? இது என்ன விபரீதம்?

அவனைச் சாப்பிட அழைப்பதற்காக சாந்தி படியேறி வந்துகொண்டிருந்தாள். அவள் காலடிச் சத்தம் கேட்டதும் அவன் சட்டென்று அந்த 'ப்ரூச்'சைத் தலையணைக்கு அடியில் மறைத்து வைத்தான். அவள் அழைப்பதற்கு முன்பே உடையணிந்து வர அவசரமாகத் தன் அறைக்குப் போய்விட்டான்.

இரவு பத்தரை மணி ஆகிவிட்டது. அவன் படுக்கையில் சாய்ந்து ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தான். சாந்தி அப்போதுதான் வேலைகளை முடித்துக் கொண்டு தன் அறைக்குப் போவதைக் கவனித்தான். அவன் மனத்தில் அந்தச் சிறு வேதனை மறுபடியும் எழுந்தது. அன்று இரவு சாந்தி அவனிடம் பழகுவதிலிருந்து அவள் மனத்தில் அவனைப் பற்றிய சந்தேகம் எதுவும் இல்லையா என்று நிச்சயம் செய்து கொள்வது என்று தீர்மானித்துக் கொண்டான்.

ஐந்து நிமிடங்கள் ஆகியிருக்கும். சாந்தி மெல்ல அவன் எதிரே வந்து நின்றாள். நிமிர்ந்து பார்த்ததும் அவன் நெஞ்சு துள்ளிற்று. கவர்ச்சியான 'நைட் கவுன்' அணிந்து அவளுடைய மென்மையான அழகின் வடிவம் முழுமையாகத் தெரியும்படி அவன் எதிரே நின்றாள் சாந்தி. அன்று அவன் ஆசை முழுவதையும் வென்று விடுவது என்று திட்டம் போட்டு வந்திருக்கும் மோகினியைப்



''வர வர எனக்கு இந்த நகை, புடவைகள் பேரில் இருக்கிற ஆசையே விட்டுப் போயிடுச்சு''

''நிஜமாவா?''

''எத்தனை நாளைக்குத்தான் இந்த பழைய நகைகளையும், பழைய புடவைகளையும் கட்டிண்டு இருக்கிறது....''

போலத் தோன்றினாள். ராஜேஷினால் தன் ஆவலை அடக்க முடியவில்லை. தன் இரு கைகளையும் நீட்டி அவளைத் தன் அணைப்பில்இழுத்துக்கொண்டான். பஞ்சு போன்ற மென்மையான அவள் உடலிலும் அங்கங்களிலும் அவன் விரல்கள் ஆவலோடு தொட்டு விளையாடின. அவள் முகம் அவன் முகத்தை ஆசையோடு நெருங்கிற்று, படத்தில் ஸோபியா லாரன் உணர்ச்சியுடன் இதழ்களை அழுத்திக் கொடுத்தது போல.

அப்போது அவள் சட்டென்று விலகி எழுந்து நின்றாள். அவனை சற்றுப் பார்த்து விட்டு, ''ஒரு விளையாட்டு, தப்பில்லாமல் ஆடுவீர்களா?'' என்று தன் கண்ணைச் சிமிட்டினாள்.

''எஸ், டார்லிங். சீக்கிரமாகச் சொல்லு.''

தன் இடையில் மறைத்து வைத்திருந்த அவளுடைய வெள்ளி 'ப்ரூச்' ஒன்றை சாந்தி வெளியே எடுத்தாள். அதைப் பார்த்ததும் அவனுக்கு என்னவோபோல ஆயிற்று. கொஞ்ச நேரம் முன்னால் அவன் பார்த்த இன்னொன்றின் நினைவு வந்தது.

''இதை நீங்கள் என் மார்பின் நடுவே இந்த 'நைட் டிரஸ்'ஸில் பொருத்திக் குத்த வேண்டும். விரல்கள் நடுங்கி என் உடம்பில் பட்டுவிடக் கூடாது. உங்களுடைய மன திடத்துக்கும் இது ஒரு சோதனை. எங்கே? நான் ஒரு சில என்றே

நினைத்துக் கொண்டு செய்யுங்கள் பார்க்கலாம்'' என்று அவன் விரல்களைப் பற்றினாள். கூடவே, ''ஏன் உங்கள் விரல்கள் இப்படி நடுங்குகின்றன?'' என்று சிரித்தாள்.

கலக்கத்துடன் ராஜேஷ் அந்த 'ப்ரூச்' சைக் கையில் எடுத்துக் கொண்டான். ஒய்யாரமாக நிமிர்ந்து நின்ற சாந்தியை நெருங்கினான். அசைவற்று அவள் நின்றாலும் அந்த அங்க அழகின் கவர்ச்சியை அவனால் சிலை என்று நினைத்து ஒதுக்க முடியவில்லை. 'ப்ரூச்'சை எடுத்துச் செருகும்போது அங்கே அவன் கண் முன்னால் சாந்தி இல்லை. ரீனா என்ற இளம் பெண்தான் நின்றாள். என்றோ ஒரு நாள் இதே போல அவளிடம் அவன் பழகியதும், அவள் தன் இளமை அழகு அவ்வளவையும் அவன் அனுபவிக்கக் கொடுத்து விட்டதும்தான் ஞாபகம் வந்தது. அவன் விரல்கள் நடுங்கின. விம்மி எழுந்த அவள் மேனியில் அவன் விரல்கள்பட்டுவிட்டன.

உடனே சாந்தி, ''அவுட். நீங்கள் தோற்றுவிட்டீர்கள்'' என்று உதட்டை முறுவலித்துக் கொண்டாள். அப்படியே இரு கைகளாலும் அவனை மார்போடு தழுவிக் கொண்டாள். அப்படியே ராஜேஷ் முகத்தை அவள் மார்பின்மீது பதித்துக் கொண்டான். அவனால் நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. பார்த்தால் எங்கே சாந்தி தன் முகத்தில் தெரியும் உணர்ச்சிகளை அடையாளம் கண்டு கொண்டு விடுவாளோ என்று பயமாக இருந்தது.

நல்ல வேளையாக சாந்தியே 'பெட் ஸ்விட்சை' அழுத்தி விளக்கை அணைத்து விட்டாள். அப்படியே படுக்கையில் சாய்ந்து கொண்டாள். அவளைத் தழுவி நின்ற ராஜேஷின் கன்னத்தில் அவள் மார்பில் செருகியிருந்த 'ப்ரூச்' உறுத்திற்று.

''சாந்தி, சாந்தி டார்லிங்! இதெல்லாம் என்ன விளையாட்டு?''

''ஒன்றுமில்லை ராஜேஷ். நீங்கள் என்னிடம் தோற்றுப் போய்க் கொண்டிருக்கும் வரையில் எனக்கு மகிழ்ச்சிதான்...'' என்று அவன் முதுகில் ஆறுதலாகத் தட்டிக் கொடுத்தாள் சாந்தி. எதை எதையோ எண்ணி மாலையிலிருந்து உழன்று கொண்டிருந்த அவள் மனம் அந்த நெருக்கத்தில் நிம்மதி அடைந்தது.

அப்போது தலையணையின் அடியில் தற்செயலாக நீண்டு விழுந்து கிடந்த ராஜேஷின் கையில் ஏதோ உறுத்திற்று. அங்கே அந்த 'ப்ரூச்'. சாந்தியும் அவனுமாக இப்படி இருக்கும்இந்த வேளையிலும் கூட ரீனாவின் ஞாபகம் அவனுக்கு வரும் படி ஒரு சந்தர்ப்பமா? வாழ்க்கையின் அந்தரங்கமான உணர்ச்சிகளும், வெளியிடத் தேவையில்லாத ரகசியங்களும் இப்படித்தான் ஒன்றோடு ஒன்று கலந்து பின்னிக் கொண்டே வந்து கொண்டிருக்குமா?

கொஞ்சம் தயங்கித் தன்னை விட்டு லேசாக விலகிய கணவனைச் சாந்தி அருகே இழுத்துக் கொண்டாள்: ''என்ன விஷயம் ராஜேஷ்?'' என்று கேட்டாள்.

அந்த இருட்டிலும் அவனுடைய தயக்கத்தைத் தொட்டு உணர்ந்தே அறிந்து கொண்ட அவள் சாதுரியம், அவனைப் பிரமிக்க வைத்தது. சிரித்துச் சமாளித்துக் கொண்டான்.

''ஒன்றுமில்லை டார்லிங். யு ஆர் ஸோ ஸ்வீட் டுடே.''

இருவரும் சிரித்துக் கொண்டார்கள். அவர்களுடைய மனக்கலக்கம் அதில் அலை அடங்கி மறைந்து விட்டது.

மறுநாள் காலையில் ராஜேஷ் கொஞ்சம் சீக்கிரமாகவே அலுவலகத்துக்குக் கிளம்பிப் போய்விட்டான். முதல் நாள் மாலை அவன் தீவிரமாக ஆலோசித்து முடிவெடுக்க வேண்டி வைத்திருந்த 'ஃபைலை' எடுத்துத் தன் குறிப்பை விளக்கமாக எழுதி ட்ரேயில் ஒரு நிம்மதியுடன் போட்டான்.

அப்போது அந்த அட்டைக்கு அடியில் ஒட்டிக் கொண்டிருந்த அந்த கவர் கீழே விழுந்தது. அதைக் கையில் எடுத்துப் பார்த்தான். முதல் நாள் மாலைத் தபாலிலேயே அது வந்திருந்தது. ஆபீஸ் பையன் அதை மேஜை மேல் வைத்திருக்க வேண்டும். 'ஃபைலை'ப் பற்றிய யோசனையில் அதைக் கவனிக்காமல் அட்டையை அதன்மீது ராஜேஷ் வைத்திருக்க வேண்டும்.

அந்த கவரைப் பிரிக்காமலே அதை எழுதியிருப்பது யார் என்று அவனுக்குத் தெரிந்தது. மேலே 'பர்ஸனல்' என்று சிவப்புக் கோடிட்டு எழுதியிருந்தது. அது ஆஷாவின் கையெழுத்து. பலவகையான உணர்ச்சிகள் மனத்தில் குழம்பி நிற்க அவன் அதை அவசரமாகப் பிரித்தான்.

(தொடரும்)



# ரகசியம்

**24** Ever since eve gave adam the apple there has been a misunderstanding between the sexes about gifts.

—ALLEN

கவரைப் பிரித்துப் படிப்பதற்கு முன்பே அதில் உள்ள விஷயம் என்ன என்பது ராஜேஷிற்குப் புரிந்து விட்டது. நெற்றியில் பொங்கி வந்த வியர்வையை ஒற்றிக் கொண்டு கடிதத்தை ஒரு முறைக்கு இரு முறையாகப் படித்தான்.

'...ரீணா என்ற ஒரு பெண்ணின் மூலம் எனக்குச் சாந்தியைப் பற்றி ஒரு தகவல் கிடைத்திருக்கிறது. உனக்கு அதைச் சொல்லி விடுவது [illegible] கடமை என்று கருதுகிறேன். [illegible]தையும் நன்றாக யோசித்து முடிவு செய்வதே நல்லது. நான் 22-ந் தேதி மாலை பம்பாய்க்கு வருகிறேன். ஓட்டல் அறையிலிருந்து உனக்கு போன் செய்கிறேன். நீ என்னை அங்கு வந்து சந்தித்தால் நாம் பேசலாம். எதையும் சாந்தியிடம் சொல்ல வேண்டாம். அவளுடைய இப்போதைய உடல் நிலையில் அவளை எந்தவித அதிர்ச்சிக்கும் ஆளாக்குவது நல்லதல்ல...'

அந்தப் பகுதியை அவன் மீண்டும் மீண்டும் படித்துக் கொண்டிருந்தான். அதற்கு முன்னாலோ பின்னாலோ இருந்த வரிகளை அவனால் படிக்க முடியவில்லை. கையிலிருந்த கடிகாரத்தை மணிக்கட்டைத் திருப்பிப் பார்த்துக் கொண்டான். அன்றுதான் 22-ம் தேதி. அன்று மாலை ஆஷா பம்பாய்க்கு வருகிறாள். அவளிடமிருந்து போன் வந்தால்தான் அவன் அவளைச் சந்திக்க வேண்டிய இடம் தெரியும்.

சாந்தி! அந்தப் பெயரைச் சொன்னதும் அவன் நெஞ்சம் வேதனையில் நெளிந்தது. எவ்வளவு அழகான பெயர்? அமைதியைப் பெயரிலேயே தாங்கி நிற்கும் அவள், அவனுக்கு மட்டும் ஏன் மன நிம்மதியைக் கொடுக்கவில்லை? அவளைத் தொடும்போதும், அணைக்கும் போதும் எவ்வளவு மென்மையாக இருக்கிறாள்? அவளுடைய நெஞ்சு மட்டும் ஏன் இப்படிக் கல்லாக இருக்கிறது?

நாற்காலியில் சாய்ந்து கொண்டான். ஃபைல்களை அவனால் கவனிக்க

மணியன்

முடியவில்லை. அட்கின்ஸன் அன்று அவனுக்காக ஒரு முக்கியமான விஷயத்தை விவாதிக்க ஒதுக்கி வைத்திருந்தார். அவனால் எவ்விதம் அவருடன் நுட்பமாகப் பேச முடியும்? எண்ணங்கள் குழம்பிக் கொண்டே இருந்தன. தலையைப் பிடித்துக் கொண்டான்.

ரீனு இந்தச் சிக்கலில் எப்படி வந்து சேர்ந்தாள்? அன்று ஏமாற்றத்தின் எல்லையில் அவள் தவித்த போது, அவனைப் பார்த்துச் சொன்னவை அவனுடைய நினைவுக்கு வந்தன. அவள் வேண்டுமென்றே ஏதாவது வம்பு செய்கிறாளா? அல்லது அதில் உண்மை இருக்குமா? அவனுக்கு எதுவும் தோன்றவில்லை. எழுந்து அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டே இருந்தான். மாலையில் ஆஷாவைச் சந்திக்கும் வரையில் அவனால் வேறு எதுவும் செய்ய முடியாது. முக்கியமான கடிதங்களை அவன் படிக்காமலும் கையெழுத்திடாமலும் இருப்பதே நல்லது.

மணி பன்னிரண்டு. போன் மணி அடித்தது. சாந்திதான் பேசினாள். அவனுக்குச் சாப்பாடு கொடுத்து அனுப்பிவிட்டு, கூடவே சின்னச் சின்ன விஷயங்களையெல்லாம் எடுத்துச் சொல்லி சாந்தி ஓர் ஐந்து நிமிடங்களாவது பேசினால்தான் அவனுக்குத் திருப்தி. அன்றும் அதே போலப் பேசத் தொடங்கினாள். அவன் மனம் அந்தப் பேச்சில் ஈடுபடவில்லை. கடைசியில் ரகசியக் குரலில் அவர்களுக்குள்ளே அந்தரங்கமான ஒன்றைச் சொல்லி அவள் பேச்சை முடிப்பது வழக்கம். அன்று அப்படி முடிக்கும்போது ''இன்று முடியுமானால் மாலையில் சீக்கிரமாக வந்து விடுங்கள். இரண்டு மூன்று நாட்களாக நாம் 'வாக்' போகவே இல்லை'' என்றாள்.

''எக்ஸ்கியூஸ் மீ சாந்தி. இன்று எனக்கு நிறைய வேலை இருக்கிறது. நான் அட்கின்ஸனுடன் வெளியே போக வேண்டியிருந்தாலும் இருக்கலாம். இரவு வீட்டுக்கு வரக் கொஞ்சம் தாமதமாகும்..''

''டார்லிங்..'' — சாந்தியின் குரல் அப்படியே விக்கித்து நின்றது. அவள் ஏதோ யோசிப்பதுபோல அந்தக் குரல் அவனுக்கு எடுத்துக் காட்டிற்று. அவன் அதை எதிர்பார்த்தவன்தான். தலையணையின் கீழ் இருந்த 'ப்ரூச்', சாந்தியின் மாற்றம் எல்லாம் வெறும் எண்ணங்கள் மட்டும் அல்ல. அவளுடைய தயக்கத்துக்கு இப்போது எத்தனையோ சாட்சிகளும் பின்னணியாக இருக்கின்றன.

''என்ன சாந்தி? பேசவில்லையே?''





''ஒன்றுமில்லை ராஜேஷ். எனக்கென்னவோ ரொம்ப ஏமாற்றமாக இருக்கிறது; அவ்வளவுதான். நீங்கள் அட்கின்ஸன் வீட்டுக்குப் போவதானால் நானும் வருகிறேன்! அங்கே நான் மார்த்தாவுடன் பேசிக் கொண்டிருப்பேன்.''

ராஜேஷ் உதட்டைக் கடித்துக்கொண்டான். அவனாகவே அட்கின்ஸனின் பெயரைக் குறிப்பிடப் போய், சாந்தி அதிலேயே அவனை மடக்கித் திருப்புகிறாள். ஓரளவு தன்னைச் சமாளித்துக் கொண்டான்:

''வேண்டாம் சாந்தி... நான் எங்கே போவது என்பது பற்றி அவருடன் இன்னும் பேசி முடிக்கவில்லை. உனக்குத் தனியாக இருப்பது சிரமமாக இருந்தால், நீ மார்த்தாவின் வீட்டிற்குப் போய் அவளுடன் பேசிக் கொண்டிரு. நான் வீடு திரும்பு முன் அங்கே வந்து உன்னை 'பிக்-அப்' பண்ணிக் கொள்கிறேன்.''

சாந்தி பெருமூச்சுவிட்டாள். ''ஆகட்டும்'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு போனைக் கீழே வைத்துவிட்டாள். ராஜேஷும் ஒரு பெருமூச்சு விட்டான். ஒரு வழியாக நிலைமையை அவன் சமாளித்து விட்டான். ஆனாலும் அன்று இரவு சாந்தியைச் சமாதானப் படுத்த அவனுக்குச் சிரமமாகத்தான் இருக்கும். அவள் என்னென்ன கேள்விகள் கேட்பாளோ?

அவளை அவன் ஏமாற்றுகிறான். முதலில் இது வேதனையாக இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாகப் பழக்கமாகிவிட்டது. சாந்தி அவனை ஏமாற்றவில்லையா? எவ்வளவு தூரம்? எந்த வகையில்?போகப் போகத்தான் தெரியும். ஆஷாவுடன் அன்று பேசிய பிறகு தான் தெரியும். அவன் குற்றம் செய்தவனாக இருக்கலாம். ஆனால் சாந்தியும் குற்றம் செய்யாதவள் அல்ல. அப்படி நினைத்தபோது அவன் மனத்துக்கு ஒரு சமாதானம் ஏற்பட்டது.

**பி**ற்பகல் நேரம். அந்த வேளையில் சாந்தி கொஞ்ச நேரம் தூங்குவது வழக்கம். ஆனால் அன்று படுக்கையில் புரண்டு கொண்டே இருந்தாள். ராஜேஷ் சொன்னவை அவளுக்கு இயற்கையான பதிலாகப் படவில்லை. அதனால் அவள் மனத்துக்குச் சமாதானமும் கிடைக்கவில்லை.

அந்த ப்ரூச்சின் ஞாபகம் வந்தது. அதை அவள் அப்புறம் அக்கறையாக எடுத்துப் பத்திரப்படுத்தி வைக்கவில்லை. ஆனால் அவளால் அதை மறக்கவும்

முடியவில்லை. இப்போது ராஜேஷ் பேசிய பிறகு அது எழுப்பிய சந்தேகம் பெரிதாக மனத்தில் வளர்ந்து நின்றது. இன்னும் அந்த ரீனு பம்பாயிலேயே இருக்கிறாளா? அன்றும் அவனுடன் வெளியே போக ஏற்பாடு செய்திருக்கிறாளா? அவளிடம் ராஜேஷ் ஏதேதோ பதில் சொல்லி மழுப்புவது அதற்காகவோ?

ஒரு யோசனையுடன் அன்றைய செய்தித் தாளைப் பிரித்தாள். ஒரு பக்கம் முழுவதும் சிறு சினிமா விளம்பரங்கள் வெளியாகியிருந்தன. அவற்றுக்கு நடுவே அவள் அன்று பார்த்த திரைப்படத்தின் விளம்பரமும் இருந்தது. ஸோபியா லாரனின் படமும், அந்த முகத்தில் இருந்த ஏமாற்ற உணர்ச்சியும் அந்தச் சிறு விளம்பரத்தில் தெளிவாக இல்லை. ஆயினும் அதுவே அவள் வேதனையைத் தூண்டுவதற்குப் போதுமானதாக இருந்தது.

அப்போது அதன் கீழேயிருந்த ஒரு விளம்பரம் அவள் பார்வையில்விழுந்தது. நகரின் புகழ்பெற்ற 'நைட் கிளப்'ஒன்றில் நடக்கப் போகும் காபரே நடன நிகழ்ச்சியைப் பற்றிய விளம்பரம் அது. அதிலிருந்த அந்தப் பெயர் - ஆஷா. அவள் மறுபடி பம்பாய்க்கு வருகிறாளா?

சாந்தி ஒரு கணம் திகைத்துப் போனாள். அந்த வகை நடனம் அவளுக்குப் பிடிப்பதில்லை. சில சமயம் ராஜேஷ் அவளை வற்புறுத்தி அழைத்துக் கொண்டு போவான். ஆனால் அவளுக்கு அங்கே உட்காரவே வெறுப்பாக இருக்கும். அவளுடைய இனத்தைச் சேர்ந்தவள்- அவளைப் போன்ற ஒரு பெண்- தன் உடல் அழகைக் கொஞ்சம்கொஞ்சமாக வெளிச்சத்தில் காட்டி நிற்பதையும், அதை ஆண்கள் ரசிப்பதையும் அவளால் சகித்துக் கொள்ள முடியாது. சில சமயம் அப்படி ஆடும் பெண், ஆண்களின் அருகே வந்து உடம்பை நெளித்து சாகசங்கள் செய்வாள். மடி மீது உட்காரவும் அணைக்கவும் முயலுவாள். அப்போது சாந்தியின் மனத்தில் வெறுப்பு பொங்கி எழும். அப்படி ஒரு முறை ஒரு பெண் ராஜேஷைத் தொட வந்தபோது, சாந்தி கோபித்துக் கொண்டு வெளியே எழுந்து வந்து விட்டாள். அவளைச் சமாதானப் படுத்த ராஜேஷும் கூடவே எழுந்து வந்தான்.



''இந்த ஜன்னல் கம்பிகளுக்கு இடையிலே புகுந்துதான் சார் அந்த கைதி தப்பிச் சுக்கிட்டு போயிருக்கான்.''

''அப்படியா? இப்பத்தான் புரியுது, ரொம்ப நாளா சாப்பிடாம ஏன் உண்ணாவிரதம் இருந்தான்னு!''

இப்போது ராஜேஷ் அவளைச் சமாதானப்படுத்த வரவில்லை. ஒருவேளை இன்னொரு பெண் அவனை அப்படி [illegible]று மாலை நெருங்கினால்...? அந்தப் பெண் யார்? ரீனுவா? அல்லது இந்த ஆஷாவாகவே இருக்குமா? அன்று இரவு அவள் நடனம் ஆடுமிடத்தில் ராஜேஷ்...

அவள் மனம் கலவரத்தில் ஆழ்ந்தது. அன்று திரைப்படத் தொடக்க விழாவில் ஆஷாவைச் சந்தித்ததும், அதன் பின் நடந்த நிகழ்ச்சியும், தொடர்ந்து அவள் மயங்கி விழுந்ததும் நினைவுக்கு வந்தன. இப்போது நினைத்தாலும் மறுபடியும் நினைவு தவறி மயங்கி விடுவாள் போல இருந்தது. தலையணையில் முகத்தை அழுத்திப் பதித்துக் கொண்டாள்.

அவள் தனியே இருக்க வேண்டாம். அந்த வீட்டில் தனக்குள்ளேயே ஏதேதோ எண்ணிக் குழம்பிக் கொண்டு தவிக்க வேண்டாம். மார்த்தாவுடன் பேசுவது அவள் மனக் கலக்கத்துக்கு மருந்தாக அமையக்கூடும். ராஜேஷ் ஒரு வேளை உண்மையாகவே வேலை விஷயமாக அட்கின்ஸனுடன் போக நேரலாம். அப்போது அவன் அங்கே வந்து சேர்ந்தால், நால்வருமாகக் கூட, அன்று இரவு நிலாவொளியில் 'வாக்கிங்' போகலாம்.

அப்படி நினைத்ததும் அவளுடைய மன வேதனை சற்று மாறி அடங்கிற்று. ஒரு தைரியத்துடன் எழுந்து, குளித்து உடை மாற்றிக் கொள்ளப் போனாள்.

சாந்தி டிரைவரை விட்டு விட்டுத் தானே காரை எடுத்துக் கொண்டு கிளம்பினாள். மார்த்தாவை அவள் சந்தித்து வெகு நாட்களாயிற்று. அவர்கள் பழகிய ஆரம்ப நாட்களில் மார்த்தா அவளிடம் நாட்டியம் சொல்லிக் கொள்ள ஆசைப்

பட்டதை நினைத்துக் கொண்டாள்: ஆனால் அதன் பிறகு அதற்கு ஒரு சந்தர்ப்பம் எழவே இல்லை. அவர்களுடைய நட்பு நெருங்குவதற்குள் எத்தனையோ நிகழ்ச்சிகள் குறுக்கிட்டு விட்டன. இப்போது தாய்மை அடைந்துள்ள இந்த நிலையில் இனி அவள் அதை நினைக்கவும் முடியாது.

மார்த்தாவுடன் நெருங்கிய தொடர்பு கொள்வது அவளுக்கு ஒரு நன்மையாகவும் இருக்கும். தன்னுடைய குழப்பங்களுக்கு அவள் உதவியாக ஆலோசனை ஏதும் சொல்லக் கூடும். ராஜேஷுக்கு அந்தத் தம்பதியரிடம் உள்ள மதிப்பு அவளுக்குத் தெரியும். அதுவே அவள் மனச் சிக்கல்களுக்கு ஒரு வழி காட்டவும் உதவலாம்.

யோசித்துக் கொண்டே ஓட்டி வந்த போது அவளுடைய கார் ராஜேஷின் அலுவலகத்துக்குச் சமீபத்தில் உள்ள சாலைச் சந்திப்பில் வந்து நின்றது. பச்சை விளக்கு எரியும் வரை அவள் காத்திருந்து கிளம்பியபோது ராஜேஷ் ஒரு காரில் வேகமாக அவளுக்கு முன் செல்வதை சாந்தி கவனித்தாள்.

அவன் தனியாகவே காரை ஓட்டிக் கொண்டு போனான். ஆபீஸ் வேலையாக இருந்தால் அந்தக் காரைக் கம்பெனி டிரைவர்தான் ஓட்டிச் செல்வது வழக்கம். அவன் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்க வேண்டும். தன்னுடைய காரையும், சாந்தி அதை ஓட்டிக் கொண்டு வருவதையும்கூட அவன் கவனிக்கவில்லை. அவ்வளவு தீவிரமாக அவன் எதை யோசித்துக் கொண்டிருக்கிறான்? எங்கே போய்க் கொண்டிருக்கிறான்?

உடனே அவளுக்கு அந்தக் காரைத் தொடர்ந்து செல்ல வேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. அவள் பின்பற்றி வருவதைக் கண்டு கொண்டால்,ராஜேஷ் அவளைத் தப்பாகப் புரிந்து கொள்ளக் கூடும். அப்படி ஒரு நிலைமையை உண்டாக்க அவள் விரும்பவில்லை. ஆனால் அவளுக்குத் தன் ஆவலை அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை.

ராஜேஷ் ஏதோ யோசனையில் இருந்தான். அதனால் அவன் காரை வேகமாக ஓட்டிச் செல்லவில்லை. சாந்திக்கு அதுவே பின்தொடர்ந்து செல்லச் சௌகரியமாக இருந்தது. சுமார் இரண்டு மைல்கள் கடந்தபின் ஒரு பெரிய ஓட்டலில் ராஜேஷின் கார் நுழைந்தது. ஓரளவு வியப்புடன் சாந்தி தனது காரை வெளியிலேயே நிறுத்திக் கொண்டாள். அவள், கதவுகளைப் பூட்டிவிட்டு நடந்தே உள்ளே



''உங்கள் உடம்பு குணமாகணும்னு தினம் நாலு மைல் நடக்கணும்...!''

''சரியாப் போச்சு.. நான் தான் தபால்காரனுச்சுங்களே!''

போனாள். ராஜேஷ், காரை வரிசையில் நிறுத்திவிட்டுஉள்ளே செல்வதைப்பார்த்தாள். எப்படியும் அங்கே நடப்பதை மறைந்து பார்த்துவிடுவது என்ற மனத் துணிவு அவளுக்கு உண்டாயிற்று. ராஜேஷின்செய்கைகளில்தவறு எதுவுமே இல்லையென்று தெரிந்து கொண்டு விட்டால், அதுவே தனக்கு மிகுந்த ஆறுதலை அளிக்கும் என்று தன்னை ஒருவகையில் சமாதானம் செய்து கொண்டாள்.

ஓட்டலின் முன்புறம் பெரிய நந்தவனம் இருந்தது. பக்கத்தில் வண்ணப் பூக்குடைகளின் கீழே நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. பின்புறம் பெரிய நீச்சல் குளம் ஒன்று இருந்தது. அங்கே ஆண்களும் பெண்களுமாகமகிழ்ச்சியுடன் நீந்திக் குளித்துக் கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்தபோது அந்த நாளில் அவளுடன் ராஜேஷ் அப்படி நீந்தி விளையாடிய ஞாபகம் அவளுக்கு வந்தது. அந்த மகிழ்ச்சிகரமான நாட்கள் மீண்டும் அவள் வாழ்க்கையில் வருமா?

வண்ணப் பூக்குடை ஒன்றின் அடியில் கறுப்புக்கண்ணாடி அணிந்த ஒரு வாலிபன் அவளையே கவனிப்பது அவளுக்குத் தெரிந்தது. அந்த முகத்தை எங்கேயோ பார்த்தது போலவும் அவளுக்குத் தோன்றியது. அவன் கறுப்புக் கண்ணாடியைக் கழற்றி விட்டால், அவளுக்கு அடையாளம் தெரிந்து கொள்ள சௌகரியமாக இருக்கும்.

இப்போது அவனே எழுந்து வந்து அவள் அருகில் நின்றான். கண்ணாடியைக் கழற்றிவிட்டு அவளைப் பார்த்து வினயமாகக் கேட்டான்:

''டோண்ட் மிஸ்டேக் மீ. நீங்கள் சாந்திதானே?''

உடனே அவளுக்கு அடையாளம் புரிந்து விட்டது: ''ஓ, மிஸ்டர் மித்ரா. வாட் எ ஸர்ப்ரைஸ்!'' என்று புன்னகை புரிந்தாள். அவன் சகஜமாக அவள் கையைப் பிடித்துக் குலுக்கினான். மித்ராவின் பெருந்தன்மையான சுபாவம் அவளுக்குத் தெரியும். இருந்தாலும் அவன் தன் கையைப் பற்றிக் குலுக்கியது அவளுக்குக் கொஞ்சம் சங்கடமாக இருந்தது.

அவன், அவளை அழைத்துக் கொண்டு போய்ச் சற்று ஒதுக்கமான ஊஞ்சல் சோபா ஒன்றில் உட்கார்ந்து கொண்டான். மித்ரா அவளுடன் 'செக்ரடேரியல் கோர்'ஸில் சேர்ந்து படித்தவன். வசதியான குடும்பம் ஒன்றைச் சேர்ந்தவன். கல்கத்தாவில் அவனுடைய தந்தை ஒரு புகழ் மிக்க வக்கீல். மித்ரா அதன் பின் வெளிநாடுகளில் மானேஜ்மெண்ட் பயிற்சி பெறப் போய் விட்டான். அப்புறம் அவர்கள் சந்திக்கவில்லை.

மித்ரா, சாந்தியைப் பற்றி ஆவலோடு விசாரித்தான். படித்துக் கொண்டிருந்த போது அவளிடம் ஒரு தனியான அன்புடன் அவன் பழகி யிருக்கிறான். அவன் பேச்சிலும் சுபாவத்திலும் ஒரு கண்ணியமான நடத்தையை அவள் பார்த்திருக்கிறாள். சாந்தியை இப்போது இப்படிச் சந்தித்ததில் அவனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை அவளால் வெளிப்படையாகப் புரிந்து கொள்ள முடிந்தது.

மித்ரா, சாந்திக்கு மணமாகி விட்டதைப் பற்றித் தெரிந்து கொண்டான். தனக்கு அழைப்பு அனுப்பவில்லை என்று அவளைக் கொஞ்சம் உரிமையுடன் கடிந்து கொண்டான். கடைசியில் அவளுக்கும் ஓர் அழைப்பு கொடுத்தான்.

''ஆல் ரைட், இன்று நான் ஃப்ரீ. உன் வீட்டுக்குப் போகலாமா? அந்த லக்கி ஜெண்டில்மெனைச் சந்திக்க நான் ஆசைப்படுகிறேன்'' என்று சிரித்தான்.

''தாராளமாகச் சந்திக்கலாம் மித்ரா. ஆனால் இன்று அவர் எங்கேயோ போய் இருக்கிறார். திரும்பி வர நேரமாகும்'' என்றாள்.

''அப்படியானால் நாம் வெளியே போய் வரலாமா? உன் பொழுது போக்கு எது? நீயே யோசித்துச் சொல். நான் உன் இஷ்டப்படி கூட வரத் தயார். திரும்பி வரும்போது உன்னை வீட்டில் 'ட்ராப்' செய்து விடுகிறேன்.''

சாந்திக்கு அந்த அன்பான பேச்சு மகிழ்ச்சியை அளித்தது. வேறு 'எங்கேஜ்மெண்ட்' எதுவும் அவளுக்கு இல்லை. மர்த்தாவிடம்கூட அவள் வருவதாகச் சொல்லவில்லை. மித்ரா ஒரு புத்திசாலித்தனமான, பண்பு நிறைந்த வாலிபன். அவனுடன் பேசிக் கொண்டிருப்பதும் கூட அவளுக்கு ஓர் ஆறுதலாக இருக்கக்கூடும். ஆனால் அவள் இப்போது இருக்கும் நிலை? ராஜேஷ் எந்த நேரத்திலும் திரும்பலாம். அதைக் கவனித்துவிட்டு அவள் வீட்டுக்குத் திரும்பிவிட வேண்டும். வெளியே அவளுடைய கார் நின்று கொண்டிருக்கிறது. அதைப் பார்த்து விட்டு ராஜேஷ் கேள்விகள் கேட்கத் தொடங்கினால் சிக்கலான பிரச்னைகள் உண்டாகலாம்.

''எக்ஸ்கியூஸ் மீ மித்ரா. ஐ வுட் லைக் டு கம். ஆனால் இப்போது ஒரு சிநேகிதியைச் சந்திக்கப் போய்க் கொண்டிருக்கிறேன். அதனால் வரமுடியாத நிலையில் இருக்கிறேன். நீ இன்னும் எவ்வளவு நாட்கள் இங்கே இருப்பாய்? நாளைக்கு நீ ஏன் எங்கள் வீட்டுக்கு விருந்துக்கு வரக் கூடாது?'' என்றாள்.

''வரலாம். ஆனால்...''

''என் சமையல் நன்றாக இருக்கும் மித்ரா. பயப்படாதே.''

''ஓ. யு ஆர் நாட்டி... நான் அதைச் சொல்லவில்லை. காலையில் விமானத்தில் நான் கல்கத்தாவுக்குத் திரும்புகிறேன். அப்படிப் போகாவிட்டால் வருகிறேன்'' என்று சட்டைப் பையிலிருந்து ஒரு சிறு புத்தகத்தை எடுத்தான்: ''உன் விலாசத்தைச் சொல்லு'' என்று குறித்துக் கொண்டான். கூடவே தன்னுடைய கல்கத்தா விலாசம் போட்டிருந்த 'விஸிட்டிங் கார்'டை அவளிடம் கொடுத்து விடை பெற்றுக்கொண்டான்.

சாந்தி அதற்கு மேல் அங்கே நிற்பது சரி அல்ல என்று கிளம்பி வெளியே வந்தாள். தன் காரை எடுத்துக் கொண்டு கூடவே போய் மறைவாக நிறுத்தினாள். ஐந்து நிமிடங்கள்கூட ஆகி இராது. ராஜேஷ், ஆஷாவுடன் பேசியபடி படிகளில் இறங்கி அவனுடைய காரை நோக்கி வருவது அவளுக்குத் தெரிந்தது. அவள் கை அவன் கையில் கோத்திருந்தது.

அதைக் கண்டதும் அவள் இதயம் 'படபட'வென்று அடித்துக் கொண்டது.

(தொடரும்)



# ரகசியம்

**25**

Literature is mostly about having sex and not about having Children. Real life is the other way around.

— DAVID LODGE.

**ரா**ஜேஷ், ஆஷா இருவரும் காரில் ஏறி வெளியே போகும் வரையில் சாந்தி காத்திருந்தாள். ராஜேஷின் முகம் கவலையால் வாடியிருந்தது. ஆஷா அவனுக்குத் தைரியம் சொல்லுவது போல எதையோ பேசிக் கொண்டே போனாள். சாந்தியிடம் தனது அலுவலகத்துச் சிக்கல்களை ராஜேஷ் என்றும் கூறியதில்லை. இப்போது ஆஷாவிடம் சொல்லுகிறானா? அந்த அளவுக்கு, அவளுக்குக் கிடைப்பதைக் காட்டிலும், அந்தரங்கமான நட்பு அவர்களிடையே இருக்கிறதா?

நினைக்கும்போது சாந்திக்குப் பொறுமை பொங்கி எழுந்தது. கூடவே அவளுக்கு இன்னொரு சந்தேகமும் ஏற்பட்டது. அவர்களிடையே அவளுக்குத் தெரியாத அளவு நெருங்கிய உறவு இருக்கலாம். அதில் ஏதாவது சிக்கலா இப்போது? அப்படி நினைத்தபோது சாந்திக்கு அவர்கள் கைகோத்துப் படிகளில் இறங்கி வந்த காட்சியை நினைக்கவே வெறுப்பாக இருந்தது. எதையெல்லாமோ கற்பனை செய்து மனம் கசந்தது.

எதற்கும் அவள் மர்த்தாவைச் சந்தித்துப் பேசிவிட்டு அங்கேயே இருப்பது நல்லது. ராஜேஷ் அங்கே அவளைச் சந்திக்க வருவான். அங்கிருந்து வீட்டுக்குப் போய் விடலாம். தன்னை ஒருவேளை ராஜேஷ் பார்த்திருப்பானோ என்ற பயம் அவளுக்கு இருந்தது. மேலும் அனாவசியமான சந்தேகங்களைத் தூண்டும் விதமாக எதையும் செய்ய சாந்தி விரும்பவில்லை. காரை மர்த்தாவின் வீட்டுக்கு ஓட்டிக் கொண்டு போனாள்.

சாந்தியைப் பார்த்ததும் மர்த்தாவிற்கு அளவில்லாத மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆவலுடன் அவளை அணைத்து உள்ளே அழைத்துக் கொண்டு போனாள்.

**மணியன்**

மர்த்தா, 'ஏர்ஹோஸ்டெ'ஸாகப் பணியாற்றியவள். அதனுல் எப்போதுமே அவளுடைய பேச்சிலும் உபசாரங்களிலும் ஓர் அழகான மெருகு இருக்கும். சாந்திக்கு அது மிகவும் பிடிக்கும். மனம் கலங்கியிருந்த இந்த சமயத்தில் அந்தப் பேச்சும் பண்பும் சாந்திக்கு மிகவும் ஆறுதலாக இருந்தன.

''உனக்கு 'மார்னிங்-ஸிக்கெஸ்' இல்லையே? டாக்டரிடம் போனுயா? அவர் என்ன சொன்னுர்? குழந்தை உன் வயிற்றில் அசைவது உனக்குப் புரிகிறதா?'' என்றெல்லாம் அவளுக்கு இதமான கேள்விகளை மர்த்தா கேட்டாள். அவற்றுக்குப் பதில் சொல்வது சாந்திக்கு மகிழ்ச்சியாக இருந்தது. அவர்கள் இருவரையும், மர்த்தா தனது தாம்பத்திய வாழ்க்கைக்கு ஒப்பிட்டுப் பேசியபோது கொஞ்சம் வெட்கமாகவும் இருந்தது. மர்த்தா சிரித்துக் கொண்டாள்:

''உனக்கு ஒரு பெண்தான் பிறக்கும் என்று நினைக்கிறேன். யு ஆர் லுக்கிங் பியூடிஃபுல்'' என்று மர்த்தா அவள் கன்னத்தில் ஆசையுடன் கிள்ளினுள். மர்த்தாவின் அன்பான உள்ளத்தில் கள்ளம் கபடே இல்லை.

''எனக்கும் ஆசைதான். ஆனுல் அவரைப் போலவே ஓர் அழகான பிள்ளை வேண்டும் என்றுதான் ராஜேஷ் விரும்புகிருர். அதற்காகப் பெயர்களைக் கூட 'ஸெலக்ட்' பண்ண ஆரம்பித்து விட்டார்'' என்றுள் சாந்தி.

''ஸோ ஸூன்! இன்னும் ஏழு மாதங்கள் ராஜேஷ் எப்படிக் காத்திருக்கப் போகிருர்? கொஞ்சங்கூடப் பொறுமை இல்லாத மனிதராயிற்றே அவர்!'' என்று பரிகாசம் செய்தாள் மர்த்தா.

வெகு நேரம் இருவரும் பேசிக் கொண்டிருந்தார்கள். ராஜேஷ் அங்கே வந்து சாந்தியை அழைத்துக் கொண்டு போக இரவு மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. அதற்கு வெகு நேரம் முன்னதாகவே அட்கின்ஸன் வந்து விட்டார். சாந்திக்கு அட்கின்ஸனைத் தனியாகப் பார்த்ததும் தன்னிடம் ராஜேஷ் உண்மையை மறைத்திருப்பது தெளிவாகி விட்டது. ஆயினும் தன் மனக்கலக்கத்தை அவள் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. ராஜேஷ் பேசியது எதையும் சொல்லவும் இல்லை.

ராஜேஷ் வந்ததும் அட்கின்ஸனும் மர்த்தாவும் அவனை உரிமையோடு கோபித்துக் கொண்டார்கள்: ''இந்த சமயத்தில் சாந்தியை இப்படியா தனியாக விட்டுச் செல்வது? அவளுக்கு என்னென்ன பிரியமானவையோ அவை எல்லாவற்றையும் தந்து, மிகவும் நயமாகப் பழக வேண்டிய சமயம் அல்லவா இது! அப்படி என்ன வேலை உனக்கு?'' என்று ஒரு கனிவுடன் கோபித்துக் கொண்டார்கள்.

ராஜேஷ் ஏதோ சொல்லி சமாளித்துக் கொண்டான். ஆனுல் வெளியே வந்து சாந்தியுடன் காரில் ஏறிக் கொண்டதும் அவளுடைய கேள்விக்கு அவனுல் சரியாகப் பதில் சொல்ல முடியவில்லை.

''நீங்கள் அட்கின்ஸனுடன் போவதாகச் சொன்னீர்கள். அலுவலக வேலை என்றும் சொன்னீர்கள். இரண்டும் இல்லை என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார். ஏன் என்னிடம் இதை மறைக்கிறீர்கள்?'' என்று சாந்தி வருத்தத்துடன் கேட்டாள்.

''நான் என்ன சிறு குழந்தையா? நான் செய்பவை ஒவ்வொன்றையும் உன்னிடம் சொல்லி அனுமதி வாங்கிக் கொள்ள





வேண்டுமா? உன்னைப் பற்றிய ஒவ்வொன்றையும் நீ என்னிடம் சொல்கிறாயா? எதையுமே நீ மறைத்தது இல்லையா?'' என்று எரிச்சலுடன் கேட்டான் ராஜேஷ்.

''என்ன, ஏதேதோ பேசுகிறீர்களே? நீங்கள் உங்களுடைய நண்பர் யாருடனாவது போயிருக்கலாம். அந்த நண்பரைப் பற்றி நானும் தெரிந்து கொள்ளலாமே என்றுதான் கேட்டேன். உங்களுக்கு விருப்பம் இல்லையானால் வேண்டாம்.''

''எனக்கு நெருங்கிய நண்பர், என் நலனில் அக்கறை கொண்ட ஒருவருடன் தான் பேசிக் கொண்டிருப்பதற்குப் போனேன். ஆனால் அவரைப் பற்றி நீ தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. நாங்கள் பேசியவற்றை நீ தெரிந்து கொள்வதும் உனக்கு மன அமைதியைக் கொடுக்கப் போவதில்லை'' என்று கடுமையான குரலில் ராஜேஷ் சொன்னான்.

அதைக் கேட்டு சாந்தியின் மனம் நொந்தது. ஆஷாவைப் பற்றித் தனக்குத் தெரிந்து கொள்ள அருகதை இல்லை என்று ராஜேஷ் சொல்லுகிறான். அவர்கள் இருவருக்கும் நடந்த மனம் நெருங்கிய உரையாடலைப் பற்றிக் கேட்டால், தன் மன அமைதி பறி போய்விடும் என்றும் வெளிப்படையாகச் சொல்லுகிறான். அன்பான மனைவி ஒருத்திக்கு இதைக் காட்டிலும் மன வேதனை தரும் விஷயம் வேறு என்ன இருக்க முடியும்?

சாந்தி அதற்குப் பிறகு பேசவே இல்லை. சாப்பிடும் போதும், படுக்கைக்குச் செல்லும் போதும் ராஜேஷ் மௌனமாகவே இருந்தான். சில சமயம் அவன் அப்படி இருக்கும் போது சாந்தி அவனை வம்புக்கு இழுப்பாள். தன்னுடைய அழகு, கவர்ச்சியான பேச்சு இவற்றால் அவன் கவனத்தைத் திருப்ப முயலுவாள். அவன் தன்னை ஆசையுடன் நாடி வரும் போது வேண்டுமென்றே ஒதுங்கி அவனை அவள் அன்பிற்குப் பணிய வைப்பாள். இப்போது சாந்தி எதுவுமே செய்யவில்லை. தூக்கம் வராவிட்டாலும் கண்ணை மூடிக் கொண்டு அவனுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு திரும்பிப் படுத்துக் கொண்டு விட்டாள்.

ராஜேஷிற்கும் தூக்கம் வரவில்லை. புரண்டு படுத்தவண்ணமாகவே இருந்தான். அதை சாந்தி கவனித்துக்கொண்டு தான் இருந்தாள். ஒரு முறை அவனை ஆசையுடன் தழுவி நெருங்க அவள் நினைத்திருந்தாலும் அவனுக்கு அமைதி கிடைத்திருக்கும். ஆனால் சாந்திக்கு அப்படிச் செய்ய மனம் இல்லை. அவன் மீது ஆஷாவின் கரம் படிந்திருந்த நினைவு அவளை நெருப்பாக வாட்டிக் கொண்டே இருந்தது.

மறுநாள் காலையிலும் ராஜேஷ் அவளிடம் மிகவும் அளவாகத்தான் பேசினான். பிற்பகல் சாப்பாடு அனுப்ப வேண்டாம் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். மாலையில் எப்போது திரும்பி வருவான் என்று சாந்தி கேட்கவே இல்லை. கணவன் விரும்பும் சுதந்திரத்தை அவன் தன் இஷ்டப்படி அனுபவித்துப் போகட்டும் என்று விட்டுவிட்டாள்.

மனக்கலக்கத்தில் சாந்திக்கு சாப்பிடப் பிடிக்கவில்லை. காலையிலிருந்தே வயிற்றைப் புரட்டிக் கொண்டிருந்தது. அதனால் புளிப்பான ஆரஞ்சு ரசம் மட்டுமே சாப்பிட்டாள். வாழ்க்கையில் சில சமயம் இனிப்புக்கூடத் தேவைப் படுவதில்லை; புளிப்பே இதமாக இருக்கும். அன்று அவள் நாவின் ருசியும் அந்த உண்மையைத்தான் எடுத்துக் காட்டிற்றோ, என்னவோ?

இரவு சரியாகத் தூங்காததனால், பிற்பகல் சற்றுக் கண்ணயர்ந்தபடி படுத்திருந்தாள் சாந்தி. அப்போது தொடர்ந்து அடித்த ஒரு 'போன்' மணியோசை அவளை எழுப்பிற்று. ராஜேஷ் பேசக்கூடும் என்ற ஓர் ஆவல், அந்த மனநிலையிலும் அவளுக்கு மகிழ்ச்சியை அளித்தது. எழுந்து சென்று போனை எடுத்தவள், அதில் ஒரு பெண் குரல் கேட்டதும் திடுக்கிட்டாள்.

அந்தப் பெண், தான் யாரென்று சொல்லவில்லை. ஆனால் ராஜேஷைப் பற்றி மிகவும் அந்தரங்கமாக விசாரித்தாள். சாந்திக்கு அதைக் கேட்டதும் மனம் அலை பாய்ந்தது. கோபத்துடன் போனைக் கீழே வைக்கப் போனாள். அப்போது அவள், ''கொஞ்சம் இருங்கள். ஒரு 'ரிக்வெஸ்ட்'. என்னுடைய 'ப்ரூச்' ஒன்றை ராஜேஷ் அங்கே கொண்டு வந்திருப்பார் என்று நினைக்கிறேன். எனக்கு அவர் கொடுத்த அன்பளிப்பு அது. அன்று அவர் இன்பமாகத் தன்னை மறந்து பொழுதுபோக்கிய சமயத்தில் அதைத் தவறுதலாக எடுத்துக் கொண்டு போய் இருக்க வேண்டும். நான் அங்கே வந்து அதை எடுத்துக் கொள்ளலாமா?'' என்று விஷமமாகக் கேட்டாள் அந்தப் பெண்.

சாந்திக்கு அந்த விஷமம் விஷமாக இருந்தது. தன்னுடன் பேசும் பெண் ரீனா என்பதைப் புரிந்து கொண்டாள். ஒரு மனைவியிடம் அவள் கணவனைப் பற்றி இவ்விதம் அநாகரிகமாகப் பேசும் பெண்ணுக்குப் புத்தி புகட்ட விரும்பினாள்.

''ஸில்லியாக உளறாதே. நான் அவருடைய மனைவி யென்பது நினைவிருக்கட்டும். என்னிடம் மறுமுறை நீ பேசுவதையும் நான் விரும்பவில்லை'' என்று கடுமையான குரலில் சொன்னாள் சாந்தி.

''உண்மைதான். ஆனால் நீ அவருடைய மனைவி என்பது பெயரளவில்தான் என்பது உனக்குத் தெரியவில்லையா? நீ படித்த பெண், புத்திசாலி என்றெல்லாம் கேள்விப் பட்டேனே? ராஜேஷிடம் மிகவும் நெருங்கிப் பழகிய முதல் பெண் நான் தான் என்பது உனக்குத் தெரியாதென்றே நினைக்கிறேன். அதனால்தான் நீ என்னை இப்படி யெல்லாம் பேசுகிறாய். எனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடு. மனைவியான உனக்கு அவரைப் பற்றித் தெரியாத எவ்வளவோ விஷயங்கள் எனக்குத் தெரியும். நான் நேரில் வரட்டுமா?'' என்று கேட்டாள் ரீனா.

சாந்தி, ''ஐ டோண்ட் கேர். எனக்கு எதுவும் தேவையில்லை'' என்று வெறுப்புடன் போனைக் கீழே வைத்தாள். ஒரு நிமிடத்துக்கெல்லாம் போன் மறுபடி அடித்தது. ஆனால் அவள் அதை எடுக்கவே யில்லை. ரீனாவே தன்னை மறுபடியும் அழைக்கிறாள் என்று எண்ணினாள். மேலும் அவளுடன் பேசவே அவள் விரும்பவில்லை. ஆனால் அவளை அழைத்த ராஜேஷ், போனை வெகுநேரம் யாரும் எடுக்காததை எண்ணி, வியந்து கொண்டிருந்தான். தன்னிடம் சொல்லாமல் சாந்தி அந்த வேளையில் எங்கே போயிருக்கக்கூடும் என்று எண்ணி எண்ணிக் குழம்பிக் கொண்டே இருந்தான்.

இரவு ஏழு மணி. ராஜேஷ் வீடு திரும்பவில்லை. பிற்பகல் போனில் ரீனாவின் பேச்சைக் கேட்டதிலிருந்தே சாந்தியின் மனத்தில் அந்த எண்ணம் தலைதூக்கிக் கொண்டிருந்தது. மீண்டும் மீண்டும் அடக்கினாலும் அந்த ஆசை அவளுக்குக் கட்டுப்படவே இல்லை.

ராஜேஷ் தனது ரகசியங்கள் அனைத்தையும் கொட்டி எழுதியிருந்த டயரிகள் அவ்வளவும் பீரோவில் இருந்தன. அதில் எதையும் அவள் எடுத்துப் படிக்கலாம். ரீனு என்னென்னவோ சொன்னுளே? மனைவி என்ற முறையில் ராஜேஷுக்கும் அவளுக்கும் தெரிந்த ரகசியமான ஆசைகளைப் பற்றி யெல்லாம்கூடத் தனக்குத் தெரிந்த மாதிரி உளறினுளே! எவ்வளவு தூரம் அவை எல்லாம் உண்மை? டயரிகளைப் படித்துத் தெரிந்து கொண்டால் என்ன?

அவளுடைய மனச்சாட்சி அதற்கு லேசில் அனுமதி தரவில்லை. கணவனை நம்பாமல் ஒரு பெண், மனைவியாகத் தனது கடமையைச் செய்ய முடியுமா? யாருடைய வாழ்க்கையைச் சரி பார்க்கிருள் அவள் இப்போது? வாழ்க்கையில் நடந்து போனவற்றைப் பற்றிக் கேட்பது தவறென்றும், அதனுல் அமைதி குலையும் என்றும் ராஜேஷிற்கு எடுத்துச் சொன்னவள் அல்லவா சாந்தி? அவன் தன் முன் டயரிகள் எல்லாவற்றையும் பெட்டியுடன் கொண்டு வந்து வைத்தபோதும், அந்தப் பெட்டியைத் திறக்கவும் மறுத்தவள் அல்லவா அவள்? அவளுக்கா இப்போது இப்படி ஓர் ஆசை?

ஆனுல் சாந்தியால் இப்போது அந்த விபரீத ஆசையை எதிர்த்து அடக்க முடியவில்லை. நேரம் ஆக ஆக அவளுடைய மனத்தில் ஒரு வெறி புகுந்து ஆட்டி வைக்கத் தொடங்கிற்று. ஒன்பது மணியும் அடித்து விட்டது. அன்றும் ராஜேஷ் திரும்பி வரத் தாமதமாகியது. நேற்று ஆஷா, இன்று ரீனுவா? பிற்பகல் அவளுடன் பேசியவள் இப்போது ராஜேஷிடம், அவன் அணைப்பை அனுபவித்துக் கொண்டிருக்கிருளா? ஒரு தீர்மானத்துடன் எழுந்திருந்தாள்.

தணியாத ஒரு வேகம் தூண்ட சாந்தி பீரோவைத் திறந்தாள். நடுங்கும் கைகளுடன் அந்தப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்து படுக்கை அறையில் வைத்தாள். அறைக் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள். பெட்டியைத் திறந்து டயரிகளைப் புரட்டிப் படிக்கத் தொடங்கினுள்.

ராஜேஷ் அதில் தனது வாலிபப் பருவ ஆசைகளை மனம் திறந்து கொட்டி இருந்தான். அவனுடைய சிறு ஆசைகளையும் மறைக்காமல் எழுதி இருந்தான். ரீனு பெயர் வந்த பகுதிக்கு வந்ததும், சாந்தி ஒரு தனிக் கவனத்துடன் அதைப் படித்துப் பார்க்கத் தொடங்கினுள்.



"என்னங்க....பெட்ரோல் விலை ஏறினதுக்கப்புறம் 'ஆட்டோ' சத்தம் எல்லாம் ரொம்ப ஜாஸ்தி ஆயிடுத்தாமே....?"

"ஆமாங்க... காதைத் துளைக்குது..!"

ரீனு ஒரு பண்பில்லாத பெண்ணுக இருக்கலாம். நடத்தை தவறியவளாகவும் இருக்கலாம். ஆனுல் அவள் பொய் சொல்லவில்லை. அவள் கூறிய ஒவ்வொன்றும் உண்மை. தான் ராஜேஷிடம் இப்போது அனுபவிப்பவற்றை, ஒரு பெண் என்ற முறையில் முதலில் அனுபவித்தவள் ரீனுவேதான். அந்த டயரியில் ராஜேஷ் அவளை அங்கம் அங்கமாக வர்ணித்திருந்தான். அவற்றைப் படித்த போது சாந்தியின் நெஞ்சில் யாரோ நெருப்பை அள்ளிக் கொட்டியது போல இருந்தது.

சில பகுதிகளைப் படித்த பின் அவளால் படிக்கவே முடியவில்லை. கண்ணில் நீர் பொங்கிற்று. நெஞ்சில் அடக்க முடியாத துயரம் எழுந்து அலை பாய்ந்தது. டயரியை மூடிப் பெட்டியில் போட்டாள். படுக்கையில் படுத்துக் கொண்டு நெஞ்சு வெடித்துப் போவதைப் போல விம்மி விம்மி அழுது கொண்டே இருந்தாள்.

ராஜேஷ் அன்று இரவு வீட்டுக்கு வரவே இல்லை. அவளும் தூங்கவேயில்லை. அவள் மட்டுமே அனுபவித்ததாக எண்ணிய இன்பப் பொழுதுகளை அவளுக்கு முன்பே ரீனு உணர்ந்திருக்கிருள். இன்னும் அந்தத் தொடர்பு விட்டபாடில்லை. அதை நினைக்க நினைக்க அவள் உடலும் உள்ளமும் கொதித்தன. ஒரு பெண் எதையும் பொறுத்துக் கொள்வாள். ஆனுல் தன் கணவனின் அந்தரங்க உறவுகளை மட்டும் இன்னெரு பெண்ணுடன் பகிர்ந்து கொள்ள ஒப்பவே மாட்டாள். ராஜேஷை உயிரினும் மேலாக நேசித்த சாந்தி, அந்த நிலையை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்?

மறுநாள் மதியப் பொழுதாகி விட்டது. அதற்குமேல் பொறுக்க முடியாமல் ராஜேஷின் அலுவலகத்துக்கு போன் செய்தாள் சாந்தி. அவர்கள் சொன்ன பதில் அவளைத் திடுக்கிட வைத்தது: ''ராஜேஷ் அலுவலகத்துக்கு வரவே இல்லை. நாங்களே உங்களுக்கு போன் செய்யலாம் என்று இருந்தோம்'' என்று கூறினார் மானேஜர்.

ராஜேஷ் அவளுடைய உணர்ச்சிகளை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. அவனுடைய குழந்தையை அவள் தாங்கி நிற்கும் அந்த நிலையிலும் அவளுக்குக் கலப்பில்லாத அன்பை வழங்கவில்லை. எங்கேயோ, யாரோ ஒரு பெண்ணின் உறவில் தன்னை மறந்திருக்கிறான். நினைக்க நினைக்க அவள் மனம் கடலாய்க் கொந்தளித்தது.

வேலைக்காரன் தபாலைக் கொண்டு வந்து வைத்துவிட்டுப் போயிருந்தான். அதுவரை அவள் அதைக் கவனிக்கவில்லை. அப்போதுதான் மேலெழுந்தவாரியாகப் புரட்டினாள். அதில் பழக்கமான ஒரு கையெழுத்து அவள் கவனத்தைக் கவர்ந்தது. அது மித்ரா எழுதியிருந்த கடிதம் தான்.

கடித உறையைக் கிழித்துப் படித்தாள். அவனுக்கே உரிய நயமான பண்புடன் அழகாக எழுதியிருந்தான். கல்கத்தாவில் நடக்கும் பூஜா விழாவிற்காக அவர்கள் இருவரையும் மித்ரா அழைத்திருந்தான். அவனுடைய தூய்மையான அன்பை ஒவ்வொரு வரியிலும் அவளால் காண முடிந்தது.

கல்லூரி நாட்கள் அவளுக்கு ஞாபகம் வந்தது. மித்ரா அவளிடம் சொன்ன துண்டு: 'உன்னைப் பார்க்கும்போது எனக்கு பூஜிக்க வேண்டும் போல ஓர் அன்புதான் உண்டாகிறது சாந்தி. தேவியை வேண்டிக் கொள்ளும்போது என் இதயத்தில் உன்னுடைய கம்பீரமான அழகு நிறைந்த உருவம்தான் வந்து நிற்கிறது. உன்னை என் கற்பனையில் ஒரு தாமரைப்பூவில் உட்கார வைத்து வணங்கி வரவேண்டும் போலத் தோன்றுகிறது.'—அந்தக் குரல் அப்போது செவியில் ஒலிப்பதுபோலத் தோன்றிற்று.

எவ்வளவு தூய்மையான அன்பு அது? பெண்மைக்கும் அழகுக்கும் காட்டும் எத்தனை பவித்திரமான நேசம்?

அவளுடைய அந்த மன நிலையில் மித்ராவின் நினைவு அவளை எவ்வளவோ ஆறுதல் தந்து தூக்கி நிறுத்தியது. கொஞ்சம் கொஞ்சமாக அவள் மனம் அந்தச் சிந்தனையில் ஈடுபட ஆரம்பித்தது.

அவளுடைய மனச் சங்கடத்தை அவள் அதுவரையில் அப்பாவிடம் சொல்லவில்லை. அப்போதும் சொல்லிப் பயன் இல்லை. ஏதாவது 'ஃபிலாஸஃபி' பேசுவார்; புத்திமதி சொல்லிக் கொண்டிருப்பார். அவளால் அந்த நிலையில் அந்தப் பேச்சில் ஆறுதல் காண முடியாது.

ஓர் அண்ணனைப் போல அன்பு காட்டி அவளுடைய நன்மையை முதன்மையாகக் கருதி, அவளைப் பாதுகாக்கக் கூடிய ஒருவர்தான் அவளுக்கு அப்போது தேவை. அவள் மனம் திரும்பத் திரும்ப அப்படி ஒரு தூய்மையான அன்புக்காகத்தான் அப்போது ஏங்கிற்று.

இருட்டும் வரையில் அந்தச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவளைப் போல, தனது துணிமணிகளை எடுத்து வைத்துக் கொள்ளத் தொடங்கினாள். தன்னுடைய அறையையும் ராஜேஷின் அறையையும் அவர்கள் மணமாகி வந்த அன்று இருந்ததைப் போலவே ஒழுங்காக அழகுபடுத்தி வைத்தாள். ஒவ்வொரு செய்கையிலும் அவளுக்கு ஒவ்வோர் இனிய நினைவு மனத்தில் பொங்கி வந்தது. கண்ணில் நீர் நிறைந்து அவள் பார்வையை மறைத்தது.

விடிந்து விட்டது. ராஜேஷ் அவளைப் பிரிந்து இரண்டு நாட்கள் ஆகிவிட்டன. அவன் இருப்பிடத்தை அவளுக்கு ராஜேஷ் சொல்லவில்லை. தான் போகும் இடத்தை ராஜேஷிற்குச் சொல்ல வேண்டியதும் இல்லை. விமான மூலமாகவோ, ரயிலில் உயர் வகுப்பிலோ சென்றால் அவன் தெரிந்து கொள்ள நேரிடும். எத்தனையோ எளிய மக்கள் அமர்ந்து செல்லும் மூன்றாம்வகுப்பில்அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் கூட்டத்தில் ஒருத்தியாகவே, அவள் போய் விடுவாள்.

ஒரு சிறு கடிதம் எழுதி ராஜேஷின் அலமாரியில் அவனுடைய கோட்டில் 'பின்' போட்டுச் செருகி வைத்தாள். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பெட்டியுடன் கிளம்பினாள். வீட்டைப் பூட்டி சாவியைத் தன் தந்தை வீட்டுக்குக் கொடுத்து அனுப்பி விட்டாள்.

ஒரு டாக்சியில் ஏறி ரயில் நிலையத்துக் குப் புறப்பட்டாள். அவள் மனம் நினைவு தெரிந்த நாளாய், அன்று வரையில் நடந்த இன்பமான, துன்பமான பொழுதுகள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாக எண்ணிக் கொண்டே வந்தது. கண்ணிலிருந்து நீர் ஆறாகப் பெருகிக் கொண்டே இருந்தது....

(தொடரும்)



# ரகசியம்

## 26

Melancholy is caused less by failure to achieve great ambitions or desires than by inability to perform small necessary acts.
—HAROLD NICHOLSON.

ராஜேஷ் வீடு திரும்பியபோது இருட்டி விட்டது. அவன் மனம் ஆஷாவுடன் பேசியவற்றையே திரும்பத் திரும்ப நினைத்துக் கொண்டிருந்தது. அன்று அவளுடன் ஓட்டலில் பேசியது, அப்புறம் சாந்தியைச் சந்தித்தது, அதன் பின் யாருக்கும் தெரியாமல் ஆஷாவுடன் பெங்களூர் போய்விட்டு உடனே திரும்பியது—எல்லாம் ஒரு கனவு போல இருந்தது.

அவன் இன்பக் கனவுகள் கண்டதுண்டு. அப்புறம் அவற்றை மறுபடியும் எண்ணிப் பார்த்து மகிழ்ந்திருப்பான். இவை அப்படியல்ல. கெட்ட கனவு போலத் தோன்றிய அந்த நிகழ்ச்சிகளை மறுபடி நினைக்கக்கூட அவனுக்கு வெறுப்பாக இருந்தது.

ஆஷா அவனிடம் எவ்வளவோ தயக்கத்துடன்தான் அவற்றைச் சொன்னாள். அவளால் சொல்லாமலும் இருக்க முடியவில்லை. தான் சொல்வதைக் கேட்டு அவன் மனம் கலங்குவதைப் பார்த்து, ஆஷாவின் கண்களில் நீர் ததும்பிற்று. அவனுக்கு ஆறுதல் சொல்வதைப் போலத் தழுவிக் கொண்டாள்.

''நீங்கள் தைரியமாக இருக்க வேண்டும் ராஜேஷ்.''

ராஜேஷ் அவள் பிடியில் குழந்தையைப் போல இருந்தான். அவன் முகம், கழுத்து, மார்பு எங்கும் அவளுடைய இதழ்கள் படிந்து ஒற்றி எடுத்தன. அவள் கண்கள் பாதி மூடியிருந்தன. ராஜேஷ் புலம்பினான்:

''நீ எனக்கு வேண்டும் ஆஷா. வெறும் இன்பத்துக்காக அல்ல. உன்னுடைய துணையும் அரவணைப்பும் எனக்கு ரொம்ப அவசியம்'' என்று ஒரு குழந்தையைப் போலத் தடுமாறிப் பேசினான் ராஜேஷ். அவனை அப்படியே அள்ளி அணைத்துக் கொண்டாள் ஆஷா. அவள் உடல் நடுங்கிற்று.

''வேண்டாம் ராஜேஷ். சாந்தி உனக்குத் துரோகம் செய்திருக்கலாம். ஆனால் நீ அவளுக்குத் துரோகம் செய்யக் கூடாது. என்னை உன்னிடம் கொடுத்துவிடுவதில் நான் இழப்பது ஒன்றும் இல்லை. ஆனால் நாம் பழகிய நாள் முதலாக நம்மிடம் இருந்து வருகிறதே ஒரு நட்பு, இச்சைகளைக் கடந்த ஒரு சிநேகம், அது

மணியன்

அப்படியே இருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன் ராஜேஷ்.''

அவன் முகம் அவள் மார்பில் பதிந்திருந்தது. ஒரு தாயின் அனுதாபக் குரலுடன் ஆஷா பேசுவது போலவே அவனுக்குத் தோன்றியது. அவளுடைய கண்களில் வைரமணிகளைப் போல நீர் தேங்கிக் கன்னங்களில் உருண்டன. அவை அவன் முகத்திலும் விழுந்தன. அதில் அன்பு, பச்சாத்தாபம், பரிவு எல்லாம் கலந்திருப்பதை அவன் கண்டான். வாழ்நாள் முழுவதும் எத்தனையோ ஆண்களின் அற்ப ஆசைகளுக்குத் தன்னை விட்டுக் கொடுத்துவிட்ட அவள், அந்த சமயத்தில் அவன் கண்களுக்குத் தூய்மையான அன்பைப் பொழியும் விதமாகவே தோன்றினாள். அவன் ஆஷாவை மணந்திருக்கலாம். அவளுடைய வாழ்க்கையைக் காப்பாற்றி இருப்பான். தன்னுடைய வாழ்க்கையையும் காப்பாற்றிக் கொண்டிருப்பான். ஆனால் அப்படி நேரவில்லையே?

ஆஷா இரவெல்லாம் அவனுக்குச் சமாதானம் சொல்லிக் கொண்டிருந்தாள். அவன் எண்ணங்களைத் திருப்பும் வகையில் பழைய கதைகளை யெல்லாம் கூறிக் கொண்டிருந்தாள். சாந்தியிடம் திரும்பிப் போய்விடும்படியும், நடந்தது எல்லாவற்றையும் மறந்து விடும்படியும் வற்புறுத்தினாள். ஆனால் அவன் மனம் அவ்வளவு எளிதில் அமைதி அடைந்து விடவில்லை.

ஆஷாவை அழைத்துக் கொண்டு பெங்களூருக்கு விமானத்தில் போய்விட்டு திரும்பினான். அவள் எவ்வளவோ தடுத்தும் அவன் ஒப்பவில்லை. அவள் சொன்னவற்றை, அந்த ஓட்டலில், சாட்சிகளுடன் காணும்வரை அவன் அடங்கவில்லை. அதற்குப் பிறகு அவன் மனத்தில் ஒரு விரக்தி ஏற்பட்டு விட்டது. அமுதம் என்றே எண்ணி வந்த அவன் சாந்தி அப்படிப்பட்டவள் அல்ல என்று தெரிந்து கொண்டதும், அவன் ஆசைகள் யாவும் புளித்துப் போய்விட்டன.

ஆஷா அவனுக்கு எத்தனையோ தைரியம் சொல்லி அனுப்பினாள். சாந்தியின் அப்போதைய உடல் நிலையில் அவளுக்கு எந்த அதிர்ச்சியும் இருக்கக் கூடாது என்று டாக்டர் கூறியதை ஞாபகப் படுத்தி, அவனைத் தயார் செய்து வீட்டுக்கு அனுப்பி வைத்தாள். ஆனால் ராஜேஷ் அந்த எண்ணத்துடன் வீட்டுக்கு வரவில்லை. சாந்தியைப் பார்த்து அன்று இரவு எல்லாவற்றுக்கும் விளக்கம் கேட்டு விடுவது என்ற எண்ணத்துடன் வந்தான்.

அவர்கள் அந்த வீட்டில் கழித்த முதல் இரவு நேரத்தில் டயரிகளை எல்லாம் அவள் முன் கொட்டி, அவனுடைய அந்தரங்கத்தை யெல்லாம் பங்கு போட்டுக் கொண்டு பேசியதும், அதைப் போலவே சாந்தியும் எதையும் மறைக்காமல், ஒளிவும் கூச்சமும் இல்லாமல் அவனுக்குச் சொல்லிவிட வேண்டும் என்று வற்புறுத்தியதும் அவன் நினைவுக்கு வந்தன. அன்று நடக்கவில்லை. இன்று இரவு நடக்கத்தான் போகிறது. அதற்கு மறுத்தால் சாந்திக்கு அந்த வீட்டில் இடம் இல்லை. அவன் தீர்மானமாகச் சொல்லி விடத்தான் போகிறான்.. 'போர்ட்டிகோ'வில் கார் நின்றதும் வீட்டு வாசல் பூட்டி யிருப்பது அவன் பார்வையில் விழுந்தது. தோட்டக்காரன் ஓடி வந்து சொன்னான்: ''சாவி அம்மாவுடைய அப்பா வீட்டில் இருக்கிறது. அம்மாவும் அங்கேதான் இருப்பாங்க என்று நினைக்கிறேன்.''

அவனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. அன்று அவன் போன் செய்தபோது அவள் வீட்டில் இல்லை. இப்போது எங்கேயோ போயிருக்கிறாள். தோட்டக்காரனுக்குச் சொல்லத் தெரியவில்லை.

''எங்கே போகிறேன் என்று உன்னிடம் சொல்லிவிட்டுப் போகவில்லையா?'' என்று வெடிக்கும் குரலில் கேட்டான்.

''இல்லை சார். சாவியை மட்டும் என்னிடம் கொடுத்து அப்பா வீட்டில் கொடுக்கச் சொன்னாங்க. அவங்க ஒரு டாக்சியில் ஏறி சாமான்களுடன் எங்கேயோ போனாங்க. என்னால் கேட்க முடியவில்லை'' என்று தோட்டக்காரன் பயந்து கொண்டே சொன்னான். சாமான்களுடன் டாக்சியில் போனாளா? அவனுக்குத் திக்கென்று இருந்தது. அன்று அவன் சாந்தியைப் பார்த்து மூன்றாவது நாள். அதற்கு முன்பும் அவளிடம் சரியாகப் பேசவில்லை. சாந்தியின் மனத்தில் ஏதாவது குழப்பம் தோன்றியிருக்குமோ?

**கா**ரை நேரே சாரதியின் வீட்டுக்கு விடச் சொன்னான். அங்கே அவர் வாசலில் உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தார். அவனைக் கண்டதும் கொஞ்சம் வியப்புடன் ''சாந்தியும் நீங்களும் வெளியூர் போயிருந்தீர்களா? இப்போது அவளை எங்கே விட்டு விட்டு வந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''என்னது? சாந்தி இங்கே வரவே இல்லையா? அவள் எங்கே போனாள் என்று

தெரியாதென்று சொல்கிறீர்கள்?'' என்று அதிர்ந்து போய்க் கேட்டான் ராஜேஷ்.

''என்ன சொல்லுகிறீர்கள் ராஜேஷ்? நீங்கள் இருவரும் எங்கேயோ இரகசிய மாகப் போக விரும்புகிறீர்கள் என்று அல்லவா நான் நினைத்துக் கொண் டிருந்தேன்? நீங்கள் ஆபீசுக்கு வரவில்லை. அவளும் தகவல் எதுவும் சொல்லாமல் வீட்டுக்குச் சாவியைக் கொடுத்து அனுப்பி விட்டாள். சரிதான், நீங்கள் இருவரும் எனக்கு ஒரு 'ஸர்ப்ரைஸ்' கொடுப்பதற்காக விளையாடுகிறீர்கள் என்று நான் கண்டு கொள்ளாமல் அப்படியே விட்டு விட்டேன். நீங்கள் இப்போது சொல்வதைப் பார்த்தால்..'' என்று மேலே பேச முடியாமல் சாரதி தடுமாறினார்.

இருவருக்கும் கொஞ்ச நேரம் எதுவும் தோன்றவில்லை. அவளைக் காணவில்லை என்பதை வெளிப்படையாக விளம்பரம் செய்வது நல்லதா? போலீஸுக்குத் தகவல் கொடுப்பது ஓரளவு பயன் தரலாம். ஆனால் சாந்தி அதை எப்படி எடுத்துக் கொள்வாளோ? அவள் விபரீதமாக ஏதாவது செய்துவிட்டால் என்ன செய்வது?

ராஜேஷ் தவித்துப் போனான். சாந்தி யிடம் ஏதேதோ கேட்க வேண்டும் என்று வந்த அவனுடைய வீம்பெல்லாம் மறைந்து விட்டது. அவளை அவன் கண் முன்னால் பார்த்தால் போதும் என்ற ஏக்கமே மிஞ்சியது. அவளைக் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டு அவளை அனுப்ப நினைத்தது உண்மை. ஆனால் அப்படிச் செய்ய அவன் மனம் எப் போதும் இடம் தந்திருக்காது. இப் போது சாந்தி அவனை முந்திக் கொண்டு விட்டாளே? அவனிடம் சொல்லிக்



கொள்ளாமலேயே வீட்டை விட்டுக் கிளம்பிப் போய் விட்டாளே?

தன்னுடைய அதிர்ச்சியையும் மறைத்துக் கொண்டு, சாரதி அவனுக்குத் தைரியம் சொன்னார். நடந்தது என்ன என்பது அவருக்குத் தெரியாவிட்டாலும், அவர்களுடைய குடும்ப வாழ்க்கையில் பிளவு ஏதோ தோன்றியிருப்பதை அவரால் உணர முடிந்தது. அந்த நிலையில் அவர்கள் இருவருக்கும் நிதானமாக யோசிக்க முடியவில்லை. அப்படிச் சிந்தித்து அவர்களுக்காக நல்ல யோசனை சொல்லக் கூடியவர் என்று அட்கின்ஸனைத்தான் அவரால் எண்ணிப் பார்க்க முடிந்தது. சமாதானம் சொல்லி ராஜேஷையும் அழைத்துக் கொண்டு அவர் அட்கின்ஸனின் வீட்டுக்குப் போனார்.

இரவு அத்தனை நேரத்திற்கு மேல் அவர்கள் இருவரும் தன்னைச் சந்திக்க வந்தது அட்கின்ஸனுக்கு வியப்பாக இருந்தது. ராஜேஷ் சொன்னதைக் கேட்டதும் அந்த வியப்பு இன்னும் அதிகமாயிற்று.

''டோண்ட் ஒர்ரி. நான் சாந்தியைக் கவனித்திருக்கிறேன். அவள் எளிதில் உணர்ச்சி வசப்படும் பெண். ஆனால் துணிச்சலான பெண் இல்லை. அதனால் எதுவும் செய்து விட மாட்டாள். தவிர அவள் உன்மீது வைத்திருக்கும் அன்பு எங்களுக்குத் தெரியும். நானும் மார்த்தாவும் அடிக்கடி பேசுவோம். அதனால் அவள் எங்கே போனாலும் அந்த அன்பு அவளை மறுபடி உன்னிடம் கொண்டு வந்து விட்டுவிடும். ஐ நோ, அவள் ஒரு ஸென்ட்டிமெண்டல் 'டைப்' '' என்றார் அட்கின்ஸன்.

''இருக்கலாம். ஆனால் சாந்தி இந்த அளவுக்குப் போகிறவள் அல்ல. கோபம் வந்தாலும் அப்பா வீட்டுக்குத்தான் போவாள். எங்கள் கோபம் எப்போதும் சிலமணி நேரங்களுக்குத்தான் இருக்கும். அப்புறம் அவளாகவே வந்து என்னிடம் ஒட்டிக் கொண்டு பழகி அதற்குச் சமாதானம் அளித்து விடுவாள். இப்போது இப்போது.. மை காட்.. அவளே இல்லையே?'' என்று இடதுஉள்ளங்கையில் வலது கை முஷ்டியால் குத்திக் கொண்டான் ராஜேஷ்.

''தைரியமாக இருங்கள் ராஜேஷ். உங்களுக்கிடையே பெரிய மனத்தாங்கல் எதுவும் இருக்க முடியாது. நான்கு நாட்களுக்கு முன்பு என்னிடம் அவள்

---




'திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன' என்பது பழமொழி! ஆனால் ஓர் அசல் திருமணமே மைசூரில் டெலிபோன் மூலம் நடந்தது.

மணப் பெண்ணின் சகோதரியின் கணவரும், இந்தத் திருமணத்தை முன் நின்று நடத்தியவருமான திரு.முகம்மது கலீலுர் ரஹ்மானை விசாரித்தபோது, அவர் கூறினார்:

''என் மைத்துனி, குமாரி சுரையா பேகம் ஒரு எம்.பி.பி.எஸ்., டாக்டர். அவருக்கும், திரு. ஹபீப்புதீன் யூசுப்பிற்கும் திருமணம் நிச்சயமாயிற்று. திரு. யூசுப், கனடாவில் உள்ள டொராண்டோவில் பணி புரிகிறார். ஹைதராபாத்தைச் சேர்ந்த அவர், குடும்பத்துடன் கனடாவில் நிரந்தரமாகக் குடியேறி ஐந்தாண்டுகள் ஆகிவிட்டன.

குமாரி சுரையாவும், மாப்பிள்ளையின் சகோதரியும் பெல்லாரி மருத்துவக் கல்லூரியில் ஒன்றாகப் படித்தவர்கள். அந்த முறையில் குமாரி சுரையாவைத் தன் அண்ணன் மணந்து கொள்ள ஏற்பாடு செய்துவிட்டார் சகோதரி. ஆனால், மாப்பிள்ளையும் மணப் பெண்ணும் இதுவரை நேரில் சந்தித்ததில்லை. ஒருவரை யொருவர் புகைப்படம் மூலமே அறிவார்கள்.

பேசிக் கொண்டிருந்தபோது அப்படிப் பட்ட உணர்ச்சிகள் எதையும் வெளிக் காட்டவில்லை. இப்போது அவள் இருக் கும் நிலையில், எல்லாப் பெண்களையும் போல் அவள் உங்கள் அன்பையும் ஆதரவையும் அதிகமாக எதிர்பார்த் திருக்கலாம். அந்த அளவில் அவளுக்கு ஒரு ஏமாற்றம் ஏற்பட்டிருக்கலாம்'' என்றாள் மர்த்தா. அந்தப் பேச்சு ராஜேஷின் நெஞ்சத்தைத் தொடுவது போல இருந்தது. மர்த்தா, சாந்தியிடம் அதிகம் பழகவில்லை. ஆனாலும் பெண் ணுக்குப் பெண்ணாக அவளுடைய மனத்தை நன்கு புரிந்து கொண்டிருக் கிறாள். அவன், சாந்தியை எவ்வளவோ அலட்சியமாக நடத்தி யிருக்கிறான். ஆனால் அவள் அவனைக் காட்டிக் கொடுக்க வில்லை. எத்தனை உயர்ந்த பண்பு அது?

கூடவே அந்த ஞாபகம் வந்தது. அவள் செய்திருக்கும் அத்தகைய துரோகம்? அதை அவனுக்குச் சொல்லா மலே மறைத்துவிட்ட செயல்? சாந்தி எதிரே இருந்திருந்தால் கட்டாயமாகக் கேட்டிருப்பான். ஆனால் அவள் இல்லையே? அடிக்கலாம். கூடவே அணைக்கலாம். இரண்டுக்கும் அவனுக்கு இப்போது உரிமை இருந்தது. ஆனால் அவள்தான் இல்லை.

''போலீஸுக்குத் தகவல் கொடுப்பது அவசியம் என்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டார் சாரதி.

''நோ, நோ. அப்படி எல்லாம் செய்யாதீர்கள். சாந்தி எங்கேயோ தனக்குத் தெரிந்தவர்கள் வீட்டுக்குத் தான் போயிருக்கிறாள். பம்பாயிலேயே இருந்தாலும் ஆச்சரியம் இல்லை. அதனால் உங்களுடைய உறவினர்கள், நண்பர்கள் மூலம் மறைமுகமாக விசாரியுங்கள். நானும் என்னுடைய நண்பர்கள் மூலம் விசாரிக்கிறேன்'' என்று அட்கின்ஸன் கூறினார். மற்றவர்களுக்கும் அந்த நிலையில் அதுவே சரியாகப்பட்டது.

ராஜேஷ் வீட்டுக்குத் திரும்பி விட்டான். விடியும்வரை அவனால் தூங்க முடியவில்லை. அவளுடைய படுக்கையில் அவள் படுத்திருந்த இடம் கூட அப்படியே இருந்தது. தலையணையில் அவள் தலை அழுந்திய நசுங்கல் கூட மாற வில்லை. அவனுடைய கவலைகள், துயரங் கள் எல்லாவற்றையும் அவன் அந்த அணைப்பில் மறந்து விடுவான். இப் போது அவள் இல்லையே?

கண்களை மூடிக் கொண்டான். ஒரு புன்னகையுடன் சாந்தி அவனுக்குப்

# டெலிபோனில் திருமணம்!

சென்ற ஆண்டு டிசம்பர் மாதம் 30-ம் தேதி திருமணம். ஆனால் மாப்பிள்ளை வீட்டாரிடமிருந்து ஓர் அவசரத் தந்தி வந்தது: 'இந்தியாவில் விமானப் போக்கு வரத்து சீர்குலைந்திருப் பதால் தங்களால் திருமணத்திற்குக் குறித்த நேரத்தில் வந்து சேர முடியாது' என்பதே அந்தத் தந்தி.

திட்டப்படி திருமணத்தை முடித்து விட வழி தேடினோம். மவ்லவியை அவசர மாகக் கலந்து ஆலோசித்தோம். 'ட்ரங்க் கால்' ஒப்புதல் மூலம் திருமணத்தை முடிக்கலாம் என்பதே அந்த யோசனை. மாப்பிள்ளை மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார்.

கனடாவில் வசிக்கும் திரு. யூசுப் பின் நண்பர்களும் உறவினர்களும் டெலிபோனின் ஒரு முனையில் கூடினர்.

இங்கே மைசூரில் பெண் வீட்டு உறவினர்கள், நண்பர்கள் சுமார் இருநூறு பேர்கள் மற்றொரு முனையில் டெலிபோன் அருகில் காத்திருந்தோம்.

முதல் நாளே 'டைம் கால்' 'புக்' செய்தோம். எதிர்பார்த்தபடியே சரியாகக் காலை ஏழு மணிக்கு டொராண்டோவிற்கும் மைசூருக்கும் டெலிபோன் தொடர்பு கிடைத்தது.

மவ்லவி உடனே டெலிபோனில் திருமணச் சடங்கு வாசகங்களை ஓத, மாப்பிள்ளை அதைக் கவனத்துடன் டொராண்டோவிலிருந்தபடியே கேட்டு, சம்மதம் தெரிவித்தார். இந்த டெலி போன் சம்பாஷணைகளை விருந்தினர் கேட்க வசதியாக 'இண்டர்காம் டெலிபோ'னில் ஒரு 'டெலிஸ்பீக்கர்' பொருத்தப்பட்டது.

சடங்குகள் பதினைந்தே நிமிடங் களில் முடிந்தன. அவ்வளவுதான் குமாரி சுரையா பேகம், திருமதி ஹபீப்புதீன் யூசுப் ஆனார்.''

—மன்னை சௌரிராஜன்.

பின்னால் வந்து அவன் பெயரைச்சொல்லி அவன் தோளைத் தொட்ட மாதிரி இருந்தது. ''சாந்தி'' என்று அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருந்தான். கண்ணைத் தேய்த்துக் கொண்டான். கண்கள் நனைந்திருந்தன. காலடியில் ஏதோ தடுக்கிற்று. குனிந்து பார்த்தான்.

அவனுடைய சிறு கைப் பெட்டி. அவனுடைய டயரிகள் வைத்திருந்த சிறு கைப் பெட்டி. அங்கே எப்படி வந்தது?

விளக்கைப் போட்டான். பெட்டியை எடுத்துப் படுக்கையின் மேல் வைத்தான். அதைத் தொடவே அவனுடைய விரல்கள் கூசின. சாந்தி சொன்னது சரிதான். ரகசியம் என்பது அவர்களுடைய அந்தரங்க உறவைப் போல அவர்களுக்குள்ளேதான் இருக்க வேண்டும். அதைப் பகிரங்கமாக அறிந்து கொள்ள நினைக்கக் கூடாதுதான். அப்படி முயன்றால் இப்படி ஒரு தவிப்பும் குழப்பமும்தான் மிஞ்சும்.

பெட்டியைத் திறந்ததும், ஒரு டயரி மட்டும் விரித்தப்படி கவிழ்த்து மேலாக வைக்கப்பட்டிருந்தது. அந்தப் பக்கம் மாறாமல் அப்படியே எடுத்தான். அங்கே இருந்த குறிப்பைப் படிக்கத் தொடங்கினான். அவன் நெஞ்சு நெகிழ்ந்தது. ரீனாவைப் பற்றி அவன் எழுதியிருந்தவை—அவளுடைய உடல் அழகு—அவர்களுக்குள்ளே அனுபவித்த அந்தரங்க சுகம்—சே. .ஒரு மனைவி தன் கணவனைப்பற்றிப் படித்துத் தெரிந்து கொள்ளக் கூடிய ஒன்றா அது?

அவனுக்குப் புரிந்தது. ரீனாவின் 'ப்ரூச்', இந்தக் குறிப்பு, அவனை அவள் மார்த்தாவின் வீட்டிலிருந்து வரும்போது கேட்ட சந்தேகமான கேள்விகள் எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தான். அன்று இரவு ரீனாவை அவன் உதறிவிட்டு வந்தபோது, ஏமாற்றத்தில் ரீனா குமுறிக் கொட்டிய வார்த்தைகளும் நினைவுக்கு வந்தன. அவள் சாந்தியை வந்து சந்தித்திருப்பாளோ? அல்லது 'போனில்' பேசி யிருக்கலாமோ? அதைப் பற்றி சரி பார்க்கத்தான் சாந்தி அந்த டயரியை எடுத்துப் புரட்டி இருக்கலாமோ? அப்படித்தான் இருக்க வேண்டும்.

டயரியைப் பெட்டியில் போட்டு மூடி விட்டான். விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டான். அவன் மனத்தில் ஆஷா கூறியவையும், பெங்களூருக்கு இருவருமாகச் சென்று கண்டறிந்தவையும் ஒவ்வொரு நிகழ்ச்சியாகப் படலம் போலத் தோன்றி மறைந்தது. ஆஷா அவற்றைத் தனக்குக் கூறியவள் ஒரு 'கால் கேர்ல்' என்று மட்டும் சொன்னாள். பெயரைச் சொல்லவில்லை. அந்தப் பெண் ரீனாவாக இருக்குமோ? சாந்தியின் மனத்தில் குழப்பத்தை ஏற்படுத்தியவளேதான் அவனுக்கும் மனக் கலக்கத்தைத் தோற்றுவித்திருக்கிறாளோ?

அப்படியானால் எல்லாமே அவள் திட்டமிட்டுச் செய்த ஒரு செயலா? அந்த வலையிலா அவனும் விழுந்துவிட்டான்? இருக்கலாம். ஆனால் அவன் கண் கூடாகப் பார்த்த சாட்சியம்? அதைக் கண்டதும் பொன் என்று அவன் நினைத்திருந்த சாந்தி, கலப்பு உலோகமான பித்தளை என்று விழுந்துவிட்ட அபிப்பிராயம்?

நினைக்க நினைக்க அவனால் தாங்க முடியவில்லை. விஸ்கி பாட்டிலை எடுத்து வைத்துக் கொண்டான். மெல்ல மெல்ல நினைவு தவறும் வரை சிறிது சிறிதாக அருந்திக் கொண்டே யிருந்தான். அந்த நிலை தவறி அவன் எப்போது படுக்கையில் விழுந்தானோ தெரியாது. கண் விழித்து எழுந்தபோது வெயில் முற்றி இருந்தது. மணி பத்தரைக்குக் குறைவில்லை.

அவன் அலுவலகத்திற்குப் போயிருக்க வேண்டிய நேரம். அங்கே போனால் அட்கின்ஸன் அவனுக்கு ஏதாவது யோசனை கூறுவார். தன்னுடைய கவலையை ஓரளவு மறக்கலாம். ஒரு தீர்மானத்துடன் எழுந்து அவனுடைய 'வார்ட்ரோ'பைத் திறந்தான். தேள் கொட்டியது போல அவன் விரல்கள் பின்னுக்குச் சுருண்டு இழுத்துக் கொண்டன.

அங்கே அவனுடைய 'கோட்'டின் மீது குண்டுசியினால் குத்தி வைக்கப்பட்டு, சாந்தியின் கடிதம் தொங்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



''மடையா...முட்டாள்... அறிவு இருக்கா?..வந்த வேகத்திலே என்மேலே இடிச்சா என்ன ஆகியிருக்கும்?''

''இடிச்சிருந்தா, இவ்வளவு கேள்வியும் கேட்டிருக்க மாட்டீங்க!''




# 27

Most of the shadows of this life are caused by our standing in our own sunshine.

—R. W. EMERSON.

ராஜேஷ் படிக்கத் தொடங்கினான்.

'டியர் ராஜேஷ்,

இந்தக் கடிதம் உங்களுக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் இதை நான் எழுதுகிறேன். இதை நீங்கள் படிக்க நேரும்போது நான் உங்களிடமிருந்து வெகுதூரம் விலகிச் சென்றிருப்பேன். ஆனால் என் இதயம் உங்கள் பக்கத்திலேயேதான் இருக்கும்.

நாம் இருவரும் கடற்கரையில் சந்தித்ததும், நீங்கள் என் ஞாபகார்த்த மோதிரத்தைக் கழற்றிக் கடலில் எறிந்ததும், பல ஆண்டுகளுக்கு முன் நடந்ததுபோலத் தோன்றுகிறது. ஆனால் அது நடந்து ஒரு ஆண்டு இன்னும் முடியவில்லை. அதற்குள் நம்முடைய வாழ்க்கையில் எத்தனையோ அலைகள் எழுந்து மறைந்து விட்டன.

கணவன் மனைவியருக்கிடையே அவர்களுடைய வாழ்க்கையின் ரகசியங்கள் மிகவும் பத்திரமாக, விலை உயர்ந்த நகைகளைப் போலப் பாதுகாக்கப்பட வேண்டும். அது பகிரங்கமானால் அப்புறம் அவர்கள் வாழ்க்கையில் அமைதிக்கு இடமில்லை. இதை நான் நம்முடைய வீட்டில் முதல் இரவு சந்திப்பில் சொன்னபோது நீங்கள் மதிக்கவில்லை. சிறுகச் சிறுக நானும் அதை மீறிக் கொண்டு வந்தேன். அதன் பலனே இந்தத் தவிர்க்க முடியாத பிரிவு. வாழ்க்கையின் சில அடிப்படை உண்மைகளை மதிக்காமல் நாம் வாழ முடியாது. வாழ முயன்றால் நம்முடைய மதிப்பையே பறி கொடுத்தவர்கள் ஆவோம்.

நமக்கு ஒரு குழந்தை பிறக்கப் போகிறது. உங்கள் விருப்பப்படி அது ஒரு ஆண் குழந்தையாகவே இருக்க வேண்டுமென்று நானும் விரும்புகிறேன். இந்த வேளையில் உங்களுடைய அன்பும் ஆதரவும் எனக்கு அளவில்லாமல் கிடைக்கும் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால் நம்முடைய

வாழ்க்கையில் இதுவரை அனுபவித் திராத மிகப் பெரிய அதிர்ச்சியையே நான் அனுபவித்தேன்.

ஒரு பெண் தன்னுடைய விலை மதிப்பரிய பொருட்கள் எதுவானாலும் கணவன் கேட்டால் கொடுத்து விடுவாள். ஆனால் கணவனுடைய உள்ளத்தையும் உறவையும் பகிர்ந்து கொள்ளும் உரிமையை மட்டும், கணவனே விரும்பிக் கேட்டாலும் கூட, யாருக்கும் கொடுக்கச் சம்மதிக்க மாட்டாள். அத்தகைய ஒரு வேதனை என் வாழ்க்கையில் நேரலாம். அதைச் சந்திக்கும் மனோதிடம் எனக்கில்லை.

உங்களுடைய அழகு, புத்திசாலித் தனம், அந்தஸ்து இவை உங்களிடம் எத்தனையோ அழகான பெண்களை நாடி வரச் செய்திருக்கலாம். என்னு டைய அன்பு உங்களை அந்தக் கவர்ச்சியிலிருந்து எவ்வளவு தூரம் தடுத்து நிறுத்தியிருக்கிறது என்பதை என்னால் உணர முடியவில்லை. என் மேலேயே எனக்கு நம்பிக்கை போய் விட்டது.

ஒன்று மட்டும் நீங்கள் நம்பலாம். இந்த சாந்தி உங்களுக்குத்தான் சொந்தம். அவளுடைய ராஜேஷ் அவளுக்கு மட்டுமே சொந்தமாக இருப்பதைத்தான் அவள் விரும்பு கிறாள். கடந்ததை மறுபடி திரும்பிப் பார்க்கக் கூடாது என்று அவள் தன் ராஜேஷிடம் எவ்வளவோ முறை சொல்லியிருக்கிறாள். இப்போதும் அவள் சொல்வது அதுதான். அவர் களுடைய எதிர்கால வாழ்க்கை அவர்களுக்கு மட்டுமே உரிய சொத்தாக இருக்கட்டும்.

அந்த உறுதியை உங்களிடமிருந்து பெற முடியும் நேரத்தில் அவள் உங்களிடம் திரும்பி வருவாள். என்றும் உங்களுடன் இருப்பாள். கவலை வேண்டாம்.

உங்களைப் பிரிந்தும் மறக்க முடியாத
சாந்தி.'

கடிதத்தைப் படிக்கும்போது அவன் கண்களில் நீர் ததும்பிற்று. அது மறைக் கும்போது நடுவில் படிக்க முடியாமல் நிறுத்தவும் வேண்டியிருந்தது. அவள் கடிதம் அவளே நேரில் பேசுவது போல இருந்தது. அவன் பல முறை விரும்பிக் கேட்ட நயமான ரகசியக் குரல் அவன் காதோடு கேட்பது போலத் தோன்றியது.

சாந்தி அவனை இன்னும் கைவிட வில்லை. என்றோ ஒரு நாள் அவன் குழந்தை யுடன் அவனிடம் திரும்பி வருவாள். அதற்கு முன் அவனிடம் ஒரு மனமாற் றத்தையே அவள் எதிர்பார்க்கிறாள். அது அவனால் முடியும். ஆனால் அதை அவளுக் குத் தெரியப்படுத்துவது எப்படி?

'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற தூய கொள்கையை அவள் மனம் விரும்பு கிறது. ஆனால் அவள் இன்று விரும்பும் இந்தத் தத்துவத்தை அவளே நழுவாமல் பின்பற்றி இருந்தாளோ? அப்படி இருந் திருந்தால் அவன் கண்டவையும், கேட்டவையும், பார்த்தறிந்த உண்மை களும் எவ்வளவு தூரம் சரியானவை?

அவனால் முடிவு செய்ய முடியவில்லை. அந்தப் படுக்கை அறையை அவள் அலங்கரித்த விதத்தை அப்போதுதான் கவனித்தான். அந்த வீட்டில் அவர்கள் தம்பதியாக முதன் முறை சந்தித்ததை நினைவூட்டும் விதமாக அது இருந்தது. சாந்தி மட்டும் அங்கே இருந்திருந்தால்? அந்த அழகு முழுமையாகி இருக்கும். அங்கே அமைதி நிறைந்திருக்கும். அவள் இல்லையே!

சிறு குழந்தையைப் போல இரு கைக ளாலும் முகத்தை மூடிக் கொண்டு அழு தான். வெகு நேரம் அப்படியே இருந்த பின் ஒரு மனச் சோர்வுடன் முகத்தைக் கழுவி, உடையணிந்து கொண்டு அலுவல கத்துக்குப் புறப்பட்டான்.

கோட்டை அணிந்து கொண்டு தனது அலுவலகத்துக்கு மித்ராவும் புறப்பட்டுக் கொண்டிருந்தான். இப்போ தெல்லாம் அங்கே போவது அவனுக்கு வெறும் இயந்திர கதியாகத் தோன்ற வில்லை. அவனுடைய வேலையில் ஒரு நயத்தைக் கொடுக்க சாந்தி அவனுக்குத் துணையாக இருந்தாள். அவனுடைய 'பர்ஸனல் செகரெட்டரி' என்ற முறையில் அவளுடைய காரியங்கள், அவன் அலுவல்களின் பளுவையும் அலுப்பையும் எவ்வளவோ மாற்றி யிருந்தன. வேலை குறைந்த நேரங்களில் அவள் அவனுடன் பேசிக் கொண்டிருந்த சமயங்களில், அவளுடைய கனிவான பேச்சும் மென்மையான சுபாவமும் அவனுடைய மனத்துக்குப் புது ஆறுதலைத் தரத் தொடங்கி யிருந்தன.

'எவ்வளவு பண்பும் நயமும் நிறைந்த பெண்? வெளி அழகைப் போல அவள் மனத்திலும் எவ்வளவு அழகு சுடர் விடு கிறது? இதை ஏன் அவளுடைய கணவன் மதித்துப் போற்றவில்லை? தாய்மை

அடைந்துள்ள நிலையிலும் தனியே புறப் பட்டு வரும் அளவிற்கு, அவர்களிடையே அப்படி என்ன பூசல் நேர்ந்தது?'

சாந்தி வந்து இரண்டு மாதங்களுக்கு மேலாகியும் இந்தக் கேள்வியை மட்டும் அவன் அவளிடம் கேட்டதே இல்லை. ''கொஞ்ச நாள் இருக்கலாம் என்று வந் திருக்கிறேன். உங்களுக்கு ஆட்சேபணை இல்லையே?'' என்று எளிதாக ஒரு கேள்வி யைக் கேட்டுக் கொண்டு வந்தவளுக்கு, அப்படியே தன் வீட்டிலும் அலுவலகத் திலும் இடம் கொடுத்து விட்டான்.

சாந்தியின் அழகையும் கவர்ச்சியையும் கண்டு அவன் கல்லூரிநாட்களில் மயங்கிய துண்டு. ஆனால் அந்த சமயத்திலும் அவன் அவளை ஒரு பலவீனமான நேரத்துடன் இணைத்துக் கற்பனைசெய்து கூடப்பார்த்த தில்லை. அவன் அப்படிப் போற்றி வந்த உணர்ச்சி, இன்று இன்னும் புனிதமாகி விட்டது. அவளுடன் பழகும் நேரமும், அவளைப் பற்றிச் சிந்திக்கும் பொழுதும் அவனுக்கு ஓர் அன்பு நிவேதனமாகத் தான் தோன்றுகின்றன....

''இன்று நீங்கள் லேட். உங்களுக்குப் பிற்பகலில் ஒரு முக்கிய மான 'பிஸினஸ் மீட்டிங்' இருக்கிறது. அதையும் கூட நீங்கள் மறந்து விட்டீர்கள்'' என்று குரலில் ஒரு கண்டிப்பான



நயத்துடன் 'ஃபைலை' அவன் மேஜை மீது வைத்தாள் சாந்தி.

''நீ அதற்கு வேண்டியவற்றை எல்லாம் தயாராகச் செய்து வைத்திருப்பாய் என்ற தைரியம்தான் என் சோம்பேறித்தனத்துக்குக் காரணம்'' என்று மித்ரா அவளைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

''சரி, இப்போது வேலையைக் கவனிக்கலாம்'' என்று அவனுக்கு உத்தரவு போடுவதைப் போலச் சொல்லிவிட்டு சாந்தி பேனவுடன் நோட்டுப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். 'அப்பப்பா, என்னை ஒரு நிமிஷம் ரிலாக்ஸ் பண்ணிக் கொள்ளக்கூட விடமாட்டேன் என்கிருயே?' என்று அலுத்துக் கொள்வதுபோல பாவனை செய்துவிட்டு அவள் முன் சிரித்துக் கொண்டே மித்ரா உட்கார்ந்தான்.

அறையில் 'மீட்டிங்'கிற்குத் தேவையானவற்றை அவள் ஒழுங்காகத் தயார் செய்து வைத்திருந்தாள். அவனுக்கு நோட்ஸ் கொடுப்பதில் சிறிதும் சிரமம் இல்லாமலிருந்தது. மறு வாரம் டார்ஜிலிங்கில் நடக்கவிருக்கும் முக்கியமான மகாநாட்டிற்கு அவள் அவனுடன் வரச் சம்மதித்தால்? அவன் வேலை அப்போது எவ்வளவு எளிதாக இருக்கும்? ஆனல் எதையும் அவளிடம் வற்புறுத்திச் சொல்ல அவன் விரும்பவில்லை.

குறிப்புகள் எடுக்கும் வேலை முடிந்ததும் சாந்தி எழுந்திருந்தாள். ''எனக்காக ஒரு நிமிடம் தாமதிக்க முடியுமா?'' என்று மித்ரா பணிவுடன் கேட்டான்.

'என்ன வேண்டும்?' என்பது போலப் பார்த்துவிட்டு அவள் மறுபடி நாற்காலியில் உட்கார்ந்தாள்.

''நீ டார்ஜிலிங்கிற்குப் போயிருக்கிருயா சாந்தி?''

''இல்லையே?'' என்று சொல்வது போல அவள் உதட்டைப் பிதுக்கிச் சிரித்தாள்.

''அப்படியானல் இப்போது ஒரு 'சான்ஸ்'. என்னுடைய பர்ஸனல் செகரெட்டரிக்கு நான் உத்தரவு போடவில்லை. இது என்னுடைய பணிவான வேண்டுகோள். சம்மதம் என்றல் உனக்குத் தக்க சௌகரியங்களுடன் தனியாகத் தங்குவதற்கு ஏற்பாடு செய்து தருகிறேன்.''

''உங்களுடன் மகாநாட்டிற்கு வரவா? நான் தனியாகக் கிளம்பி வருவதா?'' என்று சொல்லிவிட்டு சாந்தி தலையைக் குனிந்து கொண்டாள். மித்ராவின் முகம் வாடி விட்டது.

''உனக்கு விருப்பம் இல்லையென்றல் வேண்டாம். நான் போய் வந்த பிறகு நீ அங்கே சுற்றிப் பார்த்துவிட்டு வர, தகுந்த வசதிகளோடு அனுப்பி வைக்கிறேன்'' என்ற மித்ரா, தனது பார்வையைத் திருப்பிக் கொண்டான். ''ஆனல் சாந்தி, உன்னுடைய முழு நம்பிக்கைக்கு நான் இன்னும் பாத்திரமாகவில்லை என்று நினைக்கும்போது — ஹூம்'' என்று பெருமூச்சு விட்டான்.

சாந்தி தவித்துப் போனள். ''அப்படிச் சொல்லாதீர்கள். உங்களுடைய பெருந்தன்மையை நான் அறியமாட்டேனு? உங்கள் உள்ளத்தைப் புரிந்து கொள்ளாமலா உங்களுடன் இப்போது தங்கியிருக்கிறேன்? ஆனலும் அலுவலக வேலை வேறு; இதைப் போலப் பிரயாணம் செய்வது வேறு. இதைப்பற்றி யாரேனும் ஒரு சிறிது தவருகப் பேச நேர்ந்தாலும் நம்முடைய மனம் எவ்வளவு பாடுபடும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தீர்களா? எச்சிலில் புரளும் நாக்கு எதையும் சீக்கிரத்தில் கொட்டிவிடும். அதற்காகத்தான் யோசிக்கிறேன்'' என்று அவனைத் தேற்றுவது போலப் பேசினள்.

''அதுவும் உண்மைதான். நான் வற்புறுத்த மாட்டேன். ஆனல் உன்னிடம் மறைக்க நான் விரும்பவில்லை. நீ வரவில்லையானல் எனக்கு ஏமாற்றமாகத்தான் இருக்கும். நீ உன் வேலையைக் கவனிக்கப் போகலாம் சாந்தி'' என்று மித்ரா தயங்கிய குரலில் சொன்னன்.

''என் முடிவு ஃபைனல் இல்லை. யோசித்து அப்புறம் சொல்கிறேன்'' என்று சாந்தி எழுந்து போய்விட்டாள்.

**அ**ன்று இரவு வீடு திரும்பியதும் அறையில் அவள் மேஜைமீது அவளுக்கு வந்த தபால் கவர் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. சாந்திக்குத் தபால் என்று எதுவும் கல்கத்தாவுக்கு வந்த நாளாகக் கிடைத்ததே இல்லை. அவளுடைய இருப்பிடத்தை அவள் ஒரே ஒருவருக்கு மட்டும்தான் தெரியப்படுத்தி யிருந்தாள். அந்தக் கடிதமும் அங்கிருந்துதான் வந்திருந்தது.

சாந்தி கடிதத்தைப் பிரித்து,ராதாவின் முத்து முத்தான எழுத்துக்களைப் படிக்கத் தொடங்கினள். அவளுக்கு நிறைய

ஆறுதல் சொல்லி, வெகு இதமாகக் கடிதம் எழுதியிருந்தாள் ராதா. அதைப் படித்தபோது சாந்திக்குத் தன் துயரத்தையும் கவலையையும் தன் தாயிடம் சொல்லிச் சொல்லி மனம் தேறியது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

கடிதத்தில் கண்டிருந்தவற்றில் இரண்டு மட்டும் அவளுக்கு ஒரு தனியான கவனத்தைத் தூண்டின. ஒன்று ராதா, ஹெக்டேயின் உதவியுடன் அவளைப் போலவே பிரபுவின் உதவியாளராகச் சேர்ந்திருக்கிறாள் என்பது. அந்த நிலையில் அவள் டார்ஜிலிங்கிற்கு மகாநாட்டுக்கு வரப் போகிறாள்.....

இரண்டாவது ராஜேஷ், அவள் பம்பாயை விட்டு வருமுன் பெங்களூருக்கு வந்து போன தகவல். இப்போதும் அவளுடைய இருப்பிடத்தை ராஜேஷ் அறிக்கவில்லை. பெங்களூரிலேயே யாராவது தெரிந்தவர்களுடன் அவள் இருக்கக் கூடும் என்பது அவனுடைய ஊகம். அதனால் 'டெக்கான் ஹெரால்'டில் ஒரு விளம்பரம் மூலமாக சாந்திக்கு அழைப்பு விடுத்திருந்தான். ராதா அதையும் கத்தரித்து வைத்து அனுப்பி இருந்தாள்.

மித்ரா அவளைத் தன்னுடன் டார்ஜிலிங்கிற்கு வரும்படி அழைத்திருக்கிறான். அவள் சரியாகப் பதில் சொல்லவில்லை என்று மனம் வருந்திக் கொண்டிருக்கிறான். அவள் வருவதாக ஒப்புக் கொண்டால் எவ்வளவோ சந்தோஷப் படுவான். அவள் ஏன் போகக் கூடாது? ராதாவை அங்கே சந்திக்கலாம். கல்கத்தாவுக்கு வந்திருப்பதும் மித்ராவின் வீட்டில் தங்கி இருப்பதும் ஓர் இடைவேளையைப் போலத்தான். அது அவளுடைய வாழ்க்கையில் நிரந்தரமான நிலையாக அமைய முடியாது. அவளுடைய எதிர்காலம் என்ன? ராதாவைப் போன்ற உயர்ந்த பண்பு கொண்ட, அந்தரங்கமான ஒரு தோழிதான் அவளுக்கு வழி காட்ட முடியும். அப்படி நினைத்துத்தான் அவள் ராதாவுக்கு மட்டும், தனது விலாசத்தைக் கொடுத்துக் கடிதம் எழுதியிருந்தாள். இப்போது ராதாவையே சந்திக்கும் சந்தர்ப்பம் அவளுக்குக் கிடைத்திருக்கிறது. அவள் அதை ஏன் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது?

மித்ராவிடம் மறுநாள் காலையில் சொல்லலாம் என்று தீர்மானித்துக் கொண்டாள். அவளுடைய மனத்தில் ஓர் ஆறுதல் தோன்றிற்று. நிம்மதியுடன் தூங்கிப் போனாள்.

நடு இரவுக்கு மேல் விழிப்பு கொடுத்து எழுந்து உட்கார்ந்து கொண்டாள் சாந்தி. மனத்தில் ராதாவின் கடிதத்தின் இன்னொரு பகுதி அவளுக்குத் தோன்றியது. பிரபுவும் டார்ஜிலிங்கிற்கு வருகிறான். அங்கே அவளைச் சந்திக்கப் பிரபு முயன்றால்? சாந்தியின் உடல் 'குப்'பென்று வியர்த்தது. பழைய ஞாபகங்கள் அவள் மனத் திரையில் எழுந்து மறைந்தன. அவள் மனம் அலை பாயத் தொடங்கிற்று.

அவள் வாழ்க்கையில் மறக்க முடியாத அந்த சில சம்பவங்கள்-ராஜேஷ் அவளுக்குத் தெரியாமல் பெங்களூருக்குப் போன போது அவன் அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ள முயன்றிருப்பானா? என்ன நடந்தது? அவளுக்கு ராதா மட்டுமே உதவ முடியும். அதற்கு அவளைச் சந்தித்தே ஆகவேண்டும். அவள் டார்ஜிலிங்கிற்குப் போவதைத் தவிர்ப்பதில் பயனில்லை...

இரண்டு விதமாகவும் மனத்தில் யோசனைகள் தோன்றி அவளைக் குழப்பத் தொடங்கின. அந்த நிலையில் அவளால் தூங்கவே முடியவில்லை. படுக்கையில் அமைதியின்றிப் புரண்டு கொண்டே இருந்தாள்.

**கா**லை நேரம். வழக்கத்துக்கு மாறாக அன்று மித்ரா விரைவிலேயே எழுந்து வந்து விட்டான். காபி அருந்த அவள் போன போது அவனும் எதிரே வந்து உட்கார்ந்து கொண்டான். அவன் என்ன கேட்கப் போகிறான் என்பதைச் சாந்தியால் ஊகிக்க முடிந்தது. அவளே அதைச் சொல்வதற்கு முந்திக் கொண்டாள்.

''நான் முடிவு செய்துவிட்டேன் மித்ரா.''

அவன் ஒரு தனிக் கவலையோடு அவளை நிமிர்ந்து பார்த்தான். அவள் பதிலுக்காக ஓர் ஆவலுடன் காத்துக் கொண்டிருந்தான்.

''நானும் டார்ஜிலிங்கிற்கு வரலாம் என்று நினைக்கிறேன்.''

மித்ரா மிகவும் மகிழ்ச்சியுடன் அந்தப் பதிலை ஏற்றுக் கொண்டான். அவனுடைய முகத்திலேயே அது நன்றாகத் தெரிந்தது. அதைக் கண்டு சாந்தியின் மனத்தில் ஒரு பச்சாத்தாபமே ஏற்பட்டது. அவள் அங்கே இருப்பதிலும், அவனுடைய தூய்மையான அன்பை சாந்தி மதிப்பதிலும் அவன் ஒரு தனியான மனமகிழ்ச்சியை அடைகிறான்.

எவ்வளவு உயர்ந்த பண்பு அது? மித்ராவைப் போன்ற ஆண்களும் உலகத்தில் இருக்கிறார்கள். பிரபுவைப் போன்றவர்களும் இருக்கிறார்கள்....

அவள் மேலே பேசாமல் ஏதோ யோசித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து மித்ரா, ''ஏன் அப்படியே தயங்கி நின்றுவிட்டாய் சாந்தி? உன்னுடைய சௌகரியங்களுக்கோ, 'ப்ரைவஸி'க்கோ அங்கே ஒரு இடைஞ்சலும் இருக்காது. அதற்கு நான் பொறுப்பு. அந்த அழகான ஊரும் இயற்கை அழகும் உன் மனத்துக்கு ஒரு சாந்தியைக் கொடுக்குமோ என்றுதான் நான் உன்னைக் கூப்பிடுகிறேன்'' என்றான்.

''நானும் அதைத்தான் எதிர்பார்க்கிறேன் மித்ரா'' என்று சாந்தி ஒரு புன்னகையுடன் பதில் சொன்னாள். இருவருக்குமே அதில் ஓர் ஆறுதல் உண்டாயிற்று. ஆனால் அந்தப் பயணத்தில் சாந்தியின் வாழ்க்கையில் இன்னொரு முக்கியமான திருப்பம் நேரப் போகிறது என்பதை அவர்கள் இருவருமே அப்போது உணரவில்லையே?

(தொடரும்)

---

# "என்னைக் கவர்ந்தவர்!"



கல்யாணராமன்

"அக்கவுண்டண்ட் ஜெனரல் அலுவலகத்தில் நான் பணி புரிந்தபோது, எனக்கு மேலதிகாரியாக இருந்த திரு. கல்யாணராமன், வேலையைப் பொறுத்த வரை அவர் ஒரு 'பர்ஃபக்ஷனலிஸ்டு!' அதே சமயத்தில் நான் நாடகங்களை நடத்துவதற்கும், என்னுடைய எழுத்தினை வளர்ப்பதற்கும் ஒரு தூண்டுகோலாக இருந்து என்னை நிறைய ஊக்குவித்தார்.

''திரு. ஏ.வி.எம். செட்டியார் அவர்கள் 'மேஜர் சந்திரகாந்த்' படம் எடுக்கும் முழுப் பொறுப்பையும் என்னிடம் ஒப்படைத்தார். ஒவ்வொரு காட்சி எடுத்து முடித்ததும், ''செட்டியார், 'ரஷ்' போட்டுப் பார்த்தாரா?'' என்று கேட்டுக் கொண்டிருப்பேன். ஆனால், நான் கேட்பதற்கு முன்னடி செட்டியார் 'ரஷ்' போட்டுப் பார்த்து விடுவார். சாதாரணமாக நம் கண்களில் படாத சிறிய தவறுகளெல்லாம், அவர் கண்களில் பட்டுவிடும். திரைப்படத் துறையில், செட்டியார் ஒரு பர்ஃபக்ஷனலிஸ்ட்.''

''என்னுடைய நாடகத்தைப் பார்த்துவிட்டு, 'தெய்வத்தாய்' படத்திற்குக் கதை வசனம் எழுத என்னைச் சிபாரிசு செய்தவர், திரு. ஆர். எம். வீரப்பன். என்னுடைய வசனத்தில் வீரப்பன் சில மாற்றங்களைச் செய்வார். எனக்கோ இளமைத் திமிர். 'இவர் என்ன சொல்வது, நான் என்ன மாற்றுவது' என்று நினைப்பேன். ஆனால் அதற்குப் பிறகு திரு. வீரப்பனுடன் பழகப் பழக அவரிடமிருந்தும் நான் கற்றுக் கொள்ள வேண்டியவை பல இருக்கின்றன என்பதைக் கண்டு கொண்டேன். தயாரிப்புத் துறையில், திரு. வீரப்பன் இன்னொரு பர்ஃபக்ஷனலிஸ்ட்..'' அண்மையில் ஒரு பாராட்டு விழாவில் டைரக்டர் பாலசந்தர் கூறியவை இவை. பாலசந்தரைக் கவர்ந்த மூவரில் திரு. செட்டியாரும், திரு. வீரப்பனும் நமக்கு அறிமுகமானவர்கள். மூன்றுமவரான திரு. கல்யாணராமன் ஓய்வு பெறும் டெபுடி ஆடிட்டர் ஜெனரல்.

''பாலசந்தர் ஏ.ஜி.எஸ். ஆபீஸ் வேலையை ராஜினமா செய்தபோது, நான் டெல்லிக்கு மாற்றலாகிப் போயிருந்தேன். ஒரு நல்ல அரசாங்க வேலையை விட்டுவிட்டு சினிமாத் துறையில் நுழைகிறாரே, நல்லபடியாக முன்னுக்கு வர வேண்டுமே என்று நான் கவலைப்பட்டதுண்டு. ஆனால், நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே இன்று பாலசந்தர் சிறப்பாக பிரகாசிப்பதைக் காணும்போது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்கிறார், திரு. கல்யாணராமன்.




**28**

Our fear of disasters that may never happen robs us of the courage to meet the ills that do occur. — *PAUL MORAND.*

கல்கத்தாவின் வெப்பத்திற்கும் புழுக்கத்துக்கும் நேர்எதிராக ஓர் இடத்துக்குப் போக விரும்பும் மக்கள் டார்ஜிலிங்கைத்தான் தேடிக்கொண்டு போகிறார்கள். இந்தியா முழுவதும் உள்ள வெவ்வேறு கம்பெனிகளின்டைரக்டர்கள் கூடுவதற்கும் வங்காளத்தில் அந்த இடத்தைத்தான் தேர்ந்தெடுத்தார்கள். மன அமைதிக்காக அதை நாடிப் போய்க்கொண்டிருந்தாள் சாந்தி.

''இதற்கு, இமயமலைத் தொடர்களுக்கு நடுவே 'ராணி' என்று ஒரு பெயரும் உண்டு'' என்று மித்ரா சொல்லிக் கொண்டு வந்தான்.

''ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு இடத்தை அப்படிச் சுலபமாகச் சொல்லி விடுவது வழக்கம். நான் சென்னையிலிருந்தபோது உதகமண்டலத்தைப் பற்றி அப்படிச் சொல்லக் கேட்டிருக்கிறேன்'' என்று ஒரு புன்னகையுடன் சாந்தி பதில் சொன்னாள்.

''அப்படி இல்லை. இங்கே இமயமலைச் சிகரத்தில் பனி வெண்மையின் மேல் காலைக் கதிர்கள் விழுவதே ஒரு அழகு. அதைப்பார்க்கவே எங்கிருந்தெல்லாமோ மக்கள் வருகிறார்கள். இந்த மாதிரி ஒரு காட்சியை நீ வேறே எங்கேயும் பார்க்க முடியாது. இது வங்காளத்தின் பெருமைக்கு உகந்த ஒரு இடம்.''

''வங்காளிகளுக்கே 'லோகல் பேட்ரியாடிஸம்' அதிகம்'' என்று சாந்தி சிரித்தாள். அவள் அப்படி லேசாகப் பேசியதும் சிரித்ததும் மித்ராவுக்கு மிகவும் பிடித்திருந்தது. அத்தகைய ஒரு மன மாறுதல் அவளுக்குத் தேவை என்றே அவன் பிடிவாதமாக அங்கே அவளை அழைத்து வந்திருந்தான்.

மாநாடு தொடங்க இரண்டு நாட்களுக்கு முன்பாகவே அவர்கள் வந்து விட்டார்கள். மலைச் சிகரத்தில் ஏறுவதற்குப் பயிற்சி அளிக்கும் கல்லூரிக்கு சாந்தியை அவன் அழைத்துக் கொண்டு

மணியன்

போனுன். விளையாட்டுக்கள் என்றால் அவளுக்கு வெகு பிரியம். இப்போதும் அவள் ஓரளவு அதில் முனைந்திருப்பாள். ஆனால் அவளுடைய உடல் நிலையில் அவளுக்கு அதைப் பற்றி நினைக்கவும் முடியவில்லை.

இருவரும் புகழ்பெற்ற பௌத்த மடத்திற்குப் போனார்கள். அங்கே கட்டி இருந்த பெரிய ஆலயமணி, புத்தர் உருவம் எல்லாவற்றையும் பார்க்க அவளுக்குப் பிரமிப்பாக இருந்தது. மான்கொம்பு போலப் பெரிய அழகான தலைக் கொண்டையும், பெரிய வட்டங்களான காதணியும், வர்ணப் பாசிமணிகளால் கோத்த மாலைகளுமாக அங்கே வந்த பெண்களைப் பார்த்தபோது சாந்திக்குக் கொஞ்சம் பொறாமையாகக் கூட இருந்தது: 'இவர்கள் எவ்வளவு எளிமையான வாழ்க்கை நடத்துகிறார்கள்? சிவப்பும் மஞ்சளுமாக உடை அணிந்துகொள்வதைப் போல, இவர்கள் உணர்ச்சிகளும் எவ்வளவு நேரடியாக வெளிப்படையாக இருக்கின்றன? சிக்கல் இல்லாத இவர்களுடைய வாழ்க்கையைப் போல நமக்கும் அமைந்திருக்கக் கூடாதா?' என்று மனம் பொருமினாள்.

மாலை வேளையில் லாயிட்ஸ் பொடானிகல் கார்டனில் உலாவப் போனார்கள். அங்கே உலாவ வரும் தம்பதியரைப் பார்க்கும்போது அவளுக்கு ராஜேஷின் ஞாபகம் வரும். கண்ணில் நீர் ததும்பும். அதைக் கவனித்துவிட்டு மித்ரா கொஞ்ச நேரம் அவளைத் தனியாகச் சிந்திக்க விட்டுவிட்டுப் பக்குவமாக ஒதுங்கிக் கொள்வான்.

தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்துவிட்டுத் திரும்பும் பெண்கள், குழந்தையை மூட்டையைப் போல முதுகில் கட்டிக் கொண்டு திரும்புவார்கள். அதை மித்ரா அவளுக்குக் காட்டும் போது, ''எனக்குக் குழந்தை பிறந்த பிறகும் நான் கல்கத்தாவில் இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். இதைப் போலக் குழந்தையை எடுத்துக்கொண்டு நான் உங்கள் ஆபீசுக்கு வரலாமா?'' என்று கேட்டாள் சாந்தி. இருவருமாக அந்த வேடிக்கைக் காட்சியை நினைத்துச் சிரிப்பார்கள்.

அந்த இரண்டு நாட்களும் அமைதியும் குதூகலமுமாகக் கழிந்து விட்டன. மாநாடு தொடங்கியதும் மித்ரா அதில் மும்முரமாக ஈடுபட்டு விட்டான். அவனுக்குத் தேவையான குறிப்புக்களைத் தயார் செய்வதிலும், அவனுடைய சொற்பொழிவுகளுக்காக விவரங்கள் சேகரிப்பதிலும் அவளுக்குப் பொழுது சரியாக இருந்தது. அன்று அவன் இல்லாத வேளையில் கொஞ்சம் அவகாசம் இருந்தது. அப்படிப் பொழுது கிடைத்த போது வேடிக்கை பார்க்க, கடைத் தெருவுக்கு வந்தாள் சாந்தி.

பெண்களின் அணிகளையும் அலங்கார மாலைகளையும் வைத்திருந்த கடை வாசலில் அவள் நின்று கொண்டிருந்தபோது, அவளை யாரோ பெயர் சொல்லி அழைப்பது கேட்டு அவள் திரும்பினாள். ராதா அங்கே நின்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்ததும் அருகே வந்து அன்போடு அணைத்துக் கொண்டாள்.

''நான் இங்கே வந்து இரண்டு நாட்களாகிறது. உன்னைப் பார்க்க வேண்டும் என்று அலைந்து கொண்டிருக்கிறேன். நீ கிடைக்கவே இல்லையே?'' என்று உரிமையுடன் கடிந்து கொண்டாள் ராதா. பல நாட்களுக்குப் பின் சாந்தியைப் பார்த்ததில் அவளுக்கு இருந்த மகிழ்ச்சி, குரலில் வெளிப்படையாகத் தெரிந்தது.

''கொஞ்சம் வேலை இருந்தது. தவிர இங்கே வந்திருக்கும் இருநூறுக்கும் மேற்பட்ட 'டெலிகேட்'டுகளுக்கு நடுவே நீ எங்கே தங்கியிருக்கிறாய் என்று கண்டு பிடிப்பதும் சாத்தியமாக இல்லை. எப்படியும் இன்று உன்னைச் சந்தித்து விடுவது என்றே இருந்தேன்....''



''வேண்டாம். எங்கள் ஓட்டலுக்கு நீ வர வேண்டாம். அங்கேதான் பிரபுவும் தங்கி இருக்கிறார். அவர் கண்ணில் நீ படுவதை நான் விரும்ப வில்லை. உன் விலாசத்தைக் கொடு. நானே வந்து சந்திக்கிறேன்'' என்று ராதா சொன்னாள்.

பிரபுவின் பெயரைக் கேட்டதுமே அவள் முகம் சுருங்கிற்று. மனத்தில் தோன்றிய கலக்கத்தில் கொஞ்ச நேரம் ராதா பேசியதும் கூட அவள் கவனத்தில் விழவில்லை. ஏதோ நினைவில் ஆழ்ந்து அப்படியே நின்றாள்.

கடைசியாக ''எப்போது நீ 'ஃப்ரீ'யாக இருப்பாய்? எனக்கு உன்னுடன் நிறையப் பேச வேண்டும்'' என்று கேட்டாள் ராதா.

''நாளைக் காலை பதினொரு மணிக்கு என் அறைக்கு வா. மித்ராவும் மாநாட்டுக்குப் போய் விடுவார். எனக்கு வேலை இருக்காது'' என்று விடை பெற்றுக் கொண்டாள் சாந்தி. ராதா வுடன் இன்னும் கொஞ்ச நேரம் அவள் பேசியிருக்கலாம். கடைகளைச் சுற்றிப் பார்த்துவிட்டுவங்காளிகளின்வழக்கப்படி களிமண் சட்டியில் சூடான தேநீர்கூட அருந்தி இருக்கலாம். ஆனால் பிரபுவின் பெயரைக் கேட்டதிலிருந்து அவளுக்கு மனத்தில் அமைதி இல்லை. அங்கே வந்ததிலிருந்து, பிரபுவை, தான் சந்திக்கக் கூடும் என்ற நினைவுகூட அவள் மனத்தில் ஏனோ எழவில்லை. திடீரென்று ராதா அதைக் கூறியதும் சாந்திக்கு என்னவோ போல ஆகி விட்டது. இப்போது அந்த ஒரு கவலை தான் அவள் மனத்தில் மிஞ்சி இருந்தது.

மறுநாட் காலை, மித்ரா ஏதோ வேலை இருப்பதாக ஒன்பது மணிக்கே புறப்பட்டுப் போய்விட்டான். சாந்தி நிதானமாகக் குளித்து உடை அணிந்து கொண்டு ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு ஜன்னல் ஓரமாக அமர்ந்திருந் தாள். அந்த அறையிலிருந்து தெரிந்த பனிமலையின் காட்சி, அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதனால் புத்தகத்தில் கூட அவளுக்குக் கவனம் ஊன்றவில்லை.

அப்போது கதவை யாரோ தட்டும் சப்தம் கேட்டது. அதற்குள்ளாகவா ராதா வந்து விட்டாள்? வியப்பும்



மகிழ்ச்சியும் பொங்க, ஒரு துள்ளல் நடையுடன் அங்கே அவளைச் சந்திக்க கதவைத் திறந்தாள் சாந்தி. அப்படியே சிலையாகி நின்றாள். வெளியே அவளை எதிர்பார்த்து நின்றது பிரபு.

வாயில் செருகியிருந்த புகைக் குழாயை எடுக்காமல் ஓர் அலட்சியப் புன்னகையுடன், அவளை ஏற இறங்கப் பார்த்தபடி பிரபு நின்றான்.

''வாட் ஆர் யு டுயிங் ஹியர்? எங்கே உன்னுடைய ராஜேஷ்?'' என்று புகையை லேசாக விட்டபடி கேட்டான். அவள் பதில் சொல்லவில்லை.

பிரபு உள்ளே வந்து கதவை மூடிக் கொண்டான். சாந்தியின் நெஞ்சம் பயத்தினால் அலை பாய்ந்தது. ஆனால் அவள் அதை வெளியே காட்டிக் கொள்ள வில்லை. அவனுக்கு முதுகு தெரியத் திரும்பி நின்று கொண்டாள். அப்போது அவள் தோள்மீது அவன் கைகள் பதிந் தன. தொடக்கூடாத பொருள் ஒன்று மேலே பட்டுவிட்டதைப் போல, ஒரு வெறுப்புடன் அவனை உதறித் தள்ள சாந்தி முயன்றாள். ஆனால் அந்தப் பிடி விலகவில்லை.

அவளைத் தன்புறமாக இழுத்து இறுக அணைத்துக் கொண்டான் பிரபு: ''சாந்தி டார்லிங், என்னோடு எவ்வளவு ஃப்ரீயாகப் பழகி இருக்கிறாய் நீ? உன்னை மனைவியாகவே நான் ஏற்றிருப்பேன். ஆனால் என்னுடைய அந்தஸ்து, பதவி எல்லாவற்றுக்கும் காரணமாக இருந்த ஒரு பெண்ணை நான் மனைவியாக ஏற்கெனவே அடைந்திருந்ததுதானே அதைத் தடுத்து விட்டது? வெல்! நாம் இப்போது தனியாக இருக்கிறோம். உன்னைக் கண்காணிக்க ராஜேஷும் இல்லை. என்னைக் கண்டிக்க என் மனைவி ஹேமாவும் இல்லை'' என்று அவள் முகத்தின் அருகே குனிந்தான்.

தன் முழு பலத்துடன் சாந்தி அவனைத் தள்ளினாள். அவன் அப்படியே படுக்கை யில் போய் விழுந்தான். அதை அவன் எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் தன்னைச் சமாளித்துக் கொண்டான். ஒரு சிரிப் புடன் ''சரியான இடத்தில்தான் என்னை தள்ளியிருக்கிறாய் சாந்தி. எனக்கு நீ இணங்கி வருவாய் என்று தெரியும். கம் ஆன் மை ஹனி! இங்கே வந்து உட்கார்'' என்று சற்று எழுந்து, அவள் கையை எட்டிப் பற்றிக் கொண்டான். அவன் மீது விழுந்து நிலைகுலைந்து எழுந்த சாந்திக்கு மூச்சு வாங்கியது. அதுவரை பேசாமலே இருந்தவள், ஆத்திரத்துடன் கூச்சலிட்டாள்:

''சீ, மிருகமே! நீ எவ்வளவோ பண்பானவன் என்று நினைத்து உன்னு டன் நெருங்கி நான் பழகியது உண்மை தான். இளமைப் பருவத்துப் போலி ஆசைகளில் ஈடுபட்டு, என் கட்டுப்பாடு களையும் மறந்து உன்னுடன் சுற்றிக் கொண்டிருந்ததும் மெய்தான். ஆனால் உன்னுடைய அன்பில் பெருந்தன்மை இல்லை என்பதைப் புரிந்து கொண்டதும் நான் விலகிவிடவில்லையா? அதுவும் நீ அன்று என்னை அதைப் போல...'' என்று மேலே பேச முடியாமல் விம்மினாள்.

''நடந்ததை மறந்துவிடு சாந்தி. நான் ஜெண்டில்மென் என்பதைப் பற்றி நீ சந்தேகிக்கவே வேண்டாம். உனக்குப் பிரியமோ இல்லையோ, அன்று ஓட்டலில் என் வசம் நீ சிக்கிக் கொண்ட அறைச் சுவரின் துவாரம் வழியாகப் படங்கள் எடுக்கச் செய்திருந்தேன். நம்முடைய அந்தரங்கமான, நெருங்கிய தோற்றங்கள் என் வசம் இருந்தன. நீ வேலையை விட்டு விலகியதும், ராஜேஷை மணந்து கொண்டதும் என் சம்மதத் துடன்தான். நினைத்துப் பார். நான் விரும்பி இருந்தால் அந்தப் படங்களைக் காட்டி உன் வாழ்க்கையையே குட்டிச் சுவராக்கி இருக்க முடியும்.''

''முடியாது. என் வாழ்க்கையையே திரணமாக மதித்து உயிரை விட்டிருப் பேனே தவிர, பயந்து உன் வலையில் விழுந்திருக்க மாட்டேன். உன்னு டைய ஆடம்பர வாழ்க்கையையும் சுக சௌகரியங்களையும் பார்த்து உல்லாச வாழ்க்கைக்கு ஆசைப்பட்டு நான் உன்னுடன் சுதந்திரமாகப் பழகி இருக்கலாம். ஆனால் அது எவ்வளவு பெரிய தவறு என்பதை என் புனிதம் கெடுவதற்கு முன் புரிந்து கொண்டு விட்டேன். இந்த ஆயுளில் என் உடலும் உள்ளமும்என் கணவர் ராஜேஷ் மட்டுமே ஏற்பதற்கு உரியவை. நீ என்ன செய்த லும் அதைக் கெடுக்க முடியாது.''

''என்னடீ பத்தினி வேஷம் போடு கிறாய்? நீ இன்னொருவனுடன் இங்கே வந்திருப்பது எனக்குத் தெரியாதா? அதனால்தானே தைரியமாய் எனக்கும் நீ இணங்குவாய் என்று இப்போது இங்கே வந்தேன். நீ எனக்குச் சம்மதித்தே ஆக வேண்டும். இன்று இரவு எட்டு மணிக்கு நீ என் அறையில் இருந்தாக வேண்டும். இல்லையானால் என்னிடம் உள்ள புகைப் படங்கள் உன் கணவன் ராஜேஷுக்குப் போய்ச் சேர்ந்து விடும். அப்புறம் உனக்கு எதிர்காலமே இல்லை'' என்று பிரபு கையைத் தட்டிக் கொண்டான்.

சாந்தியின் மனக் கண்ணில் ராஜேஷின் கலங்கிய முகம் தெரிந்தது. அப்படி ஒரு சந்தேகத்தைத் தூண்டிவிட்டால் அவன் அதை எவ்வாறு பொறுத்துக் கொள்வான்? ஏற்கெனவே சஞ்சலத்தில் ஆழ்ந்துள்ள அவனுக்கு இதுவும் கிடைத்துவிட்டால் அவள் வாழ்க்கையின் எதிர்காலமே இருள் மூடித்தான் போய்விடும். இத்தகைய ஒரு நிலையை எதிர்பாராதவளாய் சாந்தி பேச வகையறியாது பிரமித்து நின்றாள். ஒரு கணம் பிரபுவிடம் இரக்கத்துக்காக மன்றாடலாமா என்றும் அவளுக்குத் தோன்றியது.

அதையே அவளுடைய இணக்கமாகக் கருதிக் கொண்டு பிரபு அவளைத் தழுவ முயன்றான். அந்த முயற்சியில் சாந்தியின் துகில் நழுவிக் கலைந்தது. அவளுடைய தாய்மை நிலை அவன் கண்களுக்குத் தெரிந்தது. கண்ணில் நீர் பொங்க அவள் உடையைச் சரி செய்து கொண்டாள். அவனிடமிருந்து தூர விலகி நின்றாள்.

''இப்போது தெரிகிறதா உனக்கு? இன்று நான், நீ ஆசைப்பட்ட சுதந்திரப் பறவையும் அல்ல; மணம் செய்து கொண்டு மனைவியாகிவிட்ட பெண்ணும் அல்ல. ஒரு குழந்தையைப் பெறப் போகும் தாய். ஈனமான எண்ணத்துடனேயே எல்லாப் பெண்களையும் பார்க்கும் உனக்கு, ஒரு தாய் என்று நினைத்தாலாவது நினைவில் தூய்மை வருகிறதா என்று முயன்று பார்.''

ஒரு நிமிடம் அயர்ந்து நின்ற பிரபு உடனே சமாளித்துக் கொண்டான். மேலே எதுவும் பேசாமல் அவளை அள்ளி மஞ்சத்தில் போடுவதற்குத் துணிந்து விட்டான். அலங்கோலமாகக் கலைந்த உடையுடன் சாந்தி கதவை நோக்கி ஓடினாள். அதை உட்புறமாகச் சாவி போட்டுப் பூட்டி, சாவியை அதிலேயே வைத்திருந்தது. அதைப் பற்ற அவள் முனையுமுன், பிரபுவும் முயன்றான். சாவி தெறித்தாற் போல நழுவிக் கதவின் அடியில் இடுக்கில் விழுந்தது.

பிரபு குனிந்து பரபரப்புடன் அதை எடுக்க முயன்றான். அதே சமயம் அதை வெளியிலிருந்து யாரோ மெதுவாக எடுப்பதும் கதவைத் திறப்பதும் தெரிந்தது. எதுவும் செய்ய முடியாமல் வியர்க்க விறுவிறுக்க நின்ற பிரபுவின் முன்னால் அமைதியே உருவமாகக் கதவைத் திறந்துகொண்டு ராதா நின்றாள்.



''உனக்காக வானவெளியிலே பறந்து சென்று நட்சத்திரங்களைப் பிடித்து உன் காலடியில் வேண்டுமானாலும் கொண்டு வந்து போடத் தயார் கண்ணே!.. ஆனால் கெஞ்சிக் கேட்டுக்கறேன்.. உங்க வீட்டுக்காக இந்த 'ரேஷன் க்யூ'விலே மட்டும் தயவுசெய்து நிக்கச் சொல்லாதே!..''

''வாட் ப்ராட் யு ஹியர்? உனக்கு என்ன வேலை இங்கே?'' என்று வெறுப்புடன் பிரபு முகத்தைச் சுளித்துக் கொண்டான்.

''உங்களுக்கு மட்டும் இங்கே என்ன வேலை? தாங்கள் மாநாட்டுக்கு அல்லவா போயிருக்க வேண்டும்? சாந்தி என்னை அழைத்திருந்ததால் இங்கே வந்திருக்கிறேன். அழைப்பு இல்லாமலே நீங்கள் வந்து, அடைந்திருப்பதையும் நான் பார்க்க முடிகிறது'' என்று அமைதியாகச் சொன்னாள் ராதா. அந்தக் கேலி அவன் கோபத்தை மேலும் தூண்டிற்று.

''ஸில்லி, நாவை அடக்கிப் பேசு. யு ஆர் மை பெய்ட் ஸ்டாஃப்'' என்று உறுமினான் பிரபு.

''அது நான் அலுவலகத்தில் செய்யும் பணிக்கு. இதைப் போன்ற காரியங்களுக்கு உடந்தையாக இருப்பதற்கு அல்ல'' என்று நிதானம் தவறாமல் ராதா பதில் சொன்னாள்.

பிரபுவின் முகம் சிவந்து விட்டது. அதற்கு மேல் அங்கே இருந்தால் தன் மரியாதை மேலும் மேலும் பாழ்படும் என்று புரிந்து கொண்டு, 'கோட்'டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு கிளம்பினான். வாசலில் நின்றவன் சாந்தியைத் திரும்பிப் பார்த்து, ''நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். நீ புத்திசாலிப் பெண். என்னிடம் பக்குவமாக நடந்து கொள்வாய் என்று எதிர் பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தான். அறுந்த மாலையாகக்



''இந்த பஸ் கும்பல்லே இடிபட்டுக்கிட்டுப் போய் உடம்பெல்லாம் ஒரே வலி எடுக்குதுங்க...! அதான் இன்னிக்கு முன்னேற்பாடாவே தலைகாணி கட்டிகிட்டு வந்துட்டேன்...!''

கட்டிலில் விழுந்திருந்த சாந்தி, தலை நிமிரவே இல்லை. அப்படியே விம்மி விம்மி அழுதவண்ணம் இருந்தாள்.

ராதா அவளருகே வந்து அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். விசித்துக் கொண்டே நிமிர்ந்த சாந்தியை அப்படியே அணைத்துக் கொண்டு சமாதானப்படுத்தத் தொடங்கினாள். மெல்ல மெல்ல அவள் அழுகை நின்றது. ஆனால் மனக்கலக்கம் மட்டும் தெளியவே இல்லை.

கடைசியாக பெங்களூரில் சந்தித்தது முதல் அதுவரை நடந்தவற்றை ஒவ்வொன்றாக, மெல்ல மெல்லக் கூறினாள் சாந்தி. ராதாவும் தனக்கு ராஜேஷ் வந்து போனதைப் பற்றித் தெரிந்தவற்றை எல்லாம் சொன்னாள். அப்படி இருவரும் பேசிப் பரிமாறிக் கொண்டதில் கொஞ்சம் மன ஆறுதல் கிடைத்தது.

''சரி, இனி நடக்க வேண்டியவற்றை என் கையில் விட்டுவிடு சாந்தி. நீ பெரிதும் மனம் குழம்பிப் போயிருக்கிறாய். அதனால் நான் சொல்வதை அப்படியே நீ எடுத்துக் கொண்டு, அதன்படி நடப்பதுதான் உனக்கு நல்லது. என் மீது உனக்கு நம்பிக்கை இருக்கிறது அல்லவா?'' என்று ராதா கேட்டாள்.

''ராதா, நீ எனக்கு தெய்வத்தைப் போல'' என்றாள் சாந்தி.

''ஓ! பெரிய வார்த்தை யெல்லாம் சொல்லி என்னைக் கர்வப்படும்படி செய்துவிடாதே'' என்று அவள் வாயை ராதா அன்புடன் மூடினாள்: ''கிளம்பு, உன் டிரஸ்ஸைச் சரிசெய்து கொண்டு புறப்படு. கீழே காண்டீனுக்குப் போய் இருவரும் சாப்பிடலாம். உனக்கு என் திட்டத்தைச் சொல்கிறேன்'' என்று அங்கே எதுவுமே நடக்காததைப்போலப் பேசி, தைரியம் கொடுத்தாள் ராதா.

இரவு மணி எட்டு.

கையில்ஒருஃபைலை எடுத்துக் கொண்டு எதையோ சாந்தியிடம் கேட்க அந்த அறைக்கு வந்த மித்ரா, கதவில் கையால் லேசாகத் தட்டிவிட்டுப் பணிவுடன் உள்ளே நுழைந்தான். உள்ளே யாரும் இல்லை. அவள் 'பாத்ரூ'மிற்குப் போயிருக்கலாம் என்று எண்ணிக் குரல் கொடுத்து அழைத்துவிட்டு, மித்ரா நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

அப்போது திறந்த கதவின் வழியே எந்த முன்னறிவிப்பும் இன்றி உள்ளே வரும் மனிதரைப் பார்த்து, வியப்புடன் மித்ரா திரும்பினான்.

''ஓ! யு ஆர் ஹியர்! எதிர்பார்த்தேன்—நான்தான் பிரபு'' என்று கையை நீட்டினான் பிரபு. அரைமனத்துடன் எழுந்து கை குலுக்கிவிட்டு, ''நான் மித்ரா. நீங்கள் இங்கே வரக் காரணம்? சாந்தியை உங்களுக்குத் தெரியுமா?'' என்று மித்ரா வியப்புடன் கேட்டான்.

''தெரியுமா என்று கேட்கிறீர்கள்?'' என்று கேட்டுவிட்டு 'ஹோ ஹோ' எனப் புகைச் சிரிப்பு சிரித்தான் பிரபு. அவன் சொல்லப் போவதை ஏதும் புரியாதவனாக மித்ரா கேட்கத் தயாரான போது டெலிபோன் மணி அடித்தது.

அலட்சியமாக ''நீங்கள் எடுத்துப் பேசலாமே?'' என்றான் பிரபு. மித்ரா போனைக் கையில் எடுத்ததும் அந்தக் குரல் கேட்டது. அவனுக்குப் பழக்கம் இல்லாத ஒரு குரல் அது. ஆனால் அவன் காதில் விழுந்த தகவலோ அவனுக்கு மிகவும் முக்கியமாகத் தேவைப்படும் ஒன்றாக இருந்தது.

(தொடரும்)




**29**

Marriage is not an art. Life is not either.– In art one selects. But in life and marriage you take what comes along.
— EDMUND SCHIDDEL.

'போனை'ப் பேசி முடித்துவிட்டு மித்ரா கீழே வைத்தான். அவனுடைய கை விரல்கள் நடுங்கின. பிரபு அதைக் கவனித்துவிட்டுமித்ராவிடம் கேட்டான்:

''உன்னுடன் பேசியது யார்? சாந்தியா?''

அவனை வியப்புடன் திரும்பிப் பார்த்து விட்டு மித்ரா,''இல்லை'' என்று தலையை அசைத்தான்: ''ஏன் அப்படிக் கேட்கிறாய்?''

''சாந்தி இந்த அறையைக் காலி செய்து விட்டுப் போய் விட்டாள். நீ இன்னும் அதைக் கவனிக்கவில்லையா?''

மித்ரா அப்போதுதான் அறையைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தான். சாந்தியின் பெட்டி, சாமான்கள் எதையும் காணோம். 'ட்ரெஸ்ஸிங் டேபிள்' வெறிச்சென்று இருந்தது.

''ஆமாம். சாந்தி இங்கே இல்லை'' என்று தயங்கினாற் போலச் சொன்னான் மித்ரா.

''இப்போது எங்கிருந்து போன் செய்தாள்?''

''அவள் போன் செய்யவில்லை. என்னிடம் பேசியது யார் என்பதை உன்னிடம் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை'' என்று மித்ரா கொஞ்சம் பதற்றத்துடன் பதில் சொன்னான்.

''வெல், உங்கள் ரகசியம் உங்களுக்குள்ளேயே இருக்கட்டும். இந்த முறை அவள் தப்பி விட்டாள். ஆனால் என்றுமே என்னிடமிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்று அவள் எண்ண வேண்டாம். அதை மட்டும் அவளுக்குச் சொல்லி விடு.''

''நீ என்ன சொல்லுகிறாய்? எனக்குப் புரியவில்லை.''

''இன்னுமா புரியவில்லை? மணமான ஒரு பெண் இங்கே தனியாக உன்னுடன் வந்திருக்கிறாள். இன்று இரவு என்னை இங்கே வரச் சொல்லி இருக்கிறாள்.

மணியன்

இப்போது நம் இரண்டு பேரையும் ஏமாற்றிவிட்டு வேறு யாருடனே ஓடி இருக்கிருள். இதற்கு மேல் என்ன விளக்கம் தேவை?''

''ஸ்டுபிட்... நான்ஸென்ஸ்...'' என்று மித்ரா முகத்தைச் சுளித்துக் கொண்டான்.

''யாரைப் பார்த்துச் சொல்லுகிருய்?'' என்று பிரபு ஒரு புகைச் சிரிப்புச் சிரித்தான்: ''உன் காதலியைப் பற்றி அப்படிச் சொல்லு. என்னிடம் அந்தப் பேச்சு எல்லாம் வேண்டாம். யு நோ — அவள் என் இன்டிமேட் ஃபிரெண்டாக இருந்தவள். இளம் வயதில் அவள் ஆசைப்பட்டதை எல்லாம் நான் வாங்கிக் கொடுத்திருக்கிறேன். என்னுடைய உல்லாசமான பொழுதுகள் பலவும் அவளுடன் நான் கழித்தவைதான். எ வெரி ஸ்மார்ட் கேர்ல்.. ம்.. எனக்கு வீட்டில் ஒரு வியாதிக்காரியான மனைவி. அவளை என்னுல் தள்ள முடியவில்லை. ஏனென்ருல் அவளுடைய செல்வத்திஞல்தான் நான் பிஸினஸ் பண்ணி முன்னுக்கு வந்தேன். இல்லாவிட்டால் என்றே சாந்தி என்ற அழகுப் பறவை என் வீட்டின் ராணியாகி இருப்பாள்.''

''என்ன உளறுகிருய்?'' என்று மித்ரா கொதிப்புடன் கேட்டான்.

''நீ நம்பமாட்டாய். அதற்காகத் தான் இந்தப் புகைப்படத்தைக் கொண்டு வந்தேன். இதை நீயே பார். எவ்வளவு தூரத்துக்கு நாங்கள் நெருங்கிப் பழகிளேம் என்பதை இது காட்டும். இதைப் போல இன்னும் எவ்வளவோ படங்கள் என்னிடம் இருக்கின்றன. அவசியம் ஏற்பட்டால் அவற்றை அனுப்ப வேண்டிய இடத்துக்கு அனுப்பி வைப்பேன்.''

மித்ரா அந்தப் படத்தைப் பார்த்தான். அவன் இதயம் 'படபட'வென்று அடித்துக் கொண்டது. நாகரிகம் என்ற பெயரால் சற்றுக் கவர்ச்சியாக உடை அணிந்திருந்தாள் சாந்தி. பிரபுவின் அணைப்பில் அவள் இருப்பது போல அந்தத் தோற்றம் இருந்தது. பிரபுவின் முகம் மிக அருகில் நெருங்கிஞற்போல.. சே! அசட்டுப் பெண்...எப்படி இதை அனுமதித்தாள் அவள்? அல்லது தந்திரமாக எடுக்கப்பட்ட புகைப்படமாக இருக்குமோ? எல்லாம் சூழ்ச்சியா?

மித்ரா அருவருப்புடன் படத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டான்: ''எங்கே அந்தப் படங்கள்? என்னிடம் கொடுத்து விடு. அவற்றுக்கு என்ன விலையாஞலும் கொடுத்து விடுகிறேன். அவள் வாழ்க்கையைக் கெடுக்க முற்படாதே பிரபு'' என்ருன்.

''என்னிடம் இல்லாத பணத்தை நீ எனக்குக் கொடுக்கப் போகிருயா? அப்படி அவளிடம் உனக்கு என்ன கரிசனம்? உன்னேடு இங்கே வந்தவள் என்னை மட்டும் ஏன் ஒதுக்க வேண்டும்? நான் எண்ணி இருந்தால் அவள் கல்யாணமே நடக்காமல் செய்திருக்கலாம். இந்த ஒரு ஆண்டு குடும்ப வாழ்க்கையே நடத்த முடியாமல் செய்திருக்கலாம். ஆனல் நான் அப்படிச் செய்ய விரும்பவில்லை. சாந்தி இன்னும் என் மனத்துக்கு விருப்பமானவள். அவளும் அப்படி என்னை ஏற்க வேண்டும் என்பதுதான்...''

''உனக்கு வெட்கமாக இல்லை? அவள் மணமானவள். இப்போது ஒரு தாய்'' என்று மித்ரா உணர்ச்சி வசப்பட்டு கத்திஞன்.

''மெதுவாகப் பேசு. உனக்கு ஏன் இத்தனை கோபம் வருகிறது? அவள் கணவன் இந்தப் படங்களைப் பார்க்கட்டும். நியாயத்தைச் சொல்லட்டும். அப்படியே ராஜேஷ் அவளை விவாகரத்து செய்து விட்டால்தான் என்ன? கைகொடுக்க சாந்திக்கு உன்னைப் போல எவ்வளவு பேர் இல்லை?''

மித்ரா அவனை ஓங்கி அறைந்திருப்பான். ஆனல் தன்னை அடக்கிக் கொண்டான். சாந்தி துரதிருஷ்டவசமாக இப்போது இக்கட்டான நிலையில் இருக்கிருள். அதை மோசமாக்கும் விதமாகதான் எதுவும் செய்துவிடக் கூடாது. முடியுமாஞல் தன்னுடைய மரியாதைகளைக் கூட விட்டுக் கொடுத்து விடலாம். சாந்தியின் நல்வாழ்வுக்குப் பாதகம் ஏற்படாவிட்டால் போதும். அதற்காக அவன் எதுவும் செய்யத் தயார்.

...கண்களில் நீர் பொங்க மித்ரா, பிரபுவின் கால்களைப் பிடித்துக் கொண்டான்: ''நீ தப்பாக நினைக்கிருய் பிரபு. ஒரு சகோதரன் என்கிற முறையில் நான் உன்னிடம் அவளுடைய நல்வாழ்வுக்காக கெஞ்சுகிறேன். அவளை எதுவும் செய்து விடாதே. இதுவரையில் நீ அவளுடைய வாழ்க்கையில் குறுக்கிடவில்லை. உன்னுடைய பெருந்தன்மையை நான் பாராட்டுகிறேன். இந்த உதவி உன்னிடமிருந்து அவளுக்கு வாழ்நாள் முழுவதும் கிடைக்கட்டும். அதற்காக உனக்கு நான் என்ன செய்ய வேண்டுமாஞலும் செய்கிறேன். ப்ளீஸ்! சாந்தியிடம் சிறிது கருணையுடன் நடந்து கொள்.''

பிரபு தன் கால்களிலிருந்து அவன் கைகளை விலக்கினான்: ''மிஸ்டர் மித்ரா, உங்கள் அந்தஸ்து என்ன? கௌரவம் என்ன? நீங்களா என் கால்களைப் பிடிப்பது? அதுவும் யாரோ ஒருவன் மனைவிக்காக? ஸில்லி! சாந்தியைப் புத்திசாலித்தனமாக என்னிடம் நடந்து கொள்ளச் சொல்லுங்கள், அது போதும். அவளுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. சந்தர்ப்பம் அவளுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது. அவசியம் நேர்ந்தாலொழிய நான் இந்தப் படங்களை உபயோகிக்க மாட்டேன். எல்லாம் உங்களுடைய 'அட்வைஸ்' எவ்வளவு தூரம் அவளை வழிக்குக் கொண்டு வருகிறது என்பதைப் பொறுத்தது.''—இதைச் சொல்லிவிட்டு பிரபு விருட்டென்று கிளம்பி வெளியே போய்விட்டான்.

மிகுந்த மனக்கலக்கத்துடன் மித்ரா தனது அறைக்குத் திரும்பினான். மறுபடியும் அங்கே அவனுக்காக போன் மணி அடித்தது. அதே பெண் குரல்தான் கேட்டது. அவள் தான் யார் என்று சொல்லவில்லை. ஆனால் மறுபடியும் சாந்தியைப் பற்றித்தான் பேசுகிறாள். கவலையுடன் மித்ரா அவள் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

''சாந்தி கல்கத்தாவுக்குத் திரும்பி விட்டாள். ஆனால் உங்கள் வீட்டுக்குப் போகவில்லை. நீங்கள் அவளைத் தேட வேண்டாம் என்பதற்காகவே இதைச் சொல்கிறேன்.''

''நீ யார்? ஏன் உன் பெயரை என்னிடம் இன்னும் சொல்லவில்லை?''

''நான் அவளுடைய தோழி. அவளுடைய நன்மையில், ஏன் உங்களுடைய நன்மையிலும்கூட அக்கறை கொண்டவள். அவ்வளவு போதாதா உங்களுக்கு?''



''போதாது. உன் விலாசம் என்ன? உன்னை எப்படிச் சந்திப்பது? என்ன நடந்தது? சாந்தி ஏன் என்னை விட்டு விட்டுப் போய்விட்டாள்? எல்லாம் எனக்குத் தெரிய வேண்டும்.''

''நான் மிஸ்டர் பிரபுவின் பர்ஸனல் செகரெட்டரி. என் பெயர் ராதா. நான் இருக்கும் இடம்...''

''ஓ! இதுவும் இன்னொரு 'பிளாக் மெயிலா'? நீயும் இந்த சூழ்ச்சிக்கு உடந்தையா? சாந்தியை எங்கேயோ கடத்திக் கொண்டு போக நீயும் சேர்ந்து போட்ட திட்டமா இது?''

''மிஸ்டர் மித்ரா, உங்களைக் கட்டுப் படுத்திக் கொள்ளுங்கள். இதற்காகத் தான் நான் என் விலாசத்தைச் சொல்ல மறுத்தேன். உங்கள் மனக் குழப்பத்துக்குத் தெளிவு தேவையானால் சாந்தியின் அறையில் மேஜை விளக்கு ஸ்டாண்டைத் தூக்கிப் பாருங்கள். அங்கே அவள் ஒரு விளக்கமான கடிதம் எழுதி வைத்திருக்கிறாள். அதைப் படித்தால் உங்களுக்கு எல்லாம் புரியும். என்னையும் புரிந்து கொள்வீர்கள். குட்-நைட்.''

அவன் மேலே பேசுவதற்குள் அந்தப் பெண் போனைக் கீழே வைத்து விட்டாள். தன்னுடைய மனக் கலக்கத்தில் காலியான சாந்தியின் அறையை அப்படியே போட்டுவிட்டு வந்தது அவனுடைய நினைவுக்கு வந்தது. அறையைப் பூட்டிக் கொண்டு அப்படியே அந்தப் பெண் குறிப்பிட்ட கடிதத்தையும் எடுத்துப் பார்க்கக் கிளம்பினான்.

ராதா சொன்னவை சரிதான். சாந்தியின் கடிதம் அங்கே இருந்தது. இரண்டு நாட்களாக நடந்தவை எல்லாவற்றையும் அதில் விவரமாக எழுதி இருந்தாள். அவளுக்காக ஒருமுறை ராதாவை சந்திக்கும்படியும் கேட்டுக் கொண்டிருந்தாள்.

கடிதத்துடன் அறைக்குத் திரும்பிய அவன், யோசனையில் ஆழ்ந்தான். ராதாவை எப்படிச் சந்திப்பது? பிரபுவை மறுபடியும் பார்க்க அவன் தயாராக இல்லை. அந்த ஓட்டலுக்குப் போய் ராதாவுடன் தனியாகப் பேசப் போக, பிரபு அங்கே வந்து விட்டால் மிகவும் அசந்தர்ப்பமான ஒரு நிலை ஏற்பட்டு விடக்கூடும். அதை அவன் விரும்பவில்லை. இரண்டு நாட்களில் அவன் கல்கத்தாவுக்குத் திரும்ப வேண்டும். அதற்குள் ராதாவைச் சந்திக்க முடியாமற் போனால்?

இரவு முழுவதும் அவன் தூங்கவில்லை. ராதாவே இந்த சிக்கலைத் தீர்ப்பதுதான் நல்லது. காலையில் அவளே மறுபடியும் போன் செய்தால் அவனுடையபொறுப்பு எளிதாகிவிடும். இல்லாவிட்டால்? எண்ணி எண்ணிக் குழம்பிப் படுக்கையில் புரண்டு கொண்டே இருந்தான்.

காலையில் பெட் காபி அருந்தியபடி ஜன்னல் அருகே உட்கார்ந்து, மித்ரா பனிச் சிகரத்தில் காலைக் கதிர் விழும் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். போன் மணி அடித்தது. மிகுந்த ஆவலுடன் ஓடிப் போய் அதை எடுத்தான். பேசியது ராதாவேதான்:

''குட் மார்னிங்.''

''வெரிகுட் மார்னிங் மேடம்.''

''நீங்கள் அந்தக் கடிதத்தைப் படித்து விட்டீர்கள் என்பது உங்கள் பணிவு



''யார் நீங்க? இந்த மாலைஎல்லாம் எதுக்கு?''

''எனக்கு குறுகிய காலத்திலே மானேஜராகப் பதவி உயர்வு கிடைச்சிருக்கு.. அதனாலேதான் இந்த மாலையை உங்களுக்குப்

மிகுந்த பேச்சிலிருந்து புரிகிறது. தாங்க்ஸ். நீங்கள் என்னைச் சந்திக்க விரும்புகிறீர்களா?''

''வெரிமச். இடத்தையும் நேரத்தையும் நீங்கள் குறிப்பிடுங்கள். நான் அங்கே வருகிறேன்.''

''அப்படியா? சரி. இன்று கா[illegible] மாநாடு தொடங்கிய பிறகு, நான் ஃப்ரீயாக இருப்பேன். பதினொரு மணிக்கு பொடானிகல் கார்டனில் வடக்குப் பகுதியில் ரோஜா நிற 'ஸாரி' அணிந்த ஒரு பெண் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பாள். நீங்கள் வருமுன் மிஸ்டர் பிரபு உங்களைப் பின் தொடரவில்லையா என்பதை 'செக்' செய்து கொள்ளுங்கள். அது நம் இருவருக்குமே நல்லது.''

''தாங்க்ஸ். நான் ஜாக்கிரதையாக நடந்து கொள்கிறேன். பதினேரு மணிக்கு உங்களைச் சந்திக்கிறேன். சாம்பல் நிற 'ஸூட்' அணிந்த கறுப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டிருக்கும் வாலிபன் ஒருவன் — அவன்தான் மித்ரா.''

ராதா ஒரு முறை சிரித்துவிட்டு போனைக் கீழே வைத்து விட்டாள். ஏதோ சினிமாவில் நடப்பது போல் சம்பவங்கள் நடப்பதை எண்ணி, மனத்துக்குள் வேதனைப்பட்டாள்.

ஒருவரையொருவர் அடையாளம் கண்டு கொள்வதில் சிரமம் ஏற்பட வில்லை. சாந்தியின் கடிதத்தைப் படித்த பிறகு மித்ராவுக்கு எவ்வளவோ மனத் தெளிவும், ராதாவைப் பற்றி நல்ல அபிப்

''அதற்குள் இந்தப் பிரபு அவசரப் பட்டு ஏதாவது கலாட்டா செய்து விடாமல் இருக்க வேண்டுமே?'' என்று கவலையுடன் கேட்டான் மித்ரா.

''அப்படி ஒன்றும் நேராமல் நான் கண்காணிப்பாக இருக்கிறேன். மேலும் அவர் இங்கிருந்து டில்லிக்குப் போய் அப்படியே வெளிநாடுகளுக்குப் போகப் போகிருர். திரும்பி வர ஒரு மாதம் ஆகும். அதற்குள் எல்லாவற்றையும் நாம் சரி செய்து விடலாம். நானும் இப்போது பெங்களூருக்குப் போகவில்லை. கல்கத்தா வுக்குத்தான் திரும்புகிறேன்.''

''என்னுடன் வந்து விடுங்களேன்!'' என்ருன் மித்ரா.

''வேண்டாம். நான் மிஸ்டர் பிரபுவை டில்லியில் வழி அனுப்பி விட்டுத்தான் அங்கே வரவேண்டும். உங்களைப் பார்ப்ப

---

...பாட்டு, வணங்கிட்டுப் போக வந்தேன் சார்..''

''உங்களுக்குப் பதவி உயர்வு கிடைச்சதுக்கு, எனக்கு எதுக்கு மாலை...?''

''இந்தப் பதவி உயர்வுக்குக் காரணம் நீங்க தான் சார்..! காலை பத்து மணிக்கு ஆபீஸ் ஆரம்பம்னு நான் ஏழு மணிக்கே வந்துடுவேன்.. அதே மாதிரி சாயந்திரம் ஐந்து மணிக்கு ஆபீஸ் முடிஞ்சாலும் இரவு ஒன்பது மணி வரை ஆபீசிலே இருப்பேன் சார்..''

''அதனலே தான் உங்களை மானேஜர் ஆக்கி இருக்காங்களா?''

''ஆமாம்!இதுக்கு நீங்க தான் சார் காரணம்..!''

''அது எப்படி ஐயா?''

''காலையிலே ஆபீஸ் நேரத்திலே பஸ்ஸிலே கூட்டமாயிருக்கிறதாலே ஏழு மணிக்கே ஆபீஸுக் குப் புறப்பட்டுடுவேன். கூட்டம் குறையட்டும்னு இரவு ஒன்பது மணிவரை ஆபீசிலேயே இருந்து வீட்டுக்குப் பத்து மணிக் குத் திரும்புவேன். பல்லவன் போக்குவரத்துக் கழக நிர்வாகி நீங்க தானே.. இப்ப சொல் லுங்க.... 'என் பதவி உயர்வுக்குக்காரணமான பல்லவன் போக்குவரத் துக் கழகம் வாழ்க, எல் லோரும் மானேஜராக உயர்க' என்று வாழ்த்தி உங்களுக்கு இந்த மாலை யைப் போடத்தான் வந்தேன்..''

---

பிராயமும் உருவாகி இருந்தது. நேரில் அவளைப் பார்த்துப் பேசியபோது அந்த மதிப்பு இன்னும் பன்மடங்காக உயர்ந் தது. சாந்தி, ராஜேஷ் இருவருடைய நல்வாழ்க்கையிலும் அவள் கொண் டிருந்த அக்கறை அவன் மனத்தை நெகிழச் செய்தது.

கூடிய விரைவில் சாந்தியும் ராஜேஷும் சந்திக்க வேண்டும். அந்த சந்திப்பு ஓரளவு எதிர்பாராமலும் நேருவதாக இருக்க வேண்டும். இருவரும் ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளும்படி பேசிக் கொள்ள சந்தர்ப்பம் ஏற்படுத்த வேண் டும். அவசியமானல் பிரபுவின் சூழ்ச்சி யைப் பற்றியும் ராஜேஷ் தெரிந்து கொள்ள வழி செய்துவிட வேண்டும். இவற்றுக்கான திட்டத்தைப் பற்றி இருவரும் பேசினர்கள்.

தற்கு முன் சாந்தியை நான் கவனித்தாக வேண்டும். அவளை நீங்கள் பார்க்க முயல வேண்டாம். ஒரு வாரத்தில் ராஜேஷ் கல்கத்தாவுக்கு வர நீங்கள் ஏற்பாடு செய்தால் போதும்.''

''நானு? அவருக்கு என்னைத் தெரி யாதே? நான் என்னவென்று எழுது வது?'' ராதா தன் கைப் பையிலிருந்து ஒரு சிறு புகைப்படத்தைத் தேடி எடுத் தாள்: ''இந்தாருங்கள். இது சாந்தி வைத்துக் கொண்டிருந்த அவளுடைய கணவரின் படம். பின்புறம் சாந்தியே அவளுடைய பெயரை எழுதி வைத்திருக் கிருள். இதை வைத்துக் கடிதம் எழுதி அனுப்புங்கள். சாந்தி அவரைச் சந்திக்க விரும்புவதாகக் குறிப்பிட்டு உங்கள் விலாசத்தைக் கொடுங்கள். அது போதும்.''

மித்ரா அவனை வியப்புடன் பார்த்தான். 'இவ்வளவு சாமர்த்தியமும் அழகும் உள்ள ஒரு பெண்ணை இதுவரை நான் சந்தித்துப் பேசியது இல்லை' என்று சொல்வதுபோல இருந்தது அந்தப் பார்வை.

*

ராஜேஷ் அலுவலகத்தை விட்டுக் கிளம்பினான்.

எங்கே போவது? இப்போதெல்லாம் அவன் சீக்கிரமாக வீட்டுக்குப் போவதில்லை. பட்லர் செய்து வைத்த சமையலைச் சாப்பிடும் விருப்பமும் இல்லை. நேரம் கழித்துத் திரும்பினாலும், உடலில் அலுப்புத்தான் மிஞ்சுமே தவிர, மனத்தில் அமைதி இருக்காது. சாந்தி இல்லாத ஒவ்வோர் இடமும் வெறிச்சென்று இருக்கும். மது அருந்திய மயக்கத்தில் படுக்கையில் சாயும்போது, அருகே தலையணையில் சாந்தியின் முகம் சிரிப்பது போல அவனுக்குத் தோன்றும். அவள் கைகள் அவனை அணைப்பது போல உணர்வான்.

சாந்தியை அவன் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தான். நடந்தது எல்லாவற்றையும் மறந்து மன்னித்துவிடத் தன்னைப் பக்குவப்படுத்திக் கொண்டான். ஆனால் அவள் எங்கே இருக்கிறாள் என்றும் கூட அவனுக்குத் தெரியவில்லையே?

அவன் காரை எடுக்கும் போது அட்கின்ஸனும் கிளம்பிக் கொண்டிருந்தார். அவனைப் பார்த்ததும் அவனிடம் வந்தார். ராஜேஷ், காரிலிருந்து இறங்கி நின்றான்.

''ராஜேஷ், மார்த்தா உன்னிடம் ஏதோ பேச வேண்டும் என்று சொன்னாள். வீட்டுக்கு வருகிறாயா? நான் கொஞ்சம் 'ஷாப்பிங்'கை முடித்துக் கொண்டு அங்கே வருகிறேன்.''

''ஆகட்டும்'' என்று ராஜேஷ் கிளம்பினான். அவன் மனத்துக்கு இதமாக மார்த்தா ஏதேனும் சொல்லக் கூடும் என்று அவனுக்குத் தோன்றியது.

காரிலிருந்து இறங்கி வந்தவனை மார்த்தா கவனித்துக் கொண்டிருந்தாள். இந்த சில மாதங்களில் எவ்வளவு தூரம் மாறிவிட்டான் ராஜேஷ்? மகிழ்ச்சியே வடிவமாக இருந்த, உல்லாச வாழ்க்கையின் மெருகு ஏறி நின்ற அதே வாலிபன் தானா இவன்? தளர்ந்த நடையுடன் அவன் உள்ளே வருவதைக் காண அவள் நெஞ்சம் உருகிற்று.

எதிர் நாற்காலியில் ராஜேஷ் உட்கார்ந்து கொண்டான். சிகரெட் பெட்டியை எடுத்து மார்த்தா அவனிடம் நீட்டினாள். ''எஸ்'' என்று அதில் ஒன்றை ராஜேஷ் எடுத்துக் கொண்டான்: ''எனக்கு ரிலாக்ஸ் செய்து கொள்ள வேண்டும் போலத்தான் இருக்கிறது. தாங்க்யூ.''

''இப்போது சொல்லு, என்ன ஆயிற்று? உங்களுக்குள்ளே ஏதோ சிக்கல் என்று எனக்குத் தெரியும்.''

''என்ன சிக்கல் என்றும் தெரியுமா?''

மார்த்தா சிரித்துக் கொண்டாள்:

''ராஜேஷ், இதில் ஒன்றும் அதிசயம் இல்லை. எந்த தம்பதியானாலும் கோபித்துக் கொள்வதும், சண்டை போட்டுக் கொள்வதும் சகஜம் தான். ஆனால் சாந்தி பிடிவாதமாக இத்தனை நாட்கள் உன்னை விட்டு எப்படிப் பிரிந்திருக்கிறாள்? அதுதான் எனக்குப் புரியவில்லை.''

ராஜேஷ் பதில் சொல்லவில்லை. அவன் கண்கள் கலங்கின. சிகரெட் புகைக்கு நடுவில் மங்கிய அவன் முகம் சோக வடிவமாகத் தெரிந்தது.

''சாந்தியைப் போன்ற ஒரு பெண்ணிடம் உனக்கு சந்தேகமா ராஜேஷ்? என்னுடைய அட்வைஸ் இது. எடுத்துக் கொள். அவள் ஒரு 'பர்ஃபெக்ட்' ஒய்ஃப்.''




''என்னப்பா! புதுசா கல்யாணம் பண்ணிக்கிட்டியே, உன் மனைவி சமையல் எப்படி?''

''ஏன் கேட்கறீங்க?.. தினமும் காய்கறிகளோட ஒரு சமையல் புத்தகமும் எரிஞ்சு போகுது!..''



தூத்துக்குடியிலுள்ள அரசாங்க மருத்துவ மனையில் டாக்டர் பூவலிங்கம் வெளி வார்டு நோயாளிகளுக்குச் சிகிச்சை பார்த்துக் கொண்டிருந்தார். அங்கு வயிற்று வலி காரணமாக, சுடலைமுத்து என்பவர் சேர்க்கப்பட்டிருந்தார். டாக்டர் பூவலிங்கம் மற்ற நோயாளிகளைப் பார்த்துவிட்டு அவரிடம் வரும் பொழுது ''உனக்கு மண்டே ஆபரேஷன் வச்சிருக்கேன். அப்புறம் இரண்டு நாள் ஓய்வு எடுத்தபிறகு உன்னை அனுப்புகிறேன்'' என்றார்.

உடனே அந்த நோயாளி அழ ஆரம்பித்து விட்டார். ''ஏன் அழறே?'' என்று டாக்டர் கேட்டபோது, ''டாக்டர் சார்! எனக்கு வேறே எங்கேயும் ஆபரேஷன் செய்யுங்க, ஆனா என் 'மண்டை'யிலே மட்டும் ஆபரேஷன் பண்ணிடாதீங்க'' என்று கூறியவுடன் டாக்டர் உள்பட எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தோம். உடனே டாக்டர் அவரிடம் '''மண்டே' என்றால் திங்கட்கிழமை என்று அர்த்தம்; நான் சொன்னது உன் 'மண்டை' இல்லை'' என்று சொன்னவுடன் அவன் முகத்தில் அசடு வழிந்தது.

—தூத்துக்குடி மாது.

---

''நான் அவனை ஏற்றுக் கொள்ளக் காத்திருக்கிறேன். ஆனால் அவள் வருவாளோ என்னவோ? பெண்களைப் பற்றி எனக்குத் தெரியும் என்று நினைத்தேன். என் மனைவியையே என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.''

''ஐ ஸீ. ஒரு பெண்ணை இன்னொரு பெண்ணால் புரிந்து கொள்ள முடியும். நான் சொல்கிறேன், சாந்தி உன் மனநிலையைத் தெரிந்து கொண்டால் கட்டாயம் திரும்பி வந்து விடுவாள். கணவனுடைய எந்த உதாசினத்தையும் பொறுத்துக் கொள்ளும் பண்பு இந்துப் பெண்களுக்கு உண்டு. அது ஒரு ஆச்சரியமான சுபாவம்.''

''பார்க்கலாம்'' என்று ராஜேஷ் பெருமூச்சு விட்டான்.

''உள்ளே வா ராஜேஷ், முகத்தைக் கழுவிக் கொள். உன்னைப் பார்க்க எனக்கு பரிதாபமாக இருக்கிறது. உனக்கு இப்போது தேவை-உன் ருசிகளை அறிந்து போடும் சாப்பாடும், அதை அன்புடன் பரிமாறும் ஒரு பெண்ணும்தான்.''

''நாட் இன் தட் ஆர்டர்'' என்றான் ராஜேஷ்.

''எனக்குத் தெரியும். இன்று இரவு எங்களுடன் சாப்பிடு. மெதுவாக வீட்டுக்குப் போகலாம்'' என்று மர்த்தா உள்ளே போய் விருந்தைத் தயார் செய்ய எழுந்திருந்தாள். ராஜேஷ், எதிரே இருந்த ஒரு பத்திரிகையை எடுத்துப் புரட்டத் தொடங்கினான். அது ஒரு 'ஃபாஷன் மாகஸின்'. எளிய உடையும் அலங்காரமுமாக நின்ற ஒரு பெண்ணின் தோற்றம் அதில் தெரிந்தது. அந்த முகத்தில் சாந்தியின் முகம் தெரிவது போன்ற பிரமையில் அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தான்....

இரவு வீடு திரும்பும்போது மணி பத்து ஆகிவிட்டது. வந்ததும் உடைகளைக் களைந்து மாற்றிக் கொண்டு, பட்லரை வீட்டுக்கு அனுப்பி விட்டான். அன்று வந்த தபாலைக் கையில் எடுத்துக் கொண்டு, சாந்தியின் மஞ்சத்தில் சாய்ந்து கொண்டான். அவனுக்கு அந்தப் படுக்கையும், அவளே தொட்டு ஆறுதல் சொல்வதைப் போல இருந்தது.

அந்தக் கவரைக் கையில் எடுத்து முன்னும் பின்னும் திருப்பிப் பார்த்தான். அந்தக் கையெழுத்து அவனுக்கு அடையாளம் தெரியும். ராதாவின் எழுத்து அல்லவா அது? என்ன எழுதி இருக்கிறாள்? கவரைப் பிரித்தான். உள்ளிருந்து அவன் சாந்திக்குக் கொடுத்த அவனுடைய புகைப்படம் 'லொட்'டென்று அவன் மடி மீது விழுந்தது.

(அடுத்த இதழில் முடியும்)


சில்வர் ப்ரின்ஸ்
சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்...
உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.
SILVER PRINCE
STAINLESS
SILVER
PRINCE
STAINLESS
சில்வர் ப்ரின்ஸ்
சுகமான க்ஷவரம்...
சொகுசான க்ஷவரம்
SILVER PRINCE
STAINLESS




# 30

Love is a fire in whose devouring flames all earthly ills are consumed.

—ROBERT BRIDGES.

ஹௌரா பாலம் வில் போட்டது போல ஹூக்ளியின் மீது விழுந்து கிடந்தது. விமானத்திலிருந்து அதைப் பார்த்ததும், சாந்திக்கு வெகு அருகில் வந்து விட்டதைப் போல ராஜேஷ் பூரித்துப் போனான். இனி சிறிதும் தாமதிக்க முடியாது என்று அவனுடைய மனம் மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டிருந்தது.

விமான நிலையத்திற்கு மித்ரா வந்திருந்தான். அதிக சிரமம் இன்றி ராஜேஷை அடையாளம் கண்டுபிடித்து விட்டான். இருவரும் காரில் ஏறிக் கொள்ளும் வரையில் அவனால் பொறுக்க முடியவில்லை: ''எங்கே என் சாந்தி?'' என்று துடிப்புடன் கேட்டான் ராஜேஷ். மித்ரா சிரித்துக் கொண்டான். இவ்வளவு ஆசையுடன் ஒருவரை யொருவர் நேசிக்கும் இவர்கள், எப்படிப் பிரிந்திருந்தார்கள்? சாந்தியின் மனத் துயரத்தை எண்ணி அவன் மனம் சிறிது நெகிழ்ந்தது.

''நாம் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு என் ஆபீசுக்குப் போகிறோம். அங்கே உங்களைச் சந்திக்க ஒரு வி.ஐ.பி. வருவார். அவரிடம் கேளுங்கள்.''

''வி. ஐ. பி—யா? அவருக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?''

''அதை அவரே சொல்லுவார்'' என்று மௌனத்தில் ஆழ்ந்து விட்டான் மித்ரா. ராஜேஷ் பொறுமையின்றிக் கைகளைப் பிசைந்தபடி உட்கார்ந்து கொண்டு வந்தான். அவன் மனம் தவியாய்த் தவித்தது. சாந்தி இன்னும் அவனுடைய பொறுமையைச் சோதிக்க விரும்புகிறாளா? அவர்களுக்கு நடுவே வரப்போவது யார்?

சிற்றுண்டி அருந்தி உடைகளை மாற்றிக் கொண்டு இருவரும் புறப்பட்டார்கள். மித்ராவின் விரிவான அலுவலகத்தைப் பார்த்தபோது, 'இதில் ஒருவேளை சாந்தி வேலை செய்து கொண்டிருக்கலாமோ? அவளுடைய சாமர்த்தியத்துக்கும் படிப்புக்கும் ஏற்ற ஒரு இடம்தான் இது' என்று ராஜேஷ் எண்ணிக் கொண்டான்.



மணியன்

அந்தக் குளிர்சாதனம் செய்யப்பட்ட அறையில் வந்து அமர்ந்ததும், மித்ரா அவனிடம், ''கொஞ்சம் இங்கே அமர்ந் திருங்கள். ஐந்து நிமிடங்களில் நான் அவருடன் வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பிப் போய் விட் டான். ராஜேஷ் எதையோ எதிர்பார்த் துக் கொண்டு ஆவலுடன் உட்கார்ந் திருந்தான். சில நிமிடங்களில் கதவை மெதுவாகத் திறக்கும் சிறு சப்தம் கேட் டுத் திரும்பினன். அவன் கண்கள் ஆச்சரி யத்துடன் விரிந்தன. அங்கே நின்றவள் ராதா.

''நீ எங்கு வந்தாய்? நான் இருப்பது உனக்கு எப்படித் தெரியும்? நீதான் மித்ராவுக்கு என் விலாசத்தை எழுதிக் கொடுத்தாயா?'' என்று பரபரப்புடன் கேட்டான்.

''ஆமாம். நீங்கள் என்னை ஏமாற்றி விட்டீர்களே?''

''என்ன சொல்லுகிறுய் ராதா?''

'''என்னுடையசாந்தி எங்கே?' என்று என்னைப் பார்த்தவுடன் கேட்பீர்கள் என்றல்லவா நான் எதிர்பார்த்தேன்?''

ராஜேஷ் பதில் எதுவும் சொல்ல வில்லை. ராதாவை உற்றுப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான். அவன் கண்கள் கலங்கி இருந்தன. மனத்திலும் இன்னும் அந்தக் கலக்கம் தெளியவில்லை.

''என்ன, பதிலைக் காணும்? சாந்தி யைப் பார்த்ததும் ஏற்றுக் கொள்வீர் களோ இல்லையோ? அல்லது இலங்கையில் பிரவேசித்த ராமச்சந்திரனைப்போல..''

அந்த வார்த்தைகள் அவனை வேதனைப் படுத்தின. அதுவும் ஓரளவு உண்மைதான். சாந்தியின்பால் கொண்ட அன்பின் வேகம் அவனை அப்படித் துடிக்கவைத்தா லும், அவன் மனத்தில் பழைய நினைவு கள் ஏற்படுத்திய கலக்கம் இன்னும் உறுத் திக் கொண்டுதான் இருந்தது. அந்த சந்தேகம் இன்னும் அவனை வருத்திக் கொண்டுதான் இருந்தது.

''உனக்கு எல்லாம் தெரியும் போல இருக்கிறதே ராதா?''

''தெரியும். அதனுல்தான் உங்களை முதலில் தயார் செய்ய வந்தேன். உங்கள் சாந்தி குழந்தைபோன்ற சுபாவம் உடையவள். அதனுல் வெளுத்ததெல் லாம் பால் என்றே எண்ணி 'ஃப்ரீ'யாகப் பழகி இருக்கலாம். அதன் அபாயத்தை உணர்ந்து கொள்ளாமல் சிறு தவறு ஏதேனும் செய்திருக்கலாம். ஆனுல் நிச்சயமாக நம்புங்கள், உங்கள் மணவாழ்க்கையைப் பாதிக்கும்படி அவள் ஏதும் செய்யவே இல்லை, ஷ்யூர்.''

''உனக்கு ஒன்று சொல்ல விரும்பு கிறேன் ராதா. நான் ஒரு அசட்டுத்தன மான காரியம் செய்தேன். மணமானதும் நாங்கள் இருவரும் எங்கள் இளமை ரகசியங்கள் அவ்வளவையும் ஒருவருக் கொருவர் சொல்லிப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று ஆரம்பித்தேன். அதன் விபரீதம் என்ன என்பதை நான் முழுவ தும் உணரவில்லை. சாந்தி என்னை வழிப் படுத்த எவ்வளவோ முயன்ருள். ஆனுல் என்னுல் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. படிப்படியாக சாந்தியைப் பற்றி நான் தெரிந்து கொண்ட சிறு சிறு விவரங்கள் என் நம்பிக்கையைத் தகர்த்துவிடத் தொடங் கின. அவளை நான் அவ்வளவுஅருமையாக நேசித்தேன். அதனுல் சிறு குறைகளையும் கூட என்னுடைய மனம் பொறுக்கத் தயாராக இல்லை.''

''அதனுல்தான் நீங்கள் அந்த விவரங் களை முழுவதும் கேட்டுத் தெரிந்து கொள் ளத் தவறி விட்டீர்கள். தெரிந்து கொண்டதற்கு விபரீதமான உருவம் கொடுத்து விட்டீர்கள்.''

''இருக்கலாம். நானும் என்னையே எப்படியோ தேற்றிக் கொண்டு வந்து விட்டேன். ஆனுல் கடைசியாக எனக்குக் கிடைத்த சாட்சி என்னைத் திடுக்கிடச் செய்து விட்டது. சாந்தி, பிரபுவின் 'இன்டிமேட் ஃபிரெண்ட்' ஆக



இருந்தபோது அவருடன் பெங்களூரில் ஓர் ஓட்டலில் தனியாக அறையில் ஒரு நாள் தங்கி இருந்திருக்கிருள். அந்த விவரம் ரிஜிஸ்தரில் பதிவு செய்யப் பட்டிருந்ததை நானே என் கண்ணுல் பார்க்க நேர்ந்தது. அதற்குப் பிறகுதான் நான் மிகவும் கலங்கி விட்டேன்.''

''நான் அதை மறுக்கவில்லே ராஜேஷ்.''

''அப்படியானுல் உன் சமாதானம் தான் என்ன ராதா?''

''இதைத்தான் நான், சாந்தி அபா யத்தை உணராமல் செய்துவிட்ட தவறு என்று குறிப்பிட்டேன். இளமையின் லட்சியம், புதுமையான நாகரிக மோகம், உல்லாச வாழ்க்கையின் ஆடம் பர ஆசை ஆகியவை இன்று நூற்றுக் கணக்கான அழகிய பெண்களே எங் கெங்கோ இழுத்துச் செல்வதைப்போல சாந்தியையும் கவர்ந்து அழைத்துக் கொண்டு போயிற்று. பிரபு தன் மீது காட்டிய பரிவையும், தன்னுடைய பொழுதுபோக்குக்காகச் செய்தஆடம்பர செலவையும் தூய்மையான பண்பு நிறைந்த அன்பினுல் செய்தவை என்றே எண்ணிப் ப்ழகி விட்டாள் சாந்தி. அன்று ஒரு பார்ட்டி இருப்பதாகச் சொல் லியே பிரபு, அவளே அங்கே அழைத்து வந்திருந்தான். இப்படி ஒரு வலேயில் தன்னே அவன் வீழ்த்தப் போவதாக அவள் எதிர்பார்க்கவில்லே. தனியாக ஒரு அறை பதிவு செய்யப்பட்டிருந்ததும்...'' ராதா முடிக்கவில்லே; ராஜேஷ் பதட் டத்துடன் குறுக்கிட்டான்:

''சாந்தி அந்த வலேயில் விழுந்து விட்டாளா, இல்லேயா? அதைச் சொல் போதும். நீ சொன்னுலே போதும் ராதா. அதைத் தெரிந்து கொள்ள மட்டுமே என் மனம் துடிக்கிறது.''

''இல்லே, எதுவும் நிகழவில்லே. தைரிய மாக இருங்கள் ராஜேஷ். ஆனுல் அந்தச் சில நிமிடங்களில் சாந்தி தனக்கு இணங்காவிட்டாலும், அவளிடம் அநாக ரிகமாக நடந்து கொண்டான் பிரபு. அந்த நிலேகளே சாந்திக்குத் தெரியா மலே படங்களும் எடுத்து வைக்க ஏற்பாடு செய்திருந்தான். அவற்றை வைத்துக் கொண்டு, அவள் தன் வசப்படாவிட் டால் அவளுடைய வாழ்க்கையைப் பாழ் படுத்தத் திட்டமிட்டிருந்தான். நீங்கள் அவளே மணம் செய்து கொள்ளத் தீர்மா னித்ததும், அவனே அதைப் பெருந் தன்மையான மனிதனேப் போல, விட்டுக் கொடுத்து நடந்து கொள்வதைப் போல நடித்து, ஏற்பாடுகளும் செய்ய அனு மதித்தான். அன்பான கணவன் என்ற பந்தம் ஏற்பட்டால்தான், தன்னுடைய 'பிளாக் மெயில்' திட்டத்துக்கு முழு வேகம் கிடைக்கும் என்பதுதான் அவ னுடைய சூழ்ச்சி'' என்ருள் ராதா.



ராஜேஷ் தலேயைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். மூடிய கண்களில் சாந்தியின் களங்க மில்லாத அழகிய முகம் தெரிந்தது. அவ னுடைய சாந்தி அவ னுக்கு மட்டுமே உரிய வள்தான். அதை முழுமையாகப் புரிந்து கொண்ட போது நெஞ்சில் எவ்வளவு ஆறுதல் கிடைக் கிறது? ராதா கூறும்

விளக்கம் செவியில் எப்படி அமுதம் போல விழுகிறது? அத்தனை நாட்களாக அவன் பட்ட சந்தேகங்கள்? அதனால் அனுபவித்த வேதனைகள்? அப்பப்பா!

ராதா அவன் அருகே வந்து அமர்ந்து கொண்டாள்: ''கவலைப்படாதீர்கள் ராஜேஷ். உங்கள் வாழ்க்கையில் மறுபடி குறுக்கிட பிரபு முயன்றான். அந்த சமயத்தில்தான் நான் உங்களுக்குத் தகவல் கொடுக்க நேர்ந்தது. சாந்தியையும் மறைக்க வேண்டியதாயிற்று....''

''சொல்லு ராதா, என் சாந்தி எங்கே? அவளை நான் உடனே சந்திக்க வேண்டும். அவள் மலர் போன்ற இதயத்திற்கு என் பூரணமான அன்பைக் காணிக்கையாகத் தர வேண்டும். எது நடந்தாலும் இனி எங்கள் வாழ்க்கையில் சந்தேகம் என்னும் நிழலுக்கு இடம் இல்லை என்பதை அவளுக்கு உறுதியாக எடுத்துச் சொல்ல வேண்டும். வா, போகலாம். இனிமேல் நான் தாமதிக்க முடியாது—''

கதவு திறந்தது. மித்ரா உள்ளே வந்தான். அவனைப் பார்த்ததும் ராதா எழுந்து நின்றாள்.

''புறப்படலாமா ராதா? தயாரா?''

''எல்லாவிதத்திலும் தயார்தான்'' என்று முழு அர்த்தம் தொனிக்கக் கூறிவிட்டு இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள் ராதா. எல்லோரும் புறப்பட்டார்கள்.

போகும் வழியில் ராதா எங்கே போகிறோம் என்பதைச் சொல்லவில்லை.

ராஜேஷைப் போலவே சாந்தியின் இருப்பிடத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் மித்ராவுக்கும் இருந்தது. நெரிசலான சாலைகளைக் கடந்து ஊருக்கு வெளியே கார் செல்லத் தொடங்கிற்று. கொஞ்ச தூரம் போனதும், கூடாரங்கள் நிறையப் போட்டிருந்த முகாம் ஒன்றில் நுழைந்தது.



''இப்படி நாம அடிக்கடி சண்டை போட்டுக் கொண்டு இருப்பதை அக்கம்பக்கத்திலே இருப்பவங்க பார்த்தா சிரிப்பாங்க.. தெரியுமா?''

''அப்போ நாம போடற சண்டை அவ்வளவு தமாஷா[illegible] இருக்கு?!''

''இது பங்களாதேஷ் அகதிகளின் முகாம் அல்லவா?'' என்று கேட்டான் மித்ரா.

''ஆமாம். குறிப்பாக இது பரிதாபத்துக்கு உரிய பெண்கள் காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கும் முகாம். போர் என்ற சாக்கில் அநீதி இழைக்கப்பட்டுத் தங்கள் வாழ்க்கையில் களங்கத்துக்கு ஆளாகி நிற்கும் இளம் பெண்கள்-மணமாகாத பெண்கள், இளம் மனைவியர்-இன்று தாய்மையும் அடைந்து அந்தக் கொடுமையைப் பொறுத்துக் கொண்டு இருக்கும் இடம் இது'' என்றாள் ராதா.

''அவர்களுடைய எதிர்காலம் என்ன?'' என்று கேட்டான் ராஜேஷ்.

''ஆண்டவனுக்குத்தான் தெரியும். மிகவும் வேதனையுடன் தங்கள் கணவனையும் தாய் தந்தையரையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் இந்தப் பெண்கள். சிலருக்கு அவர்கள் போரில் பலியாகி இருக்கலாம் என்பதுகூடத் தெரியாது. வந்து அடையாளம் கண்டு, கொண்டாலும், அவர்களுக்கு நேர்ந்துவிட்ட அவமானத்தைப் பார்த்துவிட்டு, அவர்கள் அதற்குப் பொறுப்பாளி அல்ல என்று தெரிந்தும், உதறிவிட்டுப் போகிற ஆண்களும் உண்டு. பாவம், அந்தப் பெண்களின் தலைவிதி!''-மனம் நொந்து சொன்னாள் ராதா.

''எல்லோருக்கும் அப்படி நேர்ந்து விடுவதில்லையே?'' என்றான் மித்ரா.

''உண்மை. அப்படிப்பட்டவர்கள் ஆண் மகனே அல்ல. மனத்தில் வைராக்கியத்தைத் தாங்கக் கூடிய புருஷர்களே அல்ல. அவர்களுக்கு உடல் வலிமை இருக்கலாம். உள்ளத்தில் பலமே இல்லை. என்னைப் பொறுத்தவரை அப்படிப்பட்டவர்களை நான் ஒரு சிறிதும் மதிக்க மாட்டேன். என்னுடைய அனுதாபம் எல்லாம் விதிவசத்தால் அப்படிப்பட்ட நிலைக்கு ஆளாகிவிட்ட பெண்களுக்குத்தான். அவர்கள் அரிய ஒரு பொக்கிஷத்தை

வாழ்க்கையில் இழந்திருக்கலாம். ஆனல் அவர்களை மதிப்புக் கொடுத்து, பண்பு நிறைந்தவர்களாக ஏற்றுப் போற்றி வைப்பதுதான் மனிதத் தன்மை'' என்று உணர்ச்சி மிகுந்த குரலில் ராஜேஷ் கூறினன்.

காரிலிருந்து இறங்கி அவர்கள் முகாமின் வாசலுக்கு நடந்து வந்து விட்டார்கள். ராதா உள்ளே போனதும் அவர்கள் இருவரும் பின் தொடர்ந்தார்கள். நர்ஸ் போல வெண்ணிறச் சேலையும், வெண்ணிறக் கவுனும் அணிந்த பெண்கள் அங்கே நடமாடிக் கொண்டிருந்தார்கள். கூடாரம் ஒன்றிலிருந்து அத்தகைய வெண்ணிறப் புடவையுடன் வெளிவந்த ஒரு பெண்ணைக் கண்டதும், ராஜேஷ் திகைத்து நின்று விட்டான்.

அவன் கண் பார்வை அப்படியே நிலைத்தது. மனம் எந்தச் சிந்தனையிலும் ஈடுபட மறுத்தது. உணர்ச்சிகளை எல்லாம் மறந்து சிலையாகி நின்றுன். அதேபோல அவனைப் பார்த்தபடியே நின்றுள் அந்தப் பெண்.

''சாந்தி! என் சாந்தி!''

அவனிடமிருந்து அந்தச் சொற்கள் உடைந்தாற்போலப் பெருக்கெடுத்து வந்தன. கைகளை நீட்டியபடி அவள் புறமாக ஓடினன்.

கையில் ஒரு கூடையுடன் நின்ற சாந்தியோ வாயைத் திறக்கவில்லை. அங்கிருந்து அசையவும் இல்லை. கலங்கிய அவள் கண்களிலிருந்து நீர் மாலையாகக் கன்னத்தில் வழிய அப்படியே நின்று விட்டாள்.

சேவையின் நிழலில் தூய்மையே உருவாக நின்ற அந்த வடிவத்தை மனத்தில் பூஜிப்பதைப்போல நிறுத்திப் பார்த்துக் கொண்டான் மித்ரா. அவன் நெஞ்சமும் நீராய் உருகிற்று. மூவரையும் கனிவுடன் பார்த்தபடி வந்த ராதா, அவ்வளவு பேர் முன்னிலையிலும் தன்வசமிழந்து சாந்தியை அணைத்துக் கொண்ட ராஜேஷின் அருகே வந்து நின்று, கனிவுடன், ''இங்கே சாந்தியுடன் உங்கள் மனைவி என்ற முறையில் பழக முடியாது. இப்போது எளியவர்களுக்குச் சேவை செய்யும் ஒரு பணிப் பெண் அவள். உங்கள் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள்'' என்று சொன்னுள்.

கண்ணீருக்கிடையே சிரித்தவாறு சாந்தி சட்டென்று விலகி நின்றுள். அவள் கன்னங்களில் நாணம் சிவப்பாக மெருகு ஏறி நின்றது. தன் நிலையை உணர்ந்த ராஜேஷிற்கும் கூடக் கொஞ்சம் வெட்கம் வந்து விட்டது. மித்ராவின் புறமாக ஒதுங்கிக் கொண்டான்.

*

மித்ராவின் வீட்டின் முன் இருந்த பெரிய தோட்டத்தில், இரண்டு கூடை நாற்காலிகளைப் போட்டுக் கொண்டு ராஜேஷ், சாந்தி இருவரும் உட்கார்ந்திருந்தார்கள். அந்த அமைதியில் வாடைக் காற்றின் குளுமை கலந்து நின்றது.

---



மன்னார்குடி ராஜகோபால சாமி ஆலயத்தில், புலவர் கீரன் அவர்களின் சொற்பொழிவு நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்போது 'திடீர்' என்று மின்விளக்குகள் அணைந்தன. திரு. கீரன் தொடர்ந்து பேசும்போது கூறினர்:

''மனிதர்களுக்கு இரண்டு விஷயத்தினல் தொல்லை ஏற்படுகிறது. ஒன்று, மின்சாரம். மற்றென்று சம்சாரம். மின்சாரத்தைத் தொட்டால்தான் 'ஷாக்' அடிக்கும். சம்சாரத்தைத் தொடாமலேயே 'ஷாக்' ஏற்படும்! எப்படி? ''என்ன புடவை கேட்கப் போகிருளோ, என்ன நகையை வாங்கச் சொல்கிருளோ, விலைவாசி விஷம் போல் ஏறி இருக்கும் இந்தக் காலத்தில்'' என்று நினைக்க கணவனுக்கு 'ஷாக்' கொடுப்பது இந்த சம்சாரம்தானே!

வி. எஸ். ஆர்.

✱ பகலில் அரை மணி நேரம் தூங்குவது இரவு மூன்று மணி நேரம் தூங்குவதற்குச் சமம்.

**உண்மை:** பகலில் சாப்பிட்ட பிறகு அரை மணி நேரம் தூங்கினுல், இரவு தூக்கத்தைக் குறைத்துக் கொள்ளலாம். சிலருக்கு இதன் மூலம் விடியற்காலை நேரத்தில் மூன்று மணி நேரம் வரை தூக்கத்தைக் குறைத்துக் கொள்ள முடிகிறது.

✱ சரியான ஓய்வு எடுத்துக் கொள்ள காலை உயர்த்தி வைத்துக் கொள்ளலாம்.

**உண்மை:** உங்கள் இரு பாதங்களையும் இடுப்பு அளவு உயரத்துக்குத் தினமும் பத்து நிமிடங்கள் உயர்த்தி வைத்துக் கொள்ளுங்கள். உட களைப்பை இது பெரு அளவுக்குப் போக்கி வி கிறது.



✱ முக்கியமான முடி களை மாலையில் எடுக் தீர்கள்.

**உண்மை:** முக்கியமா முடிவுகளைக் காலை வ யில் தள்ளிப் போடுங்க நாள் முழுவதும் உழைத் பின் செய்யும் சிந்தனை விடக் காலையில் ஓய்வுக்கு பிறகு தெளிவான மன துடன் செய்யும் யோச சிறப்பானதாக இருக்கு

— 'ஜெ'

''அடுத்த வாரம் நமக்குத் திருமணமான முதல் ஆண்டு நிறைவு வருகிறது சாந்தி. அதற்கு என்ன செய்யலாம்?'' என்று ராஜேஷ் கேட்டான்.

''இங்கேயே அதைக் கொண்டாடலாம். ராதாவையும் இருக்கச் சொல்வோம். அவர்கள் இருவரையும் காட்டிலும் நம்முடைய நன்மையில் உண்மையான அக்கறை கொண்டவர்கள் வேறு யாரும் இல்லை'' என்ருள் சாந்தி. அப்போது அவள் பார்வை அந்த வீட்டின் மேல்மாடியின் புறமாகத் திரும்பிற்று. அங்கே திறந்த வெளியில், ராதாவும் மித்ராவும் நின்று கொண்டிருந்தார்கள். ராஜேஷும் அதைக் கவனித்தான்.

''அவர்களைப் பார்க்கும்போது எனக்கு ஒன்று தோன்றுகிறது. உங்களுக்கு ராதாவின் தூய்மையான உள்ளம் தெரியும். எனக்கு மித்ரா கொண்டிருந்த பூஜிதமான அன்பு தெரியும். இவற்றை அவர்கள் ஒருவர் மற்றவர் மீது செலுத்தும் அன்பாக மாற்ற முடியுமானுல்? அப்படி நேர்ந்து விடும் அவர்களுடைய மண வாழ்க்கையில் எத்தகைய இன்பம் கிடைக்கும்?'' என்ருள் சாந்தி.

''உண்மைதான். ஆனுல் அதைப் பக்குவமாகத் தீர்மானம் செய்ய வேண்டியவர்கள் அவர்களே அல்லவா? மேகங்கள் கூடி வரும்போது சில சமயம்தான் மழை பெய்கிறது. சில சமயம் கண்ணுக்கு அழகான வில்லாகவே நின்று அப்படியே மறைந்து விடுவதும் உண்டு. இரண்டும் இயற்கைதானே?''

''நீங்கள் சொல்வதும் உண்மைதான். குடும்ப வாழ்க்கையின் பிணைப்பே இல்லாத தூய அன்பை அள்ளித் தரும் இதயங்களாக அவை நின்றுவிட்டாலு ஆச்சரியப்படுவதற்கில்லை. அப்படி இருந்து விட்டுப் போகட்டும். அவர்க மட்டும் நம் வாழ்க்கையில் இப்படி ஒ சந்தர்ப்பத்தில் வந்திராவிட்டால்-''

''அவர்கள் மட்டும் அல்ல சாந் அழகான பெண்களைப் பயன்படுத் கொள்ள அலையும் பிரபுவைப் போன் வர்களும், அழகான ஆண்களை ஆட் வைக்கும் ரீனவைப் போன்றவர்களு கூட இன்று நம்மிடையே நிறைய இரு கிருர்கள். அவர்களுக்கிடையேயும் நா உறுதியுடனும் வைராக்கியத்துடனு நடந்து கொண்டு வாழ்க்கை நடத் வேண்டி இருக்கிறது. நீயும் நானும் இந் ஓர் ஆண்டில் கற்றுக் கொண்ட பாட அது'' என்று ராஜேஷ் ஒரு பெருமூச் விட்டான்.

சாந்தி அவனுடைய முகத்தை பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தா அங்கே அவள் அதுவரை கண்டிரா அமைதி குடிகொண்டிருப்பதைப் போ அவளுக்குத் தோன்றியது. அவ மனத்திலும் ஓர் அபூர்வ நிம் குடிகொண்டது.

''நமக்குப் பிறக்கும் குழந்தை ஆணு இருந்தால் அதற்கு மித்ரா என்றே பெய வைப்போம்'' என்ருன் ராஜேஷ். சாந் யின் கண்களில் ஒரு புது ஒளி தோன் மின்னிற்று.

''நானும் நினைத்தேன். பெண்ணு இருந்தால் அந்தக் குழந்தையின் பெய ராதா'' என்ருள் சாந்தி.

**முற்றும்**

